# ஆசாரிய ஹிருதயம்

ஆசாரியஹிருதயம்
எனும்
வைஷ்ணவ நூலின்
இனிய விளக்கம்

இரா. இராஜசேகரன்

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஆசாரிய ஹ்ருதயம்

## தமிழாக்கம் – இனிய வடிவம்

**இரா. இராஜசேகரன்**



பத்தினிக்கோட்டப் பதிப்பகம், பூம்புகார்.

முதற் பதிப்பு : நவம்பர் 1997

உரிமை : ஆசிரியருக்கு

விலை : ரூ. 60/-

Title : Acharya Hridayam

Author : R. Rajasekaran

Subject : Literature

Edition : First Edition, November 1997

No of Pages :

Publisher : Pathinikkotta Pathippagam,
Srinivasa Higher Secondary School
Office, Melaiyur, Poompuhar.
609107, Nagai District.

Price : Rs. 60/-

அட்டைப்பட வடிவம்: எம். வரதராஜன், மயிலாடுதுறை

Print : Mani Offset,
112 Bells Road,
Triplicane, Chennai-5.

4-2

ஸ்ரீ:

ஸ்ரீமதே இராமானுஜாய நம:

# என்னையும் ஒரு பொருட்டாக்கி......

"உதவிக் கைம்மாறு என்னுயிர் என்ன உற்றெண்ணில்,
அதுவும் மற்றாங்கு அவன் தன்னது என்னால் தன்னை,
பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு,
எதுவும் ஒன்றும் இல்லை செய்வது இங்கும் அங்கே".

●● தொல்காப்பியம் முதலாக நாலாயிரதிவ்வியப் பிரபந்தம் ஈறாக அவ்வவற்றின் உரைகளோடு தன் நெஞ்சக்கணிப்பொறியில் சேமித்து, எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் மடைதிறந்த வெள்ளமென எடுத்துச் சொல்லும் ஆற்றல் படைத்த கல்விக்கடல் திரு தி.வே. கோபாலய்யர் அவர்கள் இந்நூலைப் பாடம் சொல்லுங்கால் அன்றன்று காலையில் தன் உடலை வருத்திப் படித்து, 'புரிய வைக்க வேண்டுமே' என்ற பதைப்பில் பேருழைப்பு நல்கி விளக்கிய அருட்டன்மை:

●● நூல் வெளிவருமுன்னமேயே நூலை ஸ்ரீவைணவ உலகிற்கு அறிமுகப்படுத்தியும், திருவண்ணாமலை ஸ்ரீவைணவ மாநாட்டிலே ஸ்ரீமத்ஜீயர் சுவாமிகள் திருக்கரங்களாலே 'ஞான பாஸ்கரன்' என்ற பட்டம் அளித்தும், திருக்கோயிலூர் ஸ்ரீவைணவ மாநாட்டில் இந்நூலை வெளியிட ஏற்பாடுகள் செய்தும் என்னையும் ஒரு பொருட்டாக்கிய டாக்டர் ஸ்ரீ அ.வே.ரெங்காசாரியார் சுவாமிகளின் அன்பு நெஞ்சம்:

●● நூல் வெளியிடத் திட்டமிடுகையில் ரூ.15000/— வழங்கிய திருப்பதி தேவஸ்தானத்தாரின் வள்ளல் தன்மை.

●● "ஆசாரிய ஹிருதயம்" நூலைப் படிக்கவும், ஸ்ரீ அ.வே.ரெங்காச்சாரியார் சுவாமிகளை அறிமுகம் செய்தும் ஆற்றுப்படுத்திய பூம்புகார்க் கல்லூரிப் பேராசிரியர் திரு த. தியாகராஜன் அவர்களின் காலத்தால் செய்த உதவி.

●● நூலைச் சிங்காரித்து நூலழகு பார்ப்பதே வாடிக்கையாகக் கொண்ட மாயூரம் பேராசிரியர் திரு. இரா. இராமலிங்கம் அவர்கள் காலமும் செய்து வரும் உதவி:

மேலையூர்,
பூம்புகார்.
9.11.97

இவற்றிற்குத் தலைவணங்கி
நன்றி செலுத்துவன்.
இரா. இராஜசேகரன்

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

## தி.வே. கோபாலய்யர்.

இந்நிலவுலகில் வைணவ ஆசாரிய பரம்பரை தமிழகத்தில் தென்கலை மரபுப்படி நம்மாழ்வாரில் தொடங்கி மணவாள மாமுனிகளோடு நிறைவுறுகின்றது. அப்பரம்பரையில் நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை உலகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாள மாமுனிகள் என்பவர்கள் ஆசாரியர்களாக அருட்செங்கோல் ஓச்சினர். அவருள் வடக்குத் திருவீதிப்பிள்ளையின் புதல்வர் இருவருள் மூத்தவரான உலகாசாரியர் வைணவம் கூறும் மெய்ப்பொருள் தொடர்பான பதினெட்டு மறைநூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் சிரீவசநபூடணம் மிக மேம்பட்டது. இளையவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருப்பாவை, அமலன் ஆதிபிரான், கண்ணி நுண்சிறுத்தாம்பு ஆகிய அருளிச் செயல் பிரபந்தங்களுக்குப் பேருரை வரைந்தவர். எனினும், இவருக்கு இறவாப் புகழ்நல்கி இவருடைய முதுபெரும் புலமைக்குச் சான்றாகத் திகழ்வது இவரால் நான்கு பாகங்களாக 234 சூர்ணிகைகளைக் கொண்டதாக அமைந்துள்ள 'ஆசாரிய இருதயம்' என்ற பெயரதாய்த் திருவாய் மொழியின் பெருமையை விரித்துரைக்கும் நூலேயாகும்.

அருளிச் செயல்களில் உள்ள சொற்றொடர்களையே பெரும்பாலும் கொண்டு, அக்காலத்துச் செல்வாக்கில் இருந்த வட சொற்றொடர் களையும் சுவைததும்ப இணைத்து உரைநடைச் சூத்திரங்களாகிய சூர்ணிகைகளால், துவயத்தின் பொருளைச் சொல்லுகின்ற தீர்க்க சரணாகதியாய் உள்ள திருவாய்மொழியின் ஏற்றத்தையும், அதனை அருளிய நம்மாழ்வாரின் தனிப்பெருஞ்சிறப்பினையும் பல கோணங்களிலும் இந்நூல் விரித்துரைக்கிறது.

இந்நூலில் எம்பெருமான் மனித இனம் உய்வதற்கு வேத இதிகாச புராணங்களை அருளியமை அவற்றின் புலத்துறை முற்றுதற்கு மனிதனின் வாழ்நாள் போதாமையால் சுருக்கமான திருமந்திரத்தை அருளியமை, சாத்திரம் பயின்ற அவற்றின் வழி வாழ்பவருக்கும் ஆழ்வார்களுக்கும் உள்ள வேறுபாடு, இறைவனுக்கு அடிமை செய்து ஆன்மா நுகரும் இன்பத்திறம், இறைவன் இட்ட வழக்காயிருந்து அவன்

நுகரும் இன்பம் கண்டு மகிழ்தலின் ஏற்றம், ஆறும் பேறும் இறைவனே என்று கொள்ளும் நம்மாழ்வாரின் ஏற்றம், சிறந்த அடியவர் பலருடைய நிலைகளும் நம்மாழ்வார் ஒருவரிடமே காணப்படும் ஏற்றம், இறைவனுடைய அவதாரங்களைவிட நம்மாழ்வார் அவதாரம் அக இருள் செகுத்தலில் விஞ்சி நிற்கும் திறம், தமிழ்மொழியின் ஏற்றம், தமிழ்மறைகளாகிய நம்மாழ்வாருடைய பிரபந்தங்களின் ஏற்றம், நம்மாழ்வார் தாமாகிய நிலையிலும், செவிலி, தோழி, தலைவி ஆகியவர் நிலையிலும் நான்முகமாக அருளிய பாசுரங்களின் சிறப்பு, தூதுவிடப் பட்ட பறவை போல்வனவற்றின் உள்ளுறைப் பொருள், தலைவியின் உறுப்புக்களைக் குறிப்பிடும் அளவில் கொள்ளப்பட வேண்டிய உள்ளுறைப் பொருள்கள், நம்மாழ்வார் மங்களா சாசனம் செய்தருளிய முப்பத்தாறு திருப்பதிகளுள் ஒவ்வொன்றற்கும் உரிய தனிச்சிறப்பு இறைநிலை, உயிர்நிலை, நெறி, தடை, வாழ்வினை என்ற ஐந்தனுள் ஒவ்வொன்றையும் சிறப்பாகக் குறிப்பிடும் நந்நான்கு திருவாய்மொழிகள் பற்றிய விளக்கங்கள், ஒவ்வொரு பத்திலும் பிறருக்கு நல்லுரை கூறுவதாக அமையும் ஒவ்வொரு திருவாய்மொழி பற்றிய நுட்பச் செய்திகள், ஆகியவை விரிவாக உரைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு சில்வகை எழுத்தின் செய்யுட்டாகி, சொல்லுங்காலை உரை அகத்து அடக்கி,நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத்தாகி, துளக்கலாகத் துணைமை எய்தி, அளக்கலாகா அரும்பொருளை உட்கொண்டு அமைந்துள்ள சூர்ணிகைகளின் தொகுப்பாகிய இந்நூல் கண்டால் இனியதாய்க் காண்டற்கு அரியதாய் உள்ள நிலையை உட்கொண்டு, இந்நூலின் கருத்தை ஐயம் திரிபு இன்றி மற்றையாரும் உணரும் வகையில் இந்நூலுக்கு மணவாள மாமுனிகள் பேருரை வரைந்துள்ளார். வடமொழிச் சுலோகங்களும் சொற்றொடர்களும் இடையிடையே மிடைந்துள்ள அவ்வுரை தமிழ் ஒன்றே வல்லவர் அணுகுதற்கு அஞ்சும் நிலையில் அமைந்துள்ளதை உட்கொண்டு, வடமொழி அறிவு மிகவும் அருகிய இக்காலத் தமிழ்ச் சான்றோர் ஆசாரிய இருதயத்தைச் சுவைக்கும் வாய்ப்பினை இழத்தல் கூடாது என்ற உயிர் இரக்கத்தால் கீர்த்தி மூர்த்தியான புவ.ராச. புருடோத்தம நாயடு அவர்கள் மணவாள மாமுனிகள் அருளிய உரையைத் தமிழாக்கம் செய்து உதவினார். அறிவை ஒருமுகப்படுத்தி மிக முயன்று கூர்ந்து நோக்கினாலன்றிச் சூர்ணிகை களும் அவற்றின் விளக்கங்களும் எளிதின் உணரற்பாலன அல்ல.

திரு இரா. இராஜசேகரன் அவர்கள் அருங்கலை விநோதர். பன்னூல் பயின்ற செந்தமிழ்ச் செல்வர் சைவ சித்தாந்த கலாநிதிப் பட்டம் பெற்றவர். ஆழ்வார்கள் அருளிச் செயல்களை ஈடுபாட்டோடு சுவைப்பவர். நண்பர் ஒருவரால் 'ஆசாரிய இருதயம்' பயிலுமாறு ஆற்றுப்படுத்தப்பட்டு இந்நூலையும் இதன் உரையின் தமிழாக்கத்தையும்

ஈடுபாட்டோடு பயின்ற அவர் இந்நூலை வியந்தும் நயந்தும் பாராட்டுபவர். இத்தகையதொரு நூல் சைவத்துக்கு இல்லையே என்று ஏக்கறுபவர். இந்நூலைத் தாம் சுவைத்துக் கண்ட இன்பத்தைத் தமிழ் வல்லார் மற்றவரிடையேயும் பரவச் செய்தல் வேண்டும் என்ற வேணவாவால் இந்நூற் கருத்தை எளிய இனிய தூய தமிழில், சூர்ணிகைகளில் காணப்படும் வடசொற்றொடர்களுக்கு உரிய விளக்கங்களோடு இன்று நமக்கு வழங்கியிருக்கிறார். இந்நூலைப் பயில்வதன் வாயிலாகத் திருவாய்மொழியின் அருமை பெருமைகளை உணர்ந்து இந்நூல் குறிப்பிடும் செய்திகளோடு இணைத்துத் திருவாய்மொழியைத் தமிழ் மக்கள் பயில வேண்டும் என்பதே இச்சிறுநூலின் தோற்றத்தால் எதிர்பார்க்கப்படும் பயனாகும். இறைவன் திருவருள் அதற்கு முன்னிற்க!

புதுச்சேரி
*15.7.97*

அன்பன்
தி.வே. கோபாலையர்

ஸ்ரீ:

ஸ்ரீ மதே ராமானுஜாய நம:

# அணிந்துரை

பேராசிரியர் Dr. A.V. அரங்காசாரி M.A., M.Lit., Ph.D.,

(முன்னாள் பொருளாதாரத் துறைத் தலைவர், இந்நாள் தனி அலுவலர் — தொலைதூரக் கல்வி இயக்ககம். அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் தோன்றியுள்ள அரிய பெரிய நூல்களுள் ஆசார்ய ஹ்ருதயம் என்பது மிகச் சிறந்தது. இதை இயற்றியவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இவர் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழிக்குச் சிறந்த விளக்கம் அளித்த நம்பிள்ளையின் உரைகளைப் பட்டோலை கொண்ட வடக்குத் திருவீதிப் பிள்ளையின் இரண்டாவது குமாரர். மூத்தவர் ஸ்ரீ பிள்ளை லோகாசாரியார். இவர் அழகிய மணவாளப் பெருமாளின் திருவருளால் அவதரித்தவர்.

இவர் தம் தந்தையாரான வடக்குத் திருவீதிப்பிள்ளை நம்பிள்ளை, தம் தமையனாரான பிள்ளை லோகாசாரியார் ஆகியோரிடத்துக் கல்வி பயின்றவர். பிரம்மசரியத்தில் உறுதியுடன் நின்றவர்.

இவர் அருளியவை திருப்பாவை, அமலனாதிபிரான், கண்ணி நுண் சிறுத்தாம்பு ஆகிய பிரபந்தங்களுக்கு விரிவுரை, ஆசார்ய ஹ்ருதயம், அருளிச் செயல் ரகஸ்ய பட்டோலை முதலிய மணிப்ரவாள நூல்கள், “தஞ்சீரால் வையகுருவின் தம்பி மன்னு மணவாள முனி செய்யுமவை தாமும் சில” என்று இதனை மணவாள மாமுனிகள் போற்றியுள்ளார்.

ஆசார்ய ஹ்ருதயம் என்னும் நூல் மிகவும் விலக்ஷணமான நூல், இவ்வுலகில் அன்று தொட்டு இன்றுவரை தோன்றியுள்ள திவ்விய நூல்களில், இதற்கு ஒப்பான நூல் இதுவரை தோன்றவுமில்லை. இனித்தோன்றப் போகிறதுமில்லை. உபநிடதங்கள், இதிஹாஸ புராணங்கள், ஆழ்வார் ஆசார்யர்களின் ஸ்ரீசூக்திகள் ஆகிய அனைத்தும் ஒருங்கே திரண்டு இந்நூலாக வடிவெடுத்துள்ளன என்பர் பெரியோர்.

ஆசார்ய ஹ்ருதயம் என்னும் சொல் ஆசார்யருடைய திருவுள்ளம் — என்று பொருள் பெரும். வைதிக ஸந்தானத்திற்கு முதல் ஆசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே இந்நூல் இப்பெயர் பெற்றது.

இவர் தமையனார் ஸ்ரீபிள்ளை லோகாசாரியார் பூர்வர்கள் உபதேசித்து, ஆதரித்து வந்த அர்த்தங்கள் 18 ரஹஸ்ய நூல்களாக அருளிச் செய்துள்ளார். அவற்றுள் ஸ்ரீவசனபூஷணம் என்னும் நூல் முன்னோர் மொழிந்த வசனங்கள் தம்மைச் சேரச் சமைக்கப்பட்டது. அதில் மற்றவர்களுக்குச் சாஸ்திர விரோதம் போல் தோன்றும் பல ஆசார அனுஷ்டானங்களை நன்கு நிரூபித்து, ப்ரபன்னர்களுக்கு இவைதாம் முடிந்த முடிவாக் காட்டியுள்ளார். ப்ரபத்தியில் ஸ்வகத ஸ்வீகார நிஷ்டை, பரகத ஸ்வீகார நிஷ்டை, பரமமுக்தியிலும் ஸ்வார்த்த பரார்த்த பேதம் ஆகியவை அவற்றில் சில.

திருவரங்கத்தில் ஒருநாள் பெருமாள் புறப்பாட்டின் போது தூப்புல் பிளளை ஸ்ரீவசன பூஷணம் சாஸ்திர விரோதமானது என்று கூற, அப்போது அவருக்கு தெளிவு பிறப்பிக்க அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வீதிக்கு ஒரு ப்ரகரணமாக, நான்கு ப்ரகரணங்களாக ஆசார்ய ஹ்ருதயத்தை உபந்யசித்தார் என்றும், அப்போது இதனை திருச்செவி சாத்திய நம்பெருமாளும் ஒவ்வொரு ப்ரகரணத்திற்கும் ஒருமாலை நாயனாருக்கு அணிவித்து, தம் இசைவினைத் தெரிவித்து, ஆசார்ய ஹ்ருதய நூலை அங்கீகரித்ததாகவும், இது கண்ட தூப்புல் பிள்ளையும் போரவுகந்து,

"த்ராவிடாம் நாய ஹ்ருதயம் குருபர்வ க்ரமாகதம் ரம்யஜா மாத்ரு தேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா" என்று தனியனை அருளிச் செய்து நாயனாருக்கு ஸமர்ப்பித்ததாகவும் கூறப்படுகிறது.

இந்நூலில் ஒவ்வொரு சொல்லும் பிரமாண வசனத்தொகுதியே ஆகும். ஆசிரியர் தம்முடைய சொந்த வாக்காக எழுதும் வார்த்தைகள் மிகச் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வார்த்தைகள் வடமொழி மேற்கோள்களும், தென்மொழி மேற்கோள்களும் வடிவெடுத்தவை. இந்நூலின் பொருள்கள் மிகவும் வியக்கத் தக்கவை என்பதோடு, இதில் அமைந்த சொல் தொடை மிகவும் இனியதாயிருக்கும்.

இந்நூலின் அரிய பெரிய பொருள்களை உள்ளவாறு உணரப் பெறுவதும், நெஞ்சில் தரிக்க வைத்துக் கொள்வதும் மிகவும் அரிது. இதன் ஆழ்பொருள்கள் அறிய அரியனவே. எனவே இந்நூலுக்கு ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ள உரை விரிவும் பொலிவும் மிக்கது. அவ்வுரையின் வடமொழி தென்மொழிப்புலமையும், திவ்ய பிரபந்த பயிற்சியும் உடையவர்களே முற்றும் சுவைத்து மகிழ முடியும். காஞ்சி ஸ்ரீ பி.பி. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் ஆசார்ய ஹ்ருதய பாட பரிஷ்காரம் ஆய்வுநோக்கில் அமைந்தது. ப்ரபன்ன வித்வான் புருஷோத்தம நாயுடு அவர்களின் மாமுனிகள் உரையின் தமிழாக்கமும், கோ. பாலசுந்தர நாயகரின் ஆசார்ய ஹ்ருதய சாரமும் ஓரளவு எளிமைப்

படுத்தியுள்ளது. செந்தமிழ்ப் புரவலர் திரு இராஜசேகர் இந்நூலில் மிகவும் ஈடுபட்டு, அதனை வல்லவர்கள் வாயிலாக நன்கு கேட்டு அனுபவித்து, தாம் பெற்ற அந்த அனுபவத்தை இன்பத்தை எல்லோரும் எளிதில் அறிந்து துய்க்கும்படி சூத்ரத் தொகுதிகள் தெரிவிக்கும் ஆழ்ந்த கருத்துக் களை கேள்விகளாகவும் விளக்கமாகவும் அமைத்தும், அட்டவணையாக முறைப்படுத்தியும் கொடுத்துள்ளது இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

இந்நூல் நான்கு பகுதிகளைக் கொண்டது. முதற்பகுதியில் பகுத்தறிவு ஏன், சாத்திரங்கள் — திருமந்திரம் வேறுபாடு, திருமந்திரத்தின் கருத்து, வேதமும் நம்மாழ்வார் பாசுரங்களும், நம்மாழ்வாரின் உயர்வு (பிறப்பினால் தாழ்வில்லை), திருவாய்மொழியின் உயர்வு (தமிழ்மொழியின் உயர்வு) ஆகிய பொருள்களும், இரண்டாம் பகுதியில் ஆழ்வாரின் பக்தியனுபவத்தின் சீர்மை, பக்தியின் வெளிப்பாடு, நாயகி பாவத்தின் ஒப்புநோக்கு, அகப்பொருளும் உள்ளுறைப் பொருளும் அடங்கியுள்ளன. மூன்றாம் பகுதியில் பக்தியின் நிலைக்களமான திவ்ய தேசங்களில் இறைவனின் குணங்கள், தூது—உள்ளுறைப் பொருள், கீதையோடு திருவாய்மொழிக்கு ஒப்புமை, கீதையினும் உயர்வு, ஆழ்வாரின் உபதேச வகை, திருவாய்மொழியே இரஹஸ்யத்ரயத்தின் பொருள் விளக்கம் ஆகியவையும், நான்காம் பகுதியில் திருவாய்மொழியின் சாரம், பத்துப்பத்தும் இறைவனின் பண்புகளும் பேறுகளும், இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உதவி, இறைவன் திருவருளால் ஆழ்வார் பெற்ற ஏற்றம் முதலியன தெரிவிக்கப்பட்டுள்ளன.

ஆக இந்நூலில் ஸர்வேச்வரன் தன் அருளாலே மக்கள் பகுத்தறிய சாஸ்திரத்தைக் கொடுத்து, அதன் பயன் பெறுவிக்காத நிலையில் ஸகல வேதசாரமான திருமந்திரத்தை வெளியிட்டு, அதன் கருத்தை ஆழ்வார் திருவாயிலாக ப்ரபந்தங்களாக வெளியிட்டு, அதன் காரணமாகத் திவ்ய தேச எம்பெருமான்களின் குணானுபவம், அதனடியாக வெளிப்பட்ட திருவாய்மொழி, அதில் தெரிவிக்கும் தொண்டு ஆகியவைகளை எளிதாக உணர்ந்து, ஆழ்வார் அருளுக்கு ஆட்பட்டு, அவர்தம் ப்ரபந்தங்களில் ஈடுபாடு கொள்வதே அனைவருக்கும் இறைவன் திருவருள் கொண்டு இன்புற்று வாழவழி என்பது உணர்த்தப்படும் திரண்ட கருத்தாகும்.

இவ்வரிய நூலினைப் பரந்த அறிவும், ஆய்வுத் திறனும், சிந்தனைத் தெளிவும் கொண்டு இவ்வாசிரியர் தம் பெரிய போதமுடன் வரைந்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. இந்நூலினை நல்கிய பேராசிரியருக்கு வைணவ உலகமும், தமிழ் கூறு நல்லுலகமும் மிகவும் கடமைப்பட்டுள்ளது. இந்நூலினை அனைவரும் வாங்கிப் படித்துப் பயனடைவதே இந்நூலாசிரியர்க்கு நாம் செய்யும் பேருதவியாகும்.

தில்லைத் திருச்சித்ரகூடம் — அ.வே. அரங்காசாரி.

26.10.97

# ஆசாரிய ஹிருதயம்

ஸ்ரீ நம்மாழ்வாருடைய திருவுள்ளக் கருத்தை அனைவரும் அறியும்படி வெளியிடுகையாலே இந்நூல் 'ஆசாரிய ஹிருதயம்' என்னும் பெயர் பெற்றது. ஆசாரியர் — நம்மாழ்வார்; ஹிருதயம் — மனம்; 'மாறன் மனம்' எனலாம்.

ஒரு அருளாளர் இன்னொரு அருளாளரால் முழுமையாக — சொல்லுக்குச் சொல், பாடலுக்குப் பாடல் — அனுபவிக்கப்பட்டு அந்த அனுபவம் நூலாக வெளிவந்துள்ளது. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியின் பொருளை அறிந்து கொள்ள ஆறாயிரப்படி முதலான ஐந்து பேருரைகள் இருந்தாலும், திருவாய்மொழியின் உள்ளுறைப் பொருள்களையும், விசேட அர்த்தங்களையும் முற்றும் அறிய முடியாமையின் இந்நூல் அருளிச் செய்யப்பட்டது.

இந்நூலை அருளிச் செய்தவர் ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆவார். ஈடு முப்பத்தாறாயிரப்படி பேருரை எழுதிய ஸ்ரீ வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும், ஸ்ரீ வசன பூஷணம் முதலிய பதினெட்டு சித்தாந்த சாத்திரங்களை அருளிய ஸ்ரீ பிள்ளை லோகாசாரியாருடைய திருத்தம்பியாரும் ஆவார். இவர் பதின்மூன்றாம் நூற்றாண்டிலே திருவரங்கத்திலே அவதரித்தார்.

தமிழ் இலக்கிய வரலாற்றிலே மணிப்பிரவாள நடை என்ற ஒரு பிரிவு உண்டு. ஈடு உரைகள் பல இருந்தாலும் மணிப்பிரவாள நடைக்கு எடுத்துக்காட்டாக விளங்கி வருவது இந்நூலேயாகும்.

நான்காம் வருணம் என்று ஸ்ரீ நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஓதுக்கக் கூடாது என்பதற்கு ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் எடுத்துரைக்கும் சான்றுகள் இருபதாம் நூற்றாண்டு சமுதாய சீர்திருத்தக் கருத்துகளையும் விஞ்சியதாக உள்ளன. தமிழ்மொழி என்பதனால் திருவாய்மொழியை ஓதுக்க முடியாது என இவர் வைக்கும் காரணங்களினால் தமிழ் இயக்கத்தின் முன்னோடி என்று இவரைச் சொல்லலாம். இக்கருத்துக்கள் பதின்மூன்றாம் நூற்றாண்டிலே கூறப்பட்டன என்று அறியும் பொழுது இவர் பெருமை விண்ணளவு உயர்ந்து நிற்கிறது. வேதம், கீதை, இராமாயணம், பாரதம் இவற்றையெல்லாம் விட திருவாய்மொழி உயர்வு என்கையிலும், கண்ணபெருமான், இராமபிரான், சீதாப்பிராட்டி, ஸ்ரீபரதாழ்வார் முதலியோருக்கு ஒப்பாகவும் — சில இடங்களில் அவர்களைவிட உயர்வாகவும் — நாயனார் நம்மாழ்வாரை உயர்வாகச் சொல்லுகையில் நாயனாரின் ஆசாரிய பக்தியும், நெஞ்சுறுதியும் தெள்ளிதின்

புலப்படுகின்றது. அகப்பொருளுக்கு உள்ளுறைப்பொருள், திருவாய்மொழிப் பாடல்களுக்கு ஒவ்வொரு திருப்பாசுரமாக, ஒவ்வொரு திருவாய்மொழியாக, ஒவ்வொரு பத்தாக விளக்குதல் — இன்னோரன்ன சிறப்புகளை உடையது இந்நூல் ஆகும்.

இந்நூல் 234 சூத்திரங்களை உடையது. இந்நூலின் கருத்து இவருடையதாக இருந்தாலும், இந்நூலில் நாயனார் பயன் படுத்தியுள்ள சொற்கள், சொற்றொடர்கள் அனைத்துமே திருவாய்மொழி, ஏனை ஆழ்வார்களின் திருப்பாசுரங்கள், ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுப்ராணம் முதலிய தொன்னூல்களிலிருந்தே எடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலுக்கு ஸ்ரீமணவாள மாமுனிகள் அவர்கள் பேருரை ஒன்று வழங்கி அருளியுள்ளார்கள். அப்பேருரையும் மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளது.

தமிழ் கூறு நல்லுலகம் இந்நூலை முற்றும் கற்று அனுபவிக்கும் பொருட்டு, இப்பேருரையினை ஸ்ரீ பி.ஆர். புருஷோத்தம நாயுடு அவர்கள் தமிழாக்கியும், பதப்பிரிவு செய்தும், ஆற்றொழுக்காக அமைந்திராத சூத்திரங்களைக் கொண்டு கூட்டி அமைத்தும், அருஞ்சொற்களுக்குப் பொருளும், வடமொழி வியாக்கியானங்களுக்குப் பொருளும் தந்துதவியிருக்கின்றார். இப்பெருமகனாரின் தமிழாக்கம் இல்லாது போயிருந்தால் ஆசிரியர் மூலமாகக் கூட இந்நூலைக் கற்றல் அரிது. தமிழகம் தலைவணங்கிப் போற்றக் கூடிய பெரும்பணியைச் செய்தவர் இப்பெருமகனார் ஆவார். ஸ்ரீநாயுடு அவர்களின் தமிழாக்கத்தை ஒட்டி எளிமைப்படுத்தி இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

# PART - I

## What is the purpose of Vedas, Puranas and Ithihasas?

Man is in perpetual darkness. To throw light on man, Vedas are delivered. By that knowledge, Man comes to know what are the things to be eliminated and what are the things to be understood and adhered to. The five things to be understood are.

1) God 2) Soul 3) Obstacles 4) Means for attainment 5) Bliss.

## Distinction Between Sastras and Thirumanthiram:

Essence of Sastras - Meaning of Thirumanthiram "Ohm Namo Narayanaya" - Thirumanthiram is superior to Sastras - Distinction between a Brahmin and a Vaishnava.

## Vedas and Nammalvar's hymns

Nammalwar's hymns are nothing but Vedas. Nammalwar's Thiruvirittam, Thiruvasiriyam, Peria Thiruvanthathi and Thiruvoimozhi are Rig, Yajur, Sama and Adharwana Vedas. Sama Veda is an extension of Rig Veda. Thiruvoimozhi is an extension of Thiruviritam.

## Greatness of Nammalwar

By the grace of Brahma, Valmiki sang Ramayana. Brahma, when in Thamas, sang on agni and Sivan, and in Rajas, sang about himself and only during Satwa Guna sang the praise of Narayana. If Brahma is like that not to speak about Valmiki.

Parasarar inspired by Rishi Pulasthiar, sang Vishnu purana Rishis are inspiration for Ithihasas and Puranas. But, Lord Narayana himself is the inspiration for Nammalwar. Rishis sang

by Gnanam got through penance. But Nammalwar sang out of love and devotion. Rishis never gave up worldly desire. But Nammalwar was completely free from worldly Bondage. Food for Rishis were fruits, vegetables, leaves and water. But, for Nammalwar, the food, water and even betel leaves are Lord Krishna.

## The Greatness Thiruvoimozhi

Valmiki recites irrelevant verses such as the origin of Ganges, description of Pushpaka Vimanam and the like. Vyasar also recites irrelevant verses on the birth of Bhishma, various types of wars and the like. But Nammalvar sings only the glory of Narayana.

Vedas must be recited on certain months as Avani and Puratasi and by only three varnas. But Thiruvoimozhi can be sung on all occasions by all.

The whole universe is surrounded by Ocean. That is Parathuvam of the Lord. This can be compared to vedas. The divine Milk Sea (Parkkadal) is Vuha-that is equal to Pancharatra. Deep Sea is Andharyami that is Manusmiriti. It is too difficult to percive Lord in these stages of Parathwa, Vuha and Andharyami. In the same way we cannot study vedas, Pancharathra and Manu Smirthi so easily. River flood is Avatar like krishnavatar and Ramavatar. We can have easy darshanas of the Lord. But we had not lived those times of Avatars. Archavatar (idols in the temples - Divyadeas) is like small ponds in the River after the subsiding of the floods. All, without caste or creed, can have darshan of the Lord at all times. In the same way Thiruvoimozhi can be easily learnt by all at all times.

Thiruvoimozhi can't be rejected because it was sung by Nammalwar, fourth Varuna. If so, can you reject Vyasar, who is the son of a fishewoman and Lord Krishna Himself, who belongs to sheperd Community.

Thiruvoimozhi can't be rejected because it is in Tamil and not in Samskrit. Can you accept the text on theft and the texts of other religions since they are written in Samskrit?

## Greetness of Nammalwar

Vyasar's birth place stinks with fish, Krishna's birth place stinks with butter. But fragrance of Thulasi pervades the birthplace of Nammalwar.

Sun ilumines only outer darkness. Nammalwar illumines inner darness. Rama drains the sea of Asuras. Nammalwar drains the sea of birth. Krishna blossoms the world of Lotus. Nammalwar blossoms the human heart of Lotus.

## Birth will not lower a person

Birth in lower community will not lower a person. Only devotion heightens a person. Nambaduvan, Guhan are glorified by their pure Love.

Lord Rama took the food of Sabari, Krishna accepts the dinner of Vidhura.

Kurumbarutha Nambi, a potter, worshipped Lord with a mud flower. Ramanuja clarified doubts on philosophy from Thirukkachinambi, a temple servant, Uloga Saranga Mahamuni took Thiruppanazhwar on his shoulders. The education, caste, and Characters of a person who did not have religious faith will be treated as low.

Devotion to God is highest birth. The four varunas are assigned to each one according to their Karmas.

# PART-II

## Nammalwar's Prabhavam

Lord takes avatar to redeem the mankind in every Yuga in every places. In Krutha Yuga, he is Parasurama; In Thretha Yuga, He is Rama; In Dhwabhara Yuga, He is Krishna; In Kali Yuga, He is Nammazhwar.

Why Gnanis attribute Nammalwar, as Avatar in Kali Yuga?

There are many reasons.

1. Nammalwar challanges God whether He is great who captures Nammalwar or Nammalwar who has captured God Himself.

2. There is no equal to Nammalwar either in Heaven or Earth.

3. Nammalwar is neither like Nithyasuris who are always in Eternal Bliss nor like human beings who had conveniently forgot Lord. He enjoys God in Union; he suffers in separation.

4. He is equal to all Nithyasuris.

5. Lord loves Nammalwar with the sum total of all love towards all Nithyasuris.

6. Alwar had attained the state of Womanhood.

7. He enjoys the beauty and Gunas of Lord.

8. His very food, water and even betel levels was Narayana himself.

9. He fought other religionits with logical arguments.

10. He inculcated Shakthi to all people and redeemed them

from the clutches of birth, disease, enmity, hunger and all sins.

11. He has reinitiated the entire people to Vaishnava Dharma.

12. He was deeply immeresed in the experience of Lord both day and night.

## Special Grace of God

Nammalwar achieved such greatness by the special grace of God. By that grace, Nammalwar's doubts got cleared. Forget fulness was no more in his life. As love and desire for God increased, Nammalwar attained full Bhakthi. God, the farmer, ploughs the mind, the field, floods with Gnanam, protects from cows, the five senses. The farmer, God, removes the husk, the body, and gives cooked food, the Gnana Body. Alwar's Bhakthi and attainment were due to the Grace of God.

## Parangusa Nayaki

Azhagiya Manavala Perumal Nayanar gives spiritual interpretation to the Nayaka-Nayaki Bhawam in Alwar's hymns, Union with lover, God, is Gnanam. Longing after separation is Bhakthi. Why Union and separation took place alternately? Union will give extreme happiness which Alwar can't bear. After fast, you can't take heavy food. Only juice will be offered. In the same way God reveals Himself in stages.

Next Azhagiya Manavalar compares Nammalwar to Goddess Mahalaxmi, Sita Devi, Bhudevi, Nappinnai, Gopikas and ladies of Dwaraka. Matura and Ayppadi.

Manavalar further compares, Nammalwar to Bharatha, Sathrukana, Lakshmana, Dasaratha, Vibhishana, Hanuman, Prahaladhan, Arjun and Yasoda. He concluded Nammalwar's love is greater than those friends and relatives.

## Unique Devotion

Alwar's devotion to Lord is Unique. There are no two things as love and the place in which Love resides. Alwar has become Love itself.

## Interpretation to Ahapporul

Manavalar interprets the status of lady friend as knowledge of Union, mother as determination to the means of attainment and the lady love as the hastiness in attaining Union.

Manavalar interprets and gives spiritual meaning to seven stages of woman from childhood to old age, day, evening, night bangles and play things like ball.

# PART-III

## Messenger of Birds - An interpretation

Swan, Bee, Parrot, Cuckoo, Peacock, Cloud, as messengers of love - a religious interpretation. Parathuwam, Vuham, Avatar, Archai - The importance of Archavataram.

## One religious feature of each Divya Desa:

Srirangam, Tirupathi, Thirukkurugur, Thirukkurungudi, Srivaramangalam, Kumbakonam, Thiruwallavazh, Thiruwannvandur, Thiruvirinnagar, Thirutholavilimangalam, Thirukkolur,Thenthirupperlyil, Thiruvaranvilai, Thirukkulanthai, Thiruwamparisaram, Thiruchengunur, Thirukkadithanam, Thiruppuliyur, Thiruvaikuntham, Thirukkatkarai, Thirumoozhikkalam, Thirukkannapuram, Thirumaliruncholai.

## Period of Thiruvoimozhi and its Sweetness

Age of Nammalwar - Sweetness of Thiruvoimozhi.

## Thiruvoimozhi

A Comparison. Bhagavath Gita and Thiruvoimozhi. Thiruvoimozhi is greater than Gita.

## Upadesa to four categories of people

Ordinary people - people who believe good as the means for salvation - People who are wedded to salvation - God Himself.

God is disciple of Nammalwar - Characterestic features of a true disciple - Updesa to people who are unfit - The Status of Guru-sishya relation during Nammalwar period - God possess the characterestic features of a disciple.

The net result of Upadesa - Upadesa is not an obstacle to Alwar's divine experience.

## The meaning of Thirumanthiram - "Ohm Namo Narayanaya"

Meaning of "Ohm Namo" is Thirumanthiram - Meaning of "Narayana" is Thiruvasiriyam - Meaning of Sarama Slogam is periya Thiruvanthathi.

## The meaning Dwayam is Thiruvoimozhi

Dhwayam - its meaning - even a layman can understand - ten different meanings of Dhwayam and its corelation with Thiruvoimozhi.

## The Essence of Thiruvoimozhi

Godhood - soul - obstacles to attain God - Means - attainments - Attainment of God is the Final conclusion.

## Thiruvirutham - Thiruvoimozhi First Hymn - Five Great Truths

God - soul - obstacles - Means - attainment - features of God - Devotion - Benediction and praising of Lord.

## God and Thiruvoimozhi

Protecting the good and destroying the bad - Removing ignorance and instilling Gnana - enslaving soul to God - medicine which eradicates disease - Making soul attain Paramapatham - giving Eternal Bliss and Happiness - melting the soul.

## Structure of the Hymns

Hymns of preaching - the hundred hymns, the ten divine qualities of god and the ten achievements of Alwar.

# PART-IV

1. Explanation for the first hundred and odd hymns (Muthal Path)
2. Explanation for the second hundred and odd hymns (2 Pathu).
3. Explanation for the third hundred and odd hymns.
4. Explanation for the fourth hundred and odd hymns.
5. Explanation for the fifth hundred and odd hymns.
6. Explanation for the sixth hundred and odd hymns.
7. Explanation for the seventh hundred and odd hymns.
8. Explanation for the eighth hundred and odd hymns.
9. Explanation for the ninth hundred and odd hymns.
10. Explanation for the tenth hundred and odd hymns.

## சூத்திரப் பொருள்

*1) சூத் 1—4:* சர்வேச்வரன் தன் பேரருளாலே, அறிவில்லாத மக்கள் உண்மை ஞானத்தை உடையராய், நல்லதும், தீயதும் பகுத்து அறிதற்குச் சாத்திரங்களைக் கொடுத்த பாங்கு.

*2) 5—16:* அந்தச் சாத்திரங்களால் உண்மை ஞானம் உண்டாகும் அருமை; சாத்திரங்களின் கருத்துப் பொருளான திருமந்திரத்தைத் தன் பேரருளாலே வெளியிட்ட பாங்கு.

*3) 16—36:* சாத்திரங்களிலும், சரித்திரங்களின் கருத்துப் பொருளான திரு மந்திரத்திலும் சொல்லப்பட்டுள்ள விஷயங்களின் வேறுபாடு. அந்தச் சாத்திரங்களிலும், திருமந்திரத்திலும் ஊன்றினவர்களான அதிகாரிகளுடைய தன்மைகள்.

*4) 37—54:* அந்தக் காரணத்தாலே சொல்ல வேண்டிவந்த திருவாய்மொழியினுடைய பெருமை.

*5) 55—76:* அதனை அருளிச் செய்தஆழ்வாரின் பெருமை.

*6) 77—85:* அந்தப் பெருமைக்கு மூலகாரணமான பகவானுடைய திருவருள்.

*7) 86—119:* அத்திருவருள் காரணமாக இவருக்கு உண்டான ஞானமும், பக்தியும்.

*8) 120—132:* அந்த ஞான பக்தி நிலைகளில் இவர் பேசும் பேச்சுக்கள். அவற்றுள் பக்தி நிலையில் பகவானுடைய அடியார் எல்லோரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமை.

*9) 133—157:* "பக்தி நிலையில் பேசும் அந்யாபதேசங்களுக்குச் சுவாபதேசங்கள்.

*10) 158—186:* அந்தப் பக்திக்கு நிலைக்களமான திவ்யதேசங்களில் நிற்கிற சர்வேச்வரனுடைய குண விசேஷங்கள்

*11) 187—188:* அந்தக் குணங்களுடைய எம்பெருமானிடத்தில் உண்டான அனுபவங்களால் தோன்றின அன்பினால் தூண்டப்பட்டு இப்பிரபந்தங்கள் அவதரித்த விதம்.

*12) 189—194:* ஸ்ரீ கீதையோடு திருவாய்மொழிக்கு ஒப்புமை.

*13) 195—201:* கீதையினும் உயர்வு.

*14) 202:* மாணாக்கனின் இலக்கணம்.

*15) 203:* மாணாக்கனுக்குரிய இலக்கணம் இல்லாதார்க்கும் ஆழ்வார் உபதேசிக்கும் காரணம்.

*16) 204—207:* தொண்டின் அடிப்படையிலே உபதேசிக்கையால் உபதேசம் பயன்பெற்ற விதம்.

*17) 208—210:* திருவாய்மொழியே இரஹஸ்யத்திரயத்தின் பொருள்.

*18) 211—212:* இரஹஸ்யதிரயத்திலே சொல்லப்பட்டிருக்கும் ஐம்பொருள்களும் திருவாய்மொழியில் சுருக்கமாகவும், விரிவாகவும் சொல்லப்பட்டிருத்தல்.

*19) 213:* திருவாய்மொழியில் வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல்.

*20)214—217:* பிரபந்தத்தின் அவதாரம் சர்வேச்வரனின் அவதாரத்துக்கு நிகர்.

*21) 218—228:* திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்பட்ட சர்வேச்வரனுடைய பரத்துவம் முதலான குணங்களும் ஆழ்வார்க்குத் தத்துவஞானம் முதலாக மோக்ஷம் அளவாகப் பிறப்பித்த நிலை விளக்கங்களும், ஆழ்வார் பிறர்க்கு உபதேசித்தலும்.

*22) 229:* ஆழ்வார்க்கு முதன் முதலிலேயே இவ்வுலக வாழ்வில் துன்பம் பிறந்திருக்கச் செய்தே சர்வேச்வரன் ஆழ்வாரை இவ்வுலகில் வைத்திருக்கக் காரணம்.

*23) 230—233:* ஆழ்வார்க்குப் பிறப்பித்த பரபக்தி பரஞான பரம பக்திகளான நிலைவேறுபாடுகள்.

*24) 234:* இப்பிரபந்தத்துக்கு ஒன்றான கருத்துப் பொருளான இவ்வுலக வாழ்வை அறுத்து வீடுபேற்றைத் தருவது, அஞ்ஞானத்தைப் போக்குவதற்கான நிறைந்த ஞானத்தைக் கொடுத்த பகவானுடைய பேரருளே!

## முதற்பகுதி

- ●● வேத, இதிகாசப் புராணங்கள் — படைப்பின் நோக்கம்.
- ●● சாத்திரங்களும், திருவெட்டெழுத்து மந்திரமும் — வேறுபாடு.
- ●● நம்மாழ்வார் பாசுரங்களும், வேதமும்.
- ●● நம்மாழ்வாரின் உயர்வு.
- ●● திருவாய்மொழியின் சிறப்பு.
- ●● நம்மாழ்வார் அவதரித்த இடம், குலத்தின் பெருமை.
- ●● பிறப்பால் தாழ்வில்லை.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
மாறன் மலரடி வாழ்க!

# வேத, இதிகாசப் புராணங்கள் படைப்பின் நோக்கம்

## வேதம், இதிகாச, புராணங்களை இறைவன் கொடுத்தது ஏன்?

மக்கள் அறியாமை என்ற இருளால் மறைக்கப்பட்டு இருக்கின்றனர். அதனால் உடம்பு வேறு, ஆன்மா வேறு என்று பகுத்தறிந்து உணரமுடியாமல் இருக்கின்றனர். அதனால் பிறப்பு, இறப்புக்களில் உழன்று திரிகின்றனர்.

இந்த மக்கள் அறியாமை என்ற இருளிலிருந்து நீங்கி, தெளிந்த அறிவு பெற்றுத் தன்னைக்கண்டு நன்மை தீமைகளை அறிதற்குக் கருவியாக இறைவன், வேதம் என்று சொல்லப்படுகின்ற சுருதிகளையும், அவற்றின் பொருளை விளக்குகின்ற இதிகாச புராணங்களான சாத்திரங்களையும் கொடுத்தான்.

## இந்த அருட்செயலை இறைவன் மனிதர்க்கு ஏன் செய்யவேண்டும்?

மனிதர்கள் இறைவனின் உடைமை, உடைமையைக் காப்பது உடையவனின் கடமை. அதுமட்டுமல்லாது, இறைவன் பிறருடைய துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளாத அருளும் உடையவன் ஆவான். அந்தப்பரம கருணையினால் மக்கள் உய்திபெற மேலே கூறிய சாத்திரங்களை இறைவன் அவர்களுக்குக் கொடுத்தான்.

கருணை இருந்தால் மட்டும் போதுமா? இறைவன் சுதந்திரனாக இல்லையென்றால் தான் நினைத்த காரியத்தைச் செய்ய முடியுமா? இறைவன் சர்வேச்வரன், அதனால் ஏவுதற்கு அதிகாரம் உடையவன், சுதந்திரனாய்ச் செயல்படக் கூடியவன். மனிதர்கள் அவனால் ஏவப்படும் நிலையில் உள்ளவர்கள். எனவே அவனால் மக்களை உய்வு கொள்ளச் செய்ய முடியும். எனவே இறைவனிடம் அருளும் உண்டு; சுதந்திரமும் உண்டு.

> "காருணிகனான சர்வேச்வரன் அறிவிலா மனிசர்
> உணர்வெனும் சுடர்விளக்கு ஏற்றிப்,
> பிறங்கிருள் நீங்கி,
> மேலிருந்த நந்தா வேத விளக்கைக் கண்டு,
> நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு,
> மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில்

கொளுத்தின பிரதீபமான கலைகளை,
நீர்மையினால் அருள் செய்தான். (சூத். 1)

(ஒரு காரணமும் இன்றிக்கே தானே திருவருள் புரியும் தன்மையனான சர்வேச்வரன், அறிவிலிகளாய்ப் பிறப்பு இறப்புகளில் உழன்று திரிகின்ற இம் மக்கள், தெளிந்த அறிவினை உடையவர்களாய், அந்த அறிவின்மையாகிற இருள் நீங்கித் தன்னைக் கண்டு, நல்லதையும் தீயதையும் பகுத்தறிதற்கு உறுப்பாகச் சாத்திரத்தைக் கொடுத்தான் — ஸ்ரீ பி.ஆர். புருஷோத்தம நாயுடு தமிழாக்க உரை)

### பகுத்தறிதலின் பயன்:

இப்படிச் சாத்திரங்களைக் கொண்டு பகுத்தறிவதனால் பலன் யாது? இந்த அறிவு விளக்கம் பெற்றமையால் நல்லது எது, தீயது எது என்று மனிதன் அறிகிறான். இதனால் விடத்தக்கனவற்றை (தீயதை) விடுகையும், பற்றத் தகுந்தவற்றைப் (நல்லதை) பற்றுகையும் மனிதன் தெரிந்து கொள்கிறான்.

"விவேக பலம் வீடு பற்று'' (சூத். 2)

(பகுத்தறிதற்குப் பயன் விடத்தக்கனவற்றை விடுகையும், பற்றத் தகுந்தவற்றைப் பற்றுகையும்)

"வீடுமின் முற்றவும்'' (திருவாய்மொழி 1.2.1)

(1.2:1... முதற்பத்து. இரண்டாம் திருவாய் மொழி; முதற்பாசுரம். இவ்வாறே இனி வருவன கொள்க)

"அற்றிறை பற்றே'' (1.2:5)

விடத்தகுவனவும், பற்றத் தகுவனவும் யாவை? துக்கம் அனைவரும் வெறுப்பது; எனவே விடத்தக்கது. சுகம் அனைவரும் விரும்புவது; எனவே பற்றத் தகுந்தது.

"தியாஜ்ய உபாதேயங்கள் சுகதுக்கங்கள்'' (சூத்.3)

(தியாஜ்யம் — விடத்தகுவன; உபாதேயம் — பற்றத் தகுவன)

### சுக துக்கத்திற்கு எல்லை:

துக்கத்திற்கு எல்லை எது? இன்ப துன்பங்களுக்குக் காரணமாக இருக்கின்ற ஐம்புல இன்பங்களில் அகப்பட்டு, மேலும் பல பிறப்புகளில் அழுந்துதலே துக்கத்துக்கு எல்லை ஆகும்.

"துக்கத்துக்கு எல்லை,
இன்புதுன்பளி பன்மாமாயத்து அழுந்துகை" (சூத்.4)

ஐம்புலன்களால் வரும் இன்பம் முதலில் இனிய அமுதம் போலத் தோன்றும். அதனால் அனைவரையும் மயங்க வைப்பது அநாதியான இந்தச் சம்சார பந்தம். அம்மாயத்தில் அழுந்துதல் துன்பமே.

"இன்னமுதெனத் தோன்றி ஓர் ஐவர் யாவரையும்
மயக்க நீ வைத்த முன்னம் மாயம்" (7.1:8)

சுகத்துக்கு எல்லை:

சுகத்துக்கு எல்லை யாது? நினைத்த பொருள் கிடைக்கப் பெற்றமையால் உளதாகும் களிப்பு. அது கிடைக்கப் பெறுமையால் உளதாகும் துன்பமும் நீங்க வேண்டும்.

இந்தக் களிப்பிற்கும், துன்பத்திற்கும் அடிப்படையானது பிறப்பு; பிறப்புள்ள இடத்தே சென்று புகுவது நோய்; தவிர்க்க முடியாதவை மூப்பும் இறப்பும் ஆகும். ஆக இந்தப் பிறப்பு, நோய், மூப்பு, இறப்பு அத்துணையும் நீங்க வேண்டும்.

இவையெல்லாம் நீங்கிய பின்பு இவ்வுலகோடு சம்பந்தம் இல்லாத பேரொளி மயமான திருமேனி பெற்று அளவற்ற இன்பமயமான அடியார்கள் (பரமபதத்தில்) உடன் கூட வேண்டும்.

"களிப்பும் கவர்வும் அற்றுப்பிறப்புப்பிணி மூப்பு இறப்பு அற்று
ஒளிக்கொண்ட சோதியமாய் உடன்கூடுவது என்று கொலோ
துளிக்கின்ற வான் இந்நிலம் சுடர் ஆழி சங்கு ஏந்தி
அளிக்கின்ற மாயப்பிரான் அடியார்கள் குழாங்களையே" (2.3.10)

அப்படிப்பட்ட அடியார்களோடு இருப்பதுதான் எல்லையற்ற இன்பம் ஆகும்.

"அந்தம் இல் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" (10.9.11)

எக்காலமும் பகவானைப் பரம பதத்திலே அனுபவிக்கின்ற ஆனந்தமே சுகத்துக்கு எல்லை.

"மாயன் கோலமலர் அடிக்கீழ்ச் சுழிபட்டு ஓடும்
சுடர்ச் சோதி வெள்ளத்து இன்புற்று" (8.10.5)

"சுகத்துக்கு எல்லை,
களிப்பும் கவர்வும் அற்றுப் பேரின்பத்து இன்புறுகை" (சூத்.4)

(சூத்திரத்தில் "இவற்றுக்கு" என்று இருப்பது சுகத்துக்கு துக்கத்துக்கு என இரண்டாகப் பிரித்து நிரல் நிறையாகப் பொருள் கொள்ளப்பட்டது)

ஐம்பொருள்களின் அறிவின்மையே துக்கத்திற்குக் காரணம்:

இப்படித் துக்கமும் சுகமும் மனிதனுக்கு உண்டாகக் காரணம் யாது?

1. பரம்பொருள் பற்றி அறிவின்மை; 2. ஆன்மாவாகிய தன்னை அறியும் அறிவின்மை : 3. விரோதியை அறியும் அறிவின்மை; 4. பரம்பொருளை அடையும் நெறியை அறியும் அறிவின்மை; 5. பேற்றினை அறியும் அறிவின்மை:

"மறந்தேன் உன்னை முன்னம்" (பெரிய திரு 6.2:2)
"யானே என்னை அறியகிலாதே" (திரு 2.9:9)

"ஓடியும் உழன்றும் உயிர்களே
கொன்றேன் உணர்விலேன்" (பெரிய திரு 1.6:6)
"பிறவிநோய் அறுப்பான் ஏணிலேன் இருந்தேன்" (பெரிய திரு 1.6:1)
"ஆழி அம்கை அம்மானை ஏத்தாது அயர்த்து" (பெரிய திருவந்தாதி 82)

ஆக இந்த ஐம்பொருள்கள் பற்றிய அறிவின்மையே பிறவிகள் காரணமாக வரும் துன்பத்துக் காரணம் ஆகும்.

"அநந்த கிலேச ஹேது
மறந்தேன், அறியகிலாதே, உணர்விலேன், ஏணிலேன்,
அயர்த்து என்று சொல்லுகிற
ஞாதவ்ய பஞ்சக அஞ்ஞானம்" (சூத்.5)

(அநந்த கிலேச ஹேது — மிகக் கொடியதாய் எல்லை இல்லாத துக்கத்திற்குக் காரணமான பிறவி; ஞாதவ்ய பஞ்சக அஞ்ஞானம் — அறியத் தக்க ஐம்பொருள்களின் ஞானம் இல்லாமை)

## ஐம்பொருள்களை அறிதலே சுகத்திற்குக் காரணம்:

சுகத்திற்குக் காரணம் யாது?

"நின்னை நெஞ்சில் உய்யும் வகை உணர்ந்தேன்" (பெரியதிரு 6.3:6)
"நின்ற ஒன்றை உணர்ந்தேன்" (திருவாய் 8.8:4)
"அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்களாம்
அவை நன்கு அறிந்தனன்" (திருவாய் 5.7:8)
"அவனது அருளால் உறற்பொருட்டு என்
உணர்வினுள்ளே இருத்தினேன்" (திருவாய் 8.8:3)
"ஆம் பரிசு அறிந்து கொண்டு" (திருமாலை 38)

1. பரம்பொருள் விஷயமான ஞானம்;
2. ஆன்மாவாகிய தன்னை உணரும் ஞானம்:
3. விரோதியை அறியும் ஞானம்:
4. அவனை அடையும் நெறியை அறியும் ஞானம்:
5. பேற்றினை அறியும் ஞானம்:

ஆக அறியத் தக்க இந்த ஐம்பொருள்களையும் அறிதல் மோட்சத்தைத் தரும்: அதுவே சுகம்.

"நிரதிசய ஆனந்த ஹேது,
உய்யும் வகை, நின்ற ஒன்றை,
நன்கறிந்தனன், உணர்வினுள்ளே,
ஆம்பரிசு என்றும் சொல்கிற
ஜ்ஞாதவ்ய பஞ்சகம் ஞானம்" (சூத்.5)

(நிரதிசய ஆனந்த ஹேது — மேன்மையையுடைய ஆனந்தத்திற்குக் காரணம்; ஞாதவ்யம் — அறிய வேண்டியவை: பஞ்சகம் — ஐந்து)

ஐம்பொருள்களையும் அறியாமை பிறவிக்குக் காரணம்: அறிதல் மோட்சத்திற்குக் காரணம்.

### ஞானத்திற்கும், அஞ்ஞானத்திற்கும் காரணம்:

இராசத, தாமத குணங்கள் அஞ்ஞானத்திற்குக் காரணம்; சத்துவ குணம் ஞானத்திற்குக் காரணம்.

*"இவற்றுக்குக் காரணம்*
*இரண்டில் ஒன்றில் ஒன்றுகைகள்"* *(சூத்.6)*

*(இவற்றுக்கு — ஆன்மாவின் அறிவின்மைக்கும், அறிவிற்கும்; இரண்டில் ஒன்றுகை — இராசத, தாமதம் ஆகிய இரண்டில் அழுந்தி இருந்தல்; ஒன்றில் ஒன்றுகை — சத்துவத்தில் அழுந்தி இருத்தல்)*

### சத்துவ, இராசத, தாமத குணங்களுக்குக் காரணம்:

பலர் இராசத, தாமத குணங்களில் அழுந்தியிருத்தற்கும், சிலர் சத்துவ குணத்தில் ஒன்றியிருத்தற்கும் காரணம் யாது?

இராசத, தாமத குணங்களுக்குக் காரணம், அறிவின்மைக்குத் தோற்றுவாயான இப்பிறவியே ஆகும்.

*"இருள் தருமா ஞாலத்துள் இப்பிறவி"* *(திரு 10.6:1)*

*"அசத்வ நிதானம் இருள்தரும் என்னும் ஜன்மம்"* *(சூத்.7)*

*(அசத்வ நிதானம் — சத்வகுணத்திற்கு மறுதலையான இராசத தாமத குணங்களுக்குக் காரணம்)*

சத்துவ குணத்துக்குக் காரணம் பிறக்கிற காலத்திலேயே கிட்டும் பகவானுடைய திருவருட் பார்வையாம்.

*"அவன் கண்களாலே அமலங்களாக விழிக்கும்"* *(திரு 1.9:9)*

*"சத்வ நிதானம்*
*அமலங்களாக என்னும் ஜாயமானகால கடாட்சம்"* *(சூத். 7)*

*(நிதானம் — காரணம்; ஜாயமானகால கடாட்சம் — இவ்வான்மா உலகில் பிறப்பு எடுக்கும் போதே தூய்மையைச் செய்யும் பகவானுடைய திருவருட்பார்வை.)*

### பிறவிக்கும், இறைவன் திருவருட் பார்வைக்கும் மூலம் யாது?

பிறவிக்கும், பிறக்கிற காலத்தில் இறைவனுடைய திருவருட் பார்வை உண்டாதற்கும் மூலம் யாது? இப்பிறவிக்கு மூலம் ஆத்மாவை விட்டுப் பிரிக்க ஒண்ணாதபடி பொருந்திக் கிடக்கிற மிக்க வலிமை வாய்ந்த நல்வினை, தீவினைகள் ஆகும்.

*"சார்ந்த இரு வல்வினைகளும்"* *(திரு 1.5:10)*

*"இதற்கு மூலம் இருவல் வினைகள்"* *(சூத். 8)*

*(இதற்கு — இப்பிறவிக்கு)*

இறைவனுடைய திருவருட் பார்வைக்கு மூலம் இறைவனிடத்தில் இயல்பாகவே அமைந்து இருக்கின்ற திருவருளாகிய புண்ணியம் ஆகும்.

"தொல்லருள் நல்வினை" (திரு 5.9:10)

"இதற்கு மூலம் அருள் நல்வினை" (சூத். 8)

(இதற்கு — இறைவனுடைய திருவருட் பார்வைக்கு)

## நல்வினை, தீவினைகளுக்கும் இறைவன் திருவருளுக்கும் காரணம்:

நல்வினை தீவினைகளுக்கும், இறைவனுடைய திருவருளுக்கும் அடியாது? நல்வினை, தீவினைகளுக்குக் காரணம் அறிவின்மையாம்.

"பொய்ந்நின்ற ஞானம்" (திருவிருத்தம் — 1)

"கர்ம பீஜம் பொய்ந்நின்ற என்கிற அவித்யை" (சூத். 9)

(பீஜம் — காரணம்; அவித்யை — அறிவின்மை)

இறைவனுடைய திருவருளுக்குக் காரணம் எப்பொழுதும் நன்மையே சிந்தித்து இருக்கும் இறைவனின் பண்பு ஆகும்.

"அருள் புரிந்த சிந்தை" (இரண்டாம் திருவந்தாதி 59)

"கிருபா பீஜம் அருள்புரிந்த என்கிற சௌகார்த்தம் (சூத். 9)

(கிருபை — அருள்; சௌகார்த்தம் — எப்பொழுதும் நன்மையே சிந்தித்து இருத்தல்; அழகிய சிநேகம்)

## பொய்ந்நின்ற ஞானத்துக்கும், இறைவனுடைய சிநேகத்துக்கும் காரணம்:

பொய்ந்நின்ற ஞானத்துக்குக் காரணம் அநாதியான இந்தப் பிரகிருதியின் சம்பந்தமேயாகும்.

"யாதானும் ஓராக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பு
அவிழ்ந்தும் மூதாவியில் தடுமாறும் உயிர் முன்னமே" (திருவிரு 95)

"அவித்யைக்கு நிமித்தம்
முன்னமேயான அநாதி அசித் சம்பந்தம்" (சூத். 10)

இறைவனுடைய சிநேகத்துக்குக் காரணம் அநாதியான நாராயண சம்பந்தமாம்.

"அடியேன் அடைந்தேன் முதன் முன்னமே" (திரு. 2.3:6)

"சௌஹார்த்தத்துக்கு நிமித்தம்
முதல் முன்னமேயான அநாதி அயந சம்பந்தம்" (சூத். 10)

(அயந — சர்வேச்வரன்)

## பிரகிருதி சம்பந்தம், ஆன்மாவிற்கு என்ன செய்கிறது?

பிரகிருதி சம்பந்தமும், நாராயண சம்பந்தமும் ஆன்மாவிற்கு என்ன செய்கின்றன?

துரு தன்னோடு சேர்ந்த மாணிக்கத்தை அதன் ஒளி அறத் தின்று உரு அழித்துத் தன்னைப் போல ஆக்கிவிடும். ஆன்மாவானது சிறந்த ஞானமாகிய குணத்தை உடையது; ஒளிமயமானது; ஒண்பொருள்.

"எண் பெருக்கு அந்நலத்து, ஒண்பொருள்" (1.2.10)

பிரகிருதி சம்பந்தமானது, ஆன்மா ஒண்பொருள் என்று அதன் சிறப்புப் பாராது, ஞானம் சிறிது கூட இல்லாதபடி அதனை அழித்து, இருந்தும் இல்லாத தன்மையைக் கொடுத்து விடுகிறது. இது, துரு மாணிக்கத்தின் ஒளி அறத் தின்று உரு அழிப்பதை ஒக்கும்.

"பிரகிருதி சம்பந்தம், கிட்டம் போலே, ஒண்பொருள்
என்னாதே, நான் இலாத என்கிற சாம்யம் பெற,
தின்று, அந்தமாகிற ஹானியை உண்டாக்கும்" (சூத். 11)

(நான் இலாத சாம்யம் பெற — ஆன்மாவுக்கு இல்லாத தன்மை சொல்லும்படி ஒப்புமை பெறுமாறு)

## நாராயண சம்பந்தம் ஆன்மாவிற்கு என்ன செய்கிறது?

குளவியானது யாதாயினும் ஒரு புழுவைக் கொண்டு வந்து ஊதித் (கொட்டிக் கொட்டி) தனது உருவத்தை அடையச் செய்கின்றது. அதுபோல நாராயண சம்பந்தம் ஞானம் சிறிதும் இல்லாத ஆன்மாவை, பரம்பொருளோடு பூரண ஒப்புமை பெறும்படி, தன்நிறமாக ஊதி, வாழ்வாகிற இருப்பை உண்டாக்கும். இப்பொழுது தான் அவன் உள்ளவனாக ஆகிறான்.

"நாராயண சம்பந்தம்,
வேட்டு வேளான் போலே,
பொருள் அல்லாதவை என்னாதே,
யானும் உளனாவன் என்கிற சாம்யம் பெற,
ஊதி, வாழ்வாகிற சத்தையை உண்டாக்கும், (சூத். 11)

(சாம்யம் — ஒப்புமை; ஊதி — தன் நிறமாக ஊதி)

## ஆன்மாவிற்குப் பிரகிருதி சம்பந்தம், நாராயண சம்பந்தம் என்றும் உள்ளனவா?

அஃதாவது அநாதியாகச் சொல்லப்பட்ட பிரகிருதி சம்பந்தம், நாராயண சம்பந்தம் என்னும் இரண்டும் ஆன்மாவிற்கு என்றும் உள்ளனவாக இருக்குமா?

பிரகிருதி சம்பந்தம் ஆன்மாவிற்கு இயல்பிலே அமையாமல் வந்தேறியாய் வினைகள் காரணமாக வருவது. எல்லாம் வல்ல இறைவன் வாசனையோடு போக்க நீங்கிவிடும்.

"பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடினேன்" (பெரிய திருமொழி 1,1:1)
"வினை பற்று அறுக்கும் விதியே" (பெரிய திருமொழி 11.4:9)
"அடைந்த அருவினையோடு அல்லல் நோய்
பாவம் மிடைந்தவை மீண்டு ஒழிய" (முதல் திருவந்தாதி 59)
"ஒன்று கூடினதாய்ப்
பற்று அறுக்க, மீண்டு ஒழிகையாலே" (சூத். 12)

அநாதியாக இருக்கிற உடையான் — உடைமை என்ற பகவானுடைய சம்பந்தம், இறைவனாலும் கழிக்கப் போகாது; ஆன்மாக்களாலும் கழிக்கப் போகாது.

"திருமாலே நானும் உனக்குப் பழ அடியேன்" (திருப்பல்லாண்டு—11)
"உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" (திருப்பாவை—28)

**"பழ அடியேன் என்னுமது**
**ஒன்றுமே ஒழியாதது"** **(சூத். 12)**

இடையில் வந்தேறியான இச்சரீர சம்பந்தத்தை "அநாதி" என்பானேன்? வந்தேறின காலத்துக்கு அடி தெரியாததினால் "அநாதி" எனப்பட்டது. இறைவனுடைய திருவருளாலே அது கழியக் காண்கையாலே "வந்தேறி" எனப்பட்டது.

மக்களுக்குக் கலைகளைத் (வேதம், இதிகாச, புராணங்கள்) தந்தமைக்குக் காரணம் இந்த நாராயண சம்பந்தமே ஆகும்.

**சத்துவ, இராசத, தாமத குணத்தார்க்கும் வேதம் நெறிகாட்டுவது ஏன்?**

உலக மக்கள் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்கட்கு வசப்பட்டு இருக்கின்றனர். சாத்திரங்கள் ஆகிய வேதங்கள் இம்முக்குணத்தாருக்கும் அறிவுரை பகர்கின்றன. வேதங்கள் மோட்சத்திற்கு உரிய சாதனங்கள் மட்டும் கூறவில்லை. தாமத, இராசத குணத்தார்க்கு விருப்பமான இவ்வுலக இன்பங்களையும், மேல் உலக இன்பங்களையும் அவற்றைப் பெறுதற்கான சாதனங்களையும்கூட வேதங்கள் கூறுகின்றன. "சத்துவ குணமுடையார்க்கு மட்டும் அறிவுரை சொன்னால் போதாதா? இராசத, தாமத குணத்தார்க்கும் அறிவுரை சொல்ல வேண்டுமா?" என்ற வினா எழுகிறது. குழந்தை மண்ணை சுவைத்துத் தின்னும். அன்பான தாய் அந்தக் குழந்தை மனம் வருந்தாமல் இருக்க மண்ணைத் தின்ன விட்டு விடுவாள். பிறகு அதற்கு மாற்று மருந்து தருவாள். அதுபோல் இறைவன் மக்களுடைய ருசிக்குத் தக்க பந்தங்களையும் காட்டி, பந்தங்களை அறுக்கும் மருந்தையும் காட்டுகிறான்.

**"வத்சலையான மாதா பிள்ளை பேகணியாமல்**
**மண் தின்னவிட்டுப் பிரதி ஔஷதம் இடுமாபோல,**
**எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான இவனும்**
**ருசிக்கு ஈடாகப் பந்தமும்,**
**பந்தம் அறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே"** **(சூத். 14)**

(வத்சலை — அன்பினை உடையவள்; பேகணியாமல் — வருந்தாமல்; பிரதி ஔஷதம் — மாற்று மருந்து)

**கீழான ருசியிலிருந்து மேலான இன்பத்துக்கு மனிதனை உயர்த்துதல்:**

"மக்கள் விரும்புகிறார்களே என்று அவர்கள் விருப்பத்திற்கேற்ற சாதனங்களைக் காட்டினால், மக்கள் பிறவியிலேயே உழன்று கொண்டு இருப்பார்களே! அவர்களைக் கடைத்தேற்ற வேண்டாவா?" என்பது அடுத்த வினா.

**பிறருக்குத் துன்பம் தரும் வேத மந்திரம்:**

தமோ குணம் மிக்கவர்கள் பொருளை ஈட்டுவதற்காகப் பிறரை வருத்தித் திரிவர். அவர்களிடம் மோட்சம் பற்றி உரைத்தால் அவர்களுக்கு ருசிக்காது. எனவே அவர்களிடம் பிறரை வருத்திக் கொன்று திரிவதற்கு உறுப்பான "அபிசார கர்மத்தை" உபதேசிக்க வேண்டும். இந்த யாகத்தினாலே மனம் களித்த அவனுக்கு ஆத்திக அறிவு வரும்.

**"ஆஸ்திக்யம் உண்டாக்கி"** *(சூத். 15)*

*(ஆஸ்திக்யம் — மறுபிறப்பும், இருவினைப்பயனும் உண்டு என்ற எண்ணம்)*

**சுவர்க்க இன்பம்:**

அதன் பின்னர் ஜ்யோதிஷ்டோமம் எனும் யாகம் செய்தால் சுவர்க்கம் அடையலாம் என்று அதற்கான சாதனங்களையும் வேதம் வகுத்துக்கூறும். இந்த நிலையிலே ஆன்மா வேறு, உடம்பு வேறு என்ற பகுத்தறிவு பிறக்கிறது.

**"விவேகம் உண்டாக்கி"** *(சூத். 15)*

*(விவேகம் — பகுத்தறிவு)*

**ஆன்ம இன்பம்:**

சுவர்க்கம் முதலான பேறுகளும் நிலையற்றன; அவையும் துன்பம் கலந்த இன்பம். அவற்றில் சென்று மீளும் நிலையாத இன்பத்தைக் காட்டிலும் நிலைத்த இன்பமான — தன்னையே அனுபவிக்கும் ஆன்ம இன்பமான — கைவல்யத்தை வேதம் சுட்டிக் காட்டும்.

**"அந்ய சேஷத்வ நிவ்ருத்தியை உண்டாக்கி"** *(சூத். 15)*

*(அந்ய சேஷத்வ நிவ்ருத்தி — பிறருக்கு அடிமைப்பட்டிருக்கும் அடிமையினின்றும் நீங்குதல்)*

**மோட்ச இன்பம்:**

அடுத்து தன்னைத்தானே அனுபவிக்கிற ஆன்ம இன்பத்தைக் (கைவல்யத்தை) காட்டிலும் மோட்ச இன்பமே சிறந்தது என்பதையும், அதற்கான சாதனமான பக்தியையும் வேதம் காட்டுகிறது.

**"ஸ்வஸ்வாதந்த்ரிய நிவ்ருத்தி உண்டாக்கி"** *(சூத். 15)*

(ஸ்வஸ்வாதந்த்ரிய நிவ்ருத்தி — தனக்குத்தானே உரியவனாக இருக்கும் தன்மையிலிருந்து நீங்குதல். சுவர்க்கம் வேறு; மோட்சம் வேறு. சுவர்க்கம் நிலையற்றம்; துன்பம் கலந்தது. மோட்சம் நிலையானது; இன்பமயமானது.)

**இறைவன் விருப்பத்திற்குப் பணி செய்யும் சரணாகதி:**

இதனையும் தாண்டி ஈச்வரனுக்கு அடிமைப்பட்டு — முழுச் சரணாகதி அடைந்து — அவன் விதித்த வழியில் ஒழுகுதலாகிய பாரதந்தர்யத்தை நிறைவாக வேதம் சுட்டுகிறது.

*"பாரதந்தர்யத்தை உண்டாக்கின வழி"* *(சூத்.15)*

(பாரதந்த்ரியம் — ஈச்வரனுக்கு அடிமைப்பட்டு, அவன்விதித்த வழியிலே நிற்றல்).

எனவே, வேதம் மனிதனுக்குக் கீழான தமோ நிலையிலிருந்து — அபிசாரகர்ம யாகம் தொடங்கி — ஒவ்வொன்றாக விருப்பத்தை உண்டாக்கி — நிறைவாக இறைவனுக்கே அடிமையாகும் பரதந்திரனாக — சாத்விக குணம் உடையவனாக — மனிதனை உயர்த்துகிறது.

# சாத்திரங்கள், திருவெட்டெழுத்து மந்திரம் வேறுபாடு.

## (i) சாத்திரங்களின் அருமை

### சாத்திரங்களில் சொல்லப்படும் பொருள்கள்:

சாத்திரங்கள் என்ன சொல்கின்றன? தேவர், மனிதர், திரியக்கு (விலங்கு), தாவரம் என்னும் தன்மையால் நான்கு வகைப்பட்ட சரீரங்கள்;

அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் என நான்கு வகைப்பட்ட வருணம்; பிரமசரியம், இல்லறம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என நான்கு வகைப்பட்ட ஆசிரமம்;

போன செல்வத்தை மீண்டும் அடைவதற்கு விரும்பும் ஆர்த்தன், புதிய செல்வத்தை விரும்பும் அர்த்தார்த்தி, ஆன்ம இன்பத்தை விரும்பும் கேவலன், பகவானை அடைய விரும்பும் பகவத்பிராப்தி காமன் — என்ற நான்கு வகைப்பட்ட அதிகாரிகள், அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகைப்பட்ட பலன்; சாலோக்யம் (இறைவனோடு ஒரே உலகத்தில் இருத்தல்), சாமீப்யம் (இறைவன் அருகில் இருத்தல்), சாரூப்யம் — (இறைவனுடைய உருவத்தை அடைதல்), சாயுச்சியம் (இறைவனுடைய அனுபவத்தைப் பெறுதல்) எனும் நால்வகைப்பட்ட மோட்சம்;

கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி, என நால்வகைப்பட்ட உபாயங்கள்; கர்ப்பகதி (கருவிலே செல்லுதல்; பிறப்பு), யாம்யகதி (யமலோகத்திற்குச் செல்லுதல்), தூமாதிகதி (சுவர்க்கம், முதலிய உலகங்கட்குச் செல்லுதல்), அர்ச்சிராதிகதி (மோட்ச உலகத்திற்குச் செல்லுதல்) எனும் நால்வகைப்பட்ட கதிகள்; கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என நால்வகைப்பட்ட யுகங்கள்;

கிருதயுகத்தில் தியானம் செய்தல், திரேதாயுகத்தில் யாகம் செய்தல், துவாபரயுகத்தில் அருச்சனை செய்தல், கலியுகத்தில் துதித்தல் ஆகிய நால்வகைப்பட்ட யுக தர்மங்கள்;

வாசுதேவர், சங்கர்ஷணர், பிரதியும்நர், அநிருத்தர்களாகிற (கண்ணன்) (பலராமன்) (கண்ணன் மகன் காமன்) (கண்ணன் பேரன்) நால்வகைப்பட்ட வியூகங்கள்:

கிருதயுகம் முதலிய நால்வகைப்பட்ட யுகங்களில் ஒவ்வொரு யுகத்திலும் பகவானின் நிறம் வெண்மை, பசுமை, சியாமம் (ஊதா), நீலம் (கறுப்பு) என்னும் நான்கு வகைப்பட்ட நிறங்கள்;

படைத்தல், அளித்தல், அழித்தல், மோட்சத்தை அருளல் என பகவானின் நான்கு வகைப்பட்ட தொழில்கள்;

ஆக இப்படி நான்கு விதமான பல அர்த்த விசேடங்களைச் சாத்திரம் சொல்கிறது.

"சதுர்விதமானஅதேஹவர்ண, ஆச்ரம, அதிகார,
பல, மோட்ச,அசாதன, கதி, யுக, தர்ம, வியூக, ரூப,
கிரியாதிகளை அறிவிக்கிற பாட்டு பரப்புக்கு" *(சூத். 16)*

**சாத்திரங்களைக் கற்பதற்கு வேண்டிய தகுதிகள்:**

***1. பரத கண்டத்தில் மானிடராய்ப் பிறத்தல்:***

தீவுகளில் சாலச் சிறந்தது நாவலந்தீவு (பூமி); இங்கு தான் இவ்வுலக இன்பத்தையும், மோட்ச உலக இன்பத்தையும் அடைதற்குரிய சாதனங்களைச் செய்ய முடியும். இந்நாவலந்தீவில் உள்ள ஒன்பது கண்டங்களில் பரத கண்டமே சிறந்தது. பரத கண்டத்தில் மட்டுமே உலக இன்பத்தோடு மட்டும் அல்லாமல், மோட்ச இன்பத்தையும் அடைதற்குரிய சாதனத்தைச் செய்ய முடியும். இப்பரத கண்டத்தில் பிறத்தல் அரிது; அதிலும் மனிதனாகப் பிறத்தல் மிக அரிது.

"பெரிய தீவினில், ஒன்பதாம் கூறும்,
மானிடப்பிறவியும்" *(சூத்.16)*

(பெரிய தீவு — நாவலந்தீவு; பூமி. ஒன்பதாம் கூறு — ஒன்பது கண்டங்களில் ஒரு பகுதியான பரத கண்டம்)

***2. நிலைத்த சரீரம்:***

மனிதப் பிறவியிலே பிறந்தாலும், மனித சரீரம் நொடிப் பொழுதில் அழிந்து விடுகிறது. இப்படி நிலையற்ற சரீரம் நிலைத்து இருத்தல் அரியது ஆகும்.

"மின்னின் நிலையில, மன்னுயிர் ஆக்கைகள்" *(1.2.:2)*

***3. அந்தண குலத்திலே பிறத்தல்:***

அப்படி நிலையான சரீரத்தைப் பெற்று இருந்தாலும், சாத்திர ஞானத்தைப் பெறுதற்குத் தகுதியுடைய முதன்மை பெற்றதான அந்தணர் குலத்திலே பிறந்திருக்க வேண்டும்.

"குலங்களாய ஈர் இரண்டில் ஒன்றி" *(திருச்சந்த விருத்தம் 90)*

***4. இளமையில் கற்றல்:***

அப்படி அந்தணர் குலத்திலே பிறந்து இருந்தாலும், இளமையோடு இருக்க வேண்டும். இளமையில் தான் புகழுக்குரிய காரியங்களைச் செய்ய முடியும்.

"கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம்" *(2.10.1)*

***5. சாத்திரத்தைக் கற்க இச்சைப் படுதல்:***

இளமை இருந்தாலும் ஒரு செயலைச் செய்ய — சாத்திரத்தைக் கற்க — ஓர் இசைவு வேண்டும். அந்த இசைவு ஏற்படச் சாத்திரத்தின்மேல்

இச்சை மூள வேண்டும்.

*"யானும் என் நெஞ்சும் இசைந்து ஒழிந்தோம்" (பெரிய திருவந்தாதி 26)*

### *6. சாத்திரம் கற்று முடிக்க நூறு ஆண்டுகள் இருத்தல்:*

இவ்வளவும் இருந்தாலும் வேத சாத்திரங்களைக் கற்க நூறு வயது வேண்டும்.

*"வேத நூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும்" (திருமாலை 3)*

**"ஆக்கை நிலையும், ஈரிரண்டில் ஒன்றும்,**
**இளமையும், இசைவும் உண்டாயப் புகுவரேனும்"** *(சூத்.16)*

### *சாத்திரங்களின் பொருளுணர்ந்து கற்றல் அரிது:*

எல்லை இலாத கரையை உடைய சாத்திரங்கள் பல அறியத் தக்கனவாக இருக்கின்றன; காலமோ குறைவு; தடைகளோ அளவற்றன. சில வாழ்நாள்; பல்பிணி; சிற்றறிவு. மனமோ ஓரிடத்தில் நிலைத்து நிற்பதன்று; அலைந்து கொண்டே இருக்கும்.

*"நின்றவா நில்லா நெஞ்சு" (பெரிய திருமொழி 1.1:4)*

சுருதி, ஸ்மிருதி முதலான சாத்திரங்களின் பொருளுணர்ந்து கற்றல் அரிது.

*"ஆமாறு அறிவுடையார் ஆவது அரிது அன்றே" (பெரிய திருவந்தாதி 37)*

**"என்கிறதுக்குள்ளே, விக்கினம் அற, நின்றவாநில்லா**
**பிரமாதியைக்கொண்டு அறக் கற்கை அரிது என்றிறே"** *(சூத்.16)*

*(என்கிறதுக்குள்ளே — இந்த நூறு வயதிற்குள்ளே; விக்கினம் — தடை; பிரமாதி — அலைந்து திரியும் உள்ளம்)*

## (ii) திருவெட்டெழுத்து மந்திரத்தின் பெருமை

### வேதத்திற்குப் புறம்பான சாத்திரங்கள்:

வேதத்திற்குப் புறம்பான சாத்திரங்கள் உண்மையல்லாத பொருள்களைத் தெரிவிக்கின்றன. எனவே, அவை சாரம் அற்றவை.

### வேதத்தில் உபநிடதபாகம்:

வேதம் உள்ளதை உள்ளவாறே கூறினாலும், வேதத்தின் முன்பாகம் மிகச்சிறிய பேறுகளைப் பெறுதற்குரிய சாதனங்களைச் சொல்லுகிறது. அது சாரம் அன்று. அவ்விதமின்றி அந்தமில் இன்பத்து அழிவில் வீடு, பரம்பொருள் சொரூபம், அதனை அடைதற்குரிய சாதனங்கள் ஆகிய வற்றைச் சொல்லுவதால், வேதத்தில் "உபநிடதபாகம்" சாரமாக இருக்கும்.

**" வேதசார உபநிஷத்"** *(சூத். 16)*

### *உபநிடத்தில் நாராயண அநுவாகம்:*

உபநிடதத்திலும் பரம்பிரஹ்ம, பரதத்வ, பரஞ்சோதி, பரமாத்மா என்று பொதுவாகச் சொல்லப் பட்டுள்ளது. சம்புசிவன் என்று

விசேடித்துச் சொல்லப்பட்டுள்ளது. "நாராயணனே" எனப் பகவானின் முதன்மையைத் தெளிவாக அறுதியிட்டுச் சொல்லியிருப்பதால் உபநிடதத்தில் "நாராயண அநுவாகம்" சாரதரமாக இருக்கும்.

*"சாரதர அநுவாகம்"* *(சூத். 16)*

### நாராயண அநுவாகத்தில் விஷ்ணு காயத்திரி:

சராசரங்கள் அனைத்திலும் உயிருக்குள் உயிராய்த் தங்கி இருக்கும் தன்மையைத் தெளிவிக்கின்ற விஷ்ணு, வாசுதேவன், நாராயணன் என்ற மூன்று மந்திரங்களையும் சொல்லுகிற "விஷ்ணு காயத்திரி" சாரதமமாய் இருக்கும்.

*"சாரதம காயத்திரியில்"* *(சூத். 16)*

### விஷ்ணு காயத்ரியில் திருவெட்டெழுத்து திருமந்திரம்:

காயத்ரியிலும், பரந்து உறைதல் என்ற தன்மையில் விஷ்ணு, வாசுதேவன் என்ற மந்திரங்கள் வேறுபாடு கொண்டுள்ளன. வேதாந்தத்தின் கருத்துப் பொருளாய், எல்லா வேதங்களின் சுருக்கமாய் இருப்பது. "ஓம் நமோ நாராயணாய" என்ற திருவெட்டெழுத்துத் திருமந்திரமே.

"முதல் ஓதுகிற பொருள் முடிவான சுருக்கை" (சூத். 16)

(பொருள் முடிவான சுருக்கை — வேதாந்தத்தின் கருத்துப் பொருளாய், எல்லா வேதங்களின் சுருக்கமுமான திருமந்திரத்தை)

### திருமந்திரத்தை இறைவன் வெளியிட்டருளிய பாங்கு:

முன்பு குறிப்பிட்டது போல சாத்திரங்களைத் தெளிந்து அறிவது அரிதானகாரியம்; அதனால் பகவான் பக்தி உடையோர் அனைவரும் அதிகாரிகளாகும் வண்ணம் எளிதான திருமந்திரத்தை வெளியிட்டு அருளினான்.

### வண்டு மலரிலிருந்து தேனை எடுத்தலுக்கு ஒப்புமை:

வண்டு மலர்களிலே அலைந்து திரிந்து தேனை எடுக்கிறது. அது போல இறைவன் வேதசாகைகளிலிருந்து திருமந்திரத்தை எடுத்து அருளினான்.

"தெய்வ வண்டாய் சாகைகளிலே தேனாக எடுத்து" *(சூத். 16)*

### அன்னம் நீரில் பாலைப்பிரித்து எடுத்தலுக்கு ஒப்புமை:

அன்னம் நீரிலே கலந்து கிடக்கின்ற பாலைப் பிரித்து எடுப்பதுபோல, இறைவன் வேதத்திலிருந்து திருமந்திரத்தைப் பிரித்து எடுத்தான்.

"அன்னமாய் அன்று அங்கு அருமறை பயந்தான்" (பெரிய திருமொழி *5.7:3*)

"அன்னமாய் ஓதம்போல் கிளர்வேத
நீரிலே பாலாக எடுத்து" *(சூத். 16)*

**பாற்கடலில் அமுதத்தை எடுத்தலுக்கு ஒப்புமை:**

அசுரர்களுக்கு அஞ்சினவர்களாய் இறவாமை விரும்பினவர்களான தேவர்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பகவான் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்தான். அது போலப் பிறப்பு இறப்புகட்கு அஞ்சினவர்களாய், மோட்சத்தை அடைய விரும்பினவர்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பகவான் திருமந்திரத்தை எடுத்து அருளினான்.

"அமுதம் கொண்ட பெருமான்" *(பெரிய திருமொழி 6.10:3)*

"அமுதம் கொண்டவன் நால்வேதக்
கடலிலே அமுதமாக எடுத்து.. *(சூத். 16)*

**பகவான் திருமந்திரத்தைத் தானே ஆசாரியனுமாய், சீடனுமாய் நின்று அருளல்:**

இப்படி வேத சாரமான திருமந்திரத்தைத் தானாகவே எடுத்து, பரமபதத்தைக் கொடுப்பதான பேரருளாலே, ஸ்ரீவதரியாச்சிரமத்திலே நரநாராயணர்களாக அவதரித்துத் தானே சீடனுமாய்த்தானே ஆசாரியனுமாய் நின்று, சாத்திரமானது உபதேச அனுஷ்டானங்களாலே விரிவினை அடையும்படி செய்தருளினான்.

"பெருவிசும்பு அருளும் பேரருளாலே
சிங்காமை விரித்தது" *(சூத். 16)*

(சிங்காமை — குறை படாமல்)

### (iii) சாத்திரங்கள் — சாத்திரங்களின் சாரமான திருமந்திரம் — வேறுபாடு.

**சாத்திரத்துக்குச் சரீரத்திலே நோக்கு; திருமந்திரத்துக்கு ஆன்மாவிலே நோக்கு:**

சாத்திரத்துக்கு இலக்கு சரீரத்தோடு கூடிய ஆன்மா. திருமந்திரத்துக்கு இலக்கு ஆன்ம சொரூபம். சாத்திரத்துக்குச் சரீரத்திலே நோக்கு. திருமந்திரத்துக்கு ஆன்மாவிலே நோக்கு.

"சாஸ்திரத்துக்கு விசிஷ்ட வேஷம் விஷயம்
தாத்பர்யத்துக்கு (நிஷ்கிருஷ்ட) வேஷம் விஷயம்" *(சூத்.17)*

(விசிஷ்ட வேஷம் — சரீரத்தோடு கூடின ஆன்மாவின் தன்மை; நிஷ்கிருஷ்ட வேஷம் — சரீரம் இல்லாத சுத்த ஆன்மாவின் தன்மை; நிஷ்கிருஷ்டம் — வடிகட்டுதல்; விஷயம் — இலக்கு)

**சாத்திரம் கற்கச் சில தகுதிகள் வேண்டும்; திருமந்திரம் அனைவரும் கற்கலாம்:**

சாத்திரங்கள் கற்க ஒருவன் சாதிகளிலே பிறக்கும் பிறவியிலே யாதல், ஆசாரத்திலேயாதல் ஒரு குற்றமும் இல்லாமல் இருக்க வேண்டும். திருமந்திரத்திற்குத் தக்கவர் தகாதவர் என்னும் வேறுபாடு இன்றி, எல்லாரும் கற்கத் தகுதியுடையவர் (அதிகாரிகள்) ஆவார்கள்.

"நானும் சொன்னேன் நமரும் உரைமின்
நமோ நாராயணமே" (பெரிய திருமொழி 6.10:6)

இந்த வேறுபாட்டினால் சாத்திரங்களை ஒரு சிலரே கற்கலாம். திருமந்திரம் எல்லாரும் கற்கலாம்.

**"தோல்புரையே போமதுக்குப் பழுதிலா யோக்யதை வேணும்; மனமுடையீர் என்கிற சிரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நானும் நமரும் என்னும்படி சர்வரும் அதிகாரிகள்". (சூத். 18)**

[தோல் புரையே போமதுக்கு — சரீரத்தோடு கூடிய ஆன்மாவையே நோக்காய் நடக்கிற சாத்திரங்களுக்கு; மர்மஸ்பர்சிக்கு — ஆன்மாவிலே நோக்குள்ள திருமந்திரத்திற்கு; நானும் நமரும் என்னும்படி சர்வரும் அதிகாரிகள் — தக்கவர் தகாதவர் என்னும் வேறுபாடு இன்றி எல்லாரும் அதிகாரிகள் ஆவார்கள்].

### சாஸ்திரிகள் தம்முயற்சி, இறையருள் இரண்டனையும் பற்றி நிற்பர்:

இறைவனே பலன்களைக் கொடுக்கின்றவன்' என்ற சாத்திரங்களில் ஊன்றி நிலைநின்ற சாஸ்திரிகள், ஆற்றிலே நீந்துகிறவர்கள் ஒரு கையிலே தெப்பத்தை இடுக்கிக் கொண்டு ஒரு கையிலே நீரைத் துழாவுமாறு போன்று, தம் முயற்சியும் தம்முயற்சியாலே சாதிக்கப்படுகின்ற இறைவனுடைய அருளும் ஆகிய இரண்டனையும் பற்றிக் கொண்டு, பிறவிக் கடலை நீந்த எண்ணுபவர்கள் ஆவார்கள்.

"புணைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கு" (திருவாய் 2.8:1)

**"சாஸ்திரிகள் தெப்பக் கையரைப் போல, இரண்டையும் இடுக்கி பிறவிக் கடலை நீந்த எண்ணுவார்கள்" (சூத். 19)**

(இரண்டையும் இடுக்கி — தம் முயற்சியும் இறைவனுடைய அருள் ஆகிய இரண்டனையும் பற்றிக் கொண்டு)

### திருமந்திரத்தில் ஊன்றித் திளைக்கும் ஞானிகள் இறைவன் திருவருள் ஒன்றனையே பற்றி நிற்பர்:

இவ்வான்மா தன் முயற்சியை உதறித் தள்ளிவிட்டு, இறைவன் ஒருவனையே உபாயமாகப் பற்றி இருக்கத்தக்கது என்று தெரிவிக்கின்ற சாத்திர சாரமான திருமந்திரத்தை அறிந்து, அதில் நிலைத்து இருக்கும் ஞானிகள், ஆற்றினைக் கடப்பதற்கு ஓடம் ஏறினவர்கள், கரை ஏறுவதற்குச் செய்ய வேண்டிய தங்கள் முயற்சியையும் கைவிட்டுத் தெப்பத்தையும் கைவிட்டுக் 'கரை' நெருங்குவது எப்போது? என்று பார்த்துக் கொண்டு அதன் விட்டத்திலே இருக்குமாறு போலே, தங்கள் முயற்சியால் செய்யப்படுகின்ற வாழ்த்து வணக்கம் முதலியவற்றையும் விட்டு, அவ்வணக்கம் முதலியவற்றால் சாதித்துக் கொள்ளப்படுகின்ற பகவானுடைய திருவருள் மாத்திரமே நிலைத்த சாதனம் என்று அறுதியிட்டு, இறைவனை அடைதலாகிற கரையை, அடைவதற்குத் தகுதியான காலத்தை எண்ணி நிற்பார்கள்.

"கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" (திரு. 6.9:9)
"ஆக்கை விடும்பொழுது எண்ணே (திரு. 1.2:9)

**"சாரஜ்ஞர், விட்டத்தில் இருப்பாரைப்போலே, இருகையும் விட்டுக் கரைகுறுகும்காலம் எண்ணுவார்கள்" (சூத். 19)**

(சாரஜ்ஞர் — ஞானிகள்)

**சாஸ்திரிகளுக்கு இறைவனைக் குறுகும் தன்மை வந்த விதம்:**

"ஆன்ம சொரூபம் ஞானமாகிய குணத்தினை என்றும் உடையது; அந்த ஞானத்தாலே ஆன்ம சொரூபம் எங்கும் ஒக்கப் பரந்து சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டு இருப்பது; ஞானமாகிற குணத்தை உடைமையால் தொழில் புரிதல், இன்பம் நுகர்தல் முதலியனவற்றோடு கூடியிருப்பது; ஆன்மா தான் இறைவனுக்கு அடிமை என்று கேள்வியாலும் நினைத்தலாலும் அறிகிறது. "என்று சாத்திரம் படிப்பவர்கள் ஆன்ம சொரூபத்தினை அறியவே, தம் முயற்சியால் பிறவிப் பெருங்கடலை தாண்டுகையாகிற இத்தன்மையைப் பெறுகின்றனர்.

*"உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று உயர்ந்து உருவியந்த இந்நிலைமை*
*உணர்ந்து உணர்ந்து உணரிலும்".* *(1.3:6)*

(உணர்வையே இயற்கையாக உடையதாய், அணு அளவினதாய்ப் பத்துத் திசைகளிலும் ஞானத்தால் நிறைந்ததாய், உடலைக் காட்டிலும் வேறுபட்டு இருக்கின்ற இவ்வுயிரின் தன்மையினைக் கேள்விகளால் உணர்ந்து, பின் மனத்தால் உணர்ந்து, பின் யோகத்தாலும் உணர்ந்தாலும்)

*"இவை ஸ்வரூபத்தை உணர்ந்து*
*உணர்ந்து உணர உண்டாம்"* *(சூத். 20)*

**திருமந்திரத்திலே ஊன்றி நின்றவர்களுக்கு இறைவனைக் குறுகும் தன்மை வந்த விதம்:**

திருமந்திரத்திலே ஊன்றி நின்ற ஞானிகளுக்கு ஆன்ம சொரூபத்தைக் காட்டுவதற்காக, பகவான் அவர் ஆன்மாவைத் தன் உடலாகக் கொண்டு, உலக ஞானமும், உயிரும், உடலும், பிரகிருதியும், பிரகிருதி விகாரங்களும் விடத்தக்கவை எனும் அறிவைப் பெற வைத்து, யாதொரு காரணமும் இல்லாமல் கருணையால் ஆன்மாக்களை நடத்துகிறான்.

*"உணர்வும் உயிரும் உடம்பும் மற்று உலப்பிலனவும் பழுதேயாம்*
*உணர்வைப் பெற ஊர்ந்து"* *(8.8.3)*

இதனால் இந்த ஞானிகள் ஆன்ம சொரூபத்தைச் சரீரம் முதலானவற்றிற்கு வேறுபட்டதாய், ஞான ஆனந்தங்களை வடிவமாக உடையதாய், அறியும் தன்மை முதலானவற்றைக் குணமாக உடையதாய், அடியார்கட்கு அடிமையாதலை முடிவாக உடைய பகவானுக்கு அடிமையாதலை உடையதாய், அவ்வடிமைக்கு எல்லை நிலமான பாரதந்திரியத்தையும், இனியதாயிருக்கும் தன்மையையும், தனக்குப் பண்பாக உடையதாய் இருக்கும் என்று உணருகின்றனர். இவ்வாறு உணர்ந்ததும், ஞானிகள் தம் பாரத்தை இறைவன் மேல்போட்டு, தம்முயற்சியில்லாத நிலையை அடைகின்றனர்.

*"உணர்வைப் பெற ஊர, மிக உணர, உண்டாம்"* *(சூத். 20)*

**சாத்திரத்தைவிட திருமந்திரம் மேலானது:**

"ஆன்மா பகவானுக்கு அடிமைப்பட்டு இருக்கும் நிலையான சேஷத்வம், பகவானோடு கூட இன்பத்தை அனுபவிக்கும் நிலையான போக்திருத்வம் — ஆகிய இரண்டு தன்மைகளை உடையது" என்பதை விளக்குவது சாத்திரம்.

"ஆன்மா பாரதந்திரியம், இறைவனுக்கு இனிய பொருளாக இருக்கும் தன்போக்யதை — ஆகிய இரண்டு தன்மைகளை உடையது" என்பதை விளக்குவது திருமந்திரம்.

சேஷத்வமாவது, இறைவன் தன் விருப்பின்படி செய்யும் காரியங்களுக்குத் தகுதியாக இருத்தல். சேஷன் — பிறனுடைய (இறைவனுடைய) பயனையே தனக்கு முக்கியப் பயனாகக் கொண்டு இருப்பவன். இவனுடைய தன்மை சேஷத்வம்.

பாரதந்திரியமாவது இறைவன் தன்விருப்பின்படி செய்யும் காரியங்களுக்குப் பயன்படுதல். பரதந்திரன் — பிறன் ஒருவனைப் பிரதானமாகக் கொண்டு இருப்பவன்; இவனுடைய தன்மை பாரதந்திரியம்.

சேஷத்வம் கட்டிப்பொன்; விருப்பப்படி பயன்படுத்தத் தகுதியாக இருத்தல். பாரதந்திரியம் பணிப்பொன்; பணியிலே பயன்பட்டுக் கொண்டிருக்கின்ற பொன்; அல்லது ஆபரணங்களாக இருக்கின்ற பொன்.

போக்திருத்வமாவது, அறியும் தன்மையின் பயனாலே இன்பநிலையில் விளைகிற சுவைகளைத் தான் அனுபவிக்கிறவனாக இருத்தல்; போக்தாவின் தன்மை போக்த்ருத்வம்; போக்தா— அனுபவிக்கின்றவன்.

போக்யதையாவது இனிய பொருளாக இருத்தல்; ஆன்மாவில் உள்ள ஞானம் முதலானவைகளும் இறைவனுக்கு இனியனவாக இருத்தல்.

ஆன்மா பகவானுக்கு அடிமைப்பட்டது என்று சேஷத்வமும், ஆன்மா பகவானுடைய அனுபவத்தை நுகர்வது என்னும் போக்திருத்வமும் ஆன்மாவின் சொரூபமாகச் சாத்திரம் விளக்கும். ஆன்மா இறைவனுக்கு விருப்பமானபடி பயன்படுதல் என்னும் பாரதந்திரியமும், இறைவனுடைய மகிழ்ச்சிக்குப் பயன்படும்படி ஆக்கிக் கொடுப்பதான போக்யதையும் ஆன்ம சொரூபமாகத் திருமந்திரம் விளங்கும். எனவே சாத்திரம் விளக்கும் சேஷத்வம் போக்திருத்வத்தைவிட, திருமந்திரம் விளக்கும் பாரதந்திரியம் போக்யதை என்பவை சிறந்தவை ஆகும்.

"சேஷத்வ போக்த்ருத்வங்கள் போல் அன்றே
பாரதந்திரிய போக்யதைகள்" *(சூத். 21)*

## (iv) திருமந்திரத்தின் கருத்து

"ஓம் நமோ நாராயணாய" என்பது திருமந்திரம்.

"ஓம்" என்பது பிரணவம்.

ஓம் — அகாரம் உகாரம் மகாரம். அகாரம் — திருமால்; உகாரம் — பிரிநிலைப்பொருள்; மகாரம் — உயிர்கள்.

அகரத்தின் மேல் "ஆய" எனும் நான்கனுருபு புணர்ந்து கெட்டுள்ளது. இதற்குப் பொருள் "அடிமை" என்பது.

ஆக, பிரணவத்தால் அகாரத்தின் பொருளான ஸ்ரீமந்நாராயணனுக்கே, மகாரத்தின் பொருளான உயிர்கள் அனைத்தும், அடிமை என்பது புலனாகின்றது. இதனால், ஆத்மாவின் சேஷத்வமும், போக்திருத்வமும் தெளிவாகின்றன.

"நம" பதமும், "நாராயண" பதமும் இம்மூன்று எழுத்துக்களின் பொருளை விரித்துக் கூறுகின்றன.

"நம"

"ந" — இல்லை; "ம" — என்னுடைய.

"நம" — என்னுடைய இரட்சணத்தில் எனக்குச் சம்பந்தம் இல்லை.

"நாராயண" நார + அயந.

நாரங்களுக்கு அயநமாக இருப்பவன் நாராயணன்; நாரங்களில் தங்கியிருப்பவன் நாராயணன். நாரம் — நித்தியமான உயிர்கள்; அயநம் — இடம். எல்லாப் பொருள்களிலும் இறைவன் உளன்: எல்லாப் பொருள்களும் இறைவனிடத்து உள்ளன என்பது இதன் பொருள். இப்பொருள்களால் இறைவனுடைய பரத்துவம். (மேன்மை) சௌலப்யம் (எளிமை) (நீர்மை) என்ற திருக்குணங்கள் வெளியாகின்றன.

"நாராயண" பதத்தின் மேலே உள்ள "ஆய" என்ற உருபிற்குப் பொருள் "கைங்கர்யத்தை வேண்டுவது" என்பது. இதனால் "ஸ்ரீமந் நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேண்டும்" என்பது புலனாகின்றது. இதன் காரணமாக ஆன்மா தன் இன்பநுகர்ச்சி வேண்டாது, இறைவன் உகக்கும் நுகர்பொருளாகவே இருக்கும் ஆன்மாவின் போக்யதையை அறிகிறோம்.

ஆக, திருவெட்டெழுத்திற்குக் கருத்து, இறைவன் ஆகிய ஸ்ரீமந் நாராயணனுக்கே உரியேனான நான், எனக்கும் உரியன் அன்றிக்கே ஒழிய வேண்டும்; எல்லார்க்கும் இறைவனான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக அவனுக்கு நுகர் பொருளாகவே இருக்க வேண்டும்.

"ஓம் நமோ நாராயணாய".

## (v) சேஷத்வம், போக்திருத்வம், பாரதந்திரியம், போக்யதை சில விளக்கங்கள்.

**போக்திருத்வத்தைவிட போக்யதை மேலானது:**

பிரணவத்திலே உள்ள மகாரம் ஆன்மாவினைக் காட்டுகிறது. அது "மந" என்ற தாதுவிலே தோன்றினது. மந — ஜ்ஞாநே. எனவே மகாரத்தின் பொருள் ஞானம். இதனால் போக்த்ருத்வம் (நுகர்வோனாக இருத்தல்) தெரிவிக்கப்பட்டது.

"நாராயணாய" பதத்தில் உள்ள "ஆய" என்னும் நான்காம் வேற்றுமையினுடைய பொருள் "ஆனந்தம் " என்பது. இதனால் போக்யதை தெரிவிக்கப்பட்டது.

முன்னால் வந்த மகாரத்தைவிட பின்னால் வரும் "ஆய" மேலானது.

ஞானத்தை விட ஆனந்தம் மேலானது. போக்ருத்வத்தை விட போக்யதை மேலானது.

"ஞானத்தின் மேலேயிறே ஆனந்தத்துக்கு உதயம்" (சூத்.22)

சேஷத்வத்தைவிட பாரதந்திரியம் மேலானது: பிரணவத்தின் முதலில் உள்ள அகரத்தின் மேலே "ஆய" எனும் நான்காம் வேற்றுமை உருபு புணர்ந்து கெட்டது. இது "சதுர்த்தி" ஆகும். அடிமை என்பது பொருள். சேஷத்வத்தைக் குறிக்கிறது.

"நம" பதத்தின் ஈற்றிலே "அ" எனும் ஆறாம் வேற்றுமை உருபு ஏறியிருக்கிறது. இது "ஷஷ்டி" ஆகும். என்னுடைய இரட்சணத்தில் எனக்குச் சம்பந்தம் இல்லை. இதனால் பாரதந்திரியம் தெரிவிக்கப்பட்டது.

"நம" பதம் ஒரு மொழியாகவும் கொள்ளலாம். தொடர் மொழியாகவும் கொள்ளலாம். இங்கு தொடர் மொழியாகக் கொள்ளப்பட்டது. எனவே "ஷஷ்டி" என்ற பிரயோகம் "ம" என்பதனை மட்டுமே காட்டுகின்றது. "ந" வைக் காட்டாது.

முன்னால் வந்த சதுர்த்தியைவிட, பின்னால் வந்த ஷஷ்டி மேலானது. சேஷத்வத்தைவிட பாரதந்திரியம் மேலானது.

"சதுர்த்தியின் மேலேயிறே ஷஷ்டிக்கு உதயம்" (சூத். 22)

சேஷத்வமும், போக்திருவத்வமும் ஆன்ம சொரூபங்கள்; இவை முற்கூறியவை.

**பாரதந்திரியமும், போக்யதையும், ஆன்ம சொரூபத்தின் உண்மை நிலைகள்:**

இவை பிற் கூறியவை. " முற் கூறியதின் பிற்கூறியது சிறந்தது" என்ற நியாயத்தால் சேஷத்வம் போக்திருத்வத்தை விடப் பாரதந்திரியம் போக்யதை என்பன சிறந்தன ஆகும்.

**பாரதந்திரியம், போக்யதைகளின் மேன்மை:**

"ஓம் நமோ நாராயணாய"

சேஷத்வம் — பிரணவத்தின் முதலிலே உள்ள அகாரத்தின் மேலே புணர்ந்து கெட்ட "ஆய" என்னும் உருபின் பொருள். அகரம் முதலில் உள்ளது எனவே இது பிரதம தசை (முதல்நிலை)

போக்திருத்வம் — பிரணவத்திலே உள்ள மூன்றாம் எழுத்தான மகாரத்தின் பொருள்: திருமந்திரத்தில் இடையில் வந்துள்ளது. எனவே மத்யமதசை. (இடைநிலை)

பாரதந்திரியம் — "நம" பதம்.

போக்யதை — "நாராயணாய"

பாரதந்திரியமும், போக்யதையும் திருமந்திரத்தில் முடிவில் வந்துள்ளன. (சரமம்) முடிவில் உள்ள (சரமம்) பாரதந்திரியமும் போக்யதையும் முதலில் (பிரதம தசை) உள்ள சேஷத்வத்தையும், இடையில் உள்ள (மத்யமதசை) போக்த்ருத்வத்தையும், பகல்விளக்கும் மின்மினியும் ஆக்கும். அஃதாவது பயனற்றவைகளாக ஆக்கும்.

இதனால் தன்முயற்சி தனக்குப் பயன் என்பது சிறிதும் இல்லாதவையாய், தன்தலைவனுடைய இன்பத்திற்கே முழுதும் அநுகூலங்களாய்க் கொண்டு ஆன்மாவை ஒளிபெறச் செய்யும் பாரதந்திரியமும் போக்யதையுமே மேலானவை.

"முளைத்து எழுந்த சூர்ய துல்ய யாதாத்ம்ய சரமம்.
விதியில் காணும் பிரதம மத்யம தசைகளைப்
பகல் விளக்கும் மின்மினியும் ஆக்கும்" *(சூத் 23)*

(முளைத்து எழுந்த சூர்ய துல்ய — "முளைத்து எழுந்த திங்கள் தானாய்" என்றும் "எப்படிச் சூரியனோ அப்படி ஞானம்" என்றும் ஒப்புமை சொல்லப்பட்ட. துல்யம் — ஒப்பு.)

போக்திருத்வம் சாத்திரங்களைச் செயலில் மூள்விக்கும்: சேஷத்வம், போக்திருத்வம், பாரதந்திரியம், போக்யதை என்னும் நான்கினுள் சேஷத்வமும், போக்திருத்வமும் ஆன்மாவிற்குச் சொரூபம் என்று சாஸ்திரிகள் கண்டனர். அவற்றிலே ஒன்றான போக்திருத்வம் பகவானை அடைதற்குரிய வழியாகிற சில செயல்களில் மூள்விக்கும்.

"நாலில் ஒன்று பிரவர்த்தகம்" *(சூத். 24)*

(நாலில் ஒன்றான போக்திருத்வம். பிரவர்த்தகம் — செயலிலே மூட்டுதல்)

போக்யதை ஞானிகளைச் செயலினின்றும் விடுவிக்கும்: சேஷத்வம், போக்திருத்வம், பாரதந்திரியம், போக்யதை என்னும் நான்கிலும், பாரதந்திரியமும் போக்யதையும் ஆன்மாவின் உண்மைத் தன்மைகள் என்று திருமந்திரத்தில் ஊறி நின்ற சாரஜ்ஞர் (ஞானிகள்) கண்டனர். அந்த இரண்டில் ஒன்றான போக்யதையானது, "ஈச்வரன் அன்றோ ஆன்மாவை அநுபவிப்பவன். அவன்தானே முயற்சி செய்ய வேண்டும்.

எனவே அவனுக்கு இனிய பொருளாக இருக்கின்ற இவ்வான்மாவிற்குத் தன்முயற்சி செய்யத் தகுதியில்லை" என்னும் நினைவாலே, இறைவனைப் பெறுதற்குரிய வழியாகிற சில செயல்களைச் செய்வதினின்றும் ஆன்மாவை மீள்விக்கும்.

"ஒன்று நிவர்த்தகம்" *(சூத். 24)*

(ஒன்று — நாலில் ஒன்றான போக்யதை, நிவர்த்தகம் — செயல் செய்வதினின்றும் நீக்குவது)

## (vi) கர்மம், கைங்கர்யம் — சில விளக்கங்கள்.

**கர்மம், கைங்கர்யம் இவற்றின் தன்மைகள்:**

கிரியை என்று சொல்லப்பட்ட கர்மம் பொய்மையானது; சில நாளில் அழியக்கூடியது; பிறப்பிற்குத் தகுந்தாற்போல இருக்கும். கைங்கரியமானது மேன்மையானது; என்றும் நிலை பெற்றுள்ளது; அடிமைக்குத் தகுந்தாற்போல இருக்கும்.

"கர்ம கைங்கர்யங்கள்
அசத்ய சத்ய
அநித்ய நித்ய
வர்ண தாஸ்ய
அநுகுணங்கள்" *(சூத். 26)*

இரண்டிற்கும் தூண்டுதல்: கர்மத்தைச் செய்யத் தூண்டுவன சாத்திர விதிகள்;

கைங்கர்யத்தைச் செய்யத் தூண்டுவது, அடிமைகளுக்கே உரிய எல்லையற்ற ஆசை.

"இவற்றுக்கு விதி ராகங்கள் பிரேரகங்கள் *(சூத். 27)*

(இவற்றுக்கு — கர்ம, கைங்கர்யத்துக்கு; விதி — ஆணைகள்; ராகம் — ஆசை; பிரேரகம் — செய்யத் தூண்டுதல்)

**இரண்டிற்கும் கருத்தாக்கள்:**

கைங்கரியத்துக்குக் கருத்தாக்கள் இறைவன் உகந்து எழுந்தருளியிருக்கின்ற திவ்ய தேசங்களிலே பற்று வைத்த பிரபந்நர்கள். (சரணம் அடைந்தவர்கள் — தன் முயற்சி இல்லாதவர்கள்) ஆவர். கர்மத்தைச் செய்வதற்குரிய கருத்தாக்கள் பக்தி மான்கள் ஆவர்.

"மண்டினாகும் மற்றையாரும் ஆச்ரயம்" *(சூத். 28)*

(ஆச்ரயம் — செய்தற்குரியவர்கள்)

**இரண்டிற்கும் இலக்கு:**

பக்தர்கள் வணங்குகின்ற அந்தந்தத் தெய்வங்களைப் பற்றி வணங்குவதனாலே கிடைக்கின்ற பலன் பகவானுடைய அருளாலேயாம்படியாகிறது. "அவரவர் விதிவழி அடைய நின்றனர்" (திரு.1—1—5) என்றாற்போலே அவரவர் வழிபட்டு வணங்கிப் பலன்

பெறும் தெய்வங்களுக்கு உயிர்க்குயிராய் நாராயணன் இருப்பது கர்மத்திற்கு இலக்கு.

*"அருள் முடிய நிறுத்தி அடைய நின்றது*
*கர்மத்துக்கு விஷயம்"* *(சூத். 29)*

தன்னுடைய திருவருள் மாத்திரத்தாலேயே மிகமிக எளியனாய் கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கின்ற இடம் கைங்கரியம் செய்வதற்கு இலக்கு.

*"நல்லதோர் அருள் தன்னாலே நன்றும் எளியன்*
*ஆகிறது கைங்கர்யத்துக்கு விஷயம்* *(சூத். 29)*

பிரமன், சிவன் முதலான மற்றைய தெய்வங்களைத் தனக்குச் சரீரமாகக் கொண்டு, அவற்றுள் உயர்க்குயிராய் நின்று அருள்புரியும் நாராயணனை இலக்காக உடையது கர்மம். இது சாதாரணம் ஆகும்.

அவ்வாறு இல்லாமல், தனக்கே உரிய திவ்யமங்கள விக்கிரகமான அர்ச்சாவதாரத்தை இலக்காக உடையது கைங்கர்யம். இது அசாதாரணம் ஆகும்.

*"இவற்றாலே சாதாரணம் அசாதாரணம் என்னும்"* *(சூத். 30)*

**சாதி தர்மம் வேறுபடுதல்:**

ஒரு சாதியினர் செய்யத் தக்க தருமங்களை இன்னொரு சாதியினர் செய்வது இல்லை. வேதம் ஓதுதல், ஓதுவித்தல், யாகம் செய்தல், செய்வித்தல், தானம் வாங்குதல், தானம் கொடுத்தல் எனும் ஆறுதொழில்களும் பிராமணன் செய்யத்தக்கவை. வைசியருக்கும் க்ஷத்திரியருக்கும் வேதம் ஓதுதல், யாகம் செய்தல், தானம் கொடுத்தல் என்ற மூன்று தொழில்களோடு தண்டித்தலும், போர் செய்தலும் க்ஷத்திரியருக்கே உரியன. பயிரிடுதல், பசுக்களைக் காத்தல், வியாபாரம் செய்தல் வைசியருக்கே உரியன.

*"சாதியில் பேதிக்கும் தர்மம் போலே"* *(சூத். 31)*

**ஆசிரம தர்மம் வேறுபடுதல்:** அதுபோல,ஆசிரமத்துக்கும் தர்மங்கள் வேறுபட்டு இருக்கின்றன. பிரமசரியத்தில் பிச்சை எடுத்தலும், சமிதை கொண்டு வருதலும், இல்லறத்தில் தீயோம்புதலும், விருந்தினரை உபசரித்தலும், வானப் பிரஸ்தத்தில் கிராமத்தில் உள்ள உணவு, அலங்காரங்கள் நீக்கிச் சடைவளர்த்தல், தாடி வளர்த்தல், மரவுரி உடுத்தல் போல்வன மேற்கொள்ளுதலும், துறவறத்தில் நெருப்பு இல்லாமல் இருத்தலும், வீடு இல்லாமல் இருத்தலும், துணை இல்லாமல் இருத்தலும் தர்மங்கள் ஆகும்.

*"ஆசிரமத்தில் பேதிக்கும் தர்மங்கள் போலே"* *(சூத். 31)*

**தீக்ஷா தர்மம் வேறுபடுதல்:**

இதுபோல தீக்ஷையிலும், ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்கையிலும் தர்மங்கள் வேறுபடுகின்றன.

*தீக்ஷையில் பேதிக்கும் தர்மம் போலே"* *(சூத். 31)*

**கைங்கர்யம் புரிபவர்களுக்குக் கர்மம் நீங்கும்:**

அந்தந்தச் சாதியினருக்கு அல்லாத தர்மங்கள் விலக்கப்படுவன போல, அந்தந்த வருணத்தினருக்கு அல்லாத தர்மங்கள் விலக்கப்படுதல் போல, அந்தந்தத் தீட்சைக்குரியவர்க்கு அல்லாத தர்மங்கள் விலக்கப்படுதல்போல, கைங்கர்யத்தில் ஊற்றம் உடையவர்கட்கு உறங்குவான் கைப்பண்டம் நீங்குவது போலக் கர்மங்கள் நீங்கும்.

*"அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்:* *(சூத். 31)*

இப்படிக் கர்மங்கள் தாமே நழுவினாலும், பெரியோர்கள் நித்ய கர்மங்களைச் செய்வானேன்? தமது ஒழுக்கத்தைப் பின்பற்றி உலகத்தார் கடைத்தேறவேயாகும்.

**கைங்கரியத்தில் ஊன்றி நிற்பவர்கள்; கர்மத்தில் ஊன்றி நிற்பவர்கள்: வேறுபாடு:**

கைங்கரியத்தில் ஊன்றி நிற்பவர்கள் கர்மத்தில் ஊன்றி நிற்பவர்களினின்றும் வேறுபடுபவர்கள் ஆவார்கள். பேற்றினை அடைதற்குரிய வழிகளில் முதலடி தான் கர்மம். வழிகளால் அடையத்தக்க பேறுகளில் முடிந்த நிலம் கைங்கர்யம். முன்னவர் சாதிக்குரிய தர்மங்களை அனுஷ்டிக்கின்றனர். பின்னவராகிய ஸ்ரீவைஷ்ணவர்கள் இறைவனுக்கு உகந்த தொண்டுகளைச் செய்கின்றனர்.

*"சாதனத்தில் முதல் வர்ண தர்மிகள்*
*என்றும் சாத்தியத்தில் முடிவு தாசவிருத்திகள்*
*என்றும் துறை வேறிடுவித்தது.* *(சூத். 32)*

(சாதனம் — உபாயம்; வழி, சாத்யம் — உபேயம்; பேறு; கைங்கர்யம்)

**கர்மத்தில் ஊன்றி நிற்பவர் — அந்தணர் ; கைங்கர்யத்தில் ஊன்றி நிற்பவர் — அடியார்:**

வேதத்தின் முன்பாகத்தை அறிந்து அதிலே ஊன்றி நிற்பது கர்மத்திலே ஊன்றி நிற்பவர்களுக்கு உயர்ந்த பிறவியாகும். வேதங்களின் தாத்பர்யத்தை அறிந்த ஞானிகள் ஆதல் திருமந்திர உபதேசத்தாலே கைங்கர்யத்தில் ஊன்றி நிற்பவர்களுக்குச் சிறந்த பிறப்பாகும்.

"வேதவித்துக்களும் மிக்க வேதியரும்
சந்தஸாம் மாதாவால் அதுக்கும் தாயாய்த்
தாயினும் ஆயின செய்யுமத்தால்
பிறப்பிக்குமது சிரேஷ்ட ஜன்மம்" (சூத். 33)

முன்னவர் அந்தணர், மறையோர் எனப்படுவர். சரீரம் காரணமாக வந்த சாதியும், அதன் காரணமாக வந்த வேதநெறிநிற்றலும் இவர்களை வேறுபடுத்தும் தருமம் ஆகும். பின்னவர் அடியார், தொண்டர் எனப்படுவர். ஆன்மாவிற்கு ஞானானந்தங்களைக் காட்டிலும் முக்கிய இலக்கணமாகச் சொல்லப்படுகின்ற கைங்கர்யம் இவர்களை வேறுபடுத்திக் காட்டும் தருமம் ஆகும்.

"அந்தணர் மறையோர் என்றும்,
அடியார் தொண்டர் என்றும்,
இவர்களுக்கு நிருபகம்" (சூத். 34)

(நிருபகம் — வேறுபடுத்தும் தருமம்)

## அடியார்க்குத் தனியாக குலம், ஊர் இல்லை; எல்லாம் நாராயணனே!:

அந்தணர் இன்ன கிராமத்தார் இன்ன குலத்தார் என்று சொல்லப் படுவார்கள். அடியான் பரம ஞானி; அவனுக்குக் குலம் ஏது? ஊர் ஏது? எல்லாமே அவனுக்கு நாரணன். நாரணன் வாழும் வேங்கடமே அவன் ஊர்.

"வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்கள்" (நாச்சியார் திருமொழி ... 8.9)
"கோயிலில் வாழும் வயிட்டனவன்" (பெரியாழ்வார் திருமொழி .. 5.1:3)

"ஒரு தலையில் கிராம குலாதி (களால் வரும்) வியபதேசம்.
குலம்தரும் என்னும் மாசில் குடிக்(குப்) பழி என்று (கருதி),
அதனை நீக்கிப்) பதியாகக் கோயிலில் வாழும்
(வயிட்டனவன்) என்பர்கள்". (சூத். 35)

(அடைப்புக்குறிகளில் உள்ள வார்த்தைகள் நாம் சேர்த்துக் கொள்ள வேண்டியன. வியபதேசம் — பெயர் வழக்கு)

## அந்தணர்க்கு மூல புருஷர்கள்:

அந்தணர்க்கு மூலபுருஷர்கள் வசிஷ்டர், காசிபர், பரத்வாசர், ஸ்ரீவத்சர், பராசரர் முதலானோர். இது கோத்ரப்படி வந்தது. கோத்ரமாவது மக்கட் பேற்றின் பரம்பரை.

வேத சாகைகளின் படி பார்த்தால் ஒவ்வொரு சாகையையும் தனித்தனியாகப் பரவச் செய்த கட, கலாப, கண்வர் ஆகியோரும் எல்லாச் சாகைகளையும் பரவச் செய்த வியாசரும் மூல புருஷர்கள், (வியாசர் பராசரரின் புதல்வர்).

கர்மானுஷ்டானங்கள் பலவகைப்படும். அவற்றைச் சொல்வது

கல்பம். அதன்படி பார்த்தால் கல்பசூத்திரங்களுக்குத் தலைவர்கள் ஆபஸ்தம்பர், ஆச்வலாயநர் ஆகியோர்.

*"விப்ரர்க்கு கோத்ர சரண சூத்ர கூடஸ்தர்*
*பராசர பாராசர்ய போதாயந ஆதிகள்"* *(சூத் 36)*

விப்ரர்க்குக் கோத்ர கூடஸ்தர் பராசராதிகள் என்றும், சரண கூடஸ்தர் பாராசர்யாதிகள் என்றும், சூத்ர கூடஸ்தர் போதாயநாதிகள் என்றும் நிரல்நிறையே கூட்டுக.

(பாராசர்யர் — வேதவியாசர்; கூடஸ்தர் — முதல்வர்

### அடியார்க்கு மூலபுருஷர்:

அடியார்க்கு மூலபுருஷர்கள் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலான பன்னிரு ஆழ்வார்களும், ராமாநுசர் தொடக்கமான ஆசார்யர்களும் ஆவார்கள்.

"பிரபந்ந ஜந கூடஸ்த்தர், பராங்குச, பரகால
யதிவராதிகள்" (சூத். 36)

பிரபந்நஜந கூடஸ்த்தர் — உபதேசத்தாலும், அனுஷ்டானத்தாலும் பிரபத்தி நெறியை நிலைநிறுத்தி வளர்த்தவர்கள்)

### ஒருவர் எப்பொழுது பிராமணர் ஆகிறார்? எப்பொழுது வைஷ்ணவர் (அடியார்) ஆகிறார்?

ஒருவர் முதன்முதலில் வேதத்தை ஆசாரியனுடைய உச்சாரணம் (சொல்லுதல்) அநூச்சாரணம் (பின்தொடர்ந்து சொல்லுதல்) மூலமாக எழுத்துக்களின் கூட்டத்தை அறிதலாகிற அத்யயனத்தைச் செய்யவேண்டும். அடுத்து, மீமாம்சா சாத்திரத்தைக் கேட்டல் முதலியவற்றால் வேதவாக்கியங்களின் பொருளை அறியும் அறிவு பிறக்க, அதற்குத் தக்கதான ஒழுக்கம் உண்டானால் பிராமணன் ஆகும் தன்மை சிந்திக்கும்.

"அத்யயந ஜ்ஞாந அனுஷ்டானங்களாலே
பிராஹ்மண்யம் ஆகிறாப்போலே" (சூத். 37)

அதுபோல, திருவாய்மொழியை ஆசார்யனுடைய உச்சாரண அநூச்சாரணம் மூலமாகப் பயிலுதலாகிற அத்யயனத்தைச் செய்து, உபதேச முகத்தாலே அதன் பொருளை அறியும் அறிவுபிறக்க, அதற்குத் தகுதியாக ஒழுகவும் வல்லவர் ஆனால் வைஷ்ணவர் ஆகலாம்.

"சந்தங்கள் ஆயிரமும் அறியக் கற்று
வல்லாரானால் வைஷ்ணவத்வ சித்தி" (சூத். 37)

வேதத்தின் உருவமாய் ஆயிரம் சாகையாய் இருக்கிற திருவாய் மொழியை, ஆசாரியனுடைய உச்சாரண அநூச்சாரண மூலமாகப் பயிலுதலாகிற அத்யயனத்தைச் செய்து, உபதேச முகத்தாலே அதன் பொருளை அறியும் அறிவும் பிறந்து, அதற்குத் தகுதியாக ஒழுகவும் வல்லவர் ஆனால் வைஷ்ணவர் ஆகலாம்.

### விஷ்ணுவிடம் பக்தி இல்லையெனில் பிராமணர் அல்லர்:

திருவாய்மொழியின் பொருளைக் கற்று உணரல் வேண்டும். அவர்தான் உண்மையான வேதாந்தி.வேதங்களைக் கற்றிருந்தும்

இறைவனை உள்ளபடி அறியாமல், இறைவனை அடைதற்கு உண்மையான பேறு கைங்கரியம் என்பது அறியாமல், தாங்கள் வேதங்களைக் கரைகண்டவர்கள் என்பதனால் பயனில்லை. அவருக்கு விஷ்ணுவிடம் பக்தி இல்லையெனில் அவர் பிராமணர் ஆகார். அவருடைய பிறவி ஆராயத் தக்கது ஆகும்.

*"இந்த உட்பொருள் கற்றுணர்ந்து,*
*மேலைத் தலைமறையோர் ஆகாதாரை,*
*அயற்சதுப் பேதிமார்*
*என்று உற்பத்தி நிரூபிக்கும்"* *(சூத். 38)*

*[உபநிஷதங்களின் உட்பொருளான இந்தத் தமிழ் மறையின் பொருளை, ஆசாரிய உபதேச முகத்தாலே கற்று அறிந்து சிறந்த வேதாந்திகள் ஆகாதாரை, வேதத்தோடு தங்களுக்கு ஒட்டு இன்றி அதற்குப் புறம்பானவர்கள் என்று அறுதியிட்டு, அவர்கள் பிராமணர்கள் அல்லர் என்று அவர்கள் பிறவி ஆராயப்படும்.]*

# நம்மாழ்வார் பாசுரங்களும், வேதமும்

**நம்மாழ்வார் பாசுரங்கள் வேதமே:**

வடமொழியில் மணிமுடியாகத் திகழும் வேதத்திற்கு நிகராகத் திருவாய்மொழி ஈண்டு ஒப்பிடப் படுகிறது. வேதம் ஓதுகின்றவர்களின் வேற்றுமையாலும், உலகங்களின் வேற்றுமையாலும் வேதம் பலவகைப்பட்டு இருக்கின்றது. அவற்றுள் ஒருவகை திருவாய்மொழி. வடமொழி, தமிழ் மொழி என்ற வேறுபாடு இருக்கின்றதே எனலாம். வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று நான்கு பிரிவுகளாகப் பிரிந்து உள்ளது. அதுபோல வடமொழி, தமிழ் என்று மொழி வேற்றுமையாலும் இருபிரிவாகப் பிரிந்திருக்கின்றது. வடமொழி அநாதியாயிற்றே எனலாம். அதுபோலத் தமிழும் அநாதி. அப்படியானால் திருவாய்மொழி எப்படி மறை (வேதம்) ஆகும்? வடமொழி மறை என்றுதானே வழக்கில் சொல்கின்றோம் எனின் வெறும் மறை என்று சொல்லவில்லையே! வடமொழி மறை என்றால் தென்மொழியில் ஒரு மறை இருக்க வேண்டும் என்று ஆகிறது அன்றோ! தாமரை ஒரே இனமாக இருந்தால் 'தாமரை' என்று மட்டும் சொன்னால் போதும், செம்மை நிறத்திலும், வெண்மை நிறத்திலும் தாமரை இருப்பதனால் இரண்டினையும் வேறுபடுத்தச் செந்தாமரை, வெண்டாமரை என்று சொல்கிறோம் அல்லவா? அவ்வாறே என்க.

**"எவ்வுலகத்து எவ்வெவையும் என்கையாலே,**
**வேதம் பஹுவிதம்"** ***(சூத். 39)***

(அத்யயனம் செய்கின்றவர்களுடைய வேற்றுமையாலும், உலகங்களின் வேற்றுமையாலும் வேதம் பலவகைப்பட்டு இருக்கும் — ஸ்ரீ பி.ஆர். புரு)

**"இதில் சம்ஸ்கிருதம் திராவிடம் என்கிற பிரிவு,**
**ருகாதிபேதம் போலே"** ***(சூத்.40)***

(ருக் ஆதி பேதம் போலே — வடமொழி வேதத்திற்குள்ளேயே, இருக்குவேதம் யசுர்வேதம், சாமவேதம், அதர்வண வேதம் என்கிற பிரிவு இருப்பது போலே வடமொழி மறை, தென்மொழி மறை என்கின்ற பிரிவுகளும் உண்டு)

**"செந்திறத்த தமிழ் என்கையாலே,**
**ஆகஸ்தியமும் அநாதி"** ***(சூத். 41)***

(ஆகஸ்தியம் — அகத்திய முனிவரால் பரப்பப்பட்டது; தமிழ் "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி" என்று வடமொழியோடு ஒருசேரப் பேசப்படுகையாலும், "செந்திறத்த தமிழ்" என்று தமிழ் வடமொழிக்கு முன்னம் கூறப்படுகையாலும், தென்மொழியும் அநாதியாக உள்ளது).

**வடமொழிமறை என்றது,**
**தென்மொழி மறையை நினைத்திறே"** ***(சூத். 42)***

வேதத்தைக் குறிக்கும் போது "மறை என்ற சொல்லாலே சொல்லல் அமைந்து இருக்கவே, "வடமொழி மறை" என்று மறைக்கு "வடமொழி" என்ற அடைகொடுத்தது, "தென்மொழி மறை" உண்டு என்பதனால் அன்றோ!.

## ஆழ்வார்களின் பாசுரங்களும் வேத அங்கங்களும், உப அங்கங்களும்:

வேதத்திற்கு நான்கு வேதப்பகுப்பும், ஆறு அங்கங்களும், எட்டு உபாங்கங்களும் இருக்கின்றனவே; அது போலத் தமிழ் மறைக்கும் உள்ளவோ என்று வினவலாம். நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு நூல்களும் நான்கு வேதங்கள் ஆகும். திருமங்கையாழ்வார் பாடியருளிய பெரிய திருமொழி, திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரிய திருமடல் திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்கிற ஆறு பிரபந்தங்களும் ஆறு அங்கங்களாகும். ஏனை ஆழ்வார்கள் பாடிய எட்டு நூல்களும் எட்டு உபாங்கங்கள் ஆகும்.

**"வேத சதுஷ்டய, அங்க, உபாங்கங்கள்**
**பதினாலும் போலே, இந்நாலுக்கும்**
**இருந்தமிழ் நூற்புலவர் பனுவல் ஆறும்**
**மற்றை எண்மர் நன்மாலைகளும்.** ***(சூத். 43)***

வேத சதுஷ்டயம் — இருக்கு முதலான நான்கு வேதங்கள்; அங்கம் — சிக்ஷை, வியாகரணம், நிருக்தம், சந்தஸ், கல்பம், ஜோதிஷம் என்கிற ஆறு அங்கங்கள்; உபாங்கங்கள் — மீமாம்சை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் முதலான எட்டு உபாங்கங்கள்; இந்நாலுக்கும் — நம்மாழ்வார் அருளிச் செய்த தமிழ் மறை நான்கற்கும்; இருந்தமிழ் நுற்புலவர் பனுவல் ஆறும் — திருமங்கை ஆழ்வாருடைய பிரபந்தங்கள் ஆறும்; மற்றை எண்மர் நன்மாலைகளும் — மற்றை ஆழ்வார்கள் எண்மரும் அருளிச் செய்த பிரபந்தங்களும் அங்க உபாங்கங்கள் ஆம்).

## வேதத்தைப் போலவே ஏற்றம் உடையது :

வேதங்கள், அங்கங்கள், உபாங்கங்களில் நான்கு வேதங்களே முக்கியமானவை. அதுபோல நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கை மன்னன் அருளிய ஆறுநூல்கள், பிற ஆழ்வார்கள் அருளிய நூல்கள்— இவற்றை விட நம்மாழ்வார் அருளிய நான்கு நூல்களே சிறந்தவை ஆகும்.

**"சகல வித்யாதிக வேதம் போலே,**
**இதுவும் திவ்யப் பிரபந்த பிரதானம்"** ***(சூத். 44)***

வேதம், அங்கம், உபாங்கம் ஆகிய எல்லாக் கலைகளுள்ளும் மேலானவை நால்வேதம்; அது போல, நம்மாழ்வார் அருளிய நான்கு பிரபந்தங்களும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் ஏனை ஆழ்வார்கள் பிரபந்தங்களிலும் உயர்வானவை.

## திருவாய்மொழி வேதத்தின் தன்மைகளை உடையது:

சாஸ்திரமாக இருத்தல், பகவானுடைய ஆணையாக இருத்தல், குற்றமில்லாததாக இருத்தல், செவிவாயிலாகக் கேட்கப்பட்டுவருதல், மெய்ம்மையாய் இருத்தல், அநாதியாக இருத்தல், அழிவில்லாது இருத்தல் ஆகிய தன்மைகள் வேதத்தின் ஏற்றத்திற்குக் காரணங்கள் ஆகும். இதே போன்ற ஏற்றம் நம்மாழ்வார் அருளிய நூல்களுக்கு உண்டா என்பது

அடுத்து வரும் வினா.

"வேதநூல் பிராயம் நூறு" (திருமாலை ....3)

என்று வேதத்தைச் சாத்திரமாகச் சொல்வர்.

"இருந்தமிழ் நூற்புலவன்" (பெரிய திருமொழி 1,7:10)

என்று இதனைச் தமிழ்ச் சாத்திரமாகக் கூறுவர். (நூல் என்றால்இலக்கணம்: சாத்திரம் தானே இலக்கணம் வகுக்கிறது)

"வேதநூல் இருந் தமிழ்நூல்" (சூத். 45)

"சுருதிகளும் ஸ்மிருதிகளும் என்னுடைய ஆணை" என்பது பாஞ்சராத்திரம்; அதே போல இதனையும் "ஆணை ஆயிரம்" (திருவாய் 6.3:11) என்கிறார் நம்மாழ்வார்.

"ஆக்ஞை, ஆணை" (சூத். 45)

வேதம்: வஞ்சித்தல் முதலான குற்றங்கள் இல்லாதது. "வசையில் நான்மறை" (பெரிய திருமொழி 5.3:2)

நம்மாழ்: ஏதம்இல் ஆயிரம்" (திரு 1.6:11)

(ஏதம்இல் — குற்றம் இல்லாதது)

"வசை இல்'ஏதம் இல்" (சூத். 45)

வேதம்: சுருதி: கேட்கப்பட்டு வருவது

"ச்ருயதே இதி ச்ருதி"

நம்மாழ்: இதுவும் கேட்கப்படுவது.

"கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கு
இனிய செஞ்சொல்லே" (திரு 10.6:11)

"சுருதி செவிக்கு இனிய" (சூத். 45)

வேதம்: "வேதநூல் ஓதுகின்றது உண்மை"
(திருச்சந்தவிருத். 72)

நம்மாழ்: "பொய்யில் பாடல்" (திரு4.3:11)

இரண்டிலும் பொய் இல்லை.

"ஓதுகின்றது உண்மை, பொய்யில் பாடல்" (சூத். 45)

இரண்டுமே அநாதி.

வேதம்: "பண்டை நான்மறை" (பெரிய திருமொழி 5.7:1)

நம்மாழ்: "முந்தை ஆயிரம்" (திரு 6.5:11)

இரண்டுமே அழிவில்லாதவை.

வேதம்: "நிற்கும் நான்மறை" (திரு 6.5:4)

நம்மாழ்: "அழிவில்லா ஆயிரம்" (திரு 9.7:11)

"பண்டைநிற்கும் முந்தை அழிவில்லா" (சூத். 45)

எனவே வடமொழி வேதமும் நம்மாழ்வார் பிரபந்தமும் சமமே ஆகும்.

"என்னும் லட்சணங்கள் ஒக்கும்" (சூத். 45)

**முன்பே இருந்த விழுப்பொருள்களையே வெளிக்கொணர்ந்தார்:**

வேதம் என்றும் உள்ளது. ஒருவனால் செய்யப்பட்டது அன்று. ஆனால் நம்மாழ்வார் பிரபந்தமோ ஆழ்வாரால் செய்யப்பட்டதாயிற்றே

என்பது அடுத்த வினா. வேதத்தைப் பரமன் படைத்தான் என்பார்கள். அப்படியானால் இல்லாத ஒன்றைப் புதிதாகப் படைத்ததாகச் சொல்ல முடியாது. இருக்கின்ற ஒன்றைப் பிரமன் வெளிஉலகம் அறியக் கொணர்ந்தான் என்பதே பொருள். அது போல ஏற்கெனவே இருந்த ஒன்றைத்தான் ஆழ்வார் வெளிப்படுத்தினார்.

"சொல்லப்பட்ட என்ற இதில் கர்த்ருத்வம்,
ஸ்மிருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தான்
என்றது போலே" (சூத். 46)

(கர்த்ருத்வம் — ஆழ்வார் கருத்தாவாக இருக்கும் தன்மை; ஸ்மிருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தான் என்றது போலே — வேதத்தைப் பிரமன் படைத்தான் என்று ஸ்மிருதி சொன்னதைப் போன்று)

## நம்மாழ்வார், ரிஷி, முனி, கவி:

வேதத்தை வெளிக் கொணர்ந்த வியாச பகவானை ரிஷி, முனி, கவி என்கின்றனர். சத்வ விஷயங்களைப் பார்ப்பவர் ரிஷி: தியானம் செய்பவர் முனி: பாடுபவர் கவி: அதுபோல நம்மாழ்வாரையும் ரிஷி, முனி, கவி என்கின்றனர்.

'இவ்வுலகத்தில் அவதரித்த கிருஷ்ண பகவான் விஷயத்தில் உண்டான ஆசையின் உருவம் போல் இருக்கிற ரிஷியாகிய நம்மாழ்வாரை வணங்குகிறோம்". — ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசத.6.

"முனிவரான சடகோபரை வணங்குகிறேன்"
"சடகோப முநிம்" — பராங்குச அஷ்டகம்.
"உலகம் படைத்தான் கவியாயினேற்கு" — திருவாய் 3.9:10.
"நால்வேதம் கண்ட புராண, ரிஷி, மந்த்ர
தர்சிகளைப்போலே, இவரையும்
ரிஷி, முனி, கவி என்னும்" (சூத். 47)

(நால் வேதம் கண்ட வேதவியாச பகவானையும், மந்திரங்களைச் சொன்னவர்களையும் ரிஷி, முனி, கவி என்று சொன்னது போல, நம்மாழ்வாரையும் ரிஷி, முனி, கவி என்று சொல்லலாம்.

## படைப்புத் தோறும் படைக்கப்பட்டது:

ஊழிதோறும் பிரமன் சூரியனையும் சந்திரனையும் முன்யுகத்தில் இருந்தது போல மீண்டும் படைக்கிறான். அதுபோல இப்பிரபந்தமும் படைப்புத் தோறும் முன்புபோலவே படைக்கப்பட்டதாய் வரும்.

"படைத்தான் கவி" என்றபோதே, இதுவும் யதா
பூர்வ கல்பநமாமே" (சூத். 48)

## வெளிக் கொணர்ந்தவர் பெயர் பெற்றது:

வேதம் அதனை வெளிக் கொணர்ந்த தலைவர்களாகிய தைத்திரியர், கண்வர் பெயர்களைக் கொண்டு தைத்திரியம், காண்வம் என்ற பெயர் பெறுகிறது. அதுபோல இப்பிரபந்தமும் இதனை வெளிக் கொணர்ந்த நம்மாழ்வார் பெயரால் "சடகோபன் சொல்" என்று கூறப்படுகிறது.

### வேதப்பிரிவுகள்:

நம்மாழ்வாருடைய இயற்பா நூல்களாகிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய மூன்றும் இருக்கு, யசுர், அதர்வண வேதங்களின் தானங்கள் ஆகும். அவர்தம் இசைப்பா நூலாகிய திருவாய்மொழி பண்ணும் இசையும் கூடிய சாம வேதத்தின் தானமாகும்.

**இயற்பா மூன்றும், வேதத்ரயம் போலே;**
**பண்ணார் பாடல் பண்புரை இசைகொள்**
**வேதம்போலே.** *(சூத். 50)*

(இயற்பா மூன்றும் நம்மாழ்வார் அருளிய நான்கு பிரபந்தங்களுள், இயற்பா வகையைச் சேர்ந்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் மூன்றும்; வேதத்ரயம் போல் — நால் வேதங்களில் இருக்கு, யசுர் அதர்வணம் போல; பண்ணார் பாடல் — பண்ணோடு சேர்ந்துள்ள இசையை உடைய திருவாய்மொழி; இசைகொள் வேதம் போல் — பண்ணையும் இசையையும் உடைய சாமவேதம் போல).

### இருக்கு வேதத்தின் விரிவுதான் சாமவேதம்:

அது போல திருவிருத்தத்தின் விரிவுதான் திருவாய்மொழி.

**"ருக்கு சாமத்தாலே சரசமாய்**
**ஸ்தோபத்தாலே பரம்புமா போலே,**
**சொல்லார் தொடையல் இசைகூட்ட,**
**அமர்சுவை ஆயிரம் ஆயிற்று"** *(சூத். 51)*

(சாமவேதத்திற்குச் சுருக்கமான ருக்கானது இசை நிறைச் சொற்களாலே விரியுமாறு போல சொல்லார் தொடையல் ஆன திருவிருத்தம் நூறு திருப்பாசுரங்களும் இசையிலே கூட்டினவாறே சுவையோடு கூடிய ஆயிரம் திருப்பாசுரங்கள் ஆயின)

### சாமவேதத்தில் உயர்ந்த உத்கீதம்:

சாமவேதம் பலவகைப்பட்டது. அதில் திருவாய்மொழி எந்தச் சாமத்தோடு ஒக்கும். சாமவேதத்தில் உயர்ந்தது சந்தோக சாமம். அதில் சுவையாகவும், பிரணவத்தை முன்னிட்டு இசைபாடப்படுவதாகவும் இருப்பது உத்கீதம் என்ற பகுதி. அந்த உத்கீதமாகத் திருவாய்மொழி விளங்கவே "உயர்வற" என்று முதல்பாடல் முதல் அடியில் தொடங்கி "உயர்ந்தே" என்ற இறுதிப் பாடலில் இறுதி அடியில் முடித்து "உத்" என்ற திருப்பெயர் புலப்படச் செய்தார். பிரணவமாகிய "ஓம்" (அ உ ம்) என்று அமைக்க நினைத்திருந்தால் அகரத்தில் ஆரம்பித்திருப்பார். அப்படி அல்லாமல் "உயர்வற" "அயர்வற" "மயர்வற" எனப்பாடியிருப்பது திருவாய்மொழியின் உள்ளுறை "உத்கீதம்" என்று உணர்த்தவே.

### நம்மாழ்வார் பிரபந்தங்களும் உபப்ரும்ஹணமும்:

இறைவனால் சொல்லப்பட்ட பாஞ்சராத்ர ஆகமம், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவை வேதத்தின் பொருளை விரித்துக் கூறுபவை. இவற்றை வேத உபபிரும்ஹணம் என்பர். பாஞ்சராத்ரத்திலும்,

புராணங்களிலும், இதிகாசங்களிலும் இறைவனின் சொரூபம், குணம், விபூதி, அவதரித்துச் செய்த செயல்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அது போல நம்மாழ்வார் பிரபந்தங்களிலும் சொல்லப்பட்டு இருக்கின்றன. ஆனால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையிலே சிறப்புடையது. பாஞ்சராத்ரம் இறைவனின் சொரூபம், குணம் ஆகியவற்றையும், புராணங்கள் உலகங்களின் விரிவையும், இதிகாசங்கள் அவதாரங்களில் இறைவனின் செயல்களையும் நம்மாழ்வார் பிரபந்தங்கள் இறைவனின் வடிவழகையும் சிறப்பித்துக் கூறுகின்றன.

*"அன்றிக்கே,*
*ஸ்வரூபகுணண, விபூதி, சேஷ்டிதங்களை*
*விசதமாக்குகிற பாஞ்சராத்ர, புராண, இதிகாசங்கள் போலே*
*நீல பாரூப உக்தி தெரியச் சொன்ன வேத உபபிரும்ஹணம்*
*என்பர்கள்"* *(சூத். 54)*

இச்சூத்திரத்தை, ஸ்வரூப குணங்களை விசதமாக்குகிற பஞ்சராத்திரம் போலேயும், விபூதியை விசதமாக்குகிற புராணங்கள் போலேயும், சேஷ்டிதங்களை விசதமாக்குகிற இதிகாசங்கள் போலேயும், நீல பாருப உக்தியைத் தெரியச் சொன்ன (இத்திருவாய்மொழியை) வேத உப பிரும்ஹணம் என்பர்கள் என்று பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க.)

*(பாஞ்சராத்ரங்களுக்கு இறைவனின் சொரூபம், குணத்தில் நோக்கு; புராணங்களுக்கு உலகங்களின் விரிவினைச் சொல்லுவதில் நோக்கு; இதிகாசங்களுக்கு அவதாரங்களில் பகவானின் செயல்களைப் பற்றிச் சொல்லுவதில் நோக்கு; நம்மாழ்வார் அருளிச் செயல்களுக்குத் திவ்விய மங்கள விக்கிரகத்திலே நோக்கு. விபூதி — செல்வம்; சேஷ்டிதங்கள் — செயல்கள் விசதமாக்குகிற — வெளிப்படையாக; நீலபாருப உக்தி — கறுத்த மேகத்தின் நடுவில் இருக்கின்ற மின்னற்கொடி)*

# நம்மாழ்வாரின் உயர்வு

## நம்மாழ்வார் பிரபந்தங்கள் இறைவன் அருளால் பாடப்பட்டவை:

பிரமனுடைய திருவருளாலே வால்மீகி இராமாயணம் தோன்றியது. ஆனால் பிரமனோ தாமத குணம் மிக்கு இருக்கும்போது, அக்னி சிவன் ஆகியோரின் பெருமைகளையும், இராசத குணம் மிக்கு இருக்கும் பொழுது தன்னுடைய பெருமையினையும், சத்வகுணம் மிக்கு இருக்கும் பொழுது சர்வேச்வரனான நாராயணனின் பெருமையையும் பேசுவான். பிரமனே ஒவ்வொரு நிலையில் ஒவ்வொருவர் பெருமை பேசினால், அவன் அருளைப் பெற்ற வால்மீகி பற்றிக் கேட்க வேண்டா. புலத்தியன் என்ற ரிஷியாலே தூண்டப் பட்டுப்பராசரர் விஷ்ணுபுராணம் பாடினார். இதிகாசங்களையும், புராணங்களையும் பாடியமைக்கு மூலம் ரிஷிகள்; ஆனால் நம்மாழ்வார் பகவானுடைய திருவருளை நேராகப் பெற்றுப் பிரபந்தங்களைப் பாடினார். நாராயணன் — பிரமன், சிவன் ஆகியோரிடம் அந்தர்யாமியாக இருந்து படைத்தல் தொழிலையும், அழித்தல் தொழிலையும் செய்கிறான். அது போல நம்மாழ்வாரிடமும் நாராயணனே அந்தர்யாமியாக இருந்து பிரபந்தங்களைப் பாடியருளினான்.

"என்னைத் தன்னாக்கி என் நாமுதல் வந்து
புகுந்து, தப்புதல் அறத் தன்னை வைகுந்தனாகத்தன்
சொல்லால் தானே துதித்து, என்சொல்லால்
யான் சொன்ன இன்கவி என்பித்தான். (சூத். *57*)

*இச்சூத்திரம் அடியொற்றிய திருவாய்மொழி 7—9, 2—6.*

## பக்தியால் பாடியருளினார்:

அது மட்டும் அன்று. பிரமனுடைய வரபலத்தால் ஸ்ரீராம பிரானுடைய பெருமைகளை எல்லாம் ரிஷிகள் அறிந்தார்கள். மேலும் ரிஷிகள் தாங்கள் செய்த தவத்தால் ஞானம் பெற்றுத் தெளிந்தனர். அந்தத் தெளிவும் மகிழ்ச்சியும் காரணமாக இறைவனைப் பாடினார்களே ஒழிய, அன்பின் பெருக்கால் பாடவில்லை. ஆனால், நம்மாழ்வார் ஒரு காரணமும் பற்றாமல், பகவானின் திருவருளால் வந்த ஞானத்தினால், பக்தி நிலை அடைந்து, அன்பு மீதூர்ந்து, அகம் கரைந்து, நெஞ்சு உருகி, அழுது பாமாலைகள் தொடுத்தார்.

"தர்மவீர்ய ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே
மேலே தொடுப்பாரைப்போல் அன்றே" (சூத். 58)

(பொருள்: தாம்தாம் செய்து போந்த தவத்தின் உருவமான தர்மத்தினுடைய சக்தியாலே உண்டான ஞானத்தாலே அறிய வேண்டுமவற்றைத் தெளிய அறிந்து அந்தத் தெளிவும் மகிழ்ச்சியும் காரணமாக (பகவானுடைய குணங்களிலே மோகிப்பது என்பது ஒன்றும் இல்லாமல்) மேலே மேலே சொற்களைத் தொடுக்கும் ரிஷிகளைப் போல் இல்லரே ஆழ்வார். ஹிருஷ்டராய் — மகிழ்ச்சி உடையவராய்)

"அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறு மாதம்
மோஹித்து வருந்தி ஏங்கித் தாழ்ந்த
சொற்களாலே நூற்கிற இவர்" (சூத். 58)

(பொருள்: ஒரு காரணமும் பற்றாமல் பகவானுடைய திருவருளாலே வந்ததாய் ஞானத்தின் பரிபக்குவ நிலையாகிய பக்தியினாலே, பகவானைப் பிரிந்த பிரிவாற்றாமையாலே ஞானம் எல்லாம் அடிமண்டியோடே கலங்கி, பகவானுடைய அனுபவம் பெறாமையாலே சோகித்து, அவன்செய்த வெண்ணெய் திருடித்நின்ற செயல் முதலாக ஒவ்வொரு செயலையும் ஆறு ஆறு மாதமாக மூவாறு மாதம் மோகித்து (மயங்கிக் கிடந்து) ஓரொரு சொல் எடுக்கும் போது ஒரு மலை எடுக்குமது போலே வருத்தப்பட்டு, அனுபவத்தைப் பெறாத வருத்தத்தாலே அவன்புகழைப் பலகாலும் சொல்லிப் பொருமிப் பொருமி அழுது, கட்டுக்குலைந்த மனத்தாலே தழுதழுத்த ஈரச்சொற்களாலே இப்பிரபந்தத்தைச் செய்கிற இவ்வாழ்வார்— (ஸ்ரீ பி.ஆர்.புரு))

### *ரிஷிகளிலும் உயர்ந்தவர்:*

மேலும் ரிஷிகள் வேதம் ஓதுபவர்கள்; யோகம் பயின்றவர்கள். வேதமும், யோகமும் என்ற தெளிவின்மைகளினால் அரிதின் முயன்று இறைவனைக் காண்பவர்கள். எல்லாம் தெரிந்த ரிஷிகள் இன்றளவும் ஆசையை விட்டார்களில்லை; பாசம் எனும் தளையில் கட்டுண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு மனம் தெளியவில்லை. ஆனால் நம்மாழ்வாரோ இறைவன் அருளால் அவனைக் கண்டபின் தெளிவு மிகப் பெற்று, பொய்ந்நின்ற ஞானம் விடுபட்டு, பாசம் பற்று என்பன நீங்கி இறைவனுக்கே அடிமையாகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு பாடியருளினார்.

ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும்
கண்டமை மைப்பாலே ஓதி உணர்ந்தவர்
இன்னும் ஆசாபாச பத்தர்; (சூத். 59)

(பொருள்: வேதமும், யோகமும் என்னும் இவ்விரண்டு கண்களாலும் ஒழிய ஊனக் கண்களால் பரம்பொருளைக் காணப் போகாமையாலே, ஸ்வாத்யாயம் என்ற சொல்லால் சொல்லப்படுகின்ற வேதத்தை ஓதியும், இயமம், நியமம் முதலான அஷ்டாங்க யோகத்தைப் பயின்றும், அவ்வழியாலே வேதம் யோகம் என்னும் இரண்டாலும் பார்க்கக் கூடிய பரம்பொருளை இத்தகையது என்று தெளிந்தும், இவ்வழியால் தம்முயற்சியாலே கண்ட காட்சியில், தெளிவில்லாமையாலே, வேதசாத்திரங்களை ஓதி விட வேண்டுவனவற்றையும், பற்ற வேண்டுமதனையும் அறிந்திருக்கின்ற ரிஷிகள் இன்றளவும், இவ்வுலக வாழ்வாகிற சிற்றின்பங்கள் என்னும் ஆசைகளாகிற பலவகைப்பட்ட தளைகளாலே கட்டப்பட்டிருப்பார்கள்)

"அவன் வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே
நேரே கார் செறிந்த நீராடி கட்கரிய" (சூத். 59)

(தன்னைக் காண்கைக்குக் கருவியாக அவன் கொடுத்த திவ்விய ஞானக் கண்ணாலே, தங்களை ஒழிய மற்று ஒருவர்க்கும்அறியப் போகாது என்று இருக்கும் பிரமன், சிவன் என்னும் இவர்களுக்கும் காண அரியனாய்)

"அரும்பொருளைக் கண்டபோதே யாம்
உறாமை என்னும்படி இவர்க்கு
வன்பாசங்கள் நீங்கிற்று" (சூத். 59)

(வேதங்களும் அறிய அரியபொருள் என்றே அறியும்படியாய், அவன்தான காட்டுகையாலே மிகத் தெளிவாகக் கண்டபோதே, பொய்ந்நின்ற ஞானம் முதலானவற்றை விடுவித்தருள வேண்டும் என்று அவனைக் கால் கட்டும்படி, தம்முயற்சியாலே போக்க ஒண்ணாதபடி பிரபலமான புறப்பற்றுக்கள், அவனுடைய திருவருளாலே வாசனையோடு ஆழ்வாரை விட்டு அகன்றன.)

### உண்ணும்சோறு பருகும் நீர் எல்லாமே கண்ணன்:

நம்மாழ்வாருக்கும், ரிஷிகளுக்கும் உணவிலேயே வேறுபாடு உள்ளது. காய், கனி, இலை, காற்று, நீர் ஆகியன ரிஷிகளுக்கு தாரக போஷக போக்கியங்கள். ஆனால் நம்மாழ்வாருக்கோ எல்லாமே கண்ணன்தான்.

தாரகம் — உயிர் வாழத் தேவையான நீர் முதலியன.
போஷகம் — உயிரைப் பாதுகாக்கத் தேவையான உணவு.
போக்யம் — விருப்பத்தில் உண்ணுவது; வெற்றிலை முதலியன.
"உண்ணும் சோறு பருகுநீர் தின்னும்
வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" *(திருவாய் .. 6.7.1)*

**"அவர்களுக்குக் காயோடு என்னும் இவையே**
**தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே"** ***(சூத். 60)***

பராசரர், வியாசர், வால்மீகி முதலான மஹரிஷிகளுக்கு, கனிகள், கிழங்குகள், இலைகள், காற்றுத் தண்ணீர் என்னும் இவைகளே தாரக, போஷக, போக்யங்கள்; இவ்வாழ்வாருக்கு, தாரக போஷக போக்யங்கள் எல்லாம் கண்ணனே, தாரகம் — தரிக்கச் செய்வது; நீர் முதலாயின. போஷகம் — புஷ்டியை (பலத்தை)த் தருவது; சோறு முதலாயின. போக்யம் — இன்பத்தைத் தருவது; தின்னும் வெற்றிலை முதலாயின.

### அன்பு ஒன்றினையே கொண்டு பாடினார்:

வியாசர், வசிஷ்டர் முதலான ரிஷிகள் எல்லாம் தம்புதல்வர்களை இழந்த பிரிவாற்றாமையால் வருந்தவும், நம்மாழ்வாரோ இறைவனைப் பிரிந்த பிரிவாற்றாமை ஒன்றினையே தமக்கு ஆற்றாமையாகக் கொண்டு கவி பாடினார்.

*"சிந்தை கலங்கித் திருமால் என்று அழைப்பன்" (திருவாய் 9.8:10)*

**"அழுநீர் துளும்பக் கடலும் மலையும், விசும்பும்**
**துழாய், திருமால் என்று**
**எங்கே காண்கேன் என்னும் இவர் அலமாப்பு,**
**அவர்களுக்குப் புத்திர வியோகத்திலே"** ***(சூத். 61)***

பகவானைப் பிரிந்த பிரிவின் துன்பத்தாலே கண்ணும், கண்ணீருமாய், அளவிட்டு அறியமுடியாத கடலோடு, அசைவில்லாத மலையோடு, அச்சமான ஆகாசத்தோடு வாசி அற எங்கும் தேடி, மனம் கலங்கித் திருமாலே என்று கூப்பிட்டு, எங்கே காணக்கடவேன் என்று இவர்படும் அலமாப்பு; அந்த மகரிஷிகளுக்குப் புதல்வர்களைப் பிரிந்த பிரிவினால் ஏற்பட்ட ஆற்றாமையிலேயே இருக்கும்.

### ஆறும் அவனே; பேறும் அவனே:

ரிஷிகளுக்குப் பகவானை அடைதலே பலம்; கருமமும் ஞானமும் அவனை அடைதற்குரிய வழிகள்: பகவானை அடைய இந்திரனை வழிபடவேண்டுமா, அக்னியை வழிபட வேண்டுமா என்றால் ரிஷிகள் பிற தெய்வங்களையும் வழிபடுவார்கள். தங்களுடைய மகிழ்ச்சிக்கு — தாங்கள் அடைய வேண்டியதை அடையவேண்டும் என்ற ஒன்றினையே கருதிச் — செயல்படுவார்கள். ஆனால் நம்மாழ்வாருக்கோ எல்லாமே இறைவன்தான். ஆறும் அவனே; பேறும் அவனே. தம் உகப்புக்காக அவர்

இறைவனை வழிபடவில்லை; அவன் உகப்புக்காக அவனை வழிபடுகிறார். மறந்தும் புறம் தொழாத சிந்தையார் அவர்.

*"மற்றொரு தெய்வம் தொழாள்" (திருவாய் 4.6:10)*

பலன், பலத்தை அடைதற்குரிய சாதனம், பலத்தைக் கொடுக்கும் தெய்வங்கள் இம்மூன்று திறத்திலும் நம்மாழ்வார் முனிவர்களிலும் மேம்பட்டு இருக்கிறார்.

*"பல சாதன தேவதாந்தரங்களில் இவர்கள்*
*நினைவு பேச்சிலே தோன்றும்" (சூத். 62)*

*(பலனும், பலனைப் பெறுதற்குரிய வழியும், வேறு தெய்வங்களும் ஆகிய இவற்றின் விஷயத்தில், அவர்கள் நினைவும், இவர் நினைவும் அவர்களுடைய பேச்சிலும் இவருடைய பேச்சிலும் தெரியும்)*

# திருவாய்மொழியின் சிறப்பு

**ஸ்ரீ வால்மீகி முதலானோர் பொருள் அல்லாத கதைகளும் பாட, ஆழ்வார் நாராயணன் புகழ்மட்டுமே பாடினார்:**

வால்மீகி இராமாயணத்தை விடத் திருவாய் மொழி உயர்வு என்று ஈண்டு விதந்து ஓதப்படுகிறது. இராமபிரானின் சரிதையைச் சொல்ல ஆரம்பித்த ஸ்ரீ வால்மீகி பகவான். பொருள் அல்லாத கதைகளான கங்கையின் தோற்றம், புஷ்பகவிமான வர்ணனை முதலான பேச ஆரம்பித்து விட்டார். இதனால் அவரது வாக்கு தூய்மை இழந்தது. இதனை "எச்சில்வாய்" என்கிறார் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார். ஸ்ரீநாராயணனின் கதையைச் சொல்ல ஆரம்பித்த ஸ்ரீ வேதவியாசர், வீடுமர் முதலான பலரின் பிறப்புகள், பாரதப் போர்வகைகள் ஆகிய பொருள் அல்லாதனவற்றைப் பாடித் தூய்மை இழந்துவிட்டார். இதை வியாசரே கூறுகிறார்.

> "பொருள் அல்லாதவற்றைப் பேசுதலாகிற காட்டிலே சுற்றியதால் புழுதி அடைந்த வாக்கினைக் கண்ணபிரானுடைய சரிதையைச் சொல்லுதலாகிற கங்கை நீராலே தூய்மை ஆக்குகிறேன்" —
> "அசத் கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம்
> வாசம் சௌரி கதாலாப கங்கயைவ புநீமஹே" — ஹரிவம்சம்.

பொருள் அல்லாதவற்றைச் சொல்வானேன்; பிறகு கங்கை நீரால் தூய்மை செய்வானேன்? இதுபோல பொருள் அல்லாதவற்றை எல்லாம்பாடாமல் — வேறுபொருளைக் குறிக்கும் சொற்களைக் கலக்காமல் — நாராயணனைப் பற்றிக் கூறும் சொற்களையே தேர்ந்தெடுத்துப் பாடியருளினார் நம்மாழ்வார். நாராயணன் கதை அல்லாது வேறு கதைகளே திருவாய்மொழியில் இல்லை. வேதங்களில் உயர்வு புருஷ சூக்தம்; தர்ம சாஸ்திரங்களில் உயர்வு மநு தர்ம சாஸ்திரம்; பாரதத்தில் உயர்வு கீதை; புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணம்; அதுபோல நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் உயர்வு திருவாய்மொழி.

> **"ராமாயணம் நாராயண கதை என்று தொடங்கி
> கங்கா காங்கேய சம்பவாதி அசத் கீர்த்தனம்
> பண்ணின எச்சில்வாய்"** **(சூத். 63)**

(பொருள்: ராமாயணம் என்று தொடங்கி கங்கையின் தோற்றம், முருகன்பிறப்பு புஷ்பகவிமான வர்ணனை முதலான பொருள் அல்லாத கதைகளைப் பேசுகையால் ஸ்ரீவால்மீகி பகவான் தூய்மை இழந்த வாக்கினர் ஆயினார். நாராயண கதை என்று தொடங்கிப் பாரதத்திலே சம்பவச் சருக்கத்திலே ஸ்ரீவீடுமனுடைய பிறப்பு முதலாகப் பல பிறப்புகள், பாரதப் போர் வகைகள் முதலான பொருளல்லனவற்றைப் பேசுகையினால் ஸ்ரீவேத வியாச பகவானும் தூய்மை இழந்த வாக்கினர் ஆகிக் கண்ணபிரான் சரிதையைச் சொல்லுதலாகிய கங்கையாலே தூய்மை ஆக்குகிறேன் என்று தூய்மை ஆக்கினர்).

*"சுத்தி பண்ணாமல், திருமாலவன் கவி என்ற*
*வாயோலைப்படியே மாற்றங்கள் ஆய்ந்து*
*கொண்டு, உரிய சொல் வாய்த்த இது". (சூத். 63)*

*(பொருள் அல்லாதனவற்றைப் பேசி வாக்கினைத் தூய்மை இழக்கச் செய்து பின் அதற்கு இரங்கிச் சுத்தி பண்ண வேண்டாதபடி, திருமகள் கேள்வனுடைய கவி என்று முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தால் வாயோலை இட்ட வகையிலே, வேறு பொருள்களைக் குறிக்கும் சொற்கள் ஒன்றும் ஊடு கலவாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து விஷயத்துக்குத் தகுதியான சொற்களாலே சொல்லப்பட்டதாய், சர்வேச்வரனுக்கு வாய்த்தது இப்பிரபந்தம்)*

*"வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ணவங்கள்*
*போலே அருளிச் செயலில் சாரம்" (சூத். 63)*

*(வேதங்களில் புருஷ சூக்தமும், தர்ம சாத்திரங்களில் மனுதர்ம சாத்திரமும், மகாபாரதத்தில் ஸ்ரீகீதையும், புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணமும் சாரமாக இருக்குமாறு போலே, வேறு கதைகளின் சம்பந்தம் சிறிதும் இல்லாத நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் சாரமாக இருக்கும்)*

### ஆழ்வார் பாசுரங்களில் முரண்பாடு இல்லை:

குருவான வியாசர் எழுதிய பிரும்ம சூத்திரமும், சீடரான சைமினியின் கர்ம சூத்திரமும் ஒன்றுக்கொன்று முரணானவை. "கர்மம் செய்தால் போதும். அதுவே பலன் கொடுக்கும்; தெய்வம் வேண்டா" என்பார் ஜைமினி. ஆனால் ஆழ்வார்களோ ஒருவர் பேசினதே தாம் பேசுகின்றனர். அவர்களுக்குள் எந்த முரண்பாடும் இல்லை.

*"பேசிற்றே பேசல் அல்லால்" (திருமாலை 22)*

இராமாநுசர் பிரம சூத்திரத்திற்கு ஸ்ரீபாஷ்யம் செய்யும் பொழுது, ஐயம் ஏற்பட்ட பொழுதெல்லாம், திருவாய்மொழியின் துணை கொண்டு அறுதியிட்டு ஐயம் தீர உதவியதால் வேதத்தில் உபநிஷதம் போலத் தமிழ் மறையில் திருவாய்மொழி சிறப்புடையது.

*"பாஷ்யகாரர் இதுகொண்டு சூத்ரவாக்யங்கள்*
*ஒருங்க விடுவர்" (சூத். 65)*

### திருவாய்மொழிக்கான அலங்காரங்கள்:

வேதத்தின் சிறப்பிற்கு உதாத்தம் முதலான ஒலி விசேடங்கள், கிரம, ஜடா, பஞ்சாதிகள், பிரச்ந அஷ்டகங்கள் போன்ற சில அலங்காரங்கள் உண்டு. உபப்பிரும்ஹனங்களுக்கு அம்சம் பர்வம் முதலானவை அலங்காரங்கள்; பதம், வாக்யம், பாதம், விருத்தம், காண்டம், அத்யாயங்கள் என்னுமவை வேதங்களுக்கும், உபப்பிரும்ஹணங்களும் பொதுவானவை. இதே போல எழுத்து, சீர், பந்தம், அடி, தொடை, நிரை நிரை, ஓசை, தளை, இனம், யாப்பு, துறை, பண், இசை, தாளம், முதலிய அலங்காரங்கள் திருவாய்மொழிக்கு உண்டு.

*"உதாத்தாதி பத கிரம ஜடா வாக்ய பஞ்சாதி பாத விருத்த*
*பிரச்ந காண்ட அஷ்டக அத்யாய அம்ச பர்வ ஆதி*
*அலங்காரங்கள் போலே,*
*எழுத்து சீர் பந்தம் அடி தொடை நிரை*

நிரை ஓசை தளை இனம் யாப்புப் பாத்
துறை பண் இசை தாளம் பத்து நூறு ஆயிரம்
முதலான செய்கோலம் இதுக்கும் உண்டு" *(சூத். 69)*

[உதாத்தம் — எடுத்தல், படுத்தல், இன்றி ஒலியையைச் சமமாக வைத்து அத்யயனம் செய்தல்; ஜடை — ஒரு சொல்லை மாற்றி மாற்றி இரண்டு முறை கூறுதல்; பஞ்சாதி — 50 சொற்கள் போன்ற சிறுசிறு பகுதிகள்; அஷ்டகம் — பெரும் பிரிவு; பிரச்நம் எட்டு கொண்டது.அம்சம் — ஒத்து, இயல்களைப் போன்ற சிறுபிரிவு; பர்வம் — அதிகாரம் போலப் பெரும் பிரிவு;]

## காலந்தோறும் வேதம்:

இராமாவதாரம் நிகழ்ந்த போது ஸ்ரீவால்மீகி பகவான் மூலம் வேதம் இராமாயணம் ஆக வெளிக்கொணரப்பட்டது. வியூகத்தில் (சர்வேச்வரன் பாற்கடலில் இருக்கும் நிலை) பாஞ்சராத்திரமாக அவதரித்தது. எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய் (உள்ளே மறைந்து இருந்து அவற்றை நடத்தும் நிலை) இருக்கையில் மநுஸ்மிருதியாக வெளிவந்தது. கண்ணுக்குப் புலப்படுகிற கிருஷ்ணன் முதலான அவதாரங்கள் செய்தபோது மகாபாரதம் முதலான இதிகாசங்களாய் வெளியாயிற்று. அர்ச்சாவதாரத்தில் (திருக்கோயில்களில் உகந்து எழுந்தருளிய நிலை) வேதம் திருவாய்மொழியாக நம்மாழ்வார் மூலம் அருளப்பட்டது.

"அதவா வேதவேத்ய நியாயத்தாலே
பரத்வ பர முதுவேதம்" *(சூத். 70)*

(திருவாய்மொழிக்கு வேதத்தோடு ஒப்புமை மேலே கூறிய வழியல்லாமல், வேதமும் இராமாயணமாக அவதரித்தது என்ற நியாயத்தாலே, பரத்துவத்திலே நோக்காய் பழையதாய் இருக்கிற வேதமானது)

"வியூகத்திலே ஓதின நீதியாய்"

வியூகத்திலே பாஞ்சராத்திரமாய்

"வியாப்தியில் கேட்ட மனுவாய்"

அந்தர்யாமித்வ நிலையில் மனுஸ்மிருதியாய்

"அவதரணத்தில் படுகதைகளாய்"

அவதாரத்தில் இராமாயணம், மகாபாரதம் எனும் இதிகாசங்களாய்

"ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழ் ஆனவாறே"

அர்ச்சாவதாரத்தில் திருவாய்மொழியாகச் அவதரித்தது

"வேதத்தைத் திராவிடமாகச் செய்தார் என்னும்" *(சூத். 70)*

## வேதத்தின் தெளிவே திருவாய்மொழி:

ஆனால்ஒருவரால் செய்யப்படாத வேதம் இப்படி வேறுவேறு நிலையினை அடைந்தால் கலக்கத்தை ஏற்படுத்தி, பொருள் தெளிவு குறையாதோ? எனலாம். மலையிலிருந்து தாமிரபரணி ஆறு கலங்கலாக வருகிறது.

சமநிலமாகிய குருகூர் வந்து பாயும் பொழுது மிகவும் தெளிந்து, ஆற்றின் அடியில் இருக்கும் பொருள்கள் தெரியக் கூடிய அளவில் நீரோட்டம் இருக்கிறது.

அதுபோல, பொருள் முடிவு அறியாமல் — தம் நெஞ்சில் தோன்றும் பொருள்களைச் சொல்லும் கேள்வி ஞானம் சிறிதே உடையவர்கள் பொருளில் மயங்கி 'துவைதம்' 'அத்வைதம்', 'துவைதாத்வைதம்' என்பர். ஆனால் அதே வேதம் நம்மாழ்வாரிடம் வந்து சேர்ந்த பின் தெளிந்த நீராய் — கலக்கம் தீர்ந்து தெளிவினை அடைந்து ஆழ்பொருளை அறிவித்தது.

*"மண்ணாடின ஸஹ்ய ஜலம்"* *(சூத். 71)*

*(மேட்டு நிலத்தில் நின்றும் வேகத்தோடு வந்து பூமியில் விழுகையாலே மண் கலந்ததாய்க் கலங்கி, மலையில் நின்றும் வருகின்ற காவிரி, தாமிரபரணி என்னும் இவ்விரு நதிகளின் தண்ணீரானது)*

*"தோதவத்தி சங்கணி துறையிலே துகில் வண்ணத்*
*தெண்ணீராய் அந்தஸ் ஸ்தத்தைக் காட்டுமா போலே" (சூத். 71)*

*(திருவரங்கத்துக் காவிரி நீர்த்துறை, ஆழ்வார் திருநகரி தாமிரபரணி நீர்த்துறைகளில் தெளிந்த நீராய், தனக்குள்ளே கிடக்கிற பொருள்களைக் காட்டுமாறு போலே)*

*"அல்ப சுருதர் கலக்கின சுருதி"* *(சூத் 71)*

*(வேதத்தினுடைய பொருள் முடிவினை அறியாமல், தம் நெஞ்சில் தோன்றும் பொருள்களைச் சொல்லும் கேள்வி ஞானம் சிறிதே உடையவர்கள் ஒரு வாக்கியத்துக்குப் பொருள் சொல்லப்புக்கால் அப்பொருளில் நின்று மயங்கித் 'துவைதம்' என்பார். 'அத்வைதம்' என்பார். 'துவைதாத்வைதம்' என்பாராய், இப்படிக் கலக்கக் கலங்கின வேதமானது)*

*"நன் ஞானத்துறை சேர்ந்து தெளிவுற்று*
*ஆழ்பொருளை அறிவித்தது"* *(சூத். 71)*

உண்மை ஞானத்துக்குத் துறையான இவ் ஆழ்வார் பக்கலிலே சேர்ந்து, முன்புற்ற கலக்கம் தீர்ந்து தெளிவினை அடைந்து, மிக ஆழ்ந்த பொருளை அறிவித்தது (ஸஹ்யம் — மேற்கு தொடர்ச்சிமலை; அந்தஸ் ஸ்தத்தை — உள்ளேகிடக்கும் பொருளை

## எல்லோரும் கற்றற்குரியது:

கடல்நீர் உப்புத் தன்மை வாய்ந்தது; மனிதரால் உள்ளே புக முடியாதது; பௌர்ணமி முதலிய பருவகாலங்கள் தவிரப் பிறகாலங்களில் தீண்ட முடியாதது. ஆனால் அதே கடல்நீரானது, மேகம் பருகி மழையாகப் பெய்ய, அந்த மேகத்தின் சம்பந்தத்தினாலே உப்புத் தன்மை நீங்கி, எப்பொழுதும் எல்லார்க்கும் பயன்படும். அதேபோல வேதத்தை ஆவணி மாதத்திலாவது, புரட்டாசி மாதத்திலாவது ஒரு குறிப்பிட்ட காலத்தில் நியமத்துடன் ஓத வேண்டும். மூன்று வருணத்தாரே அத்யயனம் செய்யலாம். ஆனால் திருவாய்மொழியோ ஒரு காலவரையறை இல்லாதது; எல்லாக்காலமும் எல்லோரும் கற்றற்குரியது.

*"மேகம் பருகின சமுத்ர அம்புபோல"* *(சூத். 72)*

*(சமுத் ராம்பு — கடல்நீர்)*

*"நூற்கடல் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே,*
*சர்வதா சர்வ உபஜீவ்யமாமே"* *(சூத். 72)*

*(அத்யயனம் செய்தற்குக் காலநியதியையும், மேல் மூன்று வருணத்தாரே அதிகாரிகள் ஆகையாலே அதிகாரி நியதியையும் உடைத்தாயிருக்கிற வேதக்கடலிலே, உள்ள வாக்கியங்கள், இவருடைய திருவாக்கு மூலம் வெளிவந்து காலநியதி அதிகாரி நியதிகளை வேண்டாத தன்மையை அடைந்து ஒரு காலவரையறையின்றி எல்லாக்காலமும் எல்லார்க்கும் கற்றற்குரியதாம்)*

### அர்ச்சாவதாரமே காட்சிக்கு எளிமை:

பதினாலு உலகங்களையும் சேர்த்து அண்டம் என்பர். அதற்கு வெளியே பெரிய கடல் உள்ளது. அதுவே பெரும்புறக்கடல்; அக்கடலே இறைவன். இது பரத்துவ நிலை அளவிடற்கரிய பரம்பொருள் கடல் அலைகளோடு கூடினதாய் அலைந்து நிற்கும். பாற்கடலில் பள்ளி கொண்ட நிலை. இது வியூக நிலை; கடலில் நிலை காணமுடியாதபடி ஆழ்ந்த இடம் உண்டு. அது இறைவன் உயிர்க்குயிராய் (அந்தர்யாமியாய்) நிற்கும் இடம். கடலானது சுழிகளாய்க் கொண்டு வெள்ளப் பெருக்கெடுத்து ஓடும் இடம் போல்வது, அவதார நிலை. வெள்ளம் வரும் சமயம் வெள்ள நீரைப் பார்க்க முடியும். வெள்ளம் வடிந்தால் அதனைப் பார்க்க இயலாது. அது போல இறைவன் மனித உருவத்தோடு இராமனாக கிருஷ்ணனாக அவதரித்து உலகில் நடந்து திரிந்தபோது பார்த்துத் தரிசிக்க முடியும். அந்த அவதாரநிலை முடிந்தபின் தரிசிக்க முடியாது. பரம்பொருள் நிலையோ, பாற்கடல் வியூக நிலையோ, உயிர்க்குயிராய் மறைந்து நிற்கும் அந்தர்யாமி நிலையோ கண்ணால் காண முடியாதன. அவதார நிலை கண்ணால் காணக் கூடியதாக இருந்தாலும், அவதார காலத்தில் நாம் இல்லாததனால் தரிசிக்க இயலாத நிலை. இப்படிக் கண்ணாலும், காலத்தாலும், இடத்தாலும் காணமுடியாத பரம்பொருளை அர்ச்சாவதாரத்தில் — திருக்கோயில் தோறும் திருமேனிகளாக, உகந்து எழுந்தருளின இடங்களில் அனைவராலும், எல்லாக் காலத்திலும் தரிசிக்க முடியும். வெள்ளம் பாய்ந்து வடிந்த பின்னே ஆற்றிலே மடுக்கள் எப்பொழுதும் இருக்கும். அவை அனைவர்க்கும் எளிமையாகக் கிட்டும். அந்த மடுப்போல இறைவன் அர்ச்சாவதாரத்தில் திருக்கோயில்களில் எளிவந்து காட்சி அளிக்கிறான்.

> **"பெரும் புறக்கடல்,**
> **அலைத்து நிற்கும் இடத்திலும்,**
> **ஆழ்ந்து நிற்கும் இடத்திலும்,**
> **ஓடும் இடத்திலும்**
> **அயோக்யர்க்குச் சமைத்த மடு**
> **மானமேய சரமம்".** **(சூத். 74)**

(பெரும் புறக் கடல் — இறைவன்; அலைத்து நிற்கும் இடம் — வியூக நிலை; ஆழ்ந்து நிற்கும் இடம் — உயிர்க்குயிராய் (அந்தர்யாமியாய்) நிற்கும் நிலை; ஓடும் இடம் — அவதாரங்கள்; அயோக்யர்— இந்நான்கு நிலைகளையும் அறிந்து வழிபடும் தகுதி இல்லாதவர்கள்; சமைத்த மடு — அர்ச்சாவதாரம்; மானமேயம் — பிரமேயம்; பிரமாணத்தால் அறியப்படும் பொருள். சரமம் — முடிவு. அர்ச்சாவதாரத்தின் முன்னைய நிலை— பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம். மேய சரமம் — இறைவனுக்குரிய நிலைகள் ஐந்தனுள் முடிவான நிலையாகிய அர்ச்சாவதாரம்.

### திருவாய்மொழியே கற்றற்கு எளிமை:

அளவிடற்கரிய பரம்பொருளைப் பற்றிப் பேசும் வேதமாகிய கடலையும் அளவிட்டு அறிய முடியாது. பரத்துவம் பேசுகிறது வேதம். இது ஆவரண ஜலம் (பெரும்புறக்கடல் — அண்டத்தைச் சுற்றிய சக்கர

வாளகிரியைச்சுற்றி வெளியே அமைந்து இருக்கின்ற தூய நீர்க்கடல்) வியூக நிலை பற்றிப் பேசுகிறது பாஞ்சராத்திரம். இது பாற்கடல்.

அந்தர்யாமித்வம் பற்றிப் பேசுகிற மநுதர்மம் முதலான ஸ்மிருதிகள் பூகத ஜலம் (பூமிக்கு அடியில் இருக்கும் தண்ணீர்)

விபவங்கள் (ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் போன்ற அவதாரங்கள்) பற்றிப் பேசுகிற இதிகாசங்கள் பெருக்காறு.

வேதம், பாஞ்சராத்திரம், மநுதர்மம் முதலான ஸ்மிருதிகள், இதிகாசங்கள் — இவற்றையெல்லாம் கற்க ஞானம், சக்தி என்பன தேவைப்படும். ஆனால் திருவாய்மொழியைச் சிறிதும் சிரமம் இல்லாமல் எளிமையாய்க் கற்கலாம். இது எவ்வாறு எனில், அதிக தாகம் உடையவனுக்கு சாய்ந்தநிலையில் இருக்கும் பெரியபானையிலிருந்து தண்ணீர் எவ்வளவு எளிமையாகக் கிடைக்குமோ அவ்வளவு எளிமையாகக் கற்கலாம்.

*“சுருதி சாகரம்,*
*அலைத்து நிற்கும் இடத்திலும்,*
*ஆழ்ந்து நிற்கும் இடத்திலும்,*
*ஓடும் இடத்திலும்,*
*அயோக்யர்க்குச் சமைத்த சாய்கரகம்*
*மாநசரமம்”.* *(சூத் 74)*

(சுருதி சாகரம் — வேதக்கடல்; அலைத்து நிற்கும் இடம் — வியூக மூர்த்தியைப் பற்றிப் பேசுகிற பாஞ்சராத்திரம்; ஆழ்ந்து நிற்கும் இடம் — அந்தர்யாமித்வத்தைப் பற்றிப் பேசுகின்ற மநுதர்மம் முதலான ஸ்மிருதிகள்; சமைத்த சாய்கரகம் — அர்ச்சாவதாரத்தைப் பற்றிப் பேசுகின்ற திருவாய்மொழி; மாநசரமம் — பிரமாணங்களில் முடிந்த பிரமாணம். மாநம் — பிரமாணம். திருவாய்மொழியின் முன்னை நிலை — வேதம், பாஞ்சராத்திரம், மநுதர்ம சாஸ்திரம், ஸ்ரீராமாயண பாரதங்கள்)

*“பெரும் புறக்கடலும் சுருதி சாகரமும் அலைத்து*
*ஆழ்ந்து ஓடும் இடங்களில், அயோக்யர்க்குச் சமைத்த*
*மடுவும் சாய்கரமும் மாநமேயசரமம்”* *(சூத். 74)*

### *பிறவி காரணமாகத் திருவாய்மொழியை ஒதுக்கக்கூடாது:*

நம்மாழ்வார் நான்காம் வருணத்தவராயிற்றே என்பது அடுத்த கேள்வி. இல்லம்தோறும் — கோயில் தோறும் — எழுந்தருளியிருக்கும் இறைவனை இன்ன உலோகம்என்று ஆராய்வது பாவம். இறைவனைப் பற்றிய தோத்திரப் பாடல்கள் இன்னமொழி என்று ஆராய்வது பாவம். அது போல திருவாய்மொழி பாடிய நம்மாழ்வார் இன்ன வருணம் என்று ஆராய்வதும் பாவம். வருணத்தை வைத்து எப்படி நம்மாழ்வாரை ஒதுக்கமுடியும்? அப்படியானால் பாரதம் எழுதிய வியாசர், மச்சகந்தி என்ற வலைச்சியின் மகனல்லரோ? பகவத் கீதை பாடி அருளிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஆயர்குலத்தினன் அல்லனோ? அது மட்டுமன்று, கிருஷ்ணன் ஒருத்தி வயிற்றில் பிறந்து ஓரிரவில் இன்னொருத்தி மகனாக அல்லவோ வளர்க்கப்பட்டான். மச்சகந்தியும் வியாசபகவானைப்

பெறுவதற்காகவே பராசர முனிவரால் கன்னி கழிக்கப்பட்டு மீண்டும் கன்னியானவள் அல்லளோ? கண்ணன், வியாசர் என்ற இவர்களின் பிறவியைப் பார்த்துப் பகவத்கீதையையும், பாரதத்தையும் யாரேனும் ஒதுக்குவார்களா? அது போல நம்மாழ்வார் பிரபந்தத்தையும் அவர் பிறவி காரணமாக ஒதுக்கக்கூடாது. கிருஷ்ணன் விஷயத்தில் உண்டான ஆசையே ஒரு வடிவு கொண்டாற்போலே அவதரித்தவர் நம்மாழ்வார். அவர் பிறவிக்கு ஈடாக ஒரு பிறவி உண்டா?

“வீட்டின்ப இன்பப் பாக்களில் திரவிட பாஷா
நிருபண சமம் இன்பமாரியில் ஆராய்ச்சி” (சூத். 75)

(வீட்டின்பத்தில் நிரவிய நிருபணம் — இன்பத்தை விளைக்கின்ற அர்ச்சாவதாரத்தை அது செய்யப்பட்ட மரம், கல் முதலிய பொருள்களைக் கொண்டு அதனை இகழ்தல்; இன்பப்பாவில் பாஷா நிருபணம் இறைவனுடைய பெருமையைச் சொல்லி ஆனந்தத்தைத் தரும் தமிழ்ப் பாக்களாகிய திருவாய்மொழியை, அது செய்யப்பட்ட மொழி கொண்டு அதனை இகழ்தல்; இன்ப மாரியில் ஆராய்ச்சி — பேரானந்தமாகிய மழையினைப் பெய்யும் மேகமான ஆழ்வாரைப்பற்றி அவர் அவதரித்த பிறவியை ஆராய்தல்; சமம் — ஒக்கும்)

## மொழி அடிப்படையிலும் ஒதுக்க முடியாது:

“நம்மாழ்வார் பிரபந்தம் வடமொழியன்று; தமிழ்மொழி” என மொழியின் அடிப்படையிலும் நம்மாழ்வார் பிரபந்தத்தை ஒதுக்க முடியாது. மொழி ஒன்றே அடிப்படை என்றால் வட மொழியில் வந்துள்ள கள்ள நூல்கள், பிறசமய நூல்கள் போன்ற எல்லா வேண்டத்தகாதனவற்றையும் ஏற்றுக் கொள்ளவேண்டிவரும். எனவே மொழி அடிப்படையிலும் ஒதுக்க முடியாது. தமிழ்மொழியாகையால் இத்திருவாய்மொழி விடத்தக்கது என்னில், கள்ள நூல், புறச்சமய நூல் முதலியவைகளும் வடமொழியில் இருக்கின்ற காரணத்தால் ஆதரிக்க வேண்டும்.

“பேச்சுப்பார்க்கில் கள்ளப்
பொய்ந்நூல்களும் கிராஹ்யங்கள்
பிறவி பார்க்கில் அஞ்சாம் ஓத்தும்
அறு மூன்றும் கழிப்பனாம்” (சூத் 76)

ஆழ்வார் நான்காம் வருணத்தவர் என்று பிறவி பார்த்து, இத்திருவாய் மொழியை இகழ்ந்தால், வலைச்சியான மச்சகந்தியின் புதல்வரான வியாசமுனிவர் சொன்ன ஐந்தாம் வேதமான மகாபாரதமும், “ஆயர்” குலத்தில் அவதரித்த கிருஷ்ணன் சொன்ன பதினெட்டு அத்தியாயங்களை உடையதான பகவத்கீதையாகிய உபநிடதமும் விடத்தக்கவைகளேயாம்.

## உடைய நங்கைக்கு ஒப்பான தாயார் இலர்:

தேவகி கிருஷ்ணனையே குழந்தையாகப் பெற்றும் அவனுடைய இளமைப்பருவ விளையாட்டை அனுபவித்தாளில்லை. யசோதையோ கிருஷ்ணனின் இளமைப் பருவ விளையாட்டை எல்லாம் அனுபவித்துப்

பெற்றிருந்தாலும் 'தத்துக் கொண்டவள்தானே' என்ற குறை உடையவள்.

"தத்துக் கொண்டாள் கொல்லோ
தானே பெற்றாள் கொல்லோ" *(பெரியாழ்வார் திருமொழி 2.1:7)*

வியாசரைப் பெற்றவுடனே மச்சகந்தி மீண்டும் கன்னி ஆகிவிட்டாள். எனவே அவளாலும் பிள்ளை இன்பத்தைச் சுவைக்க முடியவில்லை. ஆனால் உடைய நங்கையோ நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவி, தவங்கிடந்து நம்மாழ்வாரைப் பெற்றவள். அத்திருத்தாயார்க்கு ஒப்புயாரும் இல்லை.

**"பெற்றும் பேறு இழந்தவளும், கன்னிகையானவளும்,
எல்லாம் பெற்றாள் ஆயும் தத்துக் கொண்டாள் என்பர்
நின்றார் என்னும் அவளும் நெடுங்காலமும்
நங்கைமீர் என்னும் இவளுக்கு நேர் அன்றே." *(சூத். 78)***

(கிருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றும், அவனுடைய இளமைப்பருவத்தின் சுவை அனுபவிக்காததனால் பேறு இழந்தவளான தேவகியும், வியாசரைப் பிள்ளையாகப் பெற்றும்அப்பிள்ளையால் உளதாம் சுவை சிறிதும் அனுபவிக்கப் பெறாதபடி பராசரமுனிவருடைய வார்த்தையாலே மீளவும் கன்னிப் பெண்ணான மச்சகந்தியும் கிருஷ்ணனுடைய இளமைப் பருவத்தின் செயல்கள் முதலானவைகளை எல்லாம் அனுபவிக்கப் பெற்றிருந்தும், அவனுடைய மனிதச் செயல்களுக்கு அப்பாற்பட்ட செயல்களைக் கண்டு ஐயுறும்படியான தாயின் தன்மையுடைய யசோதையும் பக்தியின் மேலீட்டால் நீண்டகாலம், கண்ணன் திருவடிகளை அடைந்து (நம்மாழ்வாரின் திருத்தாயார்) பெற்றவளாகவும், ஆழ்வாருடைய திருவார்த்தைகளைப் பின்னர் அநுபவித்தவளாகவும் ஆன உடைய நங்கைக்கு ஒப்பு அல்லர்

# நம்மாழ்வார் அவதரித்த இடம், குலத்தின் பெருமை

## நம்மாழ்வார் அவதரித்த இடமும் உயர்வு:

வியாசர் பிறந்த இடத்தில் மீன் நாற்றம்; கண்ணன் அவதரித்த இடத்தில் வெண்ணெய் முடை நாற்றம் நாறும்; நம்மாழ்வார் அவதரித்த இடத்தில் திருத்துழாய் நாற்றம் நாறும்.

> **"மீன நவநீதங்கள் கந்திக்கும் இடமும்,**
> **வெறிகொள்துழாய் கமழும் இடமும்**
> **தன்னில் ஒக்குமோ?" *(சூத். 79)***

(மீன் நாற்றம் நாறுகின்ற வியாசர் பிறந்த இடமும், வெண்ணெய் முடைநாற்றம் நாறுகின்ற கிருஷ்ணன் அவதரித்த இடமும், திருத்துழாய் மணம் நாறுகின்ற ஆழ்வார் அவதரித்த இடத்திற்கு ஒப்பாகுமா?)

மீன் கந்திக்கும் இடம் — வியாசர் பிறந்த இடம். நவநீதம் கந்திக்கும் இடம் — கண்ணன் அவதரித்த இடம்; துழாய் கமழும் இடம் — ஆழ்வார் அவதரித்த இடம்; கந்தித்தல் — நாறுதல்)

மேலும் வியாசர் சிவபெருமான் சம்பந்தமுடைய கங்கை அருகில் மீன்பிடிக்கும் ஓடத்துறையில், வலைச்சேரியில் பிறந்தார். கண்ணனோ கருநிறமுள்ள தமோகுணம் உடைய யமுனை ஆற்றங்கரையில், காளிங்கன் என்ற பாம்பின் விஷத்தால் கெடுக்கப்பட்ட துறையில் அறியாதார் வாழ்கின்ற ஆயர்சேரியில் அவதரித்தான். நம்மாழ்வாரோ மேன்மை பொருந்திய தாமிரபரணி ஆற்றங்கரையில் தூய்மையான சங்குகள் வந்து சேரும் திருச்சங்கணி துறையில் நல்லோர்கள் வாழ்கின்ற திருக்குருகூரில் அவதரித்தார்.

> **"ஆற்றில், துறையில், ஊரில் உள்ள**
> **வைஷம்யம் வாசாம் அகோசரம்" *(சூத். 80)***

(வியாசர், கண்ணன், நம்மாழ்வார் ஆகியோர் அவதரித்த ஊர், அருகில் பாயும் ஆறு, துறை இவற்றில் உள்ள வேறுபாடுகளை வார்த்தைகளைக் கொண்டு பேசமுடியாது. வைஷம்யம் — வேறுபாடு; வாசாமகோசரம் — வார்த்தைகளைக் கொண்டு பேசமுடியாது).

## அடிமைத்தொண்டே விழுமியது:

இராவணனைக் கொன்ற பின்னர், பிரமன் முதலான தேவர்கள் இராமபிரானைப் பார்த்து, "நீரே தெய்வம்" என, இராமபிரான் அதனைப் பொறுக்காமல் "நான் மனிதனாகவும், தசரதனின் மகனாகவும் எண்ணுகிறேன்" என்றான். கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கியவுடன் ஆயர்கள் வியந்து "நீ தேவாதி தேவனா? இயக்கனா? கந்தர்வனா?" என்று வாழ்த்தினர். கண்ணன் கோபமுற்றுச் சிறிது நேரம் பேசாமல் இருந்து, "நான் தேவன் அல்லன், உங்களுக்கு உறவினனே" என்றான். எனவே இரு பெரிய அவதாரபுருஷர்களும் தேவனாகச் சொல்லப்படுவதை விரும்பவில்லை. நம்மாழ்வாரும் பிரமன் என்ற பதவியும் வேண்டாதவர். நாராயணனுக்குக் குடிகுடிவழி வந்து ஆட்செய்யும் தொண்டராகவே விரும்பிக் கவி மாலைகள் சாத்தினார்.

"தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள் போலே"
(சூத். 81)

(தெய்வத் தன்மையை நிந்தையாக நினைத்த ஸ்ரீராமபிரானும், கிருஷ்ணனுமான சர்வேச்வரனுக்கு மீனம், ஆமை, ஏனம் போன்ற பிறவிகள் போல. ஜநிகள் — அவதாரங்கள்)

"பிரஹ்ம ஜன்மமும் இழுக்கு என்பார்க்கு",

"பிரமனாகப் பிறத்தலும் தாழ்வு என்று எண்ணும் ஆழ்வார்க்கு)

"பண்டைநாளில் பிறவி உண்ணாட்டுத் தேசிறே"

(கைங்கரியத்துக்குத் தகுதியான குடிப்பிறவி, பேரின்ப உலகமாய, பரமபதத்தில் வசிக்கிற, பிரகிருதி சம்பந்தம் இல்லாத சரீரம் போலே, ஒளியை உடையது).

## சீதை, பரதன், கண்ணன் போல் பிறந்த குலத்துக்கு ஏற்றம் தந்தார்:

ஜனக குலத்துக்கு மூத்த பெண்ணாகப் பிராட்டி அவதரித்துத் தான் பிறந்த குலத்துக்குக் கீர்த்தியை உண்டாக்கினாள். தசரத குலத்தில் நடுவில் பிறந்த ஸ்ரீ பரதாழ்வார் இராமபிரானுடைய பிரிவால் சடைபுனைந்து வற்கலை உடுத்து, கண்ணீரால் உண்டான சேற்றிலே கிடந்து தாம் பிறந்த குலத்துக்கு ஏற்றம் கொடுத்தார். வசுதேவகுலத்திலே ஸ்ரீகிருஷ்ணன் கடைக்குட்டியாக அவதரித்துத் தாய்தந்தையரின் சிறைத்தளையை அறுத்தான்.

அது போல நம்மாழ்வாரும் தாம் பிறந்த ஊருக்குப் புகழ் உண்டாக்கினார். தலைவன் — தலைவி பாவத்திலே தல்லவனைப் பிரிந்த தலைவியாய்ப் பிரிவினால் கண்ணீர்விட்டுக்கலங்கித் தரையில் கிடந்து தம் குடிக்கு ஏற்றம் தந்தார். தம்முடைய பிரபந்தத்தைக் கற்கும் முகத்தாலே தம்மோடு தொடர்புடையாரின் பிறவியாகிய சிறையை அறுத்தார். சீதை, பரதன், கண்ணன் ஆகிய மூவரும் தனித்தனியே செய்த செயல்களை இவர் ஒருவரே செய்தார்.

ஜநக தசரத வஸுதேவ குலங்களுக்கு
மூத்த பெண்ணும் நடுவிற் பிள்ளையும் கடைக்குட்டியும்
போல இவரும் பிறந்து
புகழும் ஆக்கமும் ஆக்கி அஞ்சிறையும் அறுத்தார் (சூத். 82)

ஜனக குலத்துக்கு மூத்த பெண் பிறந்து புகழை ஆக்கினாற் போலேயும், தசரத குலத்துக்கு நடுவில் பிள்ளை பிறந்து ஆக்கத்தை ஆக்கினாற் போலேயும், வாசுதேவ குலத்துக்குக் கடைக்குட்டி பிறந்து அம்சிறை அறுத்தாற் போலேயும், இவரும் பிறந்து புகழும் ஆக்கமும் ஆக்கி அம்சிறையும அறுத்தார் என்று பிரித்துக் கொண்டு கூட்டி முடிக்க.

(மூத்தபெண் — சீதாபிராட்டி; நடுவிற்பிள்ளை — ஸ்ரீ பரதாழ்வார்; கடைக்குட்டி — ஸ்ரீகண்ணபிரான்)

## சூரியன், ராமபிரான், கண்ணன் ஆகியோரால் செய்யமுடியாத செயல் செய்தார்:

சூரியனால் உலகின் புறஇருளைப் போக்க முடியுமே தவிர மக்களின் அஞ்ஞானமாகிய அக இருளைப் போக்க முடியாது. இராமனாகிய சூரியனால் அசுரக்கடலை வற்றச் செய்ய முடியுமே தவிர மக்களின் பிறவிக் கடலை வற்றச் செய்யமுடியாது. கண்ணனால் உலகமாகிய

தாமரையை மலர்த்த முடியுமே தவிர, வன்னெஞ்சர்களின் இதயத்தாமரையை மலர்த்த முடியாது.

ஆனால் நம்மாழ்வார் என்ற சூரியன் திருவாய்மொழியாகிய ஆயிரம் கிரணங்களினால் மக்களின் அக இருளை நீக்கி, பிறவிக் கடலை வற்றச் செய்து அவர்தம் நெஞ்சத் தாமரையை மலர்த்தினார்.

**ஆதித்ய ராமதிவாகர அச்யுத பானுக்களுக்கு**
**போகாத உள்ளிருள் நீங்கி**
**சோஷியாத பிறவிக் கடல் வற்றி**
**விகஸியாத போதில் கமலம் மலர்ந்தது**
**வகுள பூஷண பாஸ்கரோதயத்திலே** (சூத். 83)

வகுள பூஷண பாஸ்கரோதயத்தில் ஆதித்யனுக்குப் போகாத உள்ளிருள் நீங்கிற்று, ராமதிவாகரனுக்குச் சோஷியாத பிறவிக்கடல் வற்றிற்று, அச்யுத பானுக்கு விகசியாத போதிற் கமலம் மலர்ந்தது என்று பிரித்துக் கூட்டுக.

(ஆதித்யன் — சூரியன்; ராமதிவாகரன் — ராமனாகிய சூரியன்; அச்யுதபானு — கிருஷ்ணனாகிய சூரியன்; சோஷியாத — வற்றாத; விகசியாத — மலராத; வகுள பூஷண பாஸ்கரோதயம் — மகிழமாலை அணிந்த சூரியனாகிய நம்மாழ்வார் அவதாரம்).

### நான்காம் வருணத்தில் அவதரித்தது ஏன்?

பிறந்த சாதியால் இழிவு கிடையாது. கண்ணபிரான் ஆயர் குலத்திலே பிறந்து யது வம்சத்தை மேல்நிலைக்குக் கொண்டு வந்தான். இரணியாட்சனின் பலத்தாலே நிலைகுலைந்து பெருவெள்ளத்திலே புகுந்த பூமியைக் கிழான பன்றி உருவெடுத்துப் பெருமான் மேலே எடுத்துக் காத்தான்.

வம்சத்தை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க கோபாலர் போலேயும் — மூழ்கிக் கிடந்த யதுவின் வம்சத்தை மேல்நிலைக்குக் கொண்டுவர ஆயர்குலத்திலே பிறந்து கோபாலன் ஆன கிருஷ்ணனைப் போலவும்; பூமியை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க வராகரைப் போலேயும் — பெரு வெள்ளத்திலே புகுந்த பூமியை மேலே எடுப்பதற்காகப் பாதாளத்திலே தாழ இழிந்த வராகரைப் போலவும், நம்மாழ்வாரும் இவ்வுலகத்தில் கீழ்நிலையில் உள்ளவர்களை அந்நிலையிலிருந்து வேறுபடுத்தி உயர்த்திக் காட்டவே நான்காம்வருணத்தில் அவதரித்தார். மேலும் ஏனைய மூன்று வருணத்தார்க்கும் "தாம் உயர்ந்த குலம்" என்ற அகங்காரம் இருக்கும்; அதனால் அவர்கள் ஆன்ம சொருபம் கெட்டுப் பிறவிப் பெருங்கடலில் அழுந்துவர். அந்தச் செருக்கு நீங்கிப் பிறவிப் பெருங்கடலைத் தாண்ட, அவர்கள் உயர்வானது என்று நினைக்கும் சாதிகளை இழிவானது என்று விட்டுத் தாழ்ந்த சாதியிலே அவதரித்தார். (சூத். 84)

**"வம்ச, பூமிகளை உத்தரிக்கக் கீழ்க்குலம் புக்க வராக,**
**கோபாலரைப் போலே"** (சூத். 84)

(உத்தரித்தல் — உயர எடுத்து நிறுத்தல்; கீழ்க்குலம் — யாதவ குலம்; கோபாலன் — கிருஷ்ணன்).

**"இவரும் நிமக்நரை உயர்த்தத் தாழ இழிந்தார்"** (சூத். 84)

இவ்வுலகத்தில் கீழ்நிலையில் உள்ளவர்களை உயர்த்த, நான்காம் வருணத்திலே தாழ இழிந்தார். நிமக்நர் — பிறவிக் கடலில் மூழ்கினவர்கள்.

# பிறப்பால் தாழ்வில்லை

## சாதிப்பிறப்பில் தாழ்வில்லை; பக்திப் பிறப்பே பிறப்பு:

சாதிப்பிறப்பினாலே தாழ்வு இல்லை; பக்திப்பிறப்பே உயர்வானது. சாதியிலே மிலேச்சனாக இருந்தாலும் பக்தனாக — பக்தி பரவசத்தால் கண்ணீரும் கம்பலையுமாக இருக்கும் அடியவனாக இருந்தால் அவனே பிராமணோத்தமன். அவனைக் குலதெய்வமாகக் கொண்டு அவன் திருவடிகள் அலம்பிய அந்தத் தீர்த்தத்தைப் பருகி, அவன் உண்டு மீதம் வைத்த உணவை உண்டால் செருக்கு மிக்க உயர்குலத்தவரும் செருக்கு நீங்கித் தூய்மை அடைவர்.

"மிலேச்சனும் பக்தன் ஆனால்,
சதுர்வேதிகள் அநுவர்த்திக்க அறிவு கொடுத்துக்,
குலதெய்வத்தோடு ஒக்க பூஜை கொண்டு பாவனதீர்த்தப்
பிரசாதனாம் என்கிற திருமுகப்படியும்" (சூத். 85)

(கீழ்க்குலத்தவனாய் உள்ளவனும் பக்தியை உடையவன் ஆனால், அவனே, உயர்நத பிராமணனாயினும் செருக்குடையனாயிருந்ததைவிடுத்து ஞானம் பெற விரும்பினால் அப்பிராமணனுக்கு ஞானத்தைக் கொடுத்து, அவனைக் குலதெய்வமாக்கொண்டு பூசை செய்து, அவன் திருவடி கழுவின தீர்த்தம், அவன் அமுது செய்த சேடம் இவற்றைத் தூய்மையாகக் கருதி உன்னப்பண்ணி தூய தன்மையனாம்படி செய்வன். ஸ்ரீ.பி.ஆர்.புரு)

## யாகக் குறைநீக்கிய நம்பாடுவான்:

விசுவாமித்திரர் — விஷ்ணு சித்தர் — தொண்டரடிப் பொடியாழ்வார் — ஆகியோர்க்குச் சமமாக வைத்து எண்ணப்படுகின்றார் நான்காம் வருணத்தவரான நம்பாடுவான் என்ற பாகவதர். சோமசர்மா என்ற பிராமணன் தொடங்கிய யாகத்தை முறைப்படி செய்யவில்லை. அதனால் குறை ஏற்பட்டுப் பிரமராட்சசாகச் சபிக்கப்பட்டுப் பிறந்தான். திருக்குறுங்குடி நம்பி சந்நிதியில் பாடச் சென்ற நம்பாடுவானைப் பிரமராட்சதன் வழிமறித்து உண்ண முயன்றான். உடனே நம்பாடுவான் பிரமராட்சசனைப் பார்த்து, "திருக்குறுங்குடி நம்பியை வழிபட்டு பாடிவிட்டு வருகிறேன். அதன்பின்னர் என்னை உணவாக ஏற்றுக் கொள்" என்று சொல்லி விடைபெற்றுப்பகவானைப் பாடி வழிபட்டு மீண்டும் வந்தான். அப்பொழுது பிரமராட்சதன் "நீ இன்று பாடிய புண்ணியத்தை எனக்குத் தா" என்று கேட்க இவனும் தந்தருள அவன் சாபம் நீங்க யாகக் குறையும் நீங்கியது.

"விச்வாமித்ர விஷ்ணுசித்த துளசீ பிருத்யரோடே
உள் கலந்து தொழுகுலம் ஆனவன்" (சூத். 85)

(விச்வாமித்ரர், பெரியாழ்வார் தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகிய மூவரோடும் ஒரு சேர எண்ணப்பட்ட, பிறவியிலே தாழ்மை உடைய நம்பாடுவான்).

"நிலையார் பாடலாலே பிராஹ்மண
வேள்விக்குறை முடித்தமையும்" (சூத். 85)

("நிலையார் பாடல்" ஆன கைசிகப் பண்ணாலே, வேள்விக் குறையால் பிரும்மராட்சதன் ஆன சோமசர்மா என்ற பிராமணனது இராட்சதத் தன்மையைப் போக்கினான்.)

### வேட்டுவக் குலத்துக் குகப்பெருமாள் தோழன் ஆனான்:

குகன் வேட்டுவக் குலத்திலே பிறந்தாலும், ஸ்ரீ இராமபிரான் அவனைத் தோழனாக ஏற்று இலக்குவனுக்கு மூத்தவன் என்று உறவு பாராட்டினான். அது மட்டுமன்று. அண்ணன் மேல் உள்ள பரிவால் இலக்குவன் இரவு முழுவதும் தூங்காமல் கண்விழித்துக் காத்து நிற்க, அவனையே சந்தேகித்துத் தானும் இரவு முழுமையும் வில்லும் கையுமாகக் குகன் கண்விழித்துச் சோதித்து நின்றான். அவ்வாறு சோதித்த இலக்குவனுடைய நல்ல பண்புகளை ஸ்ரீபரதாழ்வானுக்கு முன்பின் அறியாத குகப்பெருமான் சொல்லக்கூடிய அளவுக்கு ஒரே குலமாக ஐக்கியப்படுத்திக் கொண்டான்.

"கீழ்மகன் தலைமகனுக்குச் சமசகாவாய்" *(சூத். 85)*

(வேடர் குலத்திலே பிறந்த ஸ்ரீகுகப்பெருமான் சக்கரவர்த்தித் திருமகனுக்கு ஒத்த தோழனாய்)

"தம்பிக்கு முன் பிறந்து வேலும் வில்லும்
கொண்டு பின் பிறந்தாரைச் சோதித்து" *(சூத்.85)*

(இவன் தம்பியான இளையபெருமாளுக்கு முன்னே பிறந்தானாய், கையும் வில்லுமாய்க் காத்துக் கொண்டு நிற்கிற இளைய பெருமாளிடத்தில் ஐயம் கொண்டு சோதித்து)

"தமையனுக்கு இளையோன் சத்பாவம்
சொல்லும்படி ஏக குலமானமையும்" *(சூத்.85)*

(தமையனான ஸ்ரீ பரதாழ்வானுக்கு, தம்பியான இளைய பெருமாளுடைய இராமபிரான் பக்கல் உள்ள பக்தியும், பாரதந்திரியமும் சொல்லக்கூடிய அளவுக்கு இக்ஷ்வாகு குலத்தோடு ஒன்றானான்.

### உணவு ஏற்றலிலும் சாதிக்கு இடம் இல்லை:

ஸ்ரீராமபிரான் சபரி வழங்கிய உணவு உண்டார்; அனுமனுடன் ஓரிலையில் சேர்ந்து உண்டார். வீடுமர், துரோணர் ஆகியோருடைய வீடுகளைவிட்டு நற்குணம் மிக்கவர் என்பதனால் விதுரர் இல்லத்திலே கண்ணபிரான் உணவு ஏற்றார்; இம்மூன்று வரலாறுகளாலும் சாதிப் பிறப்பின் உயர்வு அடிபட்டுப் போகிறதன்றோ?

"தூது மொழிந்து நடந்து வந்தவர்களுடைய
சம்யக் சகுண சகபோஜனமும்" *(சூத். 85)*

(தூது மொழிந்தவன் — இராமன்; சம்யக்போஜனம் — சபரி கையால் செய்யப்பட்ட நல்ல உணவு. தூது நடந்தவன் — கண்ணன்; சகுணபோஜனம் — நல்ல குணத்தோடு கூடிய விதுரர் படைத்த உணவு; தூது வந்தவன் — அனுமன்; சகபோஜனம்— இராமபிரானுடன் ஓரிலையில் ஒரு சேர உண்டல்)

### அக்ர தாம்பூலம் கொடுத்தல்:

தருமர் கண்ணபிரானுக்குத் தாம் செய்த இராசசூய யாகத்தில் அக்ர தாம்பூலம் (முதல்மரியாதை) கொடுத்தார். பெரும்புலியூரில் உள்ள பிராமணர்கள் தாங்கள் செய்த யாகத்தில் திருமழிசைப்பிரானைக் கௌரவித்தார்கள். இதிலும் சாதி அடிபட்டுப் போகிறது.

"ஒரு பிறவியிலே இருபிறவி ஆனார் இருவர்க்குத்
தர்ம சூநுஸ்வாமிகள் அக்ர பூஜை கொடுத்தமையும்" *(சூத். 85)*

(யது குலத்திலே பிறந்து ஆயர் குலத்திலே வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான கிருஷ்ணன்,

ரிஷிபுத்திரராகப் பிறந்து பிரம்பன் குடியிலே வளருகையாலே ஒரு பிறவியிலே இருபிறவியான திருமிழிசைப் பிரான். ஆகிய இருவரில் கண்ணனுக்குத் தருமர் தாம் செய்த இராய சூய யாகத்தில் அக்ரபூஜை கொடுத்தமையும், பெரும்புலியூர் அடிகள் தம்முடைய யாகத்தில் திருமழிசைப் பிரானுக்கு அக்ர பூஜை கொடுத்தமையும்.)

## இறுதிக் கடன் செய்தல்:

தருமர் விதுரர்க்கும், இராமபிரான் சடாயுவிற்கும், பெரியநம்பி மாறனேரி நம்பிக்கும் மகன் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்தனர்.

> *"ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் சந்தேஹியாமல்*
> *சகஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ர கிருத்தியமும்"*
> *(சூத்.85)*

*(ஐவரில் முற்பட்டவர் — தருமர்; நால்வரில் முற்பட்டவர் — ராமர்; மூவரில் முற்பட்டவர் — திருக்கோட்டியூர் நம்பி, பெரிய நம்பி, திருமலை நம்பி ஆகிய ஆசாரியர்களில் முற்பட்ட பெரிய நம்பி; புரோடாசம் — யாகத்தில் வைக்க வேண்டிய பொருள்).*

## முப்பெரிய அடியவர்கள்:

திருவேங்கடத்திலே குறும்பறுத்த நம்பி என்ற குயவனார் குலத்தில் தோன்றிய பாகவதர் மண்ணாலாகிய பூவினால் பகவானை வழிபட்டு வந்தார். அவர் பக்திக்குத் தலைவணங்கினான் தொண்டைமான் சக்கரவர்த்தி என்ற முடியரசன். காஞ்சீபுரத்தில் பெருமானுக்கு விசிறி வீசும் திருக்கச்சிநம்பி என்ற அடியவரிடம் வைதிகோத்தமரான இராமானுஜர் தத்துவரீதியான தமது சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்தார். திருவரங்கத்திலே வீணைவாசித்துக் கொண்டிருந்த திருப்பாணாழ்வாரைத் தமது தோளில் வைத்துக்கொண்டு உலோக சாரங்க மஹாமுனிகள் வலம் வந்தார்.

> *"புஷ்ப, தியாக, போக*
> *மண்டபங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும் வீணையும்*
> *கையுமான அந்தரங்கரை*
> *முடி மன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுனியும்*
> *அநுவர்த்தித்த கிரமமும்"* *(சூத். 85)*

புஷ்ப மண்டபத்தில் பணிப்பூவும் கையுமான அந்தரங்கரைஅனுவர்த்தித்த கிரமமும், தியாக மண்டபத்தில் ஆலவட்டமும் கையுமான அந்தரங்கரை மஹாமுனி அனுவர்த்தித்த கிரமும் என்னு பிரித்துக் கூட்டுக.

*(1) புஷ்ப மண்டபம் — திருவேங்கடம்; பணிப்பூவும் கையுமான அந்தரங்கர் — பணிப்பூவினை அர்ச்சித்த குறும்பறுத்த நம்பி; முடிமன்னன் — தொண்டைமான் சக்கரவர்த்தி.*

*(2) தியாக மண்டபம் — காஞ்சிபுரம்; ஆலவட்டமும் கையுமான அந்தரங்கர் — விசிறி வீசும் திருக்கச்சிநம்பி; வைதிகோத்தமர் — இராமாநுசர்.*

*(3) போக மண்டபம் — திருவரங்கம்; வீணையும் கையுமான அந்தரங்கர் — திருப்பாணாழ்வார்; மஹாமுனி — உலோக சாரங்க மஹாமுனிகள். அநுவர்த்தித்த கிரமம் — சார்ந்த முறை)*

## காய, அன்ன ஸ்தல சுத்தி:

உறங்காவில்லி தாசர் என்ற பக்த சிரோமணியின் தோளில் கை

வைத்தபடிதான் ஞானவயோதிகரான உடையவர் திருக்கோயில் வழிபாட்டுக்கு எழுந்தருளுவார். இதனால் உடையவர் காய சுத்தி பெற்றார். (சரீரம் தூய்மை அடைதல்)

ஞான வயோதிகரான நம்பிள்ளை, பிள்ளை ஏறு திருவுடையார் தாசருடைய கரத்தாலே பிரசாத்தைத் தொடச் செய்து அன்ன சுத்தி பெற்றார். (உணவு தூய்மையாதல்)

நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் திருவரங்கத்தில் வடக்குவீதியில் புது வீடு கட்டிக் குடிபுக இருந்தார். வீடு கிருகப் பிரவேசம் ஆகிவிட்டால் தாம் உள்ளே செல்ல முடியாது என்று எண்ணிய பிள்ளை வானமாமலைதாசர் முதல்நாளே பட்டர் இல்லம் நுழைந்து பூஜை அறை, சமையல் அறை என்று சுற்றிப் பார்த்து வந்தார். இதனை அறிந்த ஊர்ப்பிராமணர்கள் வெகுண்டு பட்டரிடம் சென்று, "என்னய்யா கிருகப்பிரவேசம் நடத்துகின்றீர்? வானமாலை உமது இல்லம் புகுந்து தீட்டுப் படுத்தி விட்டான்" என்று முறையிட்டனர், பட்டர் அடுத்த நாள் குடுபுகும்பொழுது எந்த ஹோமமும் செய்யாமலே நுழைந்து விட்டார். வானமாலை தாசர் நுழைந்ததால் ஸ்தல சுத்தி (இல்லத் தூய்மை) ஆகிவிட்டது.

"யாக அநுயாக உத்தரவீதிகளில்
காய அன்ன ஸ்தல
சுத்தி பண்ணின
விருத்த ஆசாரமும்" (சூத். 85)

இதனை யாகத்தில் காயசுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும், அநுயாகத்தில் அன்னசுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும், உத்தரயாகத்தில் ஸ்தல சுத்தி பண்ணின விருத்தாசாரம் என்றும் பிரித்துக் கூட்டுக.

யாகம் — திரு ஆராதனம்; வழிபாடு. காயசுத்தி — உடல் தூய்மை

பிள்ளை உறங்க வில்லிதாசர் வரலாறு.

அநுயாகம் — இறைவனுக்கு நிவேதித்த பிரசாதத்தை உண்ணுதல்.

அன்னம் — சோறு. பிள்ளை ஏறு திருவுடையார் தாசர் வரலாறு.

உத்தரவீதி — வடக்கு வீதி; ஸ்தலசுத்தி — இல்லத் தூய்மை செய்தல்).

பிறவியால் தாழ்ந்தவர்களாக இருந்தாலும் இறைபக்தி உடையவர்களிடம் உயர்சாதியினரும் சார்ந்து ஒழுகுவர்; அவர்கள் அவ்வுயர் சாதியினர்க்கே ஞாநத்தை உபதேசிப்பர்; அவர்கள் பூஜிக்கத் தக்கவர்கள். தீவினையிலே மூழ்கிக் கிடக்கும் உயர் சாதியினரை உயர்நிலைக்கு உயர்த்துவர்.

### இறைநினைவு இல்லாத கல்வி, குலம், ஒழுக்கம், தாழ்வே:

ஒருவன் உத்தம ஜாதியினனாக — உத்தம ஆசிரமத்தினனாக — நல்ல கல்வி உடையவனாக — நல்ல ஒழுக்கம் உடையவனாக — நான்கு வேதங்களையும் படித்தவனாக இருக்கலாம். ஆனால் எங்கும் பரந்திருக்கின்ற நாராயணனை அறியாமல் இருந்தால் அவன் குங்குமம்

சுமக்கும் கழுதையே. விஷ்ணுபக்தி இல்லாத சந்நியாசி, நாய் இறைச்சி தின்பவனை விடக் கீழானவன். பகவானைத் தியானம் செய்யாதவர்களின் கர்மானுஷ்டானங்கள் சாம்பலில் போட்ட ஆஹுதிகள் போலப் பயனற்றவை. பகவானுடைய சம்பந்தம் இல்லாத சொற்களும், பகவானிடத்தில் பக்தி இல்லாதவனுடைய கல்வியும், ஒழுக்கமும் பிணத்திற்குச் செய்த அலங்காரத்தைப் போன்றன. அன்னாருடைய மேன்மை விதவைக்குச் செய்கிற அலங்காரம் போலப் பழிப்புக்கு இடமாகும்.

**நாய் இறைச்சி தின்பவனாயினும் விஷ்ணுபக்தி உடையவனே மேலானவன்:**

விஷ்ணுவிடம் பக்தி உடையவன் நாய் இறைச்சி தின்பவனாயினும் பிராமணனைக் காட்டிலும் மேலானவன். பகவானைப் பற்றியதாக — மோட்சத்தைக் கொடுப்பதாக இருப்பதுவே கல்வி.

பகவானுடைய விஷய சம்பந்தம் இல்லாத சாதியும் ஆச்சிரமும் ஞானமும் ஒழுக்கமும் தள்ளத்தக்கவை.

**"அஜ்ஞர் பிரமிக்கிற**
**வர்ண, ஆச்ரம, வித்யா, விருத்தங்களை"** ***(சூத். 86)***

*(பகவானுக்கு அடிமையாயிருத்தலே ஆன்ம சொரூபம் என்று அறியாத அஞ்ஞானிகள், உத்தம சாதி என்றும், உத்தமஆச்சிரமம், நல்ல கல்வி என்றும், நல்லொழுக்கம் என்று போற்றப்படுகின்ற நிலையிலே; அஜ்ஞர் — அறிவில்லாதவர்; வர்ணம் — சாதி; ஆச்ரமம் — பிரமசரியம் முதலிய நிலைகள்; வித்யா — கல்வி ; விருத்தம் — ஒழுக்கம்)*

**கர்த்தப ஜன்மம், ச்வபச அதமம்,**
**சில்பநைபுணம், பஸ்மாஹுதி** ***(சூத். 86)***

*(வேதம் படிக்கின்ற பிராமணனாயினும், குங்குமப்பூ சுமக்கிற கழுதை, முனிவன் ஆயினும் நாய் இறைச்சி தின்னும் சண்டாளன், கற்றவன் ஆயினும் செருப்புக் குத்தக் கற்ற கல்வி உடையான், செய்த கர்மாநுஷ்டானங்கள் சாம்பலில் போடப்பட்ட ஆகுதி என்றும்; கர்த்ப ஜன்மம் — கழுதைப் பிறப்பு; ச்வபச அதமம் — நாய் இறைச்சி தின்னும் நீசனைக் காட்டிலும் தாழ்ந்தவன்; சில்பநைபுணம் — செய்தொழில் திறன்; பஸ்மாஹுதி — சாம்பலில் இட்ட ஆகுதி)*

**"சவவிதவா அலங்காரம் என்று கழிப்பார்கள்"** ***(சூத்.86)***

*(சவத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரம் என்றும் விதவைக்குச் செய்யும் அலங்காரம் என்னும் அந்த அஞ்ஞானிகளை ஞானிகள் இகழ்வர்).*

# இரண்டாம் பகுதி

- இறையடிமையே உயர்பிறவி.
- நம்மாழ்வார் பிரபாவம்.
- இறைவனின் விசேட கடாட்சம்.
- பராங்குச நாயகி.
- பகவானின் தாச நேசர்களோடு ஒப்பு.
- எங்கும் காணமுடியாத பக்தி.
- பக்தி வெளிப்பாடு — அகப் பொருளுக்கு உள்ளுறைப் பொருள்.

## இரண்டாம் பகுதி

# இறையடிமையே உயர்பிறவி

இறைவனுக்கு அடிமையாக இருக்கின்ற பிறவியே உயர்பிறவி. இறைவன் திருமேனியோடு நாளும் தொடர்வு பட்டிருக்கும் ஆதிசேஷனாகிய பாம்பின் பிறவி — அவன் ஊர்கின்ற கருடனாகிய பறவைப்பிறவி — அவன் விரும்பி அணிந்து கொள்கின்ற திருத்துழாயாகிய செடிப்பிறவி — ஆகிய இப்பிறவிகளையே நித்ய சூரிகள் (நிரந்தரமாக வைகுந்தத்தில் இருப்போர்) விரும்பி எடுப்பர். ஸ்ரீவைஷ்ணவப் பெரியவர்கள் பிரமனுடைய செல்வத்தையோ சிவனுடைய செல்வத்தையோ வேண்டார். கண்ணன் ஏறி விளையாடின கடம்பமாகவோ, குருந்தமரமாகவோ இருக்க விரும்புவர். கண்ணனுடன் ஆடி மகிழும் கோபிகா ஸ்திரிகள் நடந்து கிளம்பிய தூசி படிந்த பிருந்தாவனத்து செடி கொடிகள் — திருப்பதி மலையுடன் தொடர்பு கொண்ட விலங்கு, தாவரங்கள் — ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய திருமாளிகையில் புழு — இப்படி பகவான் திருவடி படவும், அவனை அணைந்தார் (கோபிகா ஸ்திரிகள்) பாததூளி படவும், பகவான் விரும்பி எழுந்தருளின இடங்களிலாவது அவனுடைய அடியார்கள் திருமாளிகைகளிலாவது பிறக்கவும்தான் ஆழ்வாராதிகள் விரும்புவர். விலங்குப் பிறவியாயிற்றே, தாவரப் பிறவியாயிற்றே புழுப்பிறவியாயிற்றே என்பதனைப் பொருட்படுத்தார்.

"அணைய, ஊர, புனைய,
அடியும், பொடியும் பட,
பர்வத பவனங்களிலே ஏதேனுமாக
ஜனிக்கப்பெறுகிற
திரியக் ஸ்தாவர ஜன்மங்களைப்
பெருமக்களும் பெரியோரும்
பரிக்ரஹித்துப் பிரார்த்திப்பர்கள்" (சூத். 87)

(அணையப் பெறுகிற திரியக்கு ஜன்மத்தை — பகவான் திருக்கண் வளருகைக்கு அணையப் பெறுகிற ஆதிசேடனாகிற பாம்புப் பிறவியையும்; ஊரப் பெறுகிற திரியக்கு ஜன்மத்தை — வாகனமாகப் பெறுகிற கருடப் புள்ளாகிய பறவையின் பிறவியை; புனையப் பெறுகிற தாவர ஜன்மத்தை — சாத்துகைக்கு ஏற்ற திருத்துழாயான செடியின் பிறவியை; பெருமக்கள் பரிக்ரஹித்தார்கள். மகாத்மாக்களான நித்திய சூரிகள் பகவானுக்குக் கைங்கரியம் செய்வதினால் இப்பிறவிகளை ஏற்றுக் கொண்டார்கள். அடிபடப் பெறுகிற தாவர ஜன்மத்தையும் — யமுனைக் கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதிப்பதால் கடம்பு என்ற தாவரப்பிறப்பையும்; பொடிபடப் பெறுகிற தாவர ஜன்மத்தை — பிருந்தாவனத்தில் கோபிகா ஸ்திரிகள் பாத தூளி பெற்றமையால் அங்குள்ள செடி கொடிகளாகிய தாவரப் பிறப்பையும்; பர்வதத்தில் ஏதேனுமாகப் பெறுகிற திரியக்குத் தாவர ஜன்மங்களை — திருமலை யாழ்வாருடைய சம்பந்தமுடைய திரியக்கு, தாவரங்களில் ஏதேனும் ஒன்றாகப் பிறத்தலையும்; பவனங்களில் ஜநிக்கப்பெறுகிற திரியக்கு ஜன்மத்தை — ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகைகளில் பிறக்கக் கூடிய புழுப்பிறவியையும்; பெரியோர் பிரார்த்திப்பர் — ஸ்ரீ குலசேகரப் பெருமாள், நாதமுனிகள் முதலான முமுக்ஷுக்கள் வேண்டினார்கள்.

பர்வதம் — மலை; பவனம் — வீடு. ஜநித்தல் — பிறத்தல்; திரியக்கு — விலங்கு பறவை, ஊர்வன முதலாயின; தாவரம் — மரம், செடி, கொடி முதலாயின; ஜந்மம் — பிறவி; பரிக்ரஹித்தல் — மேற்கோடல்.

**உயர்ந்த வருணத்தை ஒதுக்குவானேன்?**

நித்ய சூரிகள் தாவரம், விலங்கு போன்ற பிறவிகளைத் தாமாக விரும்பி ஏற்பது சரி. அதற்காக உயர்ந்த வருணத்தை விட வேண்டும் என்று சொல்வானேன்? இறைவனுக்கு அடிமையாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்திற்கும் புறம்பான அகங்காரத்தை வருணம் கொடுக்கும். அதுமட்டுமல்லாது ஒவ்வொருவர் செய்த கர்மாவினால் வந்தது இந்த உயர்குலப் பிறப்பு இதுவந்தேறி. ஆன்மா ஞானவடிவமாக இருந்தும் இறைவனது அடிமைத்தன்மைக்குப் புறம்பு என்றால் ஆன்மாவைக் கூடப் பொறுத்துக் கொள்ளமாட்டார்கள்.

**வருணம் வந்தேறி:**

வருணம் வந்தேறியதா? ஆம்; விசுவாமித்திரன் அரசன்; அவன் செய்த தவத்தினால் வசிஷ்டர் அவனை பிரும்மரிஷியாக்கினார். அந்த வசிஷ்டர் அரசனாகிய திரிசங்குவைத் தம் வார்த்தையைக் கேட்காததால், நீசனாகச் சபித்தார். அதே திரிசங்குவை விசுவாமித்திரர் தம்முடைய தவ வலிமையினால் சுவர்க்கத்துக்குப் போகச் செய்தார். ஒரு அரசன் பிரும்ம ரிஷியானான். இன்னொரு அரசன் நீசன் ஆனான். நீசன் ஆனவனை பிரும்மரிஷியானவர் சுவர்க்கத்துக்கு அனுப்பினார். இதனால் வருணம் என்பது ஒருவன் செய்த நல்வினை தீவினைகளினால் வருகிறது. எனவே வருணம் வந்தேறி.

**இதின் ஔபாதிகத்வம்**
**ஒரு ராஜா தன்னை மறைமுனிவன் ஆக்கினவன்**

ஔபாதிகத்வம் — ஒரு காரணம் பற்றி வந்தேறியாகிற தன்மை,

(ஒரு ராஜா — விச்வாமித்திரன்; தன்னை மறைமுனிவன் ஆக்கிவை — விசுவாமித்திரனாகிய தன்னை பிரமரிஷியாகும்படி செய்தவன்; வசிஷ்டர்)

**"நீசன் ஆக்குவித்த ராஜாவை,**
**வாரே உறுப்பாக யஜிப்பித்துச் சுவர்க்கம்**
**ஏற்றின போதே தெரியும்"** *(சூத். 89)*

(நீசன் ஆக்குவித்த ராஜா — வசிஷ்டபகவானாலே நீசனாகும்படி சபிக்கப்பட்ட திரிசங்கு என்னும் அரசன்; வாரே — தோலாகியவார்; உறுப்பாக — வேள்விக்கு அங்கமான (மான்) உறுப்புத்தோலாக; யஜிப்பித்து — வேள்விகளைச் செய்வித்து)

**அவதாரம்; சாஸ்திரம்; அனுஷ்டிப்பவர் கொள்ளத்தக்கன; தள்ளத்தக்கன;**

பிரமேயம், பிரமாணம், பிரமாதா என்ற மூன்றிலும் தள்ளத்தக்கவைகளும் உண்டு; கொள்ளத்தக்கவைகளும் உண்டு.

வேதம் முதலிய சாஸ்திரங்களால் அறியப்படும் இறைவன் பிரமேயம். பகவானுடைய அவதாரமாக இருந்தாலும் புத்தவேடம் கள்ளவேடம் ஆகும். எனவே அது தள்ளத்தக்கது.

"மா உருவில் கள்ளவேடம்" *(சூத். 90)*

ஊர்மனையில் வசிக்காமல் காடுகளில் வசிக்கும் ஆயர்குலத்தில் அவதரித்தாலும் கண்ணன் அவதாரம் கொள்ளத் தக்கது.

"காடுவாழ் சாதியில் கடல் வண்ணன் வேடம்" *(சூத். 90)*

பகவானைப் பற்றிக் கூறுகிற வேதம் முதலிய சாஸ்திரங்கள் பிரமாணம் ஆகும். வேத மந்திரமாயினும் விஷ்ணு சம்பந்தம் இல்லாத மந்திரம் தள்ளத்தக்கது.

"திருந்து வேதமலமான மானிடம் பாடல்" *(சூத். 90)*

தென்னுரை என்று சொல்லப்படுகின்ற தமிழ்மொழியில் உள்ள பிரபந்தங்கள் விஷ்ணுவின் புகழைப் பாடுவன, எனவே இவை கொள்ளத் தகுந்தன.

"தென்னுரையில் அரிகீர்த்தி" *(சூத். 90)*

வேதம் முதலிய சாஸ்திரங்களை அறிபவன் பிரமாதா. பகவானிடம் பக்தி இல்லாதவர்கள் வேதம் ஓதும் பிராமணராயினும் நீசரே.

"சர்வ வர்ண சூத்ரத்துவம்" *(சூத். 90)*

*(எல்லாச் சாதியிலும் பகவானிடத்தில் பக்தி இல்லாதவர்கள் நீசர்கள்)*

நாயின் இறைச்சி தின்னும் கீழ்ப்பிறப்பினன் விஷ்ணுவிடம் பக்தி உடையவனாயின் பிராமணனைக் காட்டிலும் மேலானவன்; அவனே ஏற்புடையவன்.

"ச்வபசரில் பக்திபாசனமும்" *(சூத். 90)*

*(ச்வபசர் — நாய் இறைச்சி தின்னும் சண்டாளர்; பக்திபாசனம் — பக்தியாகிய செல்வத்தை உடையவர்கள் போற்றப்படுபவர்கள்)*

ஸ்ரீவைஷ்ணவர்களைப் பிறப்புக் காரணமாக யாரேனும் நிந்தித்தால் நிந்தித்தவர் அப்போதே அந்த இடத்திலே சண்டாளர்கள் ஆவார்.

"அறிவார் ஆர் ஆர் அமரர் என்ன ஏற"

*(இவ்வேறுபாட்டினை அறிகின்றவர்கள், எப்பிறவியினர் ஆனாலும், ஒவ்வொழுக்கத்தினர் ஆனாலும், நித்யசூரிகளுக்கு ஒப்பாவார்)*

"அறியாதார் சாதி அந்தணர்களேலும் தகர வீழ்வர்" *(சூத். 90)*

*(தள்ளத்தக்கன எவை கொள்ளத்தக்கன எவை எனும் வேறுபாடு அறியாது பாகவதர்களுடைய பிறப்பினை ஆராய்கின்றவர்கள், உயர்ந்த பிறப்பினராய் இருந்தாலும் அப்பொழுதே அவ்விடத்தே சண்டாளர்கள் ஆவார்கள்).*

# நம்மாழ்வார் பிரபாவம்

## கலியுக அவதாரம்:

தமிழ்மாமுனிவரான அகத்தியர் இருப்பிடமானது அனைத்து முனிவர்களும் வந்து சேர்ந்து மகிழத்தக்க ஒன்றாகும். தமிழை அறிந்த முனிவரால் தானே தெற்குத்திசைக்குப் பெருமை ஏற்பட்டது; அதேபோலத் தமிழ்ப்பிரபந்தங்களின் மூலம் உலகை உய்விக்கச் செய்த ஆழ்வாரைப் போற்றுவதில் குறை என்ன இருக்கிறது? ஓரோர்யுகத்தில் ஓரோர் இடத்தில் பகவான் அவதாரம் செய்து மக்களைக் காக்கிறார். அதுபோலக் கலியுகத்தில் தாமிரபரணிக் கரை அருகில் மக்களை உய்விக்க நம்மாழ்வார்அவதாரம் செய்தார்.

## எல்லா அவதாரங்களும் இவரேயா?

இப்படி அவதரித்த நம்மாழ்வார் என்ன அவதாரம்? கிருதயுகத்தில் பிராமண வருணத்தில் அத்திரிமகன் தத்தாதிரேயனோ? ஜமதக்நியின் மகன் பரசுராமனோ? திரேதாயுகத்தில் க்ஷத்திரிய குலத்தில் தசரதனின் மகன் இராமபிரானோ? துவாபரயுகத்தில் யதுகுலத்தில் வசுதேவரின் மகன் கண்ணனோ? கலியுகத்திலே நான்காம் வருணத்தில் தோன்றிய நம்மாழ்வார் யார்? அவதாரமோ? வியாசமுனிவரின் அவதாரமோ? உலகைத் திருத்த ஸர்வேச்வரன் கட்டளைகளை நிறைவேற்ற அவதரித்த நித்திய சூரிகளில் ஒருவரோ? இவ்வுலக மக்கள் ஆயிரக்கணக்கான முற்பிறவிகளிலே ஈட்டப்பெற்ற புண்ணியங்களின் திரண்டவடிவேயோ?

**"அத்ரி ஜமதக்நி, பங்க்திரத, வசுநந்த சூநுவானவனுடைய யுக, வர்ண, கிரம அவதாரமோ?"** ***(சூத். 92)***

(அத்ரி ஜமதக்நி சூநுவாய் — அத்ரிக்கும், ஜமதக்நிக்கும் பிள்ளைகளாய், பங்க்திரத சூநுவாய் — தயரதனின் பிள்ளையாய்; பங்க்தி — பத்து — தச; சூநு — புத்திரன்; வசுநந்த சூநுவாய் — வசுதேவர்க்கும் நந்த கோபருக்கும் பிளையாய்;

**"வியாசாதிவத் ஆவேச அவதாரமோ?"** ***(சூத்.92)***

(வியாசர் முதலாயினார் பக்கல் இறைவன் புக்கு வேதங்களை வகுத்தது போல, தமிழ் வேதத்தை வெளிப்படுத்த இவர்பக்கல் புக்கு ஆவேசித்தானோ?)

**"முதுவர் கரை கண்டோர் சீரியரிலே ஒருவரோ?"** ***(சூத்.92)***

(முதுவர் — நித்யசூரிகள்; கரை கண்டோர் — பிறவிப் பெருங்கடலைக் கரைகண்ட முத்தர்; சீரியர் — சுவேதத்தீவினில் வசித்து இங்குள்ளாரைத் திருத்தப் பகவான் இச்சைப்படி அவதரிப்பவர்.

**"முன்னம் நோற்ற அனந்தன் மேல் புண்ணியங்கள் பலித்தவனோ?"** ***(சூத்.92)***

முன்னம் நோற்ற புண்ணியங்கள் பலித்தவரோ — ஆயிரக் கணக்கான முற்பிறவிகளிலே ஈட்டப்பெற்ற தம்முடைய புண்ணியங்களின் பலனாய்க் கொண்டு வந்தவரோ?; அனந்தன் மேல் புண்ணியம் பலித்தவரோ — திருவருள் துணையாலே ஆதிசேட சயனத்தை உடையவனான சநாதன புண்ணியத்தால் வந்தவரோ?)

**"என்று சங்கிப்பர்கள்"** ***(சூத்.92)***

(சங்கிப்பர் — ஐயப்படுவர்)

*நம்மாழ்வாரின் பிரபாவம்:*

ஞானிகள் எதனால் இப்படியெல்லாம் ஐயப்படுகின்றனர்? இதனை எவ்வாறு விளக்குவது? ஒரு காரணமா? இரண்டு காரணங்களா? பலப்பல காரணங்கள்.

புவியும் இரு விசும்பும் தன்னகத்தே கொண்ட சர்வேச்வரன் நம்மாழ்வார் நெஞ்சிலே பிரியாது நிலைத்து இருக்கின்றான். அந்தப் பேரானந்தத்தில் "உலகத்தை எல்லாம் அகத்தே வைத்து இருக்கின்ற உன்னை நான் என் நெஞ்சில் அடக்கி வைத்திருக்கின்றேனே! நீ பெரியவனா நான் பெரியவனா? என்று இறைவனையே வினாத் தொடுக்கும் பெருமையைச் சொல்வதா? "புவியும் இருவிசும்பும் நின்னகத்த: நீ என் செவியில் வழிப்புகுந்து என் உள்ளாய்: அறிவின்றி யான் பெரியன் நீ பெரியை என்பதனையார் அறிவார் ஊன் பருகு நேமியாய் உள்ளு" *(பெரிய திருவந்தாதி — 75)*

*"யான் நீ என்று மறுதலைத்து இருந்த பிரபாவம்" (சூத்.93)*

*(மறுதலைத்து — மாறுபட்டு)*

சர்வேச்வரன் உபயவிபூதிகளை உடையவன். மென்மைத் தன்மையன்; விரும்பப்படும் பொருள்கள் எல்லாம் நிறைவு பெற்றவன்; ஒன்றுக்கும் மனம் வேறுபடாதவன். அப்பேர்ப்பட்ட சர்வேச்வரன் நம்மாழ்வாரின் திருவாய் மொழிகட்கு மகிழ்ந்து ஆடுகின்றான் எனில் இவர் பெருமை தான் என்னே? வானத்திலும் அவருக்கு நிகர் இல்லை; பூமியிலும் இல்லையாம்.

*"வானத்து மண்மிசை மாறும் நிகரும்*
*இன்றி இருந்த பிரபாவம்" (சூத். 93)*

*(வானம் — பரமபதம்; நிகர், மாறு — ஒப்பு)*

பரமபதத்திலே நித்யசூரிகள் எந்நாளும் இன்பத்தில் திளைத்திருப்பது போலவும் இல்லை; பூலோகத்தில் உள்ள மக்கள் கடவுளை மறந்துவிட்டுச் சௌக்கியமாய் இருப்பது போலவும் இல்லை. கலவியால் மகிழ்கிறார்; பிரிவால் துன்புறுகிறார். இந்த உலகிலும் சம்பந்தம் இல்லை; அந்த உலகிலும் சம்பந்தம் இல்லை. இவர் எங்கே இருக்கிறார் என்றே தெரிய முடியாத பிரபாவத்தை (பெருமை) எவ்வாறு சொல்வது?

*"நிலை இடம் தெரியாதே இருந்த பிரபாவம்" (சூத். 93)*

நித்ய சூரிகள் அனைவரும் சேர்ந்து கூடினால் இவருக்குச் சமம் ஆவர் என்று சொல்லக்கூடிய பிரபாவம்.

*"தெய்வத்து இனம் ஒருவகைக்கு இருந்த பிரபாவம்" (சூத். 93)*

சர்வேச்வரன் பரமபதத்தில் நித்ய சூரிகள் அனைவரிடமும் வைத்திருக்கும் காதல் முழுதும் ஒன்று சேரப் பண்ணி இவரிடமே காட்டிய பெருமை.

"இனத்தலைவன் அம்தாமத்து
அன்புசெய இருந்த பிரபாவம்" (சூத். 93)
(இனத்தலைவன் — சர்வேச்வரன்; அம்தாமம் — பரமபதம்)

இறைவனைச் சேர்ந்தமைக்கு அடையாளமான கலவிக்குறிகள் பெற்ற — பெண்நிலை அடைந்த பிரபாவம்.

"சேர்ந்தமைக்கு அடையாளம் உளவாக
இருந்த பிரபாவம்" (சூத். 93)

இறைவனுடைய அழகு, குணம் இவைகளை நினைந்து — உள்ளும் புறமும் மகிழ்ச்சி பொங்கி — இறைவனை நேரே அறிந்தவரைப் போலே பெருமிதம் கொண்ட பிரபாவம்.

"உகந்து உகந்து திமிர் கொண்டால் ஒத்து இருந்த பிரபாவம்"

உலகமக்கள் எல்லாம் இறைவன் நினைவு இல்லாமல் உணவு என்றும் உடை என்றும் ஓடி அலைந்து கொண்டு இருக்கின்றனர். இது நாட்டியல்பு. அப்படியில்லாமல் ஆழ்வார் உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனே என்று இருக்கின்ற பெருமை.

"நாட்டியல்பு ஒழிந்து இருந்த பிரபாவம்" (சூத்.93)

பிரசமயத்தவர்கள் எல்லாம் நடுநிலையில் இருந்து தம் கருத்துக்களை வைக்காமல் தங்கள் அறிவுக்குத் தோன்றிய வாதங்களை முன் வைத்து — தம்மதங்களை நிலை நிறுத்தப்பார்க்கின்றனர். அந்தப் புறமதத்தாரிடம் வேதாந்தத்தின் உட்பொருளை விளக்கித் தம் திருவார்த்தைகளால் அவர்கள் தம்முன் நில்லாத படி ஓட்டி இருந்த பிரபாவம்.

"சடரை ஓட்டி இருந்த பிரபாவம்" (சூத். 93)
(சடர் — வஞ்சிக்கின்றவர்; இங்கே புற சமயத்தவர்)

கல்வியால் உண்டான களிப்பு, செல்வத்தால் வரும் களிப்பு,குடிப்பிறப்பால் வரும் களிப்பு — ஆகிய மூன்றாலும் செருக்குக் கொண்டவர்களுக்கு மதம் ஏற்படுகின்றது.அந்த மதம் நீங்கும்படி அவர்களுக்கு உபதேசமாகிய அங்குசத்தை இட்ட பிரபாவம்.

"மத அவலிப்தர்க்கு அங்குசம் இட்டு இருந்த பிரபாவம்" (சூத்.93)
(அவலிப்தர் — செருக்குக் கொண்டவர்;)

மக்கள் அனைவர்க்கும் பக்தியை உண்டாக்கி அவர்கள் பிறவிக்கு எமனாக — பிறவியே இல்லாமல் செய்கிற பிரபாவம்.

"நடாவிய கூற்றமாய் இருந்த பிரபாவம்" (சூத். 93)

சரீரத்திற்குத் தீங்குவிளைவிக்கின்ற — உயிரைக் கவர்கின்ற நோய், பகை, பசி முதலிய குற்றங்கள்; பிறப்பு இறப்புகளால் வருகின்ற எல்லாத்துயரங்களுக்கும் காரணமான பாவங்கள்; தீயனவாகிய இவையாவும் அருகில் வாராதபடியாக இருந்த பிரபாவம்.

"தீயன மருங்கு வாராமல் இருந்த பிரபாவம்" (சூத். 93)

கலியுகத்தில் மக்கள் இறைவனை வணங்க மாட்டார்கள் என்ற நிலையை மாற்றி மக்களை வைணவ தர்மத்தில் புகுத்தி, கிருதயுகமே வந்ததுபோல ஆக்கிய பிரபாவம்.

*"கலியுகம் நீங்கிக் கிருதயுகம் பற்றி இருந்த பிரபாவம்" (சூத்.93)*

உலகமக்கள் சூரிய உதயம் ஆனவுடன், பொருள் ஈட்டும் காலம் வந்தது என்று மகிழ்வார்கள். சூரியன் மறைந்தவுடன் மனைவியோடு இன்பம் நுகர்தற்குரிய காலம் வந்தது என்று மகிழ்வார்கள். இப்படிப்பட்ட மக்கள் காலையில் மலம்;நடுப்பகலில் பசி; தாகம்; மாலையில் காமம்; இரவில் தூக்கம் இவற்றால் துன்பப்படுகின்றனர். இவ்வாறு இல்லாமல் உலகத்தார்க்கு மாறாக — பகல் இரவு என்ற வேறுபாடு தெரியாது — எப்பொழுதும் பகவானுடைய அனுபவத்திலேயே மூழ்கினவராய் இருந்த பிரபாவம்.

*"பட்டெழுபோது அறியாது இருந்த பிரபாவம்" (சூத். 93)*

*(பட்டபோது — சூரிய அஸ்தமனம்; எழுபோது — சூரிய உதயம்)*

இத்தனைப் பிரபாவங்களையும் — பெருமைகளையும் கொண்டதனால் — இவர் இன்னார் இப்படிப்பட்டவர் என்று சொல்ல முடியாமல் இருக்கின்றார். எல்லாரையும் விட உயர்ந்து இருக்கின்றார்.

# இறைவனின் விசேட கடாட்சம்

**இறைவனின் விசேட கடாட்சம்:**

இத்தனை பெருமைகளும் இவருக்கு வரக்காரணம் என்ன? கல்பம் தோறும் கல்பம் தோறும் மக்களை — உலகைப் படைத்தும் அவர்கள் பயன்பெறாமல் போகின்றனர். இறைவனை அடையாமல் இவ்வுலக வாழ்க்கையிலேயே உழன்று கொண்டு இருக்கின்றார்கள். வேளாண்மை ஒருகால் தப்பி நல்லவிளையுள் கிடைக்காவிட்டால் வேளாளன் சோம்பி விட்டுவிடமாட்டான். மீண்டும் வேளாண்மை செய்வான். அது போல ஒரு கல்பத்தில் திருந்தவில்லையே என்று வருந்தாது, மீண்டும் மீண்டும் மக்களைப் பிறப்பித்து எப்படியாவது திருந்துவார்களா என்று இறைவன் பார்ப்பான்.

அப்படி மக்களை — உலகை — எல்லாவற்றையும் படைத்து அவற்றுள் மறைந்து — அந்தர்யாமியாய் நிற்பான். மக்களை நெறிப்படுத்த அன்னப் பறவையாக வந்து பிரமனுக்குச் சாத்திரங்களை உபதேசித்தான். பாம்பணைமேலே கண்வளருவது போலத் துயின்று உலகைக் காப்பதற்குரிய உபாயத்தைச் சிந்திப்பான். மனிதருடைய ஊனக் கண்களுக்குத் தெரியமாட்டான் என்ற நிலையை மாற்றி, அவர்கள் கண்களுக்குப் புலனாகுமாறு யுகங்கள் தோறும் அவதரித்து நன்னெறி காட்டுவான்.

எல்லாப் பொருள்களுக்கும் தந்தையாக இருக்கின்ற பரம்பொருளை விட்டுவிட்டுச் சிறு தெய்வங்களைத் தேடி வழிபட்டு, ஆட்டை அறுத்தல், மகனை அறுத்தல் முதலான தாழ்வான செயல்களைச் செய்து மக்கள் அலைகின்றனர். அதுமட்டுமல்லாது பிறவிக்குக் காரணமாக இருக்கின்ற ஐம்புல இன்பங்களிலே அழுந்திக் கிடக்கின்றனர். தொடர்ந்து பிறந்து வருவதனால் இந்த உடலோடு சம்பந்தப்பட்ட ஏதேனும் ஒரு பொருளில் பற்று வைத்து அதன் காரணமாகப் பகவானை விட்டு அகலுகின்றனர்.

இந்த நிலையை மாற்ற — விலங்கு பிடிப்பார் பார்வை விலங்கை வைத்துப் பிடிப்பது போலே — மக்களை இணக்கமாக்க ஒருவரைப் பகவான் தேடினான். யாரும் அகப்படாமல், தென் தமிழ்நாட்டில், இன்னசாதி இன்னகுலம் என்ற வரையறை இல்லாமல், பிறவிப் பெருங்கடலின் நடுவே இருந்து நடுங்குகிற இவர்மேலே இறைவன் கடாட்சம் பட்டது. அக்கடாட்சம் பட்டவுடன் இறைவன் அக்கம்பக்கம் தன் நாய்ச்சிமார்களிடம் கூடக் கண்ணைச் செலுத்தாதபடி இவரையே நோக்குகின்ற விசேஷ கடாட்சத்தால் நம்மாழ்வார் அவதரித்தார்.

"இதற்கு ஏது,
ஊழி தோறும் சோம்பாது ஒன்றிப் பொருள் என்று
அளிமகிழ்ந்து, முற்றுமாய் நின்று" (சூத். 94)

(இவருடைய இந்தப் பிரபாவத்துக்குக் காரணம் /கல்பந்தோறும் படைத்தும் பயன்பெறாது போனாலும், வருந்தாது, மிகவும் ஒருப்பட்டு, என்றேனும் ஒருநாள் பயன்படும் என்று செய்கையை விரும்பி உலகைப் படைத்து/அவற்றுள் உயிராய் நின்று)

"நூல் உரைத்து, யோகு புணர்ந்து,
கண்காண வந்து, ஆள் பார்க்கிறவன்" (சூத். 94)

(பிரமனுக்குச் சாத்திரத்தை உபதேசித்து, உலகத்தைக் காப்பதற்குரிய உபாயத்தைச் சிந்தித்தவாறே திருப்பாற்கடலில் கண்வளர்ந்து, பல அவதாரங்கள் எடுத்து மனிதர்களுக்குக் காட்சி தந்து, தேடித்திரிகின்றவன்)

"உலகினது இயல்வை நல்வீடு செய்ய,
இணக்குப் பார்வை தேடி, கழல் அலர்
ஞானம் உருவின முழுதும் ஒட்டின பெருங்கண்,
எங்கும் இலக்கு அற்று" (சூத்.94)

(சரீர சம்பந்தப்பட்ட பொருள்களில் யாதாயினும் ஒன்றைப் பற்றிக் கொண்டு தன்னைவிட்டு அகலுவதையே தன்மையாகக் கொண்ட இம்மக்களுடைய எண்ணத்தை நன்றாக விடுவிக்க, வாசனையோடு போக்குவதற்காக, மானை வைத்து மானைப் பிடிப்பார் போல, மலர்ந்த திருவடியும் ஞானமும் உடையவனாய், தன் திருக்கண்களாலே அப்படி ஒரு பொருளைத் தேடிப் பார்க்க எங்கும் காணாமல்)

"அன்பொடு நோக்கான திசையிலே, ஆக்கையில் புக்கு,
உழன்று, மாறிப்படிந்து, துளங்குகிறவர் மேலேபட, பக்கம்
நோக்கு அறப் பண்ணின விசேஷ கடாக்ஷம்" (சூத். 94)

(அன்போடு பார்த்துக் கொண்டு, தென்திசையிலே, ஒரு சரீரத்திலே புகுந்து, அச்சரீரத்தின் வழியே சென்று, தொடர்ந்து வருகின்ற பிறவிகளிலே பிறந்து, இப்பிறவியில் இவர்மேல்பட, ஒரு காரணமும் பற்றாமல் இறைவனால் செய்யப்பட்ட விசேஷ கடாட்சம்)

### விசேஷ கடாட்சத்தின் பெருமை:

நெடுங்காலம் பிறவிகளிலே உழன்று வருபவர்க்குப் பகவானுடைய திருவருட்பார்வை பட்ட அளவிலே, எல்லாப் பாவங்களும் நீங்கி, மேற்கூறிய பெருமை எல்லாம் வருமா?

வேட்டுவிச்சியும், துறந்தவளுமான சபரியின் ஆசிரமத்திற்கு இராமபிரான் தாமாகவே மனமுவந்து செல்ல, அவர் திருக்கண்கள் பட்ட அளவிலே தூயள் ஆனாள்.

விதுரர் வீட்டிற்கும் தானாகவே சென்று கண்ணபெருமான் அமுதுண்ண, அவன் திருக்கண்கள் பட்ட அளவிலே விதுரர் பரிசுத்தமானார்.

பக்த விலோசனத்தில் ரிஷிகளுடைய மனைவிமார்கள் கண்ணபிரான் கடாட்சம் கிடைத்த அளவில் பாவம் நீங்கப் பெற்று முக்தியடைந்தனர்.

பகவானுடைய பார்வை பட்ட அளவிலே எல்லாப் பாவங்களும் அழிந்துபோக, நம்மாழ்வாருக்குத் தடை என்ன?

"சிரமணி, விதுர, ரிஷி பத்னிகளைப் பூதர் ஆக்கின
புண்டரீகாட்சன் நெடுநோக்கு" (சூத்.95)

(சபரி, விதுரர், ரிஷிபத்னிகளைத் தம் திருக்கண்களின் பார்வையாலே தூயர் ஆக்கின தாமரைக் கண்ணன் நெடுநோக்கு)

"சாபம் இழிந்து என்னப் பண்ணுமிறே". (சூத். 95)

(அப்பார்வை பட்ட இடம் குற்றம் அற்றதாகும் என்றபடி சிரமணீ — துறந்தவள்; சபரி;பூதர் ஆக்குதல் — தூயர் ஆக்குதல்)

### விசேஷ கடாட்சம் அருளியது ஏன்?

எந்தவொரு காரணமும் இல்லாமல் பகவான் ஆழ்வாருக்கு விசேஷ கடாட்சம் செய்வானேன்? விசேஷ கடாட்சத்தின் தன்மைதான் என்ன?

நெருஞ்சிமுள்ளாக இருந்த காடு முழுதும் பசுவின் பொருட்டு இனிய புல்லாகும்படி கண்ணபிரான் செய்தார். அது போல தீங்குகளே இருப்பிடமான இவ்வுலகில் ஆழ்வாருக்கு எல்லா நன்மைகளும் தந்து, ஒரே மடையில் பாய்ச்சுமாறு போலப்பாய்ச்ச, தனக்கு உள்ள ஆற்றலை எல்லாம் இவருக்குக் கொடுக்க, அந்த ஆற்றலைப் பெற்ற இவர் உலகத்தார் அனைவரும் தம்மைப்போல பகவானை அனுபவிக்கும்படியாகச் செய்தார்.

"கோவிருத்திக்கு நெருஞ்சியைப் புல்லாக்கினவன்,
ஜகத்ஹிதார்த்தமாக, 'எனக்கே நல்ல அருள்கள்' என்னும்படி
சர்வ சௌகார்த்த பிரசாதத்தை ஒருமடைசெய்து" (சூத். 96)

(பசுக்கூட்டம் மேய்ப்பதற்காக நெருஞ்சிக் காடானது புல்லாகும்படி செய்த சர்வேச்வரன் உலகத்தினுடைய நன்மைக்காக, நான்பிறந்த பல பல பிறவிகளுக்கு எதிரே பிறந்து வந்து எனக்கே தன் அருள்களை எல்லாம் செய்யும்படி, எல்லா உயிர்களிடமும் அன்பினால் செலுத்துகின்ற தன் பேரருளை இவர்பக்கலில் மட்டுமே ஒருமடைப்படுத்தி, கோவிருத்திக்கு — பசுக்களைப் பாதுகாப்பதற்கு. சௌஹார்த்தம் — சிநேகம்: பிரசாதம் — திருவருள்)

"இவரைத் தன்னாக்க, லோகமாகத் தம்மைப்போலே
ஆக்கும்படி ஆனார்". (சூத்.95)

(அறிவின்மைக்கும், ஆற்றல் இன்மைக்கும் எல்லையாயிருக்கிற இவரைத் தன்னோடு ஒத்த ஞான சக்தி உடையராகும்படி செய்ய, இப்படி அவனாலே திருந்தின இவர், தம்மோடு சேர்ந்த உலகத்தில் உள்ளவர்களை எல்லாம் தம்மைப்போலவே பகவானை அனுபவிக்குமவர்களாகப் பண்ணும்படி ஆனார்).

### எப்படிக் கடாட்சித்தார்?

கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகிய மூன்றிலே கர்மயோகமும் ஞானயோகமும் செய்யாமலே நம்மாழ்வார் இறைவனின் கடாட்சத்தால் அறிவின்மை நீங்கி பக்திவடிவம் ஆனார். கர்மயோகம், ஞானயோகத்தின் பலன்கள் இறைவன் கடாட்சத்தால் தந்தருளப்பெற்றன.

### விசேஷ கடாட்சத்தால் என்ன நிகழ்ந்தது?

(1) இருள் என்கிற அறிவு தோன்றாமை (2) துயக்கு என்கிற ஐயம் (அறியவேண்டிய பொருளை இன்னது என்று நிச்சயிக்க முடியாத

சந்தேகம்) (3) மயக்கு என்கிற திரிபுணர்ச்சி (கயிற்றினைப் பாம்பாக நினைத்தல்; (ஒரு பொருளை மற்றொன்றாக நினைத்தல்) (4) நினைவின்மையாகிய மறதி ஆகிய நான்கும் பகவானின் கடாட்சத்தால் நம்மாழ்வார் நீங்கப் பெற்றார்.

**"இருள் துயக்கு மயக்கு மறப்பு**
**என்கிற**
**அநுதய சம்சய விபர்யய விஸ்மிருதிகள் அற்று (சூத். 98)**

இச்சூத்திரத்தில் இருள், துயக்கு, மயக்கு, மறப்பு என்னும் நான்கனையும் அநுதய, சம்சய, விபர்யய, விஸ்மிருதி என்னும் நான்கனோடும் நிரல் நிறையே கூட்டுக.

(இருள் என்கிற அநுதயம்; அநுதயம் — தோன்றாமை. துயக்கு என்கிற சம்சயம்; சம்சயம் — ஐயம். மயக்கு என்கிற விபர்யயம் — ஒன்றனை மற்றொன்றாக நினைக்கும் திரிபு. மறப்பு என்கிற விஸ்மிருதி; விஸ்மிருதி — மறதி)

இறைவனின் கடாட்சம் பெற்றதால் நம்மாழ்வாரின் பேதைமை நீங்கியது; ஐயம் தெளிந்தது; திரிபுணர்ச்சியும் மறதியும் இல்லையாகிவிட்டன.

**காதல், காமம், வேட்கை, அவா; நம்மாழ்வரின் நான்கு நிலைகள்:**

இந்த நான்கும் நீங்கிய பிறகு நம்மாழ்வாருக்கு விளைந்தது என்ன? ஒரு பொருளைப் பார்த்தவுடன் இதன்மேல் ஏற்படுகின்ற ஆவல் காதல்; (காதல் என்னும் சங்கம்) பார்த்த பொருளை அனுபவித்தால் அல்லது முடியாது என்பது காமம்; (அன்பு என்னும் காமம்) அனுபவித்த பொருள்மேல் உள்ள ஆசை இடையீடு இல்லாமல் இருப்பது வேட்கை; (வேட்கை என்னும் அநுராகம்). அப்பொருளை மேலும் மேலும் அனுபவிக்க வேண்டுமே ஒழிய விட்டுப் பிரியக் கூடாது என்ற தவிப்பில் இருப்பது அவா; (அவா என்னும் சிநேகம்)

காதலிற் சிறந்தது காமம்; அதனிற் சிறந்தது வேட்கை; வேட்கையிற் சிறந்தது அவா. இப்படி, படிநிலையில் ஒன்றனை ஒன்று விஞ்சி நிற்கிறது. இறைவன்பால் காதல், காமம், வேட்கை, அவா மிகுந்தவராகப் பரமபக்திநிலையை நம்மாழ்வார் அடைந்தார்.

**"மலர் மிசை எழுகின்ற ஞானத்தை"**
**காதல் அன்பு வேட்கை அவா**
**என்னும்**
**சங்கம் காமம் அநுராகம் சிநேகம் ஆதி**
**அவஸ்தாநாமங்களோடே பரமபக்தி தசை ஆக்குகை.**

காதல், அன்பு, வேட்கை, அவா என்னும் நான்கனையும் சங்க, காம, அநுராக, சிநேகம் என்னும் நான்கனோடும் நிரல் நிறையே கூட்டுக. சங்கம் — மனத்தால் இணைதல்.

பக்தி இருவகைப்படும். உபாசகர் பக்தி கருமத்தாலும் ஞானத்தாலும் இறைவனை அடைவது. பிரபந்நர் பக்தி இறைவனது பணியில் உதவியாக இருப்பது.

**கருமத்தால் இறைவனை அடைதல்:**

பரம யோகிகள், ஆயிரக்கணக்கான பல பிறவிகளிலே, தலைமை விரும்பாமை பற்றுவையாமை நான் செய்கிறேன் என்ற செருக்கு இல்லாமை ஆகிய மூன்று தியாகங்களை இறைவன் பொருட்டாகச் செய்து, தத்துவஞானிகளாய் நற்குலங்களில் பிறப்பர். பகவானை நினைத்து அவன் சம்பந்தமான சொற்களை எழுதுவது, படிப்பது, பிறர் சொல்லக் கேட்பது — இப்படி சாத்திரங்களின் பயிற்சி பெற்ற அந்தப் பரமயோகிகளுககு ஞானம் கிட்டும்.

*"எழுதி வாசித்து தத்துவஜ்ஞராய"* *(சூத். 99)*

**நித்ய, நைமித்திக அனுஷ்டானங்கள் செய்தல்:**

நீராடுதல், சந்தியாவந்தனம் செய்தல், காயத்ரீ ஜெபம செய்தல் — இவை தினமும் செய்யக்கூடிய அனுஷ்டானங்கள்;

தேவபலி, தென்புலத்தார் பலி, பூதபலி, மனிதபலி, பிரமபலி ஆகிய ஐந்து வேள்விகள் செய்தல்; ஓதல், ஓதுவித்தல், யாகம் செய்தல், செய்வித்தல், தானம் கொடுத்தல், தானம் வாங்கல் என்ற ஆறு தொழில்கள் செய்தல் —இவை, ஆவணி அவிட்டம் முதலிய புண்ணிய காலங்களில் செய்யக்கூடிய நைமித்திக அனுஷ்டானங்கள். இவ்விருவகை அனுஷ்டானங்களும் நிரம்பப் பெற்றவராக வேண்டும்.

*"குளித்து ஓதி உரு எண்ணும் அந்தி ஐவேள்வி*
*அறுதொழில்களால் மிக்கு"* *(சூத். 99)*

**தவம் செய்தல்:** நாள்தோறும் செய்ய வேண்டிய கர்மங்களைக் குறைவில்லாமல் செய்து வந்ததனால் தவம் செய்வோர்க்கு வேண்டிய தகுதி வந்துவிடுகின்றது. உணவைக் குறைத்து உயிர் நிலைத்து இருப்பதற்கு மட்டும் போதுமான உணவினை உண்டும் (எடுத்தும்) கோடைக்காலத்தில் மலையின் உச்சியில் நின்றும்; ஐந்து நெருப்பின் (பஞ்சாக்கினி) மத்தியில் நின்றும், மழைக்காலத்தில் குளத்தில் மூழ்கிக் கிடந்தும், இலை, பழம், இவற்றையே உணவாகக் கொண்டும் இப்படி பலவகையாலும் தவஒழுக்கத்தால் உடம்பை வாடச் செய்யவேண்டும்.

*"ஊன் வாடப் பொருப்பிடைத்தாம் வருந்தி"* *(சூத். 99)*

*(பொருப்பு — மலை)*

***பாவங்களை நீக்குதல்:*** ஆன்மாவினை விட்டுப் பிரிக்க முடியாதபடி பொருந்திக் கிடக்கிற துன்பத்திற்குக் காரணமான பாவங்களை நீக்குதல் வேண்டும்.

*"துன்ப வினைகளை விடுத்து"* *(சூத். 99)*

**விவேகம் முதலான பண்புகள் வளர்த்தல்:**

தடையாக இருந்த பாவங்கள் நீங்குகின்றன. இனி மனத்தூய்மைக்குக் காரணமான விவேகம், விமோகம், அப்யாசம், கிரியை, கல்யாணம்,

அநவசாதம், அநுத்தர்ஷம் என்ற ஏழு பண்புகளும் வளரும்.

*(1)* விவேகமாவது சரீரத்தின் தூய்மை, இது குற்றம்இல்லாத உணவு உண்பதனால் வரும் உடல் தூய்மை. சாதிக்குற்றம், ஆச்ரயக் குற்றம், நிமித்தக்குற்றம் என்ற மூவகைக் குற்றங்கள் உணவு உண்ணுவதில் வரும்.

சாதிக்குற்றம் — வெங்காயம், காளான் முதலான. ஆச்ரயக் குற்றம் — பிறரால் இகழப்பட்டவன், தன்நிலையினின்றும் இழிந்தவன், சண்டாளன் ஆகியோர் தரும் உணவுப் பொருள்கள். நிமித்தக்குற்றம் — எச்சில், மயிர், கல் ஆகியவற்றோடு கூடிய உணவுப் பொருள். இந்த மூன்று வகைக் குற்றங்களும் இல்லாத உணவை உண்டால், தன்னுடைய உடம்பின் வேறுபாட்டினை அறியும் அறிவு பெறலாம்.

*(2)* தான்விரும்பிய பொருளை அனுபவியாது இருக்கமாட்டேன் என்ற மனவிகாரம் இல்லாமல் இருப்பது விமோகம்.

*(3)* தியானத்திற்குப் பற்றுக்கோடான பொருளில் பலகாலும் சோதனை செய்தல் அப்யாசம்.

*(4)* ஐந்து வேள்விகள் முதலான நித்யகர்மங்களைச் செய்வது கிரியை.

*(5)* சத்யம், ஆர்ஜவம், தயை, தானம், அகிம்சை, அநபித்யை ஆகிய இவை கல்யாணம் ஆகும். சத்யமாவது உயிர்கட்கு நலம் செய்தல்; ஆர்ஜவமாவது, மனம் வாக்கு, காயம் மூன்றும் ஒருபடியாய்த் தூய்மையில் இருத்தல். தயையாவது, தனக்கு என்று ஒரு பயனையும் கருதாததோடு பிறர் துக்கம் பொறாமை, தானமாவது உலோபம் இன்மை. அகிம்சையாவது முக்காரணங்களாலும் பிற உயிர்களைத் துன்புறுத்தாமை; அநபித்யையாவது, அபித்யை இல்லாமை. அபித்யையாவது. பிறர் பொருளைத் தன் பொருளாகக் கருதுதல், பயன் இல்லாத சிந்தனை, பிறர் செய்த அபகாரத்தை நினைத்தல் என்பன.

*(6)* அநவசாதமாவது அவசாதம் இன்மை. அவசாதமாவது, சோகத்திற்குக் காரணமாயும் அச்சத்திற்குக் காரணமாயும் இருக்கிற பொருள்களில் இடையீடு இல்லாமல் சிந்தனை செய்தல் ஆகும்.

*(7)* அநுத்தர்ஷமாவது, உத்தர்ஷம் இல்லாமை. உத்தர்ஷமாவது, பிரியமான பொருள்களில் வைக்கின்ற இடையறாத மகிழ்ச்சி.

**அகப் புறக் கருவிகளை அடக்குதல்:**

இந்த ஏழு குணங்கள் வளர்வதோடு, அகக் கருவிகளை அடக்குதல், புறக்கருவிகளை அடக்குதலுமாகிய பண்புகளும் வளரும்.

**"விவேக ஆதிகள் சமஆதிகள் வளர"** **(சூத். 99)**

(விவேக ஆதிகள் — விவேகம் முதலான ஏழு பண்புகள். சமஆதிகள் — சமம் (அகக் கருவிகளை அடக்குதல்) தமம் (புறக்கருவிகளை அடக்குதல்) முதலியன.

**எட்டு தீக்குணங்களைப் போக்குதல்:**

ஆன்மாவிற்குத் தீங்கினை விளைவிப்பனவான காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், அஞ்ஞானம், அசூயை ஆகிய எட்டினையும் போக்கவேண்டும்.

"எட்டும் நீக்கி" *(சூத்.99)*

**எட்டு மலர்களை இடுதல்:**

திருவெட்டெழுத்து மந்திரத்தை எட்டுமலராகப் பாவித்துப் பகவானுக்கு இட வேண்டும்.

பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாது இருப்பது முதல்மலர்; ஐம்புலன்களை அடக்குவது இரண்டாவது மலர்; அருள் உள்ளவனாக இருத்தல் மூன்றாவது மலர். நான்காவது மலர் பொறுமை; ஐந்தாவது ஞானம்; ஆறாவது தவம்; ஏழாவது தியானம்; எட்டாவது வாய்மை. இந்த எட்டுமலர்களையும் இறைவனுக்கு இடவேண்டும்.

"எட்டும் இட்டு"

**வழிபாடு செய்தல்:**

இறைவனுக்கு அட்டாங்க நமஸ்காரம் செய்து, பூவொடு சாந்துகொண்டு வழிபாடு செய்தல் வேண்டும். இரண்டு கால்கள், இரண்டு கைகள் தலை இவற்றோடு மனம், புத்தி, அகங்காரத்தையும் இணைத்துத் தரையில் விழுந்து வணங்குதல் அட்டாங்க வணக்கம் ஆகும். பலனை விரும்பாமை, பற்று வையாமை, நாம் செய்கிறோம் என்ற செருக்கு இல்லாமை என்ற மூன்று விதமான தியாகங்கள் செய்து மனம் தூயராதல் வேண்டும்.

"எட்டினாய பேதப் பூவில் சாந்தொடு
தேவகார்யம் செய்து உள்ளம் தூயராய்" *(சூத்.99)*

இதுவரை கர்ம மார்க்கம் கூறப்பட்டது. இனி ஞான மார்க்கம் கூறப்படுகிறது.

**புலன் நுகர்ச்சியைத் தவிர்த்தல்:**

மதம் பிடித்த யானைகளைத் தண்ணீரில் அமுக்குவது போல, ஐம்பொறிகளும் புலன் நுகர்ச்சியை நாடிப் போக ஒட்டாது அவற்றின் சொரூபத்தை குறைத்து, அவை தேடிப் போகின்ற வழியையும் அடைத்தல் வேண்டும். அறியாமை, செருக்கு, ஆசை, துவேஷம், அபிமானம் என்னும் ஐவகைத் தீக்குணங்களையும் தவிர்க்கவேண்டும்.

**ஞானம்:** தன் மூக்கின் நுனியையே பார்த்து, இந்திரியங்களை அகமுகமாகப் பார்க்கச் செய்து, பகவானிடத்தில் அன்பை வைத்து இடைவிடாமல் நினைத்து, ஞானத்தால் ஆன்ம சொரூபத்தை அறியவேண்டும்.

"வாரிப் புன்புல அகத்தினுள் இளைப்பினை
அடைவே விளக்கினைக் கண்டு". (சூத்.99)

**யோகநிலை:** இப்படியே யோகமாகிற உபாயத்தினாலே இறைவனை அடைய வேண்டும் இப்படிச் செய்த பிறகு தூய்மை பொருந்திய மனத்தை உடைய யோகிகள் மனத்தில் இருப்பான் சர்வேச்வரன். இது யோகநிலை.

"யோக நீதி நண்ணி" (சூத்.99)

**தியானம்:** அடுத்துச் சர்வேச்வரனுடைய விக்கிரகத்தை — திருஉருவஅழகு, அணிஅழகு ஆயுதஅழகு — இவற்றைத் தியானம் செய்யவேண்டும். இந்தத் தியானத்தை எப்பொழுதும் இடையீடு படாமலும், மறக்காமலும் தொடர்ந்து செய்தல் வேண்டும் இந்த அனுபவம் மிகமிக, இறைவனை நேராகக் கண்கூடாகப் பார்க்கின்ற அனுபவம் கிட்டும்.

"கண்கள் சிவந்தில் படியே மன உட்கொண்டு
நிரந்தரம் மறவாமை தொடக்கு அறாஸ்மிருதியாய்
கனவில் மிக்க தர்சன சமமாய்". (சூத்.99)

(கண்கள் சிவந்து என்ற திருவாய் மொழிப் படியே — இறைவன் திருஉருவ அழகைத் தியானித்தல்; கனவில் மிக்க தர்சன சமமாய் — அந்த நினைவு நேரே கண்கூடாகக் காண்பது போன்றதாய்)

### இறைவன் உகப்புக்குச் செய்யும் பக்தி:

இறைவனுடைய கல்யாண குணங்களை அனுபவிப்பதிலே அப்படியே கரைந்து போக வேண்டும். இந்த எல்லையற்ற இன்பத்தை விட்டுவிட்டு உலக இன்பத்திலே உழல்பவர்கள் உழலட்டும். செல்வம் — ஆன்ம அனுபவம் — வீடு பேறு — இறைவனுக்குக் கைங்கரியம் செய்தல் — இவற்றையெல்லாம் தாண்டியது எதனையும் விரும்பாமல் அவன் திருவருளுக்கு இலக்காக வேண்டும் என்ற ஏகாக்கிர சிந்தனையோடு இருக்கவேண்டும். இது கர்மம் ஞானம் இவற்றை அடிப்படையாகக் கொண்ட பக்தி அன்று; யோகத்தைக் கொண்டு செய்கிற பக்தி அன்று; கைங்கரிய பக்தியும் அன்று. அவன் உகப்புக்குச் செய்கின்ற பக்தி; எந்தப் பலனும் எதிர்பாராமல் எப்பொழுதும் இடைவிடாது செய்யும்பக்தி. ஏன் இந்தப்பக்தி செய்கிறான்? அவனால் பக்தி செய்யாமல் இருக்கமுடியாது. இது இறைவனை அடைதற்குச் செய்யும் சாதனபக்தி அன்று. இங்கு பக்தி செய்வது மட்டுமே நோக்கம். இது சுயம்பிரயோசன பக்தி.

### சாதன, சாத்திய பக்தி:

பக்தி, சாதன பக்தி சாத்திய பக்தி என இருவகைப்படும் பேற்றினைப் பெறுவதற்கு வழியாக இருக்கும் பக்தி சாதன பக்தி. அஞ்ஞானம் இல்லாது பக்தியே பேறாக இருப்பது சாத்திய பக்தி. ஆழ்வார்கள் காட்டும் பக்தி சாதன பக்தியும் அன்று; சாத்திய பக்தியும் அன்று.

"உபயமும் அன்றிக்கே" (சூத். 101)

(சாதன பக்தி சாத்தியபக்தி இரண்டும் அன்றிக்கே; உபயம் — இரண்டு)

**இயல்பான பக்தி:**

திருத்துழாய்க்கு மணம் இயல்பிலே உள்ளது. அதுபோலப் பக்தியானது ஆழ்வார்க்குப் பிறப்பின் இயல்பிலே உள்ளது. பக்தி செய்யாவிட்டால் அதுவே நோயாகிவிடும். இவருக்கு இன்பத்தைத் தருவதும் இப்பக்திதான்; தொண்டு செய்ய உதவியாக இருப்பதும் இந்த பக்திதான்.

**ஆழ்வார் முயற்சி இல்லாது விளைந்த பக்தி:**

இந்தப் பக்தி இவருக்கு எப்படி வந்தது? கர்மம், ஞானம், பக்தி என்ற மூன்று வழிவகைகளையும் ஆழ்வார் இப்பிறவியில் மேற்கொண்டு இந்தப் பரமபக்தியைப் பெறவில்லை. சென்ற பிறவியிலும் இப்பயிற்சி அவர் செய்யவில்லை. *(சூத்.102)*

இந்தப் பரமபக்தி பெறத் தாம் ஏதும் முயற்சி செய்யவில்லை என்று நம்மாழ்வாரே அருளிச் செய்கின்றார்.

"இடகிலேன் ஒன்று அட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன் கடவனாகிக்
காலம்தோறும் பூப்பறித்து ஏத்தகில்லேன்" *(திரு.4.7:9)*

இடகிலேன் — பசி உடையார்க்கு ஒருபிடிச் சோற்றை இட்டேன் அல்லேன்; அட்டகிலலேன் — தாகம் உடையார்க்கு ஒரு மிடறு தண்ணீர் வார்த்தேன் அல்லேன்; ஐம்புலன் வெல்லகில்லேன்— இந்திரியங்களை அடக்கினேன் அல்லேன்; பூப்பறித்து ஏத்தகில்லேன் — மலர் பறித்து வழிபட்டேன் அல்லேன்)

பசித்து வந்தார்க்கு சோற்றினை இடுதலும், நீர்வேட்கை கொண்டவர்க்குத் தண்ணீர் வார்த்தலும் தானம் ஆகும். இது கர்மயோகத்தில் அடங்கும். இதனைத் தாம் செய்யவில்லை என்கிறார் நம்மாழ்வார்.

இந்திரியங்கள் விஷயங்களில் போகாதபடி அடக்கினால் அது ஞானயோகம். அதனையும் தாம் செய்யவில்லை என்கிறார்.

மலர் முதலான துணைப் பொருள்களைச் சேகரித்து ஆராதித்துத் துதித்தல் பக்தியோகத்தில் அடங்கும். இதுவும் நம்மாழ்வார் செய்யவில்லை.

"நோற்ற நோன்புஇலேன் நுண்ணறிவிலேன்" *(திரு.5.7:1)*

நோற்ற நோன்பு இலேன் — செய்த கர்மயோகத்தை உடையேன் அல்லேன்; நுண்ணறிவிலேன் — ஞானயோகத்தை உடையேன் அல்லேன்.

இப்படி அவரே சொல்வதனால் இந்தப் பிறவியிலே நம்மாழ்வார் கர்மம், ஞானம், பக்தி என்ற மூன்று வகையான சாதனங்களையும் செய்யவில்லை என்று ஆகிறது.

**"இடகில்லேன்**
**நோன்பு அறிவிலேன் என்கையாலும்**
**சாதன த்ரய ஜம் அல்ல"** **(சூத். 102)**

*(சாதன த்ரயம் — கர்மம், ஞானம், பக்தி என்னும் மூன்று சாதனங்கள்)*

"கிற்பன் கில்லேன் என்றிலன் முனநாளால்" (திரு. 3.2.6)

"முன்பு உள்ள நாள்களில் செய்யத்தக்கனவற்றை செய்தேன் இல்லை.

தீமை செய்யலாகாது என்பதனை நான் தவிர்க்க கில்லேன்" இப்படியே வாழ்நாள்கள் வீணாக்கினேன்" என்கிறார். இந்தப்பரமபக்தி முற்பிறவிகளின் பயிற்சியாலும் உண்டாகவில்லை.

"கிற்பன் கீழ்நாள்கள் என்கையாலே பூர்வ
அப்யாச ஜம் அல்ல" (சூத்.103)

(பூர்வம் — முன்பு; அப்யாஸ ஜம் — செய்து போந்தவற்றால் உண்டாவது, ஜம் — உண்டாவது.

இந்தப் பரம பக்தி ஆழ்வார்க்கு இந்தப்பிறப்பிலே ஒரு முயற்சியும் இல்லாமல் இறைவன் அருளால் சில நாள்களிலே வந்தது.

**மனம் எனும் வயல்:**

இவர்க்கு இந்தப் பக்தி உண்டாகக் காரணம் என்ன?

இந்த மூலப் பிரகிருதியில் ஆன்மா கட்டுப்பட்டு இருக்கின்றது. ஆன்மாவிற்கே உரியதான மனம் பக்திக்கு விளைநிலம் ஆகும். ஆனால் இக்கலிகாலத்தில் ஐம்பொறிகளாகிய பகைவர்கள் ஆன்மாவைத் தமக்கே உரியதாக்கி ஆட்டிப் படைக்கின்றனர்.

"பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெரும் செய்
கலியார் ஏவ
ஆளும் வன்குறும்கர் குடி ஏறி" (சூத். 104)

(பெரும்பாழ் — மூலப் பிரகிருதி; க்ஷேத்ரஜ்ஞன் — ஆன்மா; பெரும் செய் — மனமாகிற வயல். கலி — கலியுகம்; வன்குறும்பர் — பகைவர்; இங்கு ஐம்பொறிகள்)

**ஐம்புலன்களால் படும் துன்பம்:**

இந்த ஐம்பொறிகளும் தமக்கு விருப்பமானவற்றை "தா" என்று மனத்தைத் துன்பப்படுத்துகின்றன. உடம்பாகிய செக்கில் இட்டுச் சுழற்றுகின்றன. கரை ஏற முடியாதபடி படுகுழியிலே தள்ளப் பண்ணுகின்றன. நான்கு திசைகளிலும் பிடித்து இழுக்கின்றன. ஐம்பொறிகளின் இன்பத்தையும் தீர்த்து வைப்பதுதான் தன் கடமை என்றாகும்படி மனத்தைப் பண்ணிவிடுகின்றன. படைத்த இறைவனைச் சிந்திக்க ஒட்டாமல் செய்துவிடுகின்றன.

"குமைத்துத், திரித்து, வீழ்த்து, வலித்து, எற்றி,
அருவி, அறுத்துக்கடன் ஆயின இறுப்பிக்க,
பாழ்த்த விதியான வாறே" (சூத்.104)

**வினையாகிய தூறுகளை அறுத்தல்:**

ஐம்பொறிகள் வசப்பட்ட மனத்தைத் தன்பக்கம் ஈர்க்க மனத்தில் ஆண்டவன் தங்கி இருந்தான். அருளாகிய வாளை எடுத்து வினையாகிய

தூறுகளைச் சல்லிவேர், ஆணிவேர் இல்லாமல் அடியோடு வெட்டி அறுத்துத் தீயிட்டுச் சாம்பலாக்கினான். 'இப்பொழுது மனமாகிய வயல் பதமாக வந்துவிட்டது'.

"தன்பால் மனம்வைப்பிப்பதாக,
தேய்ந்து அறமன்னி, ஒள்வாள் உருவி,
வினைத்தூற்றை வேர் அறுவித்துத் தீக்கொளீ இக்.. *(சூத்.104)*

**பழிச்சொல்லாகிய எரு:**

இவன் பகவானைத் தொழ ஆரம்பித்தவுடன் "இவன் பாகவதன் ஆகி விட்டான்" என்று ஊரார் பழி சொல்ல ஆரம்பிப்பர். இந்தப் பழிச்சொல்லே உரம் ஆகும்.

"கவ்வை எருஇட்டு" *(சூத்.104)*

**ஞானவெள்ளம்:**

அன்பு விளையும்படியாக நெஞ்சிலே ஆண்டவன் ஞானவெள்ளத்தைப் பாய்ச்சுகிறான். தன்னுடைய சம்பந்தம் என்கிற விதையை விதைக்கிறான்.

"நான் பக்தி செய்கிறேன், நான் தொண்டு செய்கிறேன்" என்ற ஆணவமாகிய களையை ஊசிவேரோடு பறிக்கிறான்.

"அமுத ஆறு தலைப்பற்றி,
ஈரநெல் வித்தி,
களையையும் வேர்முதல் மாய்த்து" *(சூத்.104)*

**பயிரைக்காத்தல்:**

களையைப் பறித்தால் மட்டும் போதுமா? ஐம்பொறிகளாகிய மாடு இறைவனிடம் மனம் வைக்காமல் உலக ஆசைகளில் ஈடுபட்டுக் கெடுத்துவிடுமே. அதனையும் அடக்க வேண்டும். பயிர் வளர்ந்த பிறகு இரவில் திரிகின்றவர்கள் கொள்ளை அடிக்க நேரிடும். இறைப்பற்று இல்லாதவர்கள் நண்பர்கள் போலக் கூடவே இருந்து இறைச்சிந்தனைக்குச் செல்லவிடாமல் கெடுக்கவும் கூடும். அதற்கு இடம் கொடுக்காமல் காக்கவேண்டும்.

"பட்டிச் சேவை அதக்கி,
மீது கொள்ளாமல்
குறிக்கொள்வித்து" *(சூத்.104)*

(பட்டிச்சேவை — பட்டியான இந்திரியங்களாகிற மாடுகள்;)

**வடிவழகாகிய மழை:**

எருவும் நீரும் இருந்தால் மட்டும் போதாது. மேல் மழை வேண்டும். காளமேகம் போன்ற எம்பெருமானுடைய வடிவழகாகிய மழை பொழிகிறது. பக்தியாகிய பயிர் கடல்போல் அளவிடுதற்கு அரிதாக

முற்றித் தான் எனும் தன்முனைப்பு இல்லாமல் தலைவணங்கி நிற்கிறது.

*"கடல் புரைய விளைந்து தலைவணக்கிய வாறே" (சூத்.104)*

### ஆழ்வாரை அனுபவிப்பதில் எம்பெருமான் ஆர்வம்:

பயிர் வளருவதை உழவன் தினமும் பார்த்து மகிழ்வான். அதுபோல எம்பெருமான் ஆழ்வாரின் பக்தியை நாளும் அனுபவிக்கிறான். இப்படிப் பகவான் அனுபவிப்பது உடன் உறையும் பிராட்டி, கருடன், ஆதிசேடன் ஆகியோர் கூட அறிய மாட்டார்கள். பெரும் பசியுள்ளவர்கள் விளைந்த நெல்லை ஒருசேர அறுத்துப் பக்குவப்படுத்தி சமைக்கும் அளவுக்கும் காத்திருக்க மாட்டார்கள். விளைந்த நெல்லை வயல்காட்டிலேயே பறித்துக் கசக்கி வாயில் போட்டு மெல்லுவார்கள். அதுபோல உலக வாழ்விலே கட்டுப்பட்டிருந்த ஆன்மா விடுபட்டு முக்தன் ஆனவுடனேயே, பகவான், ஆவலினால் உந்தப்பட்டுத் தன்னிடம் வந்து சேரும் அளவு காத்திராமல் இந்த உடம்பு இருக்கும் பொழுதே ஆழ்வாரின் பக்தியை அனுபவிப்பான்.

*"நாளு நாள் கோட்குறையாக,*
*நின்றார் அறியாமல் குந்தம்*
*கொண்டு ஆராமை உண்டு" (சூத்.104)*

(நின்றார் — பிராட்டி, கருடன், ஆதிசேடன்; குந்தம் கொண்டு — கதிர்நெல்லை உருவி உள்ளங்கைகளுக்கு இடையே வைத்துத் தேய்த்து உமிபோக்கி அங்கேயே உண்ணுவது.

### பதராகிய கைவல்ய இன்பத்தையும் அறுத்தல்:

நெல் முற்றிப் பக்குவம் வந்து விட்டால் உடனே அறுத்து விட வேண்டும். அதுபோல ஆன்மா பக்குவப்பட்டுவிட்டால் இந்தப் பூமியில் இருக்கக்கூடாது. எனவே எம்பெருமான் பேற்றிற்குத்தடையான கர்மங்களை அறுக்கிறான்.

அறுத்த நெற்கதிர்களைத் தடியாலே அடித்துப் பதரும், மணியும் பிரிக்குமாறு போல, அருளாகிய கருவியால் நெல்லோடு சேர்ந்து இருக்கும் ஆன்ம அனுபவமாகிய கைவல்ய இன்பத்தை எம்பெருமான் அறுத்து எறிகிறான்.

*"காலக் கழிவாலே நிலத்து உகாமல்,*
*பற்று அறுத்துத்*
*தண்டால் அடித்துப் பதர் அறுத்து" (சூத்.104)*

### உமியாகிய தூல சரீரம் விடுபடல்:

நெல்லிலிருந்து உமியை விடுவிப்பது போல, மனநோய்க்கும், உடல்நோய்க்கும் காரணமான தூல சரீரத்தை முதலில் விடுவிக்கிறான்.

*"போர்த்த தோல் விடுத்து" (சூத்.104)*

**தவிடாகிய சூக்கும சரீரம் விடுபடல்:**

அரிசியைத் தவிடு போக்கக் கழுவுவது போலத் தூல சரீரம் கழிந்தாலும் தான் கழியாத சூக்கும சரீரத்தையும் விடுவிக்கிறான்.

சூட்சும ஒட்டும் நீரிலே கழுவி" *(சூத்.104)*

**ஞானசொரூபமான சரீரம் பெறுதல்:**

சூட்சும சரீரமும் விடுபட்ட பிறகு பிரகிருதி சம்பந்தம் இல்லாத ஞான சொரூபமான சரீரத்தில் புகுவிக்கிறான்.

"வேறு ஓர்கலத்திட்டு" *(சூத்.104)*

**பகவானுக்கே அடிசில் ஆதல்:**

பகவானுக்கே உரிய ஞானம் முதலான குணங்களையுமம இவன் பெற்றுப் பகவானுக்கே அடிசிலாம் தன்மை பெறுகின்றான்.

"ஷட்குண ரச அன்னமாக்கி" *(சூத்.104)*

**எம்பெருமானாகிய உழவன்:**

இப்படி பகவான் உழவனாம் தன்மை கொண்டு தன் திருவடிகளை உயிர்கள் எளிதில் பெறப் பகவானே செய்த முயற்சிதான் இப்பக்தியே ஒழிய, ஆழ்வார் யாது ஒரு முயற்சியும் செய்யவில்லை.

"உழுவது ஓர் நாஞ்சில் கொண்டு
பெருகமுயலும் பக்தி உழவன்
கிருஷி பலமிறே" *(சூத். 104)*

**ஒரு காரணமும் இல்லாமல் கோசலத்திலும் கோகுலத்திலும் அருள் பாலித்தமை:**

இப்படி ஒரு காரணமும் பற்றாமல் ஆழ்வார்க்குப் பகவான் செய்வாரா? கோசலத்தில் எல்லா உயிர்களும் மோட்சத்தை அடைந்தன. கோகுலத்தில் பெண்கள்போல அறிவற்றமரங்களும் கண்ணன்பால் அன்பு பூண்டன. கோசலத்திலும் கோகுலத்திலும் பகவான் ஒருபற்றும் இல்லாமல் உயிர்களுக்கு அங்கீகாரம் செய்து இருக்கிறான். அதுபோல ஆழ்வாருடைய பக்தியும் யாதொரு காரணமும் பற்றாத பகவானின் செயல் ஆகும்.

"கோசல கோகுல சராசரம் செய்யும் குணம்
ஒன்றின்றியே அற்புதம் என்னக் கண்டோம்" *(சூத். 105)*

**ஆராயாமல் செய்யும் பட்டத்து யானையும், அரசனும்:**

பகவான் இப்படிச் செய்யலாமா? அரசன் இல்லாத தேசத்தில் கண்கள் கட்டப்பட்ட யானை யாரோ ஒருவன் கழுத்தில் மாலையிட்டு அவனை அரசனாக்குகிறது. அவன் கழுத்தில் யானை ஏன் மாலை

போட்டது என்று கேட்க முடியாது. மேலும் அரசன் தனக்குத் தேவிமார்கள் பலர் இருக்க, அவன் செல்லும் வழியில் மேலும் ஒரு பெண் அழகாய் இருக்க, அவளைத்தன் மனைவியாக ஆக்கிக்கொண்டால் அதற்கும் காரணம் கேட்க முடியாது. இறைவன் சுதந்திரமானவன். "இதனை ஏன் செய்தாய்? இதனை ஏன் செய்யவில்லை" என்று அவனைக் கேட்க முடியாது.

*"பட்டத்துக்குரிய ஆனையும் அரசும்*
*செய்யுமவை ஆராயாது"* *(சூத். 106)*

*அறியாமல் செய்த புண்ணியமா?:*

*சரி இறைவன் இவரை, அங்கீகரிக்க இவர் அறிந்து செய்த புண்ணியங்கள் இல்லாமல் இருக்கலாம். இவர் அறியாமல் புண்ணியங்கள் செய்து இருக்கலாம் அல்லவா?*

சூது ஆடுவதற்கு ஒருவன் திண்ணை கட்டியுள்ளான். மழையில் நனைந்த அடியார் அங்கு ஒதுங்கித் தங்குகிறார். 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைத்தந்தான்" என்பது எதிர்பாரா வழியாக வரும் புண்ணியம். இது யாத்ருச்சிகம்.

திருடன் ஒருவன் திருடிக்கொண்டுவந்து "இது திருவரங்கத்து அரிசி" என்று கூவி விற்கிறான். அது காரணமாக திருவரங்கம் என்று பகவான் வாழும் தலத்தையும் 'அரி'சி என்று அவன் திருநாமத்தையும் சொல்கிறான். திருடன் நினைந்து சொல்லாத ஒன்றினைப் பகவான் சிறப்பாகத் தனக்கே என ஏற்கிறான். இதுபிராசங்கிகம்.

**ஆழ்வாரின் பக்தியனுபவம் இறைவன் செயலே:**

இறைவனை அடைதற்காகத் தரப்பட்ட உடம்பு நடத்துகிற வழியே சென்றேன் என்கிறார் ஆழ்வார். படைப்பு நாள் தொட்டு இது நாள்வரை செல்வம் ஒரு படித்தாய் இல்லை என்றும் செல்வம் நிலையற்றது என்றும் சொல்கிறார். நித்யசூரிகள் எல்லாம் வழிபடும் இறைவன் ஆய்ப்பாடியில் தானே வந்து அவதரித்தான் என்றும் இராமகிருஷ்ணாவதாரங்களில் அவன் செய்த செயலுக்குத்தாம் உதவியாக இல்லையே என்றும், பத்து அவதாரங்களையும் மாறுசாறுபவத்தில் தமக்குக் காட்டியருளியதையும் மற்றவர்க்கெல்லாம் கிடைக்காத இத்தனையும் ஆழ்வார் சொல்கிறார். அனுபவங்களையும் இவர் பரிபூரணமாக அனுபவித்திருக்கிறாரே! இவையெல்லாம் இவர் உழைத்தா பெற்றார்? எங்கேயாவது ஓரிடத்திலாவது தான் தெரியாமல் செய்த புண்ணியத்தின் விளைவு என்றாவது கூறியிருக்கின்றாரா? என்றால் அதுவும் இல்லை. இவையெல்லாம் பகவான் அருட்செயலால் நடைபெற்றவையே.

**வெறுப்பின்மையும் தீமனம் இல்லாமையும் அவன் அருளே:**

ஆழ்வாரை இறைவன் அங்கீகரிக்கக் காரணமாக இவராக ஏதும் நல்வினை செய்யவில்லை. சரி இறைவன் வருவதை வெறுப்பு இல்லாமல் தடுக்காமல் இருக்கிறாரே (அத்வேஷம் வெறுப்பின்மை; இறைவன் அருள்வதைத் தடுக்காது இருத்தல்) அதுவோ அல்லது அவனுக்கு எதிர்முகமாகத் தீமனம் இல்லாமல் இருக்கிறாரே (ஆபிமுக்யம் — எதிர்முகமாதல்) அதுவோ — இந்த இரண்டும் ஆழ்வாரது நல்வினையால் வந்து இருக்குமா என்றால் அதுவும் இல்லை. வெறுப்பின்மையாகிய அத்வேஷமும் தீமனம் இல்லாத ஆபிமுக்யமும் கூட இறைவன் அருளியவே தவிர ஆழ்வார் செயல் அல்ல. இதனை ஆழ்வாரே சொல்கின்றார்,

**"வாட்டாற்றாற்கு எந்நன்றி செய்தேனா என்நெஞ்சில் திகழ்வதுவே"** *(திரு.10.6.8)*

"நாம் ஏதும் நல்வினை செய்தோமோ?" என்று தேடிக் காணவில்லையே எனத்தவிக்கிறார்.

**"என்னைத் தீமனம் கெடுத்தாய்"** *(திரு.2.7:8)*

தம் தீமனத்தைக் கெடுத்ததும் அவனே என உணருகிறார்.

**செய்த நன்றி தேடிக் காணாதே கெடுத்தாய் தந்தாய் என்ற**
**அத்வேஷ ஆபிமுக்யங்களும் சத்கர்மத்தால் அல்ல** ***(சூத்.108)***

(அத்வேஷம் — வெறுப்பின்மை; ஆபிமுக்யம் — எதிர்முகமாதல்; தீமனமற்று இருத்தல்.

இவர் பகவானைத் தியானம் செய்தாவது இந்தப் பலனைப் பெற்றாரா என்றால் அதுவும் இல்லை.

**"எண்ணிலும் வரும் கணனைக்கு எண்தானும் இல்லை"** ***(சூத்.109)***

கணனை — எண்ணுதல்.

சரி இவர் இறைவனை விரும்பினாரா? அல்லது ஆட்கொள்ள அனுமதித்தாரா என்றால் அதுவும் இல்லை.

**"மதியால் இசைந்தோம் என்னும் அநுமதி இச்சைகள்**
**இருத்துவம் என்னாத என்னை**
**இசைவித்த என் இசைவினது"** ***(சூத்.110)***

பின் இவர் "மாதவன்" "திருமாலிருஞ்சோலை" என்ற திருநாமம், திருமலை என்றெல்லாம் சொன்னாரே என்றால் அவற்றை ஏதோ சொல்லவேண்டுமே என்பதற்காகச் சொன்னாரே ஒழிய ஒருபலன் கருதிச் சொன்னார் இல்லை.

**"மாதவன் மலை நீர் நிழல் என்று ஏறிடுமது, வியாவிருத்தியுக்தி,**
**அந்யார்த்தம், அபுத்தி பூர்வகம், அவிஹிதம், பலவிசத்ருசம்,**
**பலாந்தர ஹேது"** ***(சூத்.111)***

(வியாவிருத்தி யுக்தி — வேறுபாட்டினை அறிவிக்கும் சொல்; அந்யார்த்தம் — வேறு ஒன்றன் பொருட்டு; அபுத்தி பூர்வகம் — நினைவின்றிக்கே சொல்லல்; அவிஹிதம் — சாஸ்திரங்களால் விதிக்கப்படாதவை; பல விஸத்ருசம் — பலனுக்கு ஒத்ததாகாதவை; பலாந்தர ஹேது — வேறு சிறிய பலன்களுக்குக் காரணமானவை)

*ஆழ்வார் அடியவராவது எப்படி?*

இவரை இப்படி ஒரு காரணமும் இல்லாமல் அங்கீகரிப்பான் ஏன்? பகவான் நாதன்; தலைவன். எனவே இவரை அடியவன் என்று இவர் மடியைப் பிடித்தான். "நான் சுதந்திரன். உனக்கு நான் எப்படி அடிமை" என்று திரும்பிக்கேட்டார் ஆழ்வார்.

*பகவான்:* வேதம்தான் எல்லாவற்றிற்கும் பிரமாணம். நீ எனக்கு அடிமை என்கிறது வேதம்.

*ஆழ்வார்:* வேதம் எழுதப்படாத ஒன்று. சான்று யார்?

*பகவான்:* தத்துவங்களை உள்ளவாறு உணர்ந்த ஞானிகளே சான்று.

*ஆழ்வார்:* ஞானிகள் பக்ஷபாதிகள்; உன்பக்கமே பேசுவர்.

இப்படி வாதிட்ட ஆழ்வார்க்கு இந்திரஜாலம் போலத் தனது வடிவழகையும் சீலத்தையும் பகவான் காட்டி, இவர் "என்னது" என்றிருந்த ஆன்மாவினைத் தன்னதாக்கிக் கொண்டான் இறைவனுடைய கருணையே பரிபூரணமாக ஆழ்வாரை ஆட்படுத்தியது.

*"இவன் நடுவே அடியான் என்று, ஓலைப்படாப் பிரமாணம்,*
*பக்ஷபாதி சாக்ஷி, வன்களவில் அநுபவமாக, இந்திர ஞாலங்கள்*
*காட்டி கொள்ள காப்பார்அற்று விதி சூழ்ந்தது" (சூத்.112)*

(இவன் — சர்வேச்வரன்; ஓலைப்படாப் பிரமாணம்— வேதம்; சாட்சி — பட்சபாதி, என மாற்றுக)

*இத்தனைக்காலமும் இல்லாது இன்று அருளியது ஏன்?*

அதெல்லாம் சரி. இத்துணைக்காலம் இந்தவிதமான அருள் இவ்வுயிர் விஷயத்தில் பெருகாமல் இன்று பெருகுவானேன்? அது அவர் நல்வினைதானே என்றால் அதுவும் அப்படிஇல்லை இவருடைய அனுபவத்திற்கு மூலம் பகவானாகிய புண்ணியமே தவிர வேறு இல்லை என்க.

*"வரலாறு — இல்லை — வெறிதே என்று*
*அறுதியிட்டபின் 'வாழ்முதல்' என்கிற*
*சுக்ருதம் ஒழியக் கற்பிக்கலாவது இல்லை (சூத்.113)*

(வாழ்முதல் — வாழ்விற்கு முதலாக நிற்பவன்; இறைவன், சுக்ருதம் — புண்ணியம்.

*பேற்றிற்கும் காரணம் அருளே:*

ஆழ்வாருடைய பக்திக்குக் காரணம் இறைவன் அருள்; சரி. இவருடைய பேற்றிற்குக் காரணம் தான் என்ன? இறைவன் ஆட்கொளளும் ஞானநிலையிலும் சரி; திருவடிசேருகிற பேற்றுநிலையிலும் சரி; ஒவ்வொரு நிலையிலும் அரசகுமாரன் சாப்பிடும் உணவுக்குப் பிடிக்குப்பிடி நெய் ஊற்றுவதுபோல, ஆழ்வார்காட்டும் பக்திக்கு இறைவன் அருளே காரணமாகிறது.

*"நலம் அருளினன் — என்கொல் என்று*
*ஆமூலகூடம் அருளால் மன்னும் இவர்க்கு, அன்புக்கு*
*அடியானதுவே அடிசேருகைக்கும் சாதனம்" (சூத்.14)*

(ஆமூலகூடம் — முதலிலிருந்து முடிவு வரையிலும்)

# பராங்குச நாயகி

**கலவியும், பிரிவும் மாறி மாறித் தந்தது:**

பேற்றிற்குக் காரணம் அருள் என்றால் அவருடைய விருப்பத்தை அப்படியே முழுமையாக நிறைவேற்றாது தன்னுடைய கலவியால் ஞானத்தையும், தன்னுடைய பிரிவாற்றாமையால் பக்தியையும் ஆழ்வார் வளர்த்தது ஏன்? புணருந்தோறும் புணர்ச்சி அளவில்லாத இன்பம் தரும். ஆழ்வாரால் தாங்கமுடியாது. ஆறு வற்றினால் அடிசுடுவது போலப் பிரிவுத் துன்பம் இருக்கும். எனவே ஒரே அடியாக சேருதலோ, பிரிதலோ செய்யாமல் படிப்படியாகத்தன்னைக் காட்டி நடுநடுவே பிரிந்து பயிற்சி கொடுத்து மெள்ள இன்பத்தை வளர்த்தான். அது எப்படி என்றால், கனமான நகையைக் காதில் இடும்பொழுது, முதலில் துளையில் நூலிட்டு, பின்பு திரிஇட்டு, ஓட்டையைப் பெருக்கி அதன்பின் தோட்டினை அணிவது போலவும், உபவாசம் இருந்து முடிப்பார்க்கு உடனே உணவு இடாமல் முதலில் பொரிக்கஞ்சி கொடுத்து, பின்பு பொரிக்கூழ் கொடுத்து, முடிவில் உணவு கொடுப்பது போலவும் என்க.

இறைவன் கலத்தலால் பெருகுகிற அளவில்லாத இனபத்தை ஆழ்வார் தம் திருமொழிகளாலே அழகுறப் பாடுகிறார்.

*"தடமுலை புணர்தொறும், புணர்ச்சிக்கு ஆராச்<br>சுகவெள்ளம் விசும்பு இறந்து, அறிவை மூழ்க்கச்<br>சூழ்ந்து அது கனவு என நீங்கி, ஆங்கே<br>அகஉயிர் அகம் அகந்தோறும் உள்புக்கு<br>ஆவியின் பரம் அல்ல வேட்கை அந்தோ!"* (திரு.10.3..2)

"பெரிய முலைகளை நீ, புணருந்தோறும் புணர்ச்சியில் அடங்காத இன்பவெள்ளம் ஆகாசத்தையும் கடந்து, அறிவும் அமிழும் படியாகப் பரந்து, அது கனவினைப் போன்று நீங்க, அந்த நிலையிலேயே மனத்தின் இடம் தோறும் இடம்தோறும் உள்ளே புகுந்து, உயிரால் பொறுக்க முடியாதபடி ஆசை பெருகுகிறது"

**"புணர்தோறும்" என்னக் கலந்து பிரிந்து<br>ஞானபக்திகளை வளர்த்து,<br>கனங்குழை இடக்காது பெருக்குதலும்,<br>மாச உபவாசி போஜனப் புறப்பூச்சும்<br>போலே, ஆற்ற நல்ல மா போகச் சிரமமாக"** (சூத். 115)

(மா போகம் — நித்திய சூரிகள் அனுபவிக்கிற போகத்தை; சிரமத்தை — முதலிலே கொடுக்கில் பொறுக்காது என்று கருதி, அது பொறுப்பதற்காகப் பயிற்சியினை உண்டாக்கினபடி; சிரமம் — பயிற்சி)

**கலவியும் பிரிவும்:**

புறக்கண்களுக்குப் புலப்படாமலும், கைகளால் அணைப்பதற்கு எட்டாமலும், ஆனால் மனத்தினுடைய மிகத் தெளிவான அனுபவமாக அவர்முன்னே வந்து நின்று நேரே காண்டலுக்குச் சமானமான மனத்தின் அனுபவம் கலவி ஆகும். புறக்கண்களாலும் பார்க்க முடியாமல் மானச அனுபவமாக மனக்கண்ணாலும் பார்க்கமுடியாமல் அடியோடு

கலங்கிப் போய் இருப்பது பிரிவு. இறைவன் கருத்துக்கு எளியனாகிறான்.

*"கருத்துக்கு நன்றும் எளியனாய்"* *(3.6.11)*
*"நிற்கும் முன்னே வந்து"* *(7.3.6)*

இறைவன் கைக்கு அரியன் ஆகிறான். எய்தா நிலையில் இருக்கிறான்.

*"கண்கள் காண்டற்கு அரியனாய்"* *(3.6:11)*
*"என் கைக்கும் எய்தான்"* *(7.3..6)*

"இவற்றால் வரும் சம்ஸ்லேஷ விலேஷங்களாகிறன,
எளியனாய் நிற்கும் அரியனாய் எய்தான் என்கிற
தரிசன சமமான மாநச அநுசந்தானமும்,
திண் கொள்ளப் பெறாத மனச் சைதில்யமும்" *(சூத். 116)*

(ஞானம், பக்தி, இவற்றின் அடியாக வரும் கலவியும், பிரிவும் மனத்தினுடைய மிகத் தெளிவான அனுபவத்துக்கு விஷயமாய்க் கொண்டு தம் முன்னே வந்து நின்று, புறக் கண்களுக்குப் புலப்படாமல் நேரே காண்டலுக்குச் சமமான மனத்தின் அனுபவமும், புறக்கண்களால் கண்டு அனுபவிக்கும் அனுபவம் பெறாமையால் பிறந்த மனக் கலக்கமும் ஆகும்.

(சம்ஸ்லேஷம் — கூடுதல்; விச்லேஷம் — பிரிவு; தரிசன சமமான — நேரே கண்களால் காணுதலைப் போன்றதான; மாநச அநுசந்தானம் — மனத்தின் நினைவு; மனச்சைதில்யம் — மனம் உருக்குலைதல்)

புணர்ச்சியும், பிரிவும் நல்வினை தீவினைகளினால் தானே வரும்! இவர்தாம் உலக இயல்புக்கு மாறுபட்டவராயினரே! இவர்க்குந்தாம் நல்வினை, தீவினை கிடையாது என்றால் அதுவும் சரி, இறைவன் தான் இவர்க்குப் புணர்ச்சியாகிற எல்லையற்ற இன்பத்தைக் கொடுக்கிறான். அதிலேயே அழுந்திப்போய் விடக்கூடாதே என்று பிரிவினையும் தருகின்றான்.

"புண்ணியம் பாவம் புணர்ச்சி, பிரிவை
அவை சரித்தவர்க்கு, பிரிய ஹித பரன்தான்
துளக்கற எங்கும் தழைக்க நடத்தும்" *(சூத். 117)*

உலகத்தார்க்கு நல்வினை தீவினைகளின் பயனாய்க் கொண்டு வருகின்ற புணர்ச்சியையும் பிரிவினையும் அந்நல்வினை தீவினைகளின் காரணமாக வருகின்ற கர்மங்களை அற்றிருக்கிற இவர்க்கு, பிரியபரனும் ஹிதபரனுமான ஈச்வரன் தான் ஞான பக்திகளை வளர்க்கையில் நினைவாலே, மற்றைய நோக்கங்கள் சிறிதும் கலக்காதபடி அவற்றை ஒருங்க விட்டுக் கொண்டு வந்து, இனிப் பேராதபடி இவருள்ளே புகுந்து, இவர் மிக்க பிரீதி உடையவராகும் படியாகவும் உலகமெல்லாம் நல்ல சுகத்தைப் பெற்று நிறைந்து இருக்கும்படி பிரிவின் துன்பத்தல் இவர் அழுந்தும் படியாகவும் நடத்திக் கொண்டு போரும்.

ஞானநிலையில் ஆழ்வார் தாமாக நின்று பேசுவார். அன்பு நிலையில் பெண்ணாக நின்று பேசுவார்.

"ஞானத்தில் தம்பேச்சு;
பிரேமத்தில் பெண்பேச்சு" *(சூத். 118)*

ஒருநேரம் தெளிந்தும், ஒருநேரம் கலங்கியும் பேசுகிறாரே! பேச்சில் தான் வேறுபாடா? இல்லை சொரூபத்திலேயும் பேதம் உண்டா? மண்ணாவது பிண்டம், குடம், ஓடு, பொடி ஆகிய நிலைவேறுபாடுகள் அடைந்தாலும் மண்ணாகிற தன்மைக்கு அழிவில்லை. அதுபோல தெளிந்த நிலையிலும் சரி கலங்கிய நிலையிலும் சரி அடிமைத்தன்மை என்கிற ஆழ்வாரின் சொரூபத்தில் பேதம் இல்லை.

*"தேறும் கைகூப்பும்"* *(7.2:5)*

இது ஆழ்வார் தெளிந்த நிலை.

"கலங்கிக் கைதொழும்" (2.4:4)

*"தேறும் கலங்கி" என்று தேறியும்*
*தேறாதும் ஸ்வரூபம் கலையாது.* *(சூத். 119)*

ஆழ்வார்க்கு இந்தப் பெண் பேச்சு இயல்பாக வந்ததா? பின்னால் வந்த வந்தேறியதா? இந்தப் பெண் பேச்சு இயல்பானதுதானே! ஆத்ம சொருபமே பெண்தானே!

ஆசாரியன் உபதேசம் செய்த பிறகுதான் ஆத்மா சொருபத்தையே அடைகிறது. கல்வி தான் தாய். திருமந்திரத்தை ஆன்மா உபதேசமாகப் பெற்ற உடனே "தான் இறைவனுக்கே அடிமை. அவனையன்றித் தனக்கு ஆண்டான் வேறு இல்லை" என்று ஆன்மா உணர்ந்து திருமகளுக்கு ஒப்பாக வளர்கிறது. உடலுக்குரிய தந்தை ஆபத்துக் காலத்தில் உதவான். ஆசாரியனாகிய தந்தை ஆபத்துக்களிலே காக்கிற, மோட்சத்துக்கு உதவுகின்ற தந்தை ஆவான்.

*"வித்யை தாயாகப் பெற்று,*
*பாலும் அமுதுமான திருநாமத்தாலே*
*திருமகள் போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை"* *(சூத்.121)*

இந்த ஆன்மாவாகிய பெண் தனக்கும் உரியள் அல்லள்; பிறர் எவர்க்கும் உரியள் அல்லள். பகவானுக்கே உரியள் என்று சொல்லும் படியாக உலக நாயகனாகிய அழகிய மணவாளனாலே எட்டு எழுத்து மூன்று பதமாகிய திருமந்திரமாகிய திருமங்கல நாண் பூட்டப்பட்டு அவனால் ஏற்றுக் கொள்ளப்படுகிறாள்.

*"மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல்,*
*விச்வபதி லோகபர்த்தா என்னும் மணவாளரை,*
*நாலிரண்டு இழைகொண்டு முப்புரியான பிரஹ்ம*
*சூத்திரபந்தத்தோடே வரிப்பிக்க,*
*பரமபுருடன் கைக்கொண்டான்."* *(சூத்.121)*

திருமணமான நான்காம் நாள் தான் கலவி நடக்கும். முதல் மூன்று நாள்களும் சந்திரன், கந்தருவன், அக்நி ஆகியோர்க்கு உரியன. நாயகனைக் கலக்க மூன்று நாள்கள் தடுப்பதுபோல, இறைவனுடன் கலக்க உடல் இடையே தடுக்கிறது.

*"சதுர்த்தியுள் புக்கு,*
*இடையீடு நடுக்கிடக்கும் நாள் கழித்து"* *(சூத். 121)*

ஜன்ம பூமியை விட்டு நீங்குவது மட்டும் அன்று; இங்கு முன்பு பற்று வைத்த எல்லாப் பொருள்களின் மேல் உள்ள ஆசையையும் நீக்க வேண்டும். நாயகன் வீட்டுக்குச் செல்கின்ற புதுப்பெண் அவ்வூர் எல்லையில் இருந்து நீராட்டப்படுவள். அது போல அமுத ஆறான விரஜையில் அழுக்கு அறும்படி ஆன்மா நீராட்டப்படும்.

"ஜன்ம பூமியை விட்டகன்று,
சூழ்விசும்பிற்படியே உடன்சென்று,
குடைந்து நீராடி" (சூத். 121)

நீராடிக் கரை ஏறின பெண்ணை நாயகனின் பந்துக்கள் அலங்கரிப்பது போல இவனைப் பிரம்ம அலங்காரத்தால் அலங்கரிப்பர். பூரணகும்பம், தீபம் முதலானவற்றைத் தரித்துக் கொண்டு எதிர்கொள்வர்.

பெண் நாயகன் வீட்டில் புகுவதுபோல ஆன்மா வைகுந்தம் புகும். புதுப்பெண் வந்தால் உறவினர்கள் மகிழ்ச்சியோடு உண்பர். அதுபோல நித்யசூரிகளும் சேர்ந்து இறையனுபவத்தை அனுபவிப்பர். ஆன்மா இறைவனுடைய மணி மண்டபத்தை அடைந்து, அவனது மணிக்கட்டிலில் ஏறி அமர, இறைவன் பரத அக்ரூர அனுமனைத் தழுவிக் கொண்டது போல இந்த ஆன்மாவைத் தழுவிக் கொள்கிறான்.

இந்த ஐக்யம் (பெண்தன்மை) வந்தேறியல்ல, ஆன்மாவிற்கு இயல்பாக அமைந்த ஒன்று.

**"வியன்துழாய் அஞ்சனத்தின் நீறுநானப்பொடி பீதக ஆடை
பல்கலன் கொண்டு நோக்கியர் அலங்கரித்துப்
பல்லாண்டு இசைத்துக் கவரி செய்ய,
நிறைகுடம் விளக்கம் ஏந்தி இளமங்கையர் எதிர்கொள்ள,
வைகுந்தம் புக்கு இருந்து,
வாய் மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர் போகம் உண்டு,
கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மிதித்து, ஆரோஹித்து,
பரத அக்ரூர மாருதிகளைப் பரிஷ் வங்கித்த
மணிமிகு மார்பிலே குருமாமணியாய் அணையும் வஸ்துவுக்கு
மணிவல்லிப் பேச்சு வந்தேறி அன்று".** (சூத். 121)

(மாலை, அஞ்சனம், பொடி, புடைவை, ஆபரணங்கள் என்னுமிவற்றை, தெய்வப் பெண்கள் எதிரே வந்து சர்வேச்வரனுடைய அநுபவத்துக்கு இனியதாம் படி அலங்கரித்து, திரள நின்று போற்றி செய்து, பூரண கும்பம் தீபம் முதலானவற்றை ஏந்தி வேறு தெய்வப் பெண்கள் சிலர் எதிர்கொள்ள, ஸ்ரீவைகுண்டத்தை அடுத்து அவனோடு கூடியிருந்து பெருங்களிச்சியாக முழுமிடறு செய்து, நித்திய சூரிகள் அநுபவிக்கிற போகத்தை அநுபவித்து, தெய்வத் தன்மை பொருந்திய கட்டிலிலே பாதபீடத்திலே அடியிட்டேறி, ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்து அணைத்துக் கொண்ட கௌஸ்துபம் நிறம் பெறும்படி அழகியதான திருமார்பிலே, ஸ்ரீகௌஸ்துப மணியைப் போன்று இனியதாய் ஒளியை உடையதாய்க் கொண்டு அணைகிற ஆன்மாவிற்குக் கொடி போன்றவள் என்கிற பெண் தன்மையோடு கூடியதாய் வரும் பேச்சு வந்தேறி அன்று; இயல்பாகவே அமைந்தது — ஸ்ரீ பி.ஆர்.புரு)

# பகவானின் தாசநேசர்களோடு ஒப்பு

## பெரிய பிராட்டியாரோடு ஆழ்வார் ஒப்பாதல்:

பரிசுத்தமான ஆன்ம சொரூபமான ஆழ்வாரைப் பகவானின் தாசேநசர்கேளாடு ஒப்பிடுகிறார்.

முதலில் பெரிய பிராட்டியும் பரிசுத்தமான ஆன்மசொரூபமும் ஒப்பு என்கிறார்.

இறைவனுக்கே அசாதாரண தருமமாக இருத்தல் (நிருபகத்வம்), அவனுக்கு ஒத்த வடிவினளாக இருத்தல் (அநுரூபத்வம்), அவனுக்கு விருப்பமானவளாக இருப்பது (அபிமதத்வம்), உயிர்கள் இறைவனுக்கு அடிமைப்படத்தான் வழியாக இருப்பது (சேஷத்வ சம்பந்த துவார பாவம்) இறைவனோடு உயிர்களைச் சேர்த்து வைக்கும் தன்மை (புருஷகாரத்வம்) உயிர்கள் செய்யும தொண்டை இறைவன் திருவுள்ளத்தில் நிரம்பச் செய்வது (பிராப்ய பூரகத்வம்) என்ற ஆறு விசேட தன்மைகள் பிராட்டிக்கே தனித்து உரியன. பூதேவிக்கும், நீளா தேவிக்கும் கூடக் கிடையாது.

ஆழ்வாரும் பெரிய பிராட்டியார் போல ஆறுதனித்தன்மைகளில் ஒப்பாகிறார். அவனைத் தவிர வேறு யாருக்கும் தொண்டு செய்யாது இருத்தல் (அநந்யார்ஹ சேஷத்வம்) அவனைத் தவிர வேறு யாரையும் பற்றுக் கோடாகக் கொள்ளாது இருத்தல் (அநந்ய சரணத்வம்), அவன் ஒருவனுக்கே நுகர் பொருளாக இருத்தல் (அநந்ய போக்யத்வம்), அவனோடு கூடியிருக்கையில் மகிழ்ச்சியாக இருத்தல் (சம்ஸ்லேஷத்தில் தரிக்கை), அவனைப்பிரிந்து இருப்பதில் பொறாது இருத்தல் (விச்லேஷத்தில் தரியாமை) அவன் ஒருவனாலேயே பாதுகாக்கப்படுதல் (ததேக நிர்வாஹ்யத்வம்) என்ற ஆறு குண்ஙகளையும், பெரியபிராட்டியார் ஆறு குணங்கள் கொண்டிருப்பது போல ஆழ்வாரும் கொண்டு இருக்கிறார்.

"கடிமாமலர்ப் பாவையோடு உள்ள
சாம்ய ஷட்கத்தாலே" (சூத். 122)

(பிராட்டியோடு ஒப்பாக உள்ள ஆறு பண்புகளாலே)

## பட்டத்துத் தேவிமார்கள் மூவர்க்கும் ஒப்பு:

சீதையைப் பிரிந்தபோது, இராமபிரான் மாமிசத்தை உண்ணவில்லை; தன்னைக்கடிக்கும் ஈ, கொசுக்களைக் கூடச் சரீரத்திலிருந்து ஓட்டவில்லை. அதுபோல பராங்குச நாயகியான ஆழ்வாரைப் பிரியாத நிலையினனாகப் பிரிந்தால் உண்ணாது உறங்காது இருக்கும் நிலையினனாகப் பகவானைப் பிராட்டி செய்துள்ளாள். அவ்வாறே இவரும் மாயோன் திறத்தனளே இத்திரு எனப் பெருமாளைப் பிரிவில்

துயருறுகிறார். *(1)* இராகவனைப் பிரிந்த பிராட்டி தன்னைத் துன்புறுத்தும் பொருள்களை நோக்கிப் புலம்புகிறாள்.

"துழாய் துணையா, நங்களை மாமை கொள்வான்.
வந்துதோன்றி நலிகின்றதே" *(திருவிரு — 77)*

என்று வருந்துகின்றாள் பராங்குச நாயகி. *(2)* தன்பால் காதல் இல்லாவிட்டாலும் தன் பிரஜைகளில் ஒருத்தி என்ற அருள் நெஞ்சுடனாவது தன்னைக் காக்க வேண்டாவா என்பது சீதையின் துக்கம்.

"வழா நெடும் துன்பத்தள் என்று இரங்கார்" *(திருவிரு ...36)*

*(3)* என்கிறாள் பராங்குச நாயகி. எதிரிகளிடம் இராமன் கருணைகொண்டு அன்புகாட்டி விட்டுவிட்டாலும் இராமனின் அம்புகள் எதிரிகளை விடாவே; அத்தகைய பெருமான் இன்னும் வரவில்லையே என்று சீதை வெறுப்பது போல,

"காயும் கடுஞ்சிலை என்காகுத்தன் வாரானால்". *(திருவாய் 5.4:3)*

என்று பராங்குச நாயகி வெறுப்பது,

தம்மோடு ஒத்த துக்கம் உடையவர்களைக் கட்டிக் கொண்டு அழுவது, இராகவனால் காப்பாற்றப்பட வேண்டிய பொருள்களில் நானும் ஒருத்தி எனத் தூது விட்டது, அவனை ஆசைப்பட்டு அழகு அழிவது, என்று இப்படிப் பலவகையாலும் பராங்குச நாயகி சீதாப் பிராட்டியை ஒக்கிறாள்.

அவனை ஆசைப்பட்டு அறிவு இழப்பது, பூமாதேவியின் மணாளன் சூடிய திருத்துழாய் மாலையைத் தன் குழலில் சூடுவது என்று கொல் லெனவாடுவது, வராக அவதாரத்தில் பூமியைத் தனது எயிற்றினில் தூக்கிய பொழுது அது ஒரு தூசியாகத் திகழ்ந்த இவனுடைய பெருமை, வீரச்செயல்கள் இவற்றைப் புகழ்ந்து பாடியது. இத்தகைய பாசுரங்களால் பராங்குச நாயகி பூதேவியை ஒக்கிறாள்.

ஏறுதழுவுதல் முதலான வீரச் செயல்களை உடைய கிருஷ்ணன் திருவடிகளில் சனகாதியர் சூட்டிய திருத்துழயை ஆசைப்பட்டு நிலை கெடுவது, கிருஷ்ணன் விரும்பாத தளிர் போன்ற நிறம் எனக்கு வேண்டா எனப் பேசுவது போன்ற பாசுரங்களில் பராங்குச நாயகி நப்பின்னைப் பிராட்டியை ஒக்கிறாள்.

சீதாப்பிராட்டிக்கே உரித்தான இராமாவதாரத்திலும், அவனது வீரச் செயல்களிலும், ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கே உரியதான வராக அவதாரத்திலும் அதில் உள்ள வீரச் செயலிலும், நப்பின்னைப் பிராட்டிக்கே உரிய கிருஷ்ணாவதாரத்திலும் அதில் செய்த வீரச் செயல்களிலும், அப்பிராட்டிமார்களைப் போன்றே எல்லையற்ற காதல் கொண்டவளாகப் பராங்குச நாயகி திருப்பாசுரங்கள் பாடுவதால் அப்பிராட்டிமார் மூவரையும் ஒக்கிறாள்.

"உண்ணாது கிடந்து ஓர்மாயையினால், என்னும் வீறுடைய
முடிக்குரியாரோடு, இத்திரு மண்ணேரன்னஒண்ணுதல்
பின்னைகொல் என்கிற ஒப்பு, தென்பால் நெடுமாடம்
கடுஞ்சிலை அம்பு எரி ஊட்டி நீறெழ உரித்த பெருந்தோற்றத்து
ஆருயிர்க் காகுத்தன், ஆதியம்காலம் மண்புரை பொன்மாதின்
துகளாடி, எருதேழ் தழீஇச் சறையினார் என்னுமவற்றிலே
தோன்றும்" *(சூத். 123)*

உண்ணாது என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு இத்திரு என்கிற ஒப்பு (சீதை) கிடந்து என்னும் வீறுடைய முடிக்குரியாரோடு மண்ணேரன்ன ஒண்ணுதல் என்கிற ஒப்பு (பூதேவி) ஓர் மாயையினால் என்னும் வீறுடையாரோடு பின்னைகொல் என்கிற ஒப்பு (நப்பின்னை) என்று பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க.

## திருவாய்ப்பாடி, ஸ்ரீமதுரை ஸ்ரீமத் துவாரகைப் பெண்களையும் ஒப்பர்:

இப்படிப் பட்டத்துத் தேவிமார் மூவரோடு ஒப்பாதல் மட்டுமன்றித் திருவாய்ப்பாடியில் உள்ள பெண்கள், ஸ்ரீமதுரையில் உள்ள பெண்கள், ஸ்ரீமத்துவாரகையில் உள்ள பதினாறாயிரம் தேவிமார்கள் இவர்களையும் பராங்குச நாயகி ஒப்பாவார்.

துகில் வாரியும், சிற்றில் சிதைத்தும், "பந்து பறித்துத் துகில் பற்றி "கச்சொடு பட்டைக் கிழித்து" என்றும் பாடுவதால் பராங்குச நாயகி திருவாய்ப்பாடிப் பெண்களுக்கு நிகர் ஆவார்.

குவலயாபீடத்தைக் கொல்ல மதுரையில் தெரு வீதிகளில் எழுந்தருளியபோது கண்ணபிரானின் அழகிலும் செயலிலும் தோற்று மகிழ்ந்த பெண்களின் நிலையைப்போலப் பாடினமையால் அவர்களையும் இவர் ஒப்புமை ஆகிறார்.

நரகாசுரனைக் கொன்று அவன் திருடி வைத்திருந்த பதினாறாயிரம் கன்னிப் பெண்களின் நிலையிலேயும் பாடுவதனால் அவரையும் ஒப்பாவார். *(சூத். 124)*

## ஆழ்வார் சீதாப்பிராட்டியுடனே முழுதும் ஒப்பாவார்:

பட்டத்துத் தேவிமார் மூவர், பிற பெண்களுடன் ஆழ்வார் ஒவ்வொரு வகையில் தான் ஒப்பாவார். ஆனால் சீதாப்பிராட்டியுடன் முழுமையாக ஒப்பாவார்.

சீதாப்பிராட்டி இராமனைப் பிரிந்து வாழ ஒருப்படாள். நீரை விட்டு வெளியேறிய மீனுக்கு நிகர் ஆவாள். இராகவன் வாரான் எனில் கயிற்றிலே தொங்குவேன் என்று அனுமனிடம் பிராட்டி கூறுகிறாள்.

"மாமரம் எய்த மாயவன் என்னுள்,
இரான் எனில் பின்னையான் ஒட்டுவேனோ" *(திருவாய் 1.7:6)*

என்கிறார் நம்மாழ்வார்.

"இரான் எனில் நச ஆகக் குழைத்தவன்
பின்தொடர இருந்த வன்சிறையிலும்' *(சூத். 125)*

*(நச — நான் இருக்கமாட்டேன்; குழைத்தவன் — இராமபிரான்;)*

இராவணனிடம் பிராட்டி, "நீ உயிரோடு இருக்க விரும்பினால் இராமபிரானிடம் சரணாகதி அடை. உன்னைக்காப்பார்" என்று அறிவுறுத்துகிறாள். பராங்குச நாயகியாகிய நம்மாழ்வாரும் பக்தி இல்லாமல் இருக்கிற மக்களுக்கு,

"புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே" *(திருவாய் 2.8:1)*

என்று இறைவனே தெப்பம் என்று அறிவுறுத்துகிறார்.

"விதிதன் புணைவன் என்று" *(சூத். 125)*

இராகவனைப் பிரிந்த பிராட்டி "இராமபிரானைப் பிரிந்த எனக்கு உயிரினால் பயன் இல்லை; செல்வங்களால் பயன் இல்லை; ஆபரணங்களால் பயன் இல்லை" என்று வெறுத்து ஒதுக்குகிறாள். பராங்குச நாயகியும் அதுபோலவே வெறுத்து ஒதுக்குகிறாள்.

"ஜீவித ஆதிகளால் குறையின்றி" *(சூத். 125)*

*(ஜீவித ஆதிகளால் — உயிர் முதலியவற்றால்)*

பிராட்டி ஆற்றாமையாலே, "என் உயிரை முடிக்க விஷம் தருவார் இல்லையா? வாள் தருவார் இல்லையா?" என்று கூறுகிறாள். பராங்குச நாயகியும் "மாயும் வகை அறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே" *(திரு 5.4:3)* என்று தன் உயிரை முடிக்க வழிதேடுகிறாள்.

"மாயும் வகை விஷ சஸ்திரங்கள் தேடி" *(சூத். 125)*

*(விஷ சஸ்த்ரங்கள் — விஷம், ஆயுதங்கள்)*

இராமனுடைய சூரத்தன்மையை நினைத்து "ஹாராம" என்கிறாள் பிராட்டி "புணரா நின்ற மரமேழ் அன்று எய்த ஒரு வில்வலவாவோ" *(திருவாய்..6.10:5)* என்று அவனது வீரத்தைப் புகழ்கிறாள் பராங்குச நாயகி.

"வில்வலவா என்று" *(சூத். 125)*

இராகவன் உரிய காலத்தில் தன்னை வந்து காக்காமையால் பிராட்டி இராகனை அருளற்றவராக ஐயப்பட்டாள். இவரும் அவ்வாறே ஐயப்பட்டார்.

"இரக்கம் எழீர் இதற்கு என் செய்கேன்" *(திருவாய்2.4:3)*

"இரக்கம் எழாக் கொடுமைகள் சங்கித்து" *(சூத். 125)*

"உயிர் போவதற்குமுன் என்னை வந்து ஏற்றுக் கொள்ளச் சொல்" என்று அனுமனிடம் பிராட்டி தூதுவிட்டாள். இவரும், "ஏறுசேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே" *(திரு 6.1:10)* என்று தூது விட்டார்.

"ஜீவந்தீம் என்னையும் என்று ஆள்விட்டு" *(சூத். 125)*

*(ஜீவந்தீம் — உயிரோடு கூடியிருக்கின்ற)*

சூரியனைவிட்டு ஒளி பிரியாது இருப்பது போல நானும் இராகவனை விட்டுப்பிரியாது இருப்பேன் என்கிறாள் பிராட்டி. இவரும் அவ்வாறே அமளர அடைந்தேன் (2—3—6) என்று சொல்கிறார்.

"சுடரை அடைந்து" (சூத். 125)

இராகவனை ஒருகாலமும் அகலகில்லேன் என்கிறாள் பிராட்டி.

"அடியேன் உனபாதம் அகலகில்லேன் இறையுமே" (திருவாய்..6.10:9) என்கிறார் ஆழ்வார்.

"அகலகில்லா" (சூத். 125)

இப்படி எல்லா வகையாலும் பராங்குச நாயகியாகிய நம்மாழ்வார் சீதாப்பிராட்டிக்கு பூரணமாக ஒப்பாகிறார்.

"முற்றுவமை பெருமகளோடே" (சூத். 125)

## இலக்குவனுக்கு ஒப்பு:

இவர்கள் மட்டும்தான் ஆழ்வார்க்கு ஒப்புமையா என்றால் இல்லை என்க. இலக்குவன், பரதன், சத்ருக்கனன், தசரதன், யசோதை, பிரகலாதன், வீடணன், மாருதி, பார்த்தன் ஆகியோர்க்கும் ஆழ்வார் ஒப்பாகிறார்.

இராமபிரானைப் பிரிந்தால் தானும் பிராட்டிபோல உயிர் வாழேன் என்று இலக்குவன் கூறியதால் ஆழ்வார் இலக்குவனை ஒக்கிறார்.

"பிரியில் இலேனுக்கு இளங்கோவும்
அக்குளத்தில் மீனிறே" (சூத். 126)

இளமைப் பருவம் தொடங்கி இலக்குவன் இராமனைப் பிரிந்தால் உயிர் வாழமுடியாத அன்புடன் இராமன் பால் இருந்தான். பிரிந்தால் — தரியாது, கண்ணில் நீரும், அடியவன் என்னும் தன்மைக்கு ஏற்பக் குவிந்த கையுமாக உடன் சென்று, திருச்சித்திரகூட மலையில் பிராட்டியோடு இராமன் இன்புற்றிருக்க அனைத்துக் கைங்கரியங் களையும் செய்து, இடைவிடாது பின்தொடர்ந்து தனக்கு எல்லா உறவும் ஸ்ரீ இராமபிரானே என்று இருந்தான் இலக்குவன்.

"அழும் தொழும் ஸ்நேஹ பாஷ்பாஞ்சலியோடே
ருசிர ஸாநுக்களில் கூவிக்கொள்ளும்
பிரியா அடிமைக்குச் சரணேசரண் என்று
வாளும் வில்லும் கொண்டு பந்துவும் பிதாவும்
அவரே என்கையும்" (சூத். 127)

(ருசிரம் — மனோகரமான, அழகிய; ஸாநு — மலைத் தாழ்வரைகள்)

"திருவேங்கடத்து எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கு
ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" (திரு 3.3:1)
"முகப்பே கூவிப் பணி கொள்வாய்" (திரு 8.5.:7)
"பிரியா அடிமை" (திரு 5.8:7)
"நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கு" (திரு 5.10.1)

"சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும்
நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் அவரே" (திரு.5.1.8)

இளையபெருமாளைப் போலக் காலமெல்லாம் அடிமை செய்யும் தன்மையினராய், எல்லா உறவும் பகவானே என்ற நிலையினராய் ஆழ்வார் தம் பாசுரங்களில் பாடுதலால் இவர் இளையபெருமாளை ஒக்கிறார்.

பரதனுக்கு ஒப்பு:

இராமபிரானைக் காட்டில் செலுத்தித் தன்னை அரசனாக்க விரும்பிய தாயின் கொடுமையைப் பொறாது, தாயைச் சீறி வெறுத்து, நாடும் தானும் இராமனுக்கே என்றாற் போன்றும், வசிட்டர் முதலான புரோகிதர்கள் "அரசனாக வேண்டும்" என்று கேட்டுக் கொண்ட போதும் விரும்பாததும், ஸ்ரீ இராமபிரானை மீட்டுக்கொண்டு வந்து திருமுடிசூட்ட விருப்பம் தெரிவித்து அவர் அதனை ஏற்காததனால் அவரது பாதுகைகளைத்தர. அவற்றைத் தலையில் வைத்துக்கொண்டு மீண்டு வந்ததுபோன்றும் ஆகிய நிலைகளிலே கண்ணீரால் உண்டான சேற்றிலே தரைக்கிடந்த பரதனை ஆழ்வார் நிகர்ப்பர்.

"அன்னை என்செய்யில் என், ராஜ்யமும் யானே என்று,
பெருஞ் செல்வமும் இச்சியாமல்
வேண்டிச் சென்று
திருவடியே சுமந்து
விரைந்து வரும் அளவும் கண்ணநீர்
பங்கமாக நிலம் துழாவிக்
குடிக்கிடந்த கையறவும்" (சூத். 127)

பராங்குச நாயகியாக இவர் பக்தி மிகுதியால் நாயகனான இறைவனை அடைய விடாமல் தடுக்கும் தாயரை விரோதிகளாப் பாவித்து அன்னையைச் சீறி வெறுக்கிறார்.

"அன்னை என் செய்யில் என்?
உயிர் வாழில் என்? முடியில் என்?" (திரு 5.3:6) என்கிறார்.
"யானே நீ என் உடைமையும் நீயே" (திருவாய் 2.9:9)

என்பதனால் தாம் இறைவனுக்கு உடைமை என்கிறார்.

"கொள்ளென்று கிளர்ந்து எழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு" (திரு 4.9:4)

என்பதனால் செல்வத்தைத் துச்சமாகக் கருதுகிறார்.

"திருவடியே சுமந்து உழலக் கூட்டரிய திருவடிக்கண்கூட்டினை" (திரு 4.9:9)

என்ற பாசுரத்தால் இறைவனது திருவடிகளைத் தலைமேலே தாங்கிக் கொள்வதாகப் பாடுகிறார்.

"கண்ணநீர் கைகளால் இறைக்கும் இருநிலம் கைதுழாவிருக்கும்" (திரு 7.2:1) என்பதனால் ஆற்றாமையால் கண்ணீர்பெருக்கிச் சேற்றைத் துழாவும் தன்மை புலனாகிறது. இவற்றால் எல்லாம் ஆழ்வார் பரதனை ஒக்கிறார்.

### சத்துருக்கனனுக்கு ஒப்பு:

பாகவதர்களுக்கு அடிமைப்பட்டிருத்தலே மேலான பேறு என்று கருத்திற்கேற்பச் சத்துருக்கனன் பரதனுக்கே அடிமைப்பட்டு இருந்தான். பெண்களையும் வசீகரிக்கும் அழகுடைய இராமபிரானுக்கு அடிமைப்படாது, பரதனுக்கு இராமனிடம் விருப்பம் உண்டு என்பதனாலேயே மட்டும் இராமனிடம் விருப்பம் காட்டினவன் தான் சத்ருக்கனன்.

நம்மாழ்வாரும் பாகவதர்களுக்கு அடிமைப்பட்டு இருத்தலே விரும்பியிருந்தார். "அவன் அடியார் சிறுமாமனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரிய" (திருவாய் *8.10:3*) பாகவதர்களுக்கு உகப்பு என்பதனாலேயே இவரும் பகவானிடம் அன்பு செலுத்தினார்.

*"கோதில் அடிமை உறுமோ*
*என்பித்த புலன் கொள்*
*நித்ய சத்ரு விசிந்தனமுமான ப்ராதாக்கள்"* *(சூத். 127)*

என்பது சத்ருக்கனுடைய இயல்பு.

### தசரதனுக்கு ஒப்பு:

ராமபிரானைக் கண்குளிர அனுபவிக்க வேண்டித் தசரதன் இராமனை வரச் சொல்லி வருகிற அழகையும் பார்த்துப் பார்த்து அனுபவிப்பான்.

*"அப்போதைக்கு அப்பொழுது என்னும்பிதா"* *(சூத். 127)*

ஆழ்வாரும் கணம்தொறும் வேட்கை பெருக அனுவிப்பார்.

*"எப்பொழுதும் நாள்திங்கள் ஆண்டு ஊழி*
*ஊழி தோறும் அப்பொழுதைக்கு அப்பொழுது*
*என் ஆராவமுதம்"* *(திரு 2.5:4)*

### யசோதைக்கு ஒப்பு:

இரட்டை மருதமரங்களின் நடுவே கிருஷ்ணன் சென்ற பொழுது யசோதை மனம் பதறினவளாய் மருதமரங்களின் பெருமையும் கிருஷ்ணனின் இளமையும் நோக்கி மனம் நொந்து போனாள். ஆழ்வாரும் நெடுங்காலம் முன்நடந்த சம்பவம் ஆனாலும் அப்பொழுது தான் நடந்ததுபோல இச்செயலை எண்ணி மனம் வருந்திப் போனார்.

*"போனாய் என்னும் மாதா"* *(சூத். 127)*
*"போனாய் மாமருதின் நடுவே"* *(திருவாய் 5.1.2)*

### பிரகலாதனுக்கு ஒப்பு:

கண்ணனிடத்தில் பக்தி கொண்டான் ஆதலால் பிரகலாதனை பெரியபாம்புகள் கடித்தும் அவனை ஒன்றும் செய்யமுடியவில்லை. நெருப்பு எரிக்கவில்லை. ஆயுதங்களாலும் வெட்டுப்பட்டான் இல்லை.

"கண்ணன் எங்கும் உளன்; அனைத்து உயிர்களையும் உடம்பாக உடையவன்; அப்படியிருக்க கண்ணனுக்குப் பகை யார்? நட்பு யார்?" என்று தந்தையிடமே பிரகலாதன் கேட்டான். நம்மாழ்வாரும்

"கரந்த சில்லிடம்தொறும் இடம் திகழ்
பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்து" (திரு 1.1.6)

என்று இறைவன் எங்கும் பரந்து இருக்கும் தன்மையை அருளிச் செய்கிறார்.

"அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதன் என்னும் மெய்வேவாள், எறியும் தண் காற்றைத் தழுவி என்னுடைக் கோவிந்தன் என்னும்" (திருவாய் ..4.4.3) என்கிறார். பராங்குச நாயகி தீயைத் தழுவி அச்சுதன் என்கிறாள்; காற்றைத் தழுவி கோவிந்தன் என்கிறாள். ஆழ்வார் பிரகலாதனின் ஒப்பும் ஆவார்,

"செந்தீத் தண்காற்று இளநாகம் முதலான பகை அறச் சிந்தை
செய்து எங்கும் உளன் என்னும் பள்ளிப் பிள்ளை" (சூத். 127)

## வீடணனுக்கு ஒப்பு:

வீடணன் இலங்கையோடு கூடப்பிள்ளைகள், மனைவி முதலான எல்லாப் பொருள்களையும் விட்டுச் சக்கரவர்த்தித் திருமகனையே தனக்கு எல்லாமாகப் பற்றி நின்றான்.

ஆழ்வாரும் இவ்வுலக வாழ்க்கையுள் உள்ள எல்லாப் பற்றுக்களையும் அடியோடு விட்டு இரமபிரானையே பற்றுக் கோடாகக் கொள்கிறார்.

"பாதம் அடைவதன் பாசத்தாலே மற்ற வன் பாசங்கள் முற்றவிட்டு" (திரு 8.2..11)
"தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே" (திரு 3.6..8)

எனவே ஆழ்வார் தர்மாத்மாவாகிய வீடணனை ஒக்கிறார்.

"முற்றவிட்டு மற்றிலேன் என்னும் தர்மாத்மா" (சூத். 127)

## அனுமனுடன் ஒப்பு:

பரமாத்மாவாகிய இராமபிரானைத் தனக்குள்ளே கொண்டு இருக்கிறான் அனுமன். இவரும் இராமபிரானைத் தமக்குள்ளே கொண்டு இருக்கிறார்.

"திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும்
ஒருக்கடுத்துள்ளே உறையும் பிரான்கண்டீர்" (திரு 8.6..2)

மாருதி இராமபிரானின் வீர சரிதத்தை சதாசேவிப்பான். இவரும் அப்படியே.

"கணை நாணில் ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே ஓவாத
ஊணாக உண்" (பெரிய திரு...78)

இராமபிரானிடம் பக்தி செலுத்துவதைத் தவிரப் பரத்துவமாகிய பரவாசுதேவனிடம் கூட அனுமனுக்கு நெஞ்சு செல்லவில்லை. இவரும் அப்படியே

"கற்பார் இராமபிரானை அல்லால்
மற்றும் கற்பரோ" (திரு 7.5..1)
"தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன்"
தஞ்சமாகவே (திரு 3.6..8)

"வாளி பொழிந்த நிர்க்குண விச்வாத்மா
உள்ளே உறைய, வீரசரிதம் ஊணாக,
கற்பார் பாவம் மற்றிலேன் என்னும் ராமதாசன்" (சூத். 127)

இவற்றால் எல்லாம் ஆழ்வார் இராமதாசனாகிய அனுமனுக்கு ஒப்பு ஆகிறார்.

## அருச்சுனனுக்கு ஒப்பு:

கண்ணனின் விசுவரூப தரிசனத்தை அருச்சுனன் கண்டு வியந்து போகிறான். அந்த உக்ரத்தை அவனால் தாங்கமுடியவில்லை. எப்பொழுதும் மகிழ்ச்சியளிக்கக் கூடிய சங்கு சக்கரம் கதை இவற்றோடு கூடிய திவ்வியத் திருமேனியையே எப்பொழுதும் தரிசிக்க விரும்புகிறான்.

விருத்த விபூதியனான பகவானை — நல்குரவு, செல்வம்; நன்மை; தீமை; நீர்; நிலன்; சிவன், அயன் — ஆக எல்லாமாய் இருக்கும் இவனை முழுதாக உணர்ந்தாலும் வெண்சங்கு ஏந்தின திருமேனியையே ஆழ்வார் நாளும் தரிசிக்க விரும்புவதால் அருச்சுனனுக்கு ஒப்பு ஆவார்.

"பல்வகையும் பரந்த பெருமானை" (திரு 6.3..1)
"கூரார் ஆழி வெண்சங்கு ஏந்திவாராய் (திரு 6.9.1)

ரூபபரனான சுவேதன் முதலானார்
படிகளும் காணலாம்" (சூத். 127)

(சுவேதன் — அருச்சுனன்)

## தாசநேசரிலும் உயர்ந்தவர்:

இலக்குவன், தசரதன் போன்றோர்க்கு ஒப்பு என்பது உலக நடைமுறையில் இருப்பவரில் உயர்ந்தவர்கள் என்பதினால்தானே ஒழிய வேறில்லை. உவமை கூறவேண்டுமே என்பதினால் கூறப்பட்டது.

தசரதன் முழுமையாகவா இராமனிடம் அன்பு செலுத்தினான், ஏதோ ஓரோர் நேரத்தில் அன்பு காட்டினான் அவ்வளவே. இலக்குவனும் பரத்துவம், அவதாரம் என்றெல்லாம் வேறுபாடு அறிந்தா அடிமை பூண்டான்? ஏதோ இந்த அவதாரத்தில் தம்பி! அவ்வளவே.

ஆழ்வார் அப்படியில்லையே. ஒவ்வொர் அவதாரத்திலும் ஈடுபட்டு, முழுமையாகப் பற்றின நெஞ்சினராய் உள்ளவராயிற்றே! இவர் அவர்களை எல்லாம் விட உயர்ந்தவர்.

குழலில் நெஞ்சும் அருகலில் சுவையுமான
இவர் அவர்கள் அளவு அல்லர். (சூத்.128)

*பிராட்டிமார் மூவர், ஆதிசேடன், கருடாழ்வார் ஒப்பு:*

பகவான் எந்தெந்தப் பிறப்பு எடுக்கின்றானோ அந்தந்தப் பிறப்புக்கு எல்லாம் ஏற்ற வடிவைப் பிராட்டி எடுத்து, அவனுக்குகந்த பணிவிடைக்களைச் செய்பவளாய் இருந்தாள். அவன் இராமனாக அவதரித்தபோது பெரிய பிராட்டி ஜானகியாக அவதரித்தாள். இராமபிரான் திருமுடி சூட்டிக்கொள்ளப் புறப்பட்டபோது அவனை அலங்கரித்து அவனுக்கு வெண்சாமரம் வீசி "இந்த வடிவழகு நமக்கு நிலைத்துக் கிடைக்குமோ?" என்று ஏங்கியவளாய் வாசல்வரை வழியனுப்பி வைத்தாள்.

மேலும் தண்டகாரண்யம் செல்ல முற்படும்பொழுது இராமபிரான் ஆயுதங்களை ஏற்ற நிலையைக் கண்டு, பிராட்டியும், "ஓ! வீரரே! காட்டிற்குத் துறவு மேற்கொள்ளச் செல்லும்பொழுது ஆயுதங்களைப் பிரயோகிக்கும் அவசியம் ஏன்?" என்று தருமோபதேசம் செய்தாள்.

*"என்றைக்கும் என்றது தோன்றப் பிறந்து,*
*ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக்,*
*காட்டுக்கு முற்பட்டுத் தர்மம் சொல்லி"* *(சூத்.129)*

வராக அவதாரத்திலே உயர்ந்த தருமத்தைக் கேட்டு அதன் காரணமாக மாணவியாகவும், வேலைக்காரியாகவும், பக்தியுடையவளுமாய்ப் பாடி, திருவடிகளைப் பிடித்துக் கைங்கரியம் செய்யும் பூமிப்பிராட்டியாக அவதரித்தாள்.

*"சிஷ்யா தாஸி பக்தைகளாய்ப் பாடி வருடி*
*இன்று வந்து என்பாரையும்"* *(சூத். 129)*

பகவானுடைய கைங்கரியத்துக்குத் தகுதியாகக் குடை, சிங்காதனம், பாதுகை, திருப்பரியட்டம் முதலான எல்லாக் கைங்கர்யங்களையும் ஆதிசேடனாகிய திருவனந்தாழ்வான் செய்கிறார். வாகனம், கொடி, மேற்கட்டி விசிறி முதலான எல்லாக் கைங்கர்யங்களையும் ஸ்ரீ கருடாழ்வான் ஆகிய பெரிய திருவடி செய்கிறார்.

*"சென்றால் ஊரும் நிவாச தாஸ பேதம்*
*கொள்வாரையும்"* *(சூத். 129)*

*"பின்னைகொல் நிலமாமகள் கொல்*
*திருமகள் கொல் பிறந்திட்டாள்"* *(திரு 6.5.10)*

என்று பாடியருளியபடியாலே ஆழ்வார் நப்பின்னை, பூதேவி, சீதேவி நிலையினராகத் தம்மைப் பாவிப்பர்.

*"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி*
*வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்"* *(திரு 3.3.1)*

என்று பாடி அருளியபடியால் எல்லா இடங்களிலும், எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் உசிதமான எல்லாக் கைங்கரியங்களையும் செய்யும் ஆவல் பெருக்கை வெளியிடுகிறார். இதனால் ஆழ்வார் ஆதிசேடனையும், கருடாழ்வாரையும் நிகர்க்கிறார்.

"தாம் அவராகப் பாவிப்பர்" (சூத். 129)

**திரௌபதியை விட அழகானவர்:**

சர்வேச்வரனின் வடிவழகில் ஈடுபட்ட ஆழ்வார் தம் ஆண்தன்மை இழந்து பெண் தன்மையைப் பெற்றுப் பராங்குசநாயகியாகப் பாடுகிறார். குளத்திலே நீராடுகிற பொழுது திரௌபதியின் அழகால் நிலைகுலைந்த பெண்கள் தம்மதி மயங்கித் தாங்கள் பெண்தன்மை இழந்து ஆண்தன்மையைப் பெற்றனர். திரௌபதிக்கு அப்படி ஒரு அழகு! அந்தத் திரௌபதியின் அழகும் பராங்குச நாயகியின் அழகுக்கு ஒப்பு ஆகாது.

"எழுவதோர் உரு அழிக்கச் செய்கிற
பாஞ்சாலி படுத்துமது ஒப்பாக்குகை பரிசு" (சூத். 130)

**கோசலையினும் சிறந்த கைங்கரியம்:**

கோசலை காலம் தோறும் வேலையாள் போன்றும், தோழி போன்றும். மனைவி போன்றும், தங்கை போன்றும் தசரதனுக்கு வேண்டிய காரியங்களைச் செய்து வந்தாள். "வழுவிலா அடிமை செய்ய" என்ற ஆழ்வாரின் பலவகையான கைங்கரியங்களுக்கு முன்னே கோசலையின் கைங்கரியங்கள் வெகு சாதாரணமே. ஒருபுடை ஒப்பு என்று வேண்டுமானால் சொல்லலாம்.

"செய்கிற வழுவிலா அடிமைக்குக் கௌசல்யா
அநுவிருத்தி ஒப்பாக்குகை பரிசு" (சூத். 130)

**ஆழ்வார் பலநிலைகளில் பகவானைச் சங்கமிக்கிறார்:**

ஆறு பல தலையாய்ப் பாய்ந்து கடலை நோக்கிச் செல்லும். அதுபோல ஆழ்வாரின் எல்லையற்ற பக்தியானது தாமான தன்மையாலும், நற்றாய், தோழி முதலான பலநிலைகளாலும் பகவானைச் சங்கமிக்கும்

"பெருக்காறு பல தலைத்து, கடலை நோக்குமா
போலே நெக்கு ஒசிந்து கரைந்து அலைந்து இடிந்து
உடையப் பெருகு காதல், கடல் இடம் கொண்ட கடலைப்
பஹீமுகமாக அவகாஹிக்கும்" (சூத்.131)

ஆறு பலதலையாய்ப் பாய்ந்து செல்ல, தனக்குப் புகலான கடலை நோக்கிச் சென்று புகுமாறு போலே, உடைகுலைப்பட்டு உருக்குலைந்தவராய்ப் பரவசப்பட்டவராய் நீராய் நிலை கலங்கி நெஞ்சு கட்டு அழிந்து உருக்குலைந்து போம்படி, கரை அழியப் பெருகுகிற காதலானது, ஒரு கடல் ஒரு கடலிலே சாய்ந்தாற் போலே, திருப்பாற் கடலிலே கண் வளர்ந்தருளுகின்ற பெரிய பெருமாளை பலமுகமாகச் சென்று சேரும்.

கடலிடம் கொண்ட கடல் — திருப்பாற்கடலை இடமாகக் கொண்டு அறிதுயில் புரிகின்ற பெரிய பெருமாள்; பஹீமுகமாக — பல வழிகளாக; அவகாஹிக்கும் — சேரும்

## எங்கும் காணமுடியாத பக்தி

**ஆழ்வாரின் பக்தி கட்டுக்கு அடங்காததாய்ப் பலமுகமாய் நடப்பது:**

ஆன்மா வெட்டப்படாதது; நெருப்பால் கொளுத்த முடியாதது; நீரால் நனைக்க முடியாதது; வெயிலால் உலர்த்தப்படமுடியாதது.

"எம் ஆவி ஈரும்" (திரு.9.9..6)

என்று இறைவனை நினைந்தால் என் ஆவி வெட்டுப்படும் என்கிறார்.

"வேம் எமது உயிர்" (திரு.10.3..7)

என்றதினால் எனது ஆன்மா நெருப்பில் இட்ட மெழுகாக வேகும் என்கிறார்.

"ஈரியாய் இருப்பாள்" (திரு.6.7..9)

என்றதினால் கண்ணீரும் கம்பலையுமாய் ஆன்மா ஈரம்பட்டு நிற்கும் நிலை கூறப்பட்டது.

"வேட்கை நோய் மெல்லாவி உள்உலர்த்த" (திரு..2.1..10)

என்றதினால் வேட்கை நோயானது தமது ஆவியை உலர்த்துகிறது என்கிறார். இப்படி ஆழ்வாரின் பக்தி.

*"அச்சேத்யம் என்னுமது,*
*ஈரும்வேம் ஈரியாய் உலர்த்த என்னப்பட"* (சூத். 132)

(அச்சேத்யம்— வெட்டப்படாதது)

**எங்கும் காணமுடியாத அசாதாரண பக்தி:**

அறிவில்லாத நெஞ்சமோ அறிவுடைப் பொருளின் நிலையை அடைந்து, பகவானைச் சேர்ந்த உடனே அவனைவிட்டு நீங்காது தனக்கு உரிய ஆழ்வாரிடமும் சேராமல் அங்கேயே தங்கிவிடுகிறது.

"என்னெஞ்சு என்னை, நின்னிடையேன்
அல்லேன் என்று நீங்கி, (திரு. 8.2..10)

ஏனைய புறஉறுப்புகளோ அறிவுடைப்பொருள் போன்று ஒரு உறுப்பினுடைய செயலை மற்றொரு உறுப்பு விரும்புகிறது.

பகவானிடம் அன்பின் வசப்பட்டு ஆன்மா உருக்குலைந்து போகாதபடி இருக்கக்கட்டின கரை சரீரம். ஆனால் பொன்னை உருக்கினால் அது வைக்கப்பட்ட குகையும் சேர்ந்த உருகுவது போல, அன்பும் அது தங்கியிருக்கும் இடமும் என்று இரண்டு வடிவு இல்லாமல் அன்பு தானே ஒரு வடிவு கொண்டது போல ஆழ்வார்க்கு ஆகிவிட்டது.

*"சித்தம் சித்தாய் அல்லேன் என்று நீங்க,*
*கரணங்கள் முடியானேயில் அவையாக,*
*உடலம் ஆத்மதர்மம் கொள்ள"* (சூத். 132)

இவருடைய பக்தி எந்த நூலிலும் அடங்காதது. காற்றின் தன்மை எப்பொழுதும் அசைவதாகும். உப்பங்கழியில் சதாநீர் ஏறுதலும் வடிதலும் இயல்பான ஒன்று. இயல்பான அவற்றின் தன்மையைத் தாம் பகவானைப் பிரிந்த துன்பத்தை அவையும் பெற்று ஆற்றாமையால் அங்ஙனம் செய்கின்றன என்று ஏறிட்டுக் கூறி அவற்றைக் கட்டிக்கொண்டு கதறுகின்றார்.

"எம் ஆற்றாமை சொல்லி அழுவோமை" (திரு ..2.1..4)

இவர் பக்திக்குப் பிறர் பழி தூற்றுவதே எருவாகிறது. ஒரு விதியினாலே தூண்டப்பட்டதாய், மக்களால் பின்பற்றப்படுவதாய், சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டதாய் உள்ள பக்தியன்று இவரது பக்தி. அவற்றிற்கெல்லாம் அடங்காத ஒன்று.

"காற்றும் கழியும் கட்டி அழ,
கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை
நூல்வரம்பு இல்லையே" *(சூத். 132)*

(நாம் காற்றையும், உப்பங்கழியையும் கட்டிக் கொண்டு கிடந்து கதறும் படியான, எல்லை இல்லாத பக்திக்கு நூல் பிடித்துச் செயல்புரியும்படி வரம்பு கட்ட ஒண்ணாதே அன்றோ)

## பக்தி வெளிப்பாடு:
## அகப்பொருளுக்கு உள்ளுறைப் பொருள்

ஆழ்வார் ஞான நிலையில் தாமான தன்மையாலும், அன்பு நிலையில் பெண்ணின் தன்மையாலும் பேசுவார். அப்படி பெண்பேச்சாகப் பேசுமிடத்தில் தோழி, தாய், மகள் என்று மூன்று நிலைகளில் பேசுவதன் கருத்து என்ன?

**சம்பந்த ஞானமே தோழி:**

தோழியானவள் தலைவன் தலைவியை இணைத்துச் சேர்ப்பவள். ஆன்மாவை இறைவனுடன் சேர்க்க வேண்டும். அ — இறைவன்; ம — ஆன்மா; உ — ஏகாரம். ஓம் — அ + உ + ம். ஆன்மா இறைவனுக்கே அடிமை.

'ஆன்மா இறைவனுக்கே அடிமை' என்ற சம்பந்த ஞானம் பெற்றால்தான் ஆன்மா இறைவனைச் சேரும். அப்படி சேர்ப்பவள் தோழி ஆதலால், அந்தச் சம்பந்த ஞானம் தோழி ஆவாள்.

"சம்பந்தத்தில் உணர்த்தி ஆகிற
பிரஜ்ஞாவஸ்தைக்குத் தோழி என்று பேர்" (சூத். 133)

(பிரஜ்ஞாவஸ்தை — உள்ளத்தில் ஏற்படும் நிலை)

**உபாயத்திலே உறுதி தாய்:**

தாயானவள் பெற்று வளர்க்கிறாள். மகள் தக்க வயதானவுடன் எல்லையற்ற காதலினால் தலைவனை நாடிப்போகப் பதறித் துடிக்கிறாள். தலைவி தலைவனை நோக்கிச் செல்லக்கூடாது. அது நம் குல தருமம் அன்று. தலைவன் தான் வரவேண்டும்" என்று தாய் அடக்க முனைகிறாள்.

ஆன்மா சுதந்திரமானது அன்று; அது இறைவனுக்கு அடிமை. எனவே இறைவன் தான் ஆன்மாவை ஆட்கொள்ள வேண்டும். அவனது உகப்புக்குத்தான் ஆன்மா செல்பட வேண்டும். அதுவரை ஆன்மா காத்திருக்கவேண்டும்.

நம — நான் எனக்கு உரியன் அல்லேன்; சுதந்திரன் அல்லேன்.

திருமந்திரத்தில் "நம" பதத்தாலே சொல்லப்படுகின்ற "நான் எனக்கு உரியன் அல்லேன்" என்ற உறுதிப்பாட்டினைத் தாய் விளக்குகிறாள்.

"உபாயத்தில் துணிவு ஆகிற பிரஜ்ஞாவஸ்தைக்குத் தாயார்
என்று பேர்" (சூத். 133)

**பலனில் பதற்றமாகிற மகள்:** தலைவி இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து, தலைவனுடைய அழகிலே ஈடுபட்டு, குலமரியாதையும் பாராது அவனை எப்படியும் அடைவது என்று பதறுகிறாள்.

நாராயணன் — நார + அயநன்.

— ஆன்மாக்களுக்கு + இருப்பிடமானவன்.

'நான் எம்பெருமானுக்கு உரியன்" என்றும் அவனை எப்படியும் அடையாது தரியேன் என்றும் துடிக்கும் ஆன்மாவின் நிலை தலைவியினுடையது. திருமந்திரத்தில் "நாராயணாய" என்ற பதத்தை விளக்குவது இந்நிலை.

*"பலத்தில் பதற்றம் ஆகிற*
*பிரஜ்ஞாவஸ்தைக்கு மகள் என்று பேர்"* *(சூத். 133)*

திருவெட்டெழுத்தின் முப்பழம்பொருளின் ஞானம் எப்பொழுதும் ஆழ்வாருக்கு உண்டு. இந்த மூன்று நிலைகளும் வேறுபட்டன அல்ல. ஒரே சமயத்தில் ஆழ்வார்க்கு இம்மூன்று நிலைகளும் உண்டு.

இந்த மூன்று நிலைகளும் தோழிகூற்றாக மூன்றிலும், தாய் கூற்றாக ஏழிலும் தலைவி கூற்றாக பதினேழிலும் தெரிய வருகின்றன.

**தோழிநிலை — வெறிவிலக்கல்:**

எம்பெருமானோடே இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து பிரிந்து ஆற்றாமையால்தலைவி கிடக்கின்றாள். இந்நிலை கண்டுகலங்கிய தாய்மார் நோய்க்கான காரணம் தெரியாமல் கட்டுவிச்சியை அழைத்துக் குறிகேட்டு வெறியாடச் செய்வர். தலைவியின் நிலை அறிந்த தோழி "இவள் இறைவனுக்கே உரியவள்; அவனோடு சேர்ப்பதுதான் இவள் நோயைத் தீர்க்கும் வழி. வெறியாடல் முதலியன செய்தால் இவளையே இழக்கநேரும்" என்பதனை உணர்ந்து நோய்க்கான காரணத்தைத் தாய்க கு விளக்கி வெறியாடலை விலக்குவாள்.

*"வெறிவிலக்கி"* *(சூத். 134)*

இறைவனை அடைதற்குப் பதறுகின்ற நிலையில் ஆன்மா உறுதி கலங்குகிறது. கர்மங்களைச் செய்தால் பாவம் போகும் என்பார் வார்த்தையைக் கேட்டு அதற்கான முயற்சியில் ஆன்மா ஈடுபடலாம். 'இத்துன்பம் கருமத்தால் வந்தது அன்று; பகவானால் செய்யப்படுகின்ற திருவருள் ஆகும்; கருமம் செய்தல் அதற்கு மருந்து அன்று; பகவானுக்கே அடிமை என்கிற தன்மைக்கு விரோதமாகிவிடும்" என்ற சம்பந்த ஞானம் (தோழி) பிறக்க, அவ்வுபாயம் மேற்கொள்ளாமல் தடுக்கப்படுகிறது.

*"தீர்ப்பாரையாம் இனி எங்ஙனம் நாடுதும்"* (திரு. 4.6..1)

*4* ஆம்பத்து *6*ஆம் திருவாய்மொழி முழுதும் வெறிவிலக்கலே பேசப்படும்.

**தோழிநிலை: ஆசை அறுத்தல்:**

"திருத்தொலைவில்லிமங்கலத்துப் பெருமானிடம் தலைவி ஆசை கொண்டுவிட்டாள். அவளை அங்கு அழைத்துச் சென்றவர் நீங்கள் தாம்.

அங்கிருந்து அவளை மீட்கப் பார்க்காதீர்கள். அவள் பெருமானுக்கே உரியவள். இந்தத் துன்பம் தேவையானதே. உங்கள் ஆசையை அறுத்துக் கொள்ளுங் கோள்" என்கிறாள் தோழி.

*"ஆசை அறுத்து"* *(சூத். 134)*

"துவளில் மாமணி மாடம் ஓங்கு" என்ற திருவாய்மொழி ஆசை அறுத்தலைக் கூறுகிறது. [6ஆம் பத்து .. 5ஆம் திருவாய்மொழி]

### தோழிநிலை — அறத்தொடு நிற்றல்:

தலைவிக்கு மணப்பருவம் வந்துவிட்டது அறிந்த பெற்றோர் சுயம்வரத்திற்காக மணமுரசு அறைவிக்கிறார்கள். "இந்த ஓசை காதில் விழுந்தால் தலைவி வாழ மாட்டாளே" என்று தோழி பதறிப் போய் "இவள் திருப்புலியூர் பெருமாள் மேல் காதல் கொண்டாள். அவனுடைய குணங்களையும் செயல்களையுமே பேசுகிறாள். அவனோடு சம்பந்தம் கொண்டுவிட்டாள். எனவே சுயம்வரத்தைத் தவிருங்கள்" என்று தோழி மணத்தினை விலக்கி அறத்தொடு நிற்கிறாள்.

**"கருமாணிக்க மலைமேல்"** **(திரு. 8.9..1)**

8ஆம் பத்து 9ஆம் திருவாய்மொழி முழுமையும் அறத்தொடு நிற்றலைக் கூறும்.

*"அறத்தொடு நின்ற மூன்றில் அநந்யார்ஹத்வமும் " (சூத். 134)*

ஆக இம்மூன்று திருப்பதிகங்களிலும் தோழி வெறிவிலக்கி, ஆசை அறுத்து, அறத்தொடு நிற்கிறாள். இம்மூன்றிலும் அநந்யார்ஹத்வம் (இறைவன் ஒருவனுக்கே இவ்வுயிர் அடிமை என்னும் தன்மை) தெரியும்.

இவ்வான்மா பிறர் ஒருவர்க்கு அடிமைப்பட்டதும் அன்று; தனக்குத்தானே உரியதும் அன்று; பகவானுக்கே அடிமைப்பட்டது என்று இம்மூன்று திருவாய்மொழிகளும் (முறையே 36, 55, 79 ஆவது திருவாய்மொழிகள்) சம்பந்த ஞானத்தில் பேசும் வார்த்தைகள் ஆம்.

### தாய்நிலை — உபாயத்தில் உறுதி:

(1) அடியார் குழாங்களோடு கூட முடியாமல் வாடிவிட்டாளே என்றும், (வாடிவாடும்" — திருவாய் 2.4..1)

(2) கைகழிந்தவற்றிற்கு ஆசைப்பட்டு மெலிந்து போனாளே என்றும்,

**"கண்ணன் கழல் துழாய் பொன்செய் பூண்**
**மென்முலைக்கு என்று மெலியும்"** **(திரு 4.2..1)**

(3) பெருமானோடு ஒப்பாக உள்ள பொருள்களையும், அவனோடு சம்பந்தப்பட்ட பொருள்களையும் அவனாகவே பாவித்துப் பித்தேறினாளே என்றும்,

**"என்பெண் கொடி ஏறிய பித்தே"** **(திரு ..4.4:1)**

(4) இறைவன் இவள் மேல் வந்து ஆவேசம் கொண்டானே என நினையுமாறு இவள் பேசுகிறாளே என்றும்,

"ஈசன் வந்தேறக் கொலோ" (திரு .. 5.6:1)

(5) பகவானைப் பிரிந்தமையாலே கட்டு இழந்தாளே என்றும்,

"கற்புடையாட்டி இழந்தது கட்டே" (திரு.6.6:1)

(6) எனக்கு உதவாது போனாளே என்று அகன்றும்,

"இன்று எனக்கு உதவாது அகன்று" (திரு...6.7:1)

(7) அவனைக்கிட்டி அவன் திருமுன்னர் முடிய வேண்டும் என்று உறுதி பூண்டுள்ளாளே என்றும்

"சந்தித்து உன் சரணம் சார்வதே
வலித்த தையலை (திரு 7.2:1)

இவ்வாறு எல்லாம் ஏழுநிலைகளில் தாய் அஞ்சி முறையிட்டு "இப்படி இவளைத் துடிக்க விடுதல் முறையோ? கருணையோ? பாதுகாக்கும் தன்மைதானோ?" என்று ஏழு திருவாய் மொழிகளில் கூப்பிடுகிறாள். இவை உபாயத்திலே உறுதி பூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுக்கள் ஆம்.

"வாடி, மெலிந்து பித்தேறி, ஏறப்பேசிக், கட்டிழந்து, அகன்று, சார்வதே வலித்தமை சாதனம் ஆமோ என்று மாதா அஞ்சி முறைப்பட்டு முறை இடுகிற ஏழில் அத்யவசாயமும்" (சூத். 134)

அத்யவசாயம் — உபாயத்தில் உறுதி).

**தலைவிநிலை — இறைவனை அடைய அவசரப்படுதல்:**

(1) "அஞ்சிறைய மடநாராய்" (1.4:1) (பாற்கடலில் தூது)

(2) "வைகல் பூங்கழிவாய் வந்து" (6.1:1) (அவதாரத்தில் தூது)

(3) "பொன்னுலகாளீரோ" (6.8:1) (பரத்துவம் அந்தர்யாமித்துவத்தில் தூது)

(4) "எங்கானல் அகன் கழிவாய்" (9.7:1) அர்ச்சாவதாரத்தில் தூது)

என்கிற நான்கு திருவாய்மொழிகளிலும் அவன் வருகிற வரையிலும் இருந்து பார்ப்பதற்குப் பொறாமல் பதறித் தலைவி தூது விடுகிறாள்.

"புத்திரி பலகால் ஆள்விட்டு" (சூத். 134)

(5) "ஆற்றாமை சொல்லி அழுவோமை" (2.1:1)

உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் தன்னைப் போலவே பகவானைப் பிரிந்து துக்கப்படுகின்றன என்று அழுகின்றாள்.

"ஆற்றாமை சொல்லி" (சூத். 134)

(6) "மாறாளன் கவராத மணிமாமை குறையிலம்" (4.8:1)

பகவானால் ஏற்றுக்கொள்ளப்படாத — அவன் விரும்பாத மாமை,

உடம்பு, உயிர், ஆடை அணிகள் ஆகிய அனைத்தையும் தேவையல்ல என்று வெறுத்து ஒதுக்குகிறாள்.

"கவராதவை விட்டு" *(சூத். 134)*

*(7)* "நாடும் இரைக்கவே யாம் மடல் ஊர்தும்" *(5.3:1)*

"உலகம் தூற்றினாலும் பரவாயில்லை; நான் மடல் ஏறுவேன்" என்கிறாள் தலைவி.

"இரைக்க மடல் எடுத்து" *(சூத். 134)*

*(8)* "பின்நின்ற காதல் நோய் நெஞ்சம் பெரிதடுமால் முன்நின்று இராஊழி கண்புதைய மூடிற்றால்" *(5.4:1)* என்ற திருவாய் மொழியில், "காதல் நோயும், நீண்ட நெடிய இரவும் என்னைத் துன்புறுத்துவதே நோக்கமாகக் கொண்டு வருத்துகின்றனவே" என்று அலமருகின்றாள்.

"கண் புதையப் போக்கற்று" *(சூத். 134)*

*(9)* "சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோர் உரு என் நெஞ்சுள் எழும்" *(5.5:1)* என்ற திருவாய்மொழியில் எம்பெருமான் திருவுருவம் உருவெளிக்காட்சியாய்த் தலைவியாகிய தனக்குத் தெரிவதை வெளிப்படுத்துகிறாள்.

"உருநெஞ்சுள் எழ" *(சூத். 134)*

*(10)* "திருவல்லவாழ் உறையும் கோனாரை அடியேன் அடிகூடுவது என்றுகொல்" *(5.9:1)* அவனைக் கூடும் நாளைப் பிரார்த்தித்து அவனை என்றுகூடுவோமோ என்று ஏங்குகிறாள்.

"கூடுநாள் தேடி" *(சூத். 134)*

*(11)* "போகுநம்பி" *(6.2:1)*

எம்பெருமான் காலம் தாழ்த்தி வந்தமைக்காக ஊடுகிறாள்.

"தாழ்த்ததுக்குஊடி" *(சூத். 134)*

12) "என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்
இனி யாரைக் கொண்டு என் உசாகோ" *(7.3..1)*

என் துன்பத்தை நெஞ்சிடம் சொல்லி ஆற்றலாம் எனில் என் நெஞ்சையும் அவரிடம் பறி கொடுத்தமையால் அதுவும் அவர் பக்கலில் நின்றது. யாரிடம் கூறி என் துன்பத்தை ஆற்றுவேன்" என்கிறாள்.

"உசாத்துணை அற்று" *(சூத். 134)*

13) "கண்ணன் கோளிழை வாண்முகமாய்க்
கொடியேன் உயிர் கொள்கின்றதே" *(7.7..1)*

பகவான் உருவெளித் தோற்றம் தலைவிக்குத் தெரிகிறது. பார்க்கின்ற பொருள்கள் எல்லாம் பகவானை நினைவுபடுத்தி அவளைத் துன்புறுத்துகின்றன.

"சூழவும் பகைமுகம் செய்ய" *(சூத். 134)*

14) "காலம் பலசென்றும் காண்பது ஆணை
உங்களோடு எங்கள் இடை இல்லை" (8.2..7)

நலம் சொல்கின்ற தாய், தோழி ஆகியோரை மீறுகின்றாள்.

"தடை நில்லாதே" *(சூத். 134)*

15) "இழைநல்ல ஆக்கையும் பையவே புயக்கற்றது" *(9.5..1)*

போலியான பொருள்களைக் கண்டு நோகிறாள்.

"புயக்கற்று" *(சூத். 134)*

16) "மல்லிகை கமழ் தென்றல்" *(9.9..1)*

மாலைநேரத்தில் பசுக்கூட்டங்கள் வனத்தில் மேய்ந்து திரும்புகையில் அவற்றுடன் போன கண்ணன் வரக்காணாமல் துன்புறுகின்றாள்.

"மாலை பூசலிடுகிற" *(சூத். 134)*

17) "வேய்மருதோளிணை" *(10.3..1)*

"காலைப் பொழுதில் கண்ணன் பசுமேய்க்கப் போவானே அவனைக் காண இயலாதே" என்று புலம்புகின்றாள்.

"காலை பூசலிடுகிற" *(சூத். 134)*

ஆக பதினேழு திருவாய்மொழிகளில் தலைவனைக் கூடும் தலைவியின் அவசரம் தெரியும்.

"புத்திரி பலகால் ஆள்விட்டு, ஆற்றாமை சொல்லி, கவராதவைவிட்டு இரைக்க மடல் எடுத்து, கண்புதையப் போக்கற்று, உருநெஞ்சுள் எழ, கூடுநாள் தேடி, தாழ்த்ததுக்கு ஊடி, உசாத்துணை அற்று, சூழவும் பகைமுகம் செய்ய, தடைநில்லாதே, புயக்கற்று, மாலையும் காலையும் பூசலிடுகிற, பதினேழில் த்வரையும் தெரியும். *(சூத். 134)*

(த்வரை — அவசரம்)

இதனால் நம்மாழ்வார் அருளிய அகத்துறைத் திருவாய் மொழிகள் இருபத்தேழுக்கும் தெளிவு கூறப்பட்டது.

### தோழிமார் என்ற பன்மை:

தோழி என்று சொல்லாமல் தோழிமார் என்று பன்மையில் சொல்வானேன்? ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் உள்ள சம்பந்தம் ரக்ஷகத்வம் (காப்பாற்றப் படுதல்), சேஷித்வம் (தலைவனாயிருத்தல்). காரணத்துவம் (தோற்றத்துக்கு அடிப்படையாக இருத்தல்), சரீரித்வம் (ஆத்மாவை சரீரமாகக் கொண்டு இருத்தல்) முதலான ஒன்பது வகையான சம்பந்தங்களைக் கொண்டு இருத்தலால் அந்தந்தச் சம்பந்தங்களைப் பற்றிய ஞானங்களைக் குறிக்கத் 'தோழிமார்' என்றார்.

"தோழிமார் என்ற பன்மை
ரக்ஷகத்வாதிபந்த
புத்தி பேதத்தாலே" *(சூத். 135)*

*(தோழிமார் என்ற பன்மை இரக்ஷகத்வம் முதலான சம்பந்தங்களைப் பற்றிய ஞானத்தின் வேற்றுமையாலே)*

**தாய்மார் என்ற பன்மை:**

தாய் என்று கூறாமல் தாய்மார் என்று கூறுவானேன்? வாத்சல்யம் (கன்றின் உடலில் உள்ள அழுக்கை நக்கித் தின்னும் பசுவினைப் போன்று அடியார்களின் குற்றங்களை இனியனவாகக் கொள்ளுதல்), ஸ்வாமித்வம் (எல்லாப் பொருள்களுக்கும் இறைவனாக இருத்தல்), சௌசீல்யம் (பெரியவன் தாழ்ந்தவர்களுடன் கலக்கும் தன்மை), சௌலப்யம் (எளிவந்ததன்மை); ஞானம் (எல்லாவற்றையும் ஒரு காலே எப்பொழுதும் உள்ளபடி அறிதல்) சக்தி (பொருந்தாதவற்றையும் பொருந்துவிக்கும் ஆற்றல்), கிருபை (துன்பப்படுகிறவர்களைக் கண்டு ஐயோ என் இரங்குதல்) ஆகிய பல்வேறு குணங்களால் ஆன்மா இறைவனிடத்தில் ஈடுபடுவதால் அந்த வேற்றுமைகளை வெளிப்படுத்தத் தாய்மார்" என்ற பன்மையில் கூறினார்.

"அன்னையர் என்ற பன்மை
வாத்சல்யாதி வியவசாய
புத்தி பேதத்தாலே" *(சூத். 135)*

*(வாத்சல்யம் முதலானவற்றைப் பற்றி வரும் ஞானத்தின் வேற்றுமையால்)*

**பேதை முதல் பேரிளம் பெண்வரை எழுநிலைகள்:**

தலைவி கூற்றாக ஆழ்வார் பாடல்களைச் சொன்னது சரி. ஒரு பெண்ணுக்குப் பேதை முதல் பேரிளம்பெண் வரை ஏழுநிலைகள் உண்டே! பராங்குச நாயகியாகிய ஆழ்வார்க்கு அந்த ஏழு நிலைகள் உண்டா?

பொருளைப் பார்த்தவுடன் பிறக்கும் ஆசை அபிலாஷை ஆகும். இது பேதை நிலை. பார்த்த அந்தப் பொருளைப் பற்றிய நினைவு சிந்தனை ஆகும். இது பெதும்பை நிலை. அந்த நினைவு இடைவிடாமல் இருத்தல் அநுஸ்மிருதி ஆகும். இது மங்கைநிலை. அப்பொருளை அவசியம் அனுபவித்தே தீர வேண்டும் என்ற ஆசை இச்சை ஆகும். இது மடந்தை நிலை. அந்த இச்சை அந்தப் பொருளை அனுபவித்தால் தான் தீருமே ஒழிய அதற்கு மாற்றாக இன்னொரு பொருளால் தீர்க்கமுடியாது. இது ருசி ஆகும். இது அரிவை நிலை. அப்பொருளை அடைதல் இன்பம்; அதனைப் பிரிதல் துன்பம். இது பரபக்தி. இது தெரிவைநிலை. அப்பொருளைப் பிரிந்தால் மூச்சு அடங்குதல் பரமபக்தி ஆகும். இது

பேரிளம் பெண்நிலை. எனவே பராங்குச நாயகிக்குப் பேதைமுதல் பேரிளம் பெண் வரை ஏழுநிலைகளும் உண்டு.

> "அபிலாஷா, சிந்தனா, அநுஸ்மிருதி, இச்சா, ருசி, பர,
> பரமபக்திகளிலே பேதை முதலான
> பருவம் கொள்ளும்" *(சூத். 136)*

**தலைமகளின் உறுப்புகளுக்கு உள்ளுறை உவமம்:**

அடுத்து ஆத்ம சொரூபத்தை வருணிக்கிறார். தலைவியின் உறுப்புகளுக்கு உள்ளுறை உவமம் கூறுகிறார். பெண்கள் தலைமயிரை விரித்துப் பரப்பியிருக்கும் அழகுபற்றி 'மயில்' என்கிறார். இது ஆன்மாவின் ஞானவிரிவு ஆகும்.

தலைமகளின் நெற்றியைப் பிறையாகச் சொல்வார். பிறை வெண்மையானது; தூய்மையானது; குற்றமற்றது. தலைமகள் இறைவனுக்கே வசம் ஆனவள்; வேறுயார்க்கும் வசமானவள் அல்லள்; ஏன், தனக்குக் கூட வசமானவள் அல்லள். ஆக தனக்குத்தானே வசப்பட்டிருத்தல், பிறர்க்கு உரியளாதல் என்ற குற்றங்கள் நீங்கிய தலைமகளின் தூய்மை நிலை பிறைக்கு உள்ளுறைப் பொருள் ஆகும்.

புருவம் வளைந்து இருப்பதால் வில்லாகச் சொல்லப்படுகிறது. பராங்குசநாயகி புறக்கரணங்களையும் அகக்கரணங்களையும் அடக்கி ஆளுகிறாள். அந்த அடக்கம் தாந்தி ஆகும். "தாந்தி" புருவத்துக்கு உள்ளுறைப் பொருள்.

(தாந்தி — ஐம்பொறிகளையும் மனத்தையும் அடக்குதல்)

கண்பார்வை குறித்த இலக்கிலே சென்று தைக்கும், எனவே கண்கள் அம்பு என்று சொல்லப்படுகின்றன. பராங்குச நாயகி தனக்கு அடைத்த (உரியது என்று வரையறுத்த) பொருளையே பற்றுகின்ற ஞானத்தை உடையவள். "ஞானம்" கண்ணுக்கு உள்ளுறை.

முறுவலை முத்தாகச் சொல்வார்கள். 'முத் என்பதும் பிரீதி என்பதும், பிரமத: என்பதும் ஆனந்தம் என்னும் பொருளின" என்பது அமரம். (நிகண்டு) எனவே முத்து என்பது கிடைத்த பொருளை அனுபவிக்கும் ஆனந்தத்திற்கு உள்ளுறை.

உதடு செந்நிறமாக இருப்பதனால் பவளம் என்று சொல்லப்படுகிறது.

அனுபவிக்கப்படும் பொருளின் காரணமாக வரும் அன்புக்கு உள்ளுறை.

செப்பு — முலை; இறைவன் விரும்பி மேல் விழும்படி பரிபக்குவமான பக்திக்கு உள்ளுறை,

இடை நுண்மையாக இருப்பதனால் மின்னல் எனப்படுகிறது. ஆன்ம சொரூபத்தின் அணுத்தன்மைக்கு இடை உள்ளுறை.

அல்குலின் அழகு அனுபவிக்கிறவனுக்கு இனியபொருள். இங்கு இறைவனுக்கு இனிய பொர்ருளாக இருக்கிற ஆன்மாவினுடைய இனிமையை அல்குல் உள்ளுறையாகச் சொல்கிறது.

நடை அழகு அன்னத்திற்கு உவமை. இறைவனும் அவன் அடியார்களும் சிறப்பித்துப் பேசும்படி சொரூபத்திற்குத் தகுதியாக நடக்கிற ஒழுக்கத்திற்குத் நடை உள்ளுறைப்பொருள்.

தலைமகளின் புற உறுப்புகள் எல்லாம் அவளுடைய அகப்பண்புகளுக்கு உவமையாக வகுத்துச் சொல்லப்பட்டன.

**“மயில், பிறை, வில், அம்பு, முத்து, பவளம், செப்பு, மீன், தேர், அன்னம்.**
***(1) (2) (3) (4) (5) (6) (7) (8) (9) (10)***

**விகாச, சுத்தி, தாந்தி, ஞான, ஆனந்த, அனுராக, பக்தி, அணுத்வ,**
***(1) (2) (3) (4) (5) (6) (7) (8)***
**போக்யதா, கதிகளைஉடைய**
***(9) (10)***

**அகமேனியின் வகுப்பு”** ***(சூத். 137)***

*1+1 மயில் விகாசம்; 2+2 பிறை சுத்தி என்று இப்படியே 3+3; 4+4.... 10+10 கொண்டு கூட்டிப் படிக்க (செப்பு — செப்பு அன்னமுலை; விகாசம் — ஞான விரிவு; அநுராகம் — அன்பு; கதி — நடக்கையாகிற ஒழுக்கம்)*

## தோழி, தாய், நிலைகளில் உள்ள செயல் வேறுபாடுகள்

“தலைமகளைக் கொண்டுபோய் எம்பெருமானுக்கு அகப்படுத்தி விட்டீர்களே” என்று செவிலி தோழியைப் பழிசொல்வாள். “தலைமகளை எம்பெருமாள் வாழும் தொலைவில்லிமங்கலத்தில் கொண்டு போய்விட்டது நீங்கள் தானே” என்று தோழி செவிலி மேல் பழி போடுவாள்.

**“சூழ்ச்சி அகற்றினீர் என்னும்பழி** ***(சூத்.138)***

“இணக்குப் பார்வையாய் நின்று எம்பெருமான் பக்கலிலே அகப்படுத்தின தோழிமாரால் வந்த ஆபத்து அன்றோ இது “என்பாள் தாய்!” “எம்பெருமானை எனக்குக் காட்டியதே தாய்மார்தானே; இப்பொழுது நொந்து என் பயன்” என்ற தலைமகளின் பழி இருவர்க்கும் பொருந்தும்.

**“இணக்கி எங்ஙனே என்னும் மேலெழுத்து”** ***(சூத்.138)***

“இதற்கு முன்னால் ஒருவர் கண்ணும் படாமல் வளர்ந்தாயே! இப்பொழுது எல்லோரும் காணுமாறு புறப்பட்டு முன்னே வந்து நிற்கிறாயே” என்று தாய்மாரோடு சேர்ந்துகொண்டு தோழி தலைமகளைக் கடிந்து கொள்வாள். பிறிதொருசமயம் தலைமகளுடன் சேர்ந்துகொண்டு சகாயமாகப் பேசுவாள். இப்படித் தோழி இரண்டு பக்கமும் பேசுவாள்.

"முன்னின்றாய் இவளை நீர் என்னும்
இருபடை மெய்க்காட்டு" (சூத்.138)

(இருபடை மெய்க்காட்டு — இரண்டு பக்கங்களிலும் சேரந்து பேசுதல்; ஒரு சமயம் தாய் பக்கம் சேர்ந்து கொண்டு தலைவியை முனிவது. ஒருசமயம் தலைவி பக்கம் சேர்ந்து கொண்டு தாயை வெறுப்பது).

## தலைமகள் நிலையில் உள்ள செயல் வேறுபாடுகள்:

"எம்பெருமானைப் பிரிந்த தாபத்தில் நான் வருந்தி இரவு முழுதும் தூங்காமல் கண் விழித்திருக்க, தாய்மாரும் தோழிமாரும் என்னைத் தேற்றாமல் நன்றாகக் கண்ணுறக்கம் கொள்கிறார்களே! அவர்களோடு இனி எனக்கு என்ன உறவு? அது மட்டுமன்று; என்னை இதிலிருந்து மீட்க நினைக்கிறார்களே! இது என்ன கொடுமை! தாய்மாரும், தோழிமாரும் ஆகிய உங்களுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை" என்று தாய், தோழி இருவரையும் தலைவி உதறுகிறாள்.

"நீர் என்னே என்னும் உடன்பாடு,
இடையில்லை என்னும் உதறுதல்" (சூத். 138)

(உடன்பாடு — உறவு கொண்டாடுதல்)

## தோழி, தாய்பாராட்டு:

"எம்பெருமானுடைய திருப்பெயரைப் பலகாலும் சொல்லித் தலைவி உருக்குலைந்து அழிகின்றாளே" என்று தலைவியின் காதலைத் தோழி கொண்டாடுவாள். 'பகவான் மேல் கொண்ட பரமபக்தியினால் அவன் வசிக்கின்ற இடத்திற்கே நடந்து சென்றாள்" என்று தாய்மாரும் கொண்டாடுவர்.

"இருந்து இருந்து நடந்தாள் என்னும் கொண்டாட்டம்"
(சூத்.138)

சம்பந்த ஞானம், உபாயத்தில் துணிவு, பேற்றில் பதற்றம் ஆகிய மூன்று நிலைகளின் செயல் விசேடங்கள் கூறப்பட்டன.

அவாஸ்தாத்ரய வ்ருத்தி (சூத்.138)

தாய், மகள் நிலைகளில் பகைவர்கள், உறவினர்கள்: இம்மூன்று நிலைகளிலும், தாய், மகள் என்ற நிலைகளில் அவர்களுக்குப் பகைவர்கள் யாவர்? உறவினர்கள் யாவர்? இறைவனை அடைவதிலே நான்கு வகையினர் இருக்கின்றனர்.

(1) செய்யப்படுகின்ற சாதனங்களில் ஊன்றி நிற்கின்ற பெரியோர், இவர்கள் சாத்திய சாதன நிஷ்டர் (சாதனங்கள் — கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம்)

(2)இறைவனையே சாதனமாகக் — வேறு சாதனங்கள் எதுவும் கொள்ளாமல் — கொண்டவர்கள். இவர்கள்சித்த சாதன நிஷ்டர்கள்.

(3) இறைவனேவழி என்பவர். இவர் சித்த சாதனபரர்.

*(4)* இறைவனே பேறு என்பவர். இவர் சாத்திய பரர்.

தாய் சாத்ய சாதன நிஷ்டரை விரோதிகள் ஆகவும், சித்த சாதன நிஷ்டரை உறவினராகவும் கூறுனாள்.

மகள் சித்த சாதன பரபரை ஏதலராகவும் சாத்திய பரரை உறவினராகவும் கூறுவாள்.

தாயார் ஏதலர் என்னும் சாத்ய சாதன நிஷ்டரை;
தாயார் உற்றீர் என்னும் சித்த சாதன நிஷ்டரை;
மகள்நம்முடைய செல்வர் என்னும் சித்த சாதந பரரை;
மகள் யாமுடைத் துணை என்னும், சாத்திய பரரை *(சூத். 139)*

**நாலயலார், அயற்சேரியார் — உள்ளுறை:**

நாலயலார் — கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம் என்னும் நால்வகை உபாயங்களில் ஊன்றியிருப்பவர். இவர் உபாயசதுஷ்டயபரர். அயற்சேரியார் — அர்ச்சாவதாரம் முதலாக பகவானின் ஐந்து நிலைகளில் ஈடுபடாது, பிரமன், சிவன் முதலான பிற தெய்வங்களின் மூலமாக — அத்தெய்வங்களிலும் அந்தர்யாமியாக மறைந்திருக்கும் பெருமானிடம் ஈடுபடுவர். இவர் அந்தர்யாமித்வ பரர்.

"நாலயலார் அயற்சேரியார்
உபாயசதுஷ்டய அந்தர்யாமித்வ பரர்" *(சூத். 140)*

(உபாயசதுஷ்டயம் — மேலே குறிப்பிட்டுள் கருமயோகம் முதலான நான்கு உபாயங்கள்; அந்தர்யாமித்வம் — சிவன், பிரமன் முதலிய தேவர்களுக்கு உள்ளுயிராய் நிற்றல்)

**புறப்பகை:** செயலும், காட்சியும் அனுபவமும் ஆகிய கர்மயோகமும், ஞானயோகமும் பக்தியோகமும் புறப்பகைகள்.

**கீழை:**

"கீழையகத்துத் தயிர் கடைய" (பெருமாள் திருமொழி 6:2.2)

இது செயல் — கர்மயோகம்.

**மேலை:**

"மேலையகத்து நங்காய் வந்து காண்மின்கள்" (பெரிய திருமொழி 10.7.2)

இது காட்சி — ஞானயோகம்.

**வடக்கு:**

வடக்கிலம்புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையாள்
ஒரு கன்னியை வேற்றுருவம் செய்து வைத்த"
(பெரியாழ்வார் திருமொழி 3.1.2)

இது அனுபவம் — பக்தியோகம்.

கீழை, மேலை, வடக்கு என்றும் வருகின்ற பாசுரங்களில் சொல்லப்படுகின்ற செயல், காட்சி, அனுபவம் உட்பகையாகும்

"கீழை மேலை வடக்கில் அவை புறம்பு அசல் ஆக" *(சூத்.141)*

**உட்பகை:** தானே இறைவனைப் பற்றுவது உட்பகை. இறைவன் வந்து

பற்ற வேண்டும். நாமாகப் போய்ப் பற்றக் கூடாது.

**"தன்பற்று உள் அசல்"** *(சூத். 141)*

*(உள்அசல் — உட்பகை)*

**ஊரார், நாட்டார், உலகர்க்கு உள்ளுறை:**

"ஊரார்" என்பவர் கேவலர் அதாவது ஆன்ம இன்பத்தை விரும்புபவர். "நாட்டார்" என்பவர் ஐச்வர்ய காமர்; அதாவது உலக இன்பத்தை விரும்புவர். உலகார் என்பார் ஸ்வதந்திரர். அதாவது சொர்க்கத்தை விரும்புபவர்.

**"ஊரார் நாட்டார் உலகர்**
**கேவல ஐச்வர்யகாம ஸ்வதந்த்ரர்"** *(சூத். 142)*

கேவலரை ஊரார் எனலாமா? கைவல்ய இன்பம் அணு அளவினதான ஆன்மாவில் அனுபவம். சிறு அளவிற்று அறிய முடியாத பரம்பொருள் அனுபவம் அன்று, எனவே கைவல்ய இன்பம் அனுபவிப்பார்க்குக் கிடைப்பது குறைந்த வடிவினதான மோட்சமே. இவர்கள் முதுமை, மரணம் ஆகியவற்றிலிருந்து விடுபட விரும்புவார்கள். அதற்கான முயற்சிகளைச் செய்கின்றனர். அப்படிப்பட்டவர்கள் தங்கும் இடம் என்பதினால் சரியே.

**"இறுகல் இறப்புக்கும்**
**இறந்தால் தங்கும் ஊர் ஒக்குமே"** *(சூத். 143)*

*(இறுகல் இறப்பு — கைவல்ய மோட்சம்; இறுகல் — குறைந்த; இறப்பு — மோட்சம்)*

**'சுளகு'க்கு உள்ளுறை:** 'சுளகு' என்றால் முறம். புடைக்கும்பொழுது முறம் சிறுமணலையும் பெருமணலையும் பிரிக்கின்றது. அதுபோலத் தேகம் வேறு ஆன்மா வேறு என்று பகுத்தறியும் கருவி.

**"சிறு சுளகு மணலும் கொண்டு"** *(நாச்சியார் திருமொழி 2:8)*
**"சிறு சுளகு"** *(சூத். 144)*

பிற தெய்வங்களையும், சர்வேச்வரனையும் பிரித்து அறிகிறார். ஆன்மா வேறு; பரமாத்மா வேறு என்றும் பிரித்தறியும் கருவியான பிரமாணம்.

**"சீரார் சுளகில் சில நெல் பிடித்தெறியா"** *(சிறிய திருமடல் — 21)*
**"சீரார் சுளகு"** *(சூத். 144)*
**"சிறுசீரார் சுளகுகள், உபயவிவேக பரிகரம்"** *(சூத். 144)*

*(உபயவிவேகம் — கொள்ளத்தக்கது இது, தள்ளத்தக்க இது என்று பகுத்தறியும் அறிவு; பரிகரம் — உபகரணம்).*

**மாலை, கங்குல், காலைக்கு உள்ளுறை:** மாலையாவது இராஜச ஞானம். மாலை நேரம் ஆசையை வளர்க்கும். பொருள்கள் தெளிவாக விளங்கா. மாறுபட்ட எண்ணத்திற்கு உறுப்பு ஆகும். அதேபோல இராஜச ஞானம் பொருள்களில் மாறுபட்ட உணர்வுக்கு உறுப்பாக இருக்கும்.

*"மாலை ரஜஸ்"* *(சூத். 145)*

கங்குலாவது தாமச ஞானம். கங்குலில் பொருள்கள் ஒன்றும் தோன்றா. அப்படி ஏதேனும் தோன்றினால் விபரீதமாகத் தோன்றும்படி இருள்மூடி இருக்கும். தாமச ஞானம் அறியத்தக்க பொருள்களை அறிவிக்காமல் திரிபுணர்ச்சியைப் பிறப்பிக்கும்.

*"கங்குல் தமஸ்"* *(சூத். 145)*

காலையாவது சாத்விக ஞானம். காலை பிரஹ்ம முகூர்த்தமானது, சத்துவ குணத்தை வளர்ப்பது. இருள்நீங்கி வெளிச்சம் வருதலால் பொருள்களை உள்ளவாறு உணரலாம். பொருள்களை உள்ளவாறு, உணர்வது சாத்விக ஞானம்.

*"காலை ஸத்வ"* *(சூத். 145)*

பகலானது சுத்த சத்துவம். பகலாவது ஐயஉணர்ச்சி திரிபுணர்ச்சிகட்கு இடமின்றிப் பொருள்களைத் தெளிவாகக் காட்டும் காலம். சர்வேச்வரனைத் தெளிவாகக் காட்டும் காலம். சர்வேச்வரனைத் தெளிய அறிகின்ற சுத்த சத்துவ ஞானம் ஆகும்.

*"பகல் சுத்த சத்வஞானம்"*
*"மாலை கங்குல் காலை பகல்*
*ரஜஸ் தமஸ் ஸத்வ சுத்தஸத்வ ஞானங்கள்"* *(சூத். 145)*

***நிலாமுற்றம்:***

***"நீணிலா முற்றத்து நின்று இவள் நோக்கினாள்"*** *(பெரிய திருமொழி 8.2:2)*

என்பார் ஆழ்வார். நிலா முற்றம் என்றால் மொட்டை மாடி மட்டுமா? திருமந்திரத்தினுடைய உயர்ந்த ஞானமாகிய மாடி அன்றோ அது! தீர்ந்த ஞானியானவன் அறிவில்லாமல் வருத்தப்படுகின்ற இவ்வுலக மக்களை மலைமேலிருந்து பார்க்கிறான் என்றெல்லாம் உள்ளுறைப் பொருள் அமைகிறது. சர்வேச்வரன் சம்பந்தமுடைய பொருளை அடையத் தக்க பேறுகளில் மிக உயர்ந்த பேறு அன்றோ இது! பிறரும் வணங்கும்படி எல்லை நிலமான பேற்றின் ஞானமே நிலாமுற்றம்.

*"நிலாமுற்றம், பிரஜ்ஞாப்ராசாதம் என்னும்*
*எல்லை நிலம்"* *(சூத். 146)*

*(பிரஜ்ஞா — ஞானம்; பிராசாதம் — மாடி; உயர்ந்த நிலம்).*

***கலை, வளை:***

***"கைவளையும் மேபலையும் காணேன்"*** ***(திருநெடுந்தாண்டகம் 22)***

என்பார் ஆழ்வார். வளை என்பது 'யான்' எனும் அகங்காரம். மேகலை என்பது 'எனது' எனும் மமகாரம். பகவானை அடையத் தடையாக இருப்பன "யான் எனது" எனும் அகங்கார மமகாரமே. இரண்டுமே கழன்று போனரல் பகவானை அடைய வேண்டியது தானே!

***"ஈண்டிய சங்கும் நிறையும் கொள்வான்"*** ***(திரு 8.2..2)***

என்பார் ஆழ்வார்.

"கலைவளை அஹம் மமக்ருதிகள்" (சூத். 147)

(அஹம் கிருதி, மமகிருதி — அகங்கார மமகாரங்கள்)

**பட்டம், சூடகம்:**

"பட்டம் கட்டிப் பொற்றோடு பெய்து இவள்
பாடகமும் சிலம்பும் இட்டமாக
வளர்த்தெடுத்தேனுக்கு" (பெரியாழ்வார் திருமொழி 3.7..6)

பட்டம் சூடகம் ஆகியவை உடம்புக்கு அணிகலன்கள் அல்ல; ஆசாரியன் பூட்டுகின்ற ஆத்ம அலங்காரங்கள்.

கண்ணபிரான் திருவடிகளில் அணிந்த திருத்துழாய்மாலை கிரீடம் ஆகும். அவனைச் சேவிப்பது பட்டாடை; அவனைக் கை கூப்பி வணங்குவது வளையல்; அவன் சரித்திரங்களைக் கேட்பது குண்டலங்கள்.

"பட்டம் சூடகமாவன, பராவரம் குருக்கள்
பூட்டும் ஆத்ம பூஷணங்கள்" (சூத். 148)

(பர.அவரம் — பராவரம்; முன்னரும், பின்னரும் முன்னர் என்றது, பஞ்சசம்ஸ்காரம் செய்கின்ற காலம்; பின்வர் என்றது பஞ்சசம்ஸ்காரம் செய்து அடியவன் ஆனபின்னர்).

**பந்து, கழல் முதலான விளையாட்டுக் கருவிகள், இனிய பொருள்கள்:**

பந்து, கழல், பாவை, யாழ், தென்றல், மதியம், அடிசில், சாந்தம், பூண், அகில், சிற்றில், தூதை (பானை) என்றெல்லாம் வருகின்ற விளையாட்டுக்கருவிகள், இனிய பொருள்கள், இன்ப நுகர்ச்சிக்குரிய பொருள்கள் — ஆகிய இவற்றிற்கு உள்ளுறைப் பொருள் என்ன?

"பந்து கழல் பாவை குழமணன் யாழ் தென்றல்
மதியம் அடிசில் சாந்தம் பூண்
அகில் சிற்றில் தூதை முதலாவன" (சூத்.149)

இராஜசம், சாத்துவிகம், தாமசம் ஆகிய முக்குணங்களாகிய செந்நூல் வெண்ணூல், கருநூல் என்ற கரும சூத்திரத்தாலே கட்டி, விளையாட்டுக்கு உரிய பந்து போல் இருக்கிற உயிர்களைக் கொண்டு இறைவன் விளையாடுகிறான். இந்த உயிர் அறிவு இல்லாததாய்த் தான் செய்த கருமங்களுக்கு ஏற்ப மேலுலகமும், கீழுலகமும் போய்ப் போய் வருகின்றது.

"குணத்ரய விசித்ர கர்ம சூத்ரத்தாலே கட்டி
லீலையாகப் பிரேரிக்க" (சூத். 149)

(குணத்ரய — சத்வ இராஜச தாமசமாகிய முக்குணங்கள்; பிரேரித்தல் — ஏவுதல்)

இவ்விதமாக உயிர் சம்சாரமாகிற சக்கரத்தில் இருந்து கொண்டும், தான் செய்த கருமங்களினால் சக்கரத்தின் சுழற்சிபோல் சுழன்று கொண்டும் இருக்கின்றது. சர்வேச்வரன் அதனுடைய போகத்திற்குத் தடை என்று அதனிடமிருந்து வலிய விடுவிக்க விடுபடுகிறது.

"விழுந்து எழுந்தும் சுழன்று உழன்றும் பறிபட்டும்" *(சூத். 149)*

இந்தச் சம்சார சாகரம் — இந்த உலக இன்ப துன்பங்கள் — அல்ப சாரங்கள் ஆகும். பகவானை நெருங்க ஒட்டாதபடி தடுக்கும். சுவை சிறிதே உள்ளவாய் இருக்கும். இந்த உலகப் பொருள்கள் — இன்ப துன்பங்கள் — எல்லாம் 'எனக்கு உரியது' என்ற நிலையில் விடத்தக்கன. ஆனால் இவையே இறைவனுடைய உடைமைப் பொருள்கள் என்று இறைவனோடு சம்பந்தப்படுத்திப் பார்க்கும்பொழுது கொள்ளத் தக்கவை ஆகும்.

"அற்ப சாரமாம் அவையுமாய், மதியம் என்னில்
விட்டகலவும், ததியம் என்னில் இகழ்வறவும்" *(சூத். 149)*

*(மதியம் — என்னைச் சேர்ந்தது; ததியம் — இறைவனைச் சேர்ந்தது)*

பகவானோடு தொடர்பு இல்லாத நேரத்தில் அப்பொருள்கள் பகையாகத் தோற்றமளிக்கின்றன. பகவானோடு சேர்த்துப் பார்க்கும்பொழுது இனியவையாக இருக்கின்றன. வாடைக்காற்று பகவானோடு கூடிய காலத்திலே தண்ணென்று இருக்கவும், பிரிந்த காலத்தில் எரிவீசவும் செய்கிறது.

"அவ்வாடை ஈதோ வந்து தண்ணென்றதே" *(திருவிரு 27)*
தண்வாடை இக்காலம் இவ்வூர் பனிப்பியல்வெல்லாம்
தவிர்ந்து எரிவீசும்" *(திருவிரு 5)*

பந்து — போகத்திற்கு இடமாகிய சரீரம்; கழல் — போகத்திற்குக் கருவிகளான ஐம்புலன்கள்; பானை குழமணங்கள் — விளையாட்டுக்கு உரிய கருவி விசேடங்கள்; யாழ் தென்றல், மதியம், அடிசில், சாந்தம், பூண், அகில் — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புல இன்பங்கள்; சிற்றில் — உடம்பு வசித்தற்குரிய வீடு; தூதை (பானை) — இந்திரியங்களுக்கு வேறுபட்ட போக உபகரணங்களுக்கு உபலட்சணம். இவையெல்லாம் இன்பமான செயல்களின் கூட்டம்.

"முனிவதும் இக்காலம் ஈதோ என்னப்படும்
பொங்கைம்புலனில் போக்யாதி சமூகம்" *(சூத்.149)*

*(போக்யம் — இனிய பொருள்; சமூகம் — கூட்டம்)*

# மூன்றாம் பகுதி

- தூதுப் பறவைகள் — ஓர் உள்ளுறை.
- நால்வகை தூதுக்களின் நோக்கம்.
- ஒவ்வொரு திருப்பதி; ஒவ்வொரு குணம்.
- திருவாய்மொழி காலம் — அதிகாரி நியமம் — இனிமை.
- கீதைக்கு ஒப்பு.
- நால்வகையார்க்கு உபதேசம்.
- திருவெட்டெழுத்து மந்திரத்தின் பொருள்.
- துவயத்தின் பொருள் திருவாய்மொழி.
- திருவாய்மொழியின் சாரம்.
- திருவிருத்தம் — திருவாய்மொழி.
- வாழ்த்து — வணக்கம் — வருபொருள்.
- இறைவன் திருவாய்மொழி ஒப்புமை.
- திருப்பாசுரங்களின் அமைப்பு முறை.
- உபதேசம் செய்யும் திருப்பாசுரங்கள்.
- பத்து பத்துக்களும், இறைவன் பண்புகளும், ஆழ்வார் பெற்ற பேறுகளும்.

மூன்றாம் பகுதி

# "தூதுப் பறவைகள்" - ஓர் உள்ளுறை

பகவானிடத்தில் தூதாக விடுகிற பறவைகளுக்கு உள்ளுறைப் பொருள் கூறுகிறார்.

பகவானிடத்தில் சேர்க்கின்றவர்கள் — பறவைகள்

அவர்களுடைய ஞானமும், ஒழுக்கமும் — சிறகுகள்

*"வீசும் சிறகால் பறந்நீர்"* *(திருவிரு .....54)*

*"சேர்ப்பாரைப் பக்ஷிகள் ஆக்கி ஜ்ஞாந*
*கர்மங்களைச் சிறகு என்று"* *(சூத் 150)*

இறைவனைச் சேர யாரிடமாவது விண்ணப்பிக்க வேண்டும் அல்லவா?

*"நீயும் நின் அஞ்சிறைய சேவலுமாய்*
*ஆஆ என்று எனக்கருளி"* *(1.4.1)*

என்பதனால் குருவிடம் விண்ணப்பித்தல் உரைக்கப்பட்டது.

*"உடன் மேயும் அன்னங்காள்......*
*அடியேனுக்கும் போற்றுமினே"* *(6.1.5.)*

என்றதனால் ஒரு சாலை மாணாக்கரிடம் சொல்லுதலும்,

*"யான் வளர்த்த கிளிகாள்"* *(6.8.5)*

என்றதனால் புதல்வர்களிடமும், மாணாக்கர்களிடமும் சொல்லுதலும் பெறப்பட்டது.

"குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்" (சூத் 150)
[ஸப்ரஹ்மசாரி — ஒரு சாலை மாணாக்கர்; ஸ்தாநே — இடத்தில்]

**அன்னத்திற்கு உள்ளுறை:**

செல்வநம்பி, பெரியாழ்வார், நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் போன்ற பரமஹம்சர்கள் அன்னத்திற்கு உள்ளுறை.

அன்னமானது நீரையும், பாலையும் பிரிக்கும். செல்வநம்பி முதலான பரமஹம்சர்கள் சாரத்தையும், அசாரத்தையும் வெவ்வேறாகப் பிரிப்பர். பெருமான் அன்னத்தின் உருவமாய் இருந்து சாஸ்திரம் கொடுத்தாற் போல, இவர்களும் சாஸ்திரங்களை உபதேசித்தனர். அன்னமானது சேற்றுநீரில் பொருந்தாது. இவர்களும் இவ்வுலக வாழ்க்கையாகிற சேற்றிலே பொருந்தார். அன்னமானது பெண்களின் நடையழகினை கண்டு தானும் அவ்வாறே நடக்கும். இவர்களும் பிராட்டியுடைய அநந்யார்ஹ சேஷத்வம், புருஷகாரத் தன்மை ஆகிய நடையைத் தாமும் மேற்கொண்டவர்கள்.

தாமரை இலை குடையாக நிழல் தருகின்றது, நெற்பயிர் கவரி வீசுகிறது. சங்குகளின் ஒலி வெற்றி முழக்கமாக இருக்கிறது, வண்டுகள் இசைபாடுகின்றன.

தாமரை இலை போன்ற பசுமை நிறமுடைய எம்பெருமானது திருமேனி உலகவாழ்க்கையில் உள்ள துன்பத்தைப் போக்குகிறது.ஞானிகள் தொண்டு செய்கின்றனர். தூய தன்மை உடையவர்கள் துதிக்கின்றனர். அசாரத்தை நீக்கிச் சாரத்தை மாத்திரம் எடுத்துரைக்கின்ற பெரியவர்கள் சமாதானம் செய்கின்றனர். சிடர்களுடைய மனமாகிய தாமரையிலே வசிக்கின்றவராய், இவ்வுலகவாழ்க்கையில் உள்ள துன்பங்கள் அணுகப் பெறாதவராய், ஒரு தடையும் இல்லாமல் மேன்மேலும் இன்பம் பெறும்படி மனைவி மக்களோடு இருந்து பகவானை அனுபவிக்கின்ற பெரியாழ்வார், பற்றற்ற துறவிகளான நாதமுனிகள் ஸ்ரீ ஆளவந்தார் ஆகியோர் குண ஒப்புமையால் அன்னத்திற்கு ஒப்பாவார்.

> **“விவேகமுகராய், நூலுரைத்து, அள்ளலில் ரதி இன்றி,**
> **அணங்கின் நடையைப் பின்சென்று, குடை நிழலிலே கவரி**
> **அசையச் சங்கமவைமுரல வரிவண்டு இசைபாட**
> **மாநசபத்மாசனத்திலேயிருந்து, விதியினால், இடரில்,**
> **அந்தரமின்றி, இன்பம்பட, குடிச்சீர்மையிலேயாதல் பற்றற்ற**
> **பரமஹம்சராதல் ஆன நயாசலன், மெய்ந்நாவன், நாத யமுநர்**
> **போல்வாரை அன்னம் என்னும்”** ***(சூத். 151)***

**வண்டு, தும்பி:**

நாரதமாமுனிவன், திருப்பாணாழ்வார், அரையர் போன்றோர் வண்டு, தும்பிக்கு உள்ளுறை.

தகாத பொருள்கள் இனிய பொருள்கள் என்று மயங்காது, பகவானாகிய தேனை உண்ணுதலையே விரதமாக உடையராய், காலங்கட்குத் தகுந்த பண்களைப் பாடி, அச்சம் இல்லாமல் அவனுடைய அண்மையில் இருப்பவர்களாய், பகவானுடைய குணங்களை அனுபவித்தலால் உண்டான ஆனந்த மிகுதியால் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருக்கும் நாரதமாமுனிவன், திருப்பாணாழ்வார், திருவாய்மொழி இசையினையே தங்களுக்கு இனிய பொருளாகக் கொண்டு இருக்கின்ற அரையர் போன்றவர்களை வண்டு, தும்பி என்று சொல்வர்.

வண்டுகள் மிக நெருக்கமாக உள்ள இடங்களிலும் தடை இன்றிச் செல்லும். தன்னினமான பொருள்களோடே நட்புக் கொள்ளும். இறைவன் சந்நிதியில் அச்சம் சிறிதும் இன்றி நிற்கும்.

இவர்களும் எந்த நிலையிலும் பொன்னியலும் மாடக் கவாடம்புக்கு, அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களோடே, அச்சம் ஏதுமின்றி ஒழிவில்

காலமெல்லாம் உடனாய் மன்னி நிற்பார்கள்.

"என் பெறுதி என்ன பிரமியாது, உள்ளுத்துள் ஊறிய
மதுவிரதமாய், தூமது வாய்கள் கொண்டு, குழல்வாய்
வகுளத்தின் சாரம் கிரஹித்து, தேதென என்று ஆளம் வைத்து,
சிறுகால் எல்லியம் போது குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம்
தலைக் கொள்ளப் பாடி, துன்னிட்டு நெருக்க நீக்கு என்று
கடந்து புகும் தனகவறப்புக்கு, வண்டொத்த இருண்ட குழலிலே
சங்கை அற மருவி, அருளாத யாம் என்று ஓடி வந்து வாசமே
ஊதி, வண்டே கரியாய தெய்வ வண்டோடே சேர்விக்கும்
சேமமுடை நாரதன், முனிவாஹநர், தம் பிரான்மார்
போல்வாரை வண்டு தும்பி என்னும்" *(சூத்.152)*

(பிரமியாது, விரதமாய், கொண்டு, கிரஹித்து, ஆளம் வைத்து, பாடு, புக்கு, மருவி, ஊதி, சேர்விக்கும் நாரதன் முனிவாஹனர் தம்பிரான்மார் போல்வார் என எச்சங்களை முடிக்க,

முனிவாஹனர் — திருப்பாணாழ்வார்; தம்பிரான்மார் — அரையர்,

**கிளி, பூவை, குயில், மயில்:**

ஸ்ரீ மதுரகவிகள், தொண்டரடிப்பொடி ஆழ்வார், கூரத்தாழ்வான், திருமாலையாண்டான், எம்பார், அருளாளப்பெருமாள் எம்பெருமானார் முதலானோர் கிளி, பூவை, குயில், மயிலுக்கு உள்ளுறை.

கிளி தன்னை வளர்க்கின்றவர்கள் கையிலே இருக்கும், ஸ்ரீமதுரகவிகள் முதலானோரும் தமக்கு ஞானவளமூட்டுகிற ஆசாரியர்களுடைய அதீனத்தில் இருப்பவர்கள்.

*"மங்கைமார் முன்பு என் கையிருந்து"* *(திரு 6,8,2)*

"கண்வலைப்படாதே அகவலைப்பட்டு,
வளர்த்தெடுப்பார் கையிருந்து" *(சூத். 153)*

(கிளி வலையிலே அகப்படுமாறு போன்று, மாதர்களின் கண்வலையில் அகப்படாமல் இவர்கள் இறைவனுடைய திருக்கண் நோக்கமாகிற வலையில் அகப்படுபவர்கள்:

மங்கைமார் உண்பிக்கக் கிளி உண்ணும். இவர்களும் பகவத் விஷயத்தை ஆசாரியன் அனுபவிப்பிக்க அனுபவிப்பவர்கள்.

*"தயிர்ப்பழஞ்சோற்றோடு பாலடிசிலும் தந்து"* *(திரு 9,5,8)*

"தயிர் நெய்யமர் பால் அமுதுண்டு" *(சூத் 153)*

கிளி கற்பித்ததையே சொல்லும். இவர்களும் முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டு அதனையே பேசுவார்கள்.

"ஒரு மிடறாய்" *(சூத்.153)*

(ஆசார்யர்களோடு ஒரு மிடறாய், முன்னோர் மொழிந்ததையே பேசுதல்) தலைவனோடு சேர்க்க வேண்டும் என்று கிளியிடம் கூறுவது முதல்நிலை.

"ஒரு வண்ணம் சென்றுபுக்கு எனக்கு
ஒன்று உரை ஒண் கிளியே" *(திரு 6,1,7)*

"போற்றி ஒரு வண்ணம் திருந்த" *(சூத்.153)*

என் துன்பத்தை அவனுக்கு அறிவி" என, கிளி அறிவிக்காத நிலை இரண்டாவது

"என் பிழைக்கும் இளங்கிளியே யான்
வளர்த்த நீயலையே" (திரு 1,4,7)

"துவலாததுக்குள் என் பிழைக்கும்
நீ அலையே" (சூத். 153)

இறைவன் நினைவினை ஊட்டுகின்ற பொருள்கள் துன்புறுத்த, அருகே இருந்து அவன் திருநாமத்தைச் சொல்லப் பொறாது இருப்பது மூன்றாம் நிலை.

நல்வளம் "துரப்பன்" (சூத். 153)

இம்மூன்று நிலைகளிலும் கூறிய இன்சொற்களும், கடும் சொற்களும் ஆட்கொள்ளவே ஆசாரியனுடைய நிக்கிரஹம், அனுக்கிரஹம் எல்லாமும் நன்மைக்கே.

"என்னுமவற்றுக்கும் உகந்து" (சூத்.153)

சீடர்கள் ஆசாரியர்களும் கைகூப்பி வணங்கும்படி பாடுபவர்கள். இறைவன் திருப்பெயரைச் சொல்லிய அளவில் உளம் உருகி மேலே சொல் தடைப்படக் கற்பிக்கப்பட்ட திருநாமங்களைக் கிளி சொல்லுகையாலே வளர்த்ததனால் பயன் பெற்றோம் என்று கை கூப்புவர் ஆசிரியர் (நெடுந்தாண்—14)

"சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியாவைத்த
மாற்றம் கைகூப்பி வணங்கப்பாடி" (சூத்.153)

மயில்கள் மேகத்தை கண்டவுடன் தோகை விரித்துக் கொண்டு ஆனந்தமாக ஆடும். அதுபோல இவர்களும் கார்முகில் வண்ணன் கண்ணனைக் கண்டு கூத்தாடுவார்கள்.

"ஆலியா அழையா பராபிமானத்தாலே ஒதுங்கின" (சூத்.153)

குயில்கள் பிறரால் வளர்க்கப்படுவன. இவர்களும் ஆசாரியர்கள் பாகவதர்கள்ஆகியோரால் வளர்க்கப்படுபவர்கள்.

நாரை, கொக்கு:

ஸ்ரீ குலசேகரப் பெருமாள், நம்முதலிகள் போல்வார்.

குருகு:

"ஆசறு தூவி வெள்ளைக் குருகே" (திரு 6,8,8)

என்கிறார் நம்மாழ்வார்.

குற்றமற்ற சிறகினை உடையதாய் உள்ளும் புறமும் வெண்மையாக இருக்கிற குருகே என்கிறார். அதுபோல ஸ்ரீ குலசேகரப் பெருமாள் முதலாயினோர் தூய்மை வாய்ந்த மனமொழி மெய் உடையவர்கள்.

"ஆசு அறு தூவி என்னும் பாஹ்ய
அப்யந்தர சுத்தியோடே" (சூத். 154)

(ஆசு அறுதூவி—குற்றமற்ற சிறகு; பாஹ்யாப்யந்தரம் — மெய்யும், மனமும் புறமும் உள்ளும்)

"வாயும் திரைஉகளும் கானல் மடநாராய்" (திரு 2,1,1)

உணவாகிற மீன்களைக் கவர வேண்டும் என்ற ஒரே சிந்தையுடன் நாரையானது சிறிதும் சலிக்காது. திரைகள் வந்து அடித்தாலும் தாவிப்போகாது அசையாது நிற்கும். அதுபோல இவர்களும் பகவானிடத்திலே நிலைத்த சிந்தனை உடையவராய் இவ்வுலக வாழ்க்கையாகிற கடலின் மூவகைத் துன்பங்களாகிய அலைகள் மேலும் மேலும் வந்து அடித்தாலும் வருந்தாதவர்கள்.

"திரைஉகளும் வியசந வியதை அற்று" (சூத் 154)

(வியசந வியதை — இடையூறுகளில் கூறுபாடு) நாரை மீனுக்காக பார்க்கும்போது அலை மேலே அடித்து ஊறுவிளைத்தாலும் பொருட்படுத்தாத நிலை

"தாய் வாயில், கொக்கின் பிள்ளை வெள்ளிற உண்ணும்" (பெரிய திருமொழி 9,6,1)

கொக்கானது தன் வாயாலே இரை எடுத்துவரும். தன் குஞ்சின் வாய்க்கு அடங்கும் அளவு இரை தேடி இடும்; அதுபோல அவர்களும் தங்கள் சிஷ்யர்களின் அறிவிற்கு தகுந்த அர்த்தங்களைச் சாஸ்திரங்களிலிருந்து எடுத்துத் தருவர்.

"தாய் வாயில் உண்ணும் பிள்ளைக்கு இரை தேடி" (சூத். 154)

"வைகல் பூங்கழிவாய் வந்து மேயும் குருகினங்காள்" (திரு 6,1;1)

எல்லாக் காலங்களிலும் இன்பம் நுகரும் இடங்களுக்குத் தாங்களே சென்று, தங்களைப் பிரிந்தால் உயிர் வாழாத சிஷ்யர்களுடனே கூடப் பகவானுடைய குணங்களைப் போற்றி மதிப்பர்.

"வைகல் உடன் மேய்ந்து" (சூத்.154)

"பைங்கானல் ஈதெல்லாம் உனதேயாகப்
பழனமீன் கவர்ந்து உண்ணத் தருவன்" (திரு நெடுந்தாண்டகம் 27)

நாரை உண்ணத் தலைவி மீன் தருதலைக் கொள்ளுமாப் போலே, சிஷ்யர்கள் அன்போடு கொடுக்கும் பொருள்களை ஆசாரியர்கள் வாங்கிக் கொள்வார்கள்.

"நுங்கால் பைங்கானம் என்று பிரஹமரதம்
பண்ணிக் கொடுத்தவை கொண்டு,
நல்ல பதத்தையும் வேண்டேன் என்னும்
தனிப்பெரும் பித்தர் நம்முதலிகள் போல்வாரை
நாரை கொக்கு குருகு என்னும்" (சூத். 154)

(தனிப்பெரும் பித்தர்—குலசேகரர்) அடியவர்களுக்கு உதவும் இல்லறத்தையும் உலகியல் பற்றிய துன்பத்தால் உண்டாகும் அச்சத்தாலே வெறுத்து அரங்கன் அடியைச் சிந்தை செய்யும் தனிப்பெரும் பித்தர் குலசேகரப் பெருமாள்.

மேகம்:

திருமழிசைப் பிரான், திருமங்கை ஆழ்வார், இராமானுஜர் என்கிற எம்பெருமானார் ஆகியோர் மேகத்திற்கு உள்ளுறை.

மேகமானது மழைபெய்ய வேண்டிய காலங்களில் கடலிலே புக்கு அதில் நீரைப் பருகிக் கொண்டு இருக்கும், திருமழிசைப்பெருமான் முதலானோர் விடிந்த நாள் எல்லாம் திருமால் கண் வளர்ந்து அருளுகிற கடலிலே புகுந்து, அவனுடைய கல்யாண குணக்கடலை உள்ளே அடக்கிக் கொள்வர்.

"சீர்க்கடலை உட்பொதிந்த சிந்தனையேன்" *(பெரிய திருவந் 69)*

**"பூண்டநாள் சீர்க்கடலை உட்கொண்டு"** ***(சூத். 155)***

மேகமானது திருமாலின் திருமேனி நிறத்தை ஒக்கும். இவர்களும் முகில் வண்ணனை உள்ளே தியானித்தலால் அவனுடைய நிழலீட்டால் — அவனோடு ஒத்த நிறத்தை உடையவர் ஆவர்.

"திருமால் திருமேனி ஒக்கும்" *(பெரிய திருவந் — 85)*

**"திருமேனி தன்னிறம் ஒத்து"** ***(சூத். 155)***

மேகமானது மழை மூலமாக உயிர்களைக் காப்பதற்காக ஆகாயம் முழுவதும் சஞ்சரிக்கும்; அதுபோல இவர்களும் பிறப்பு. இறப்புகளிலே உழலுகின்ற ஆன்மாக்களைக் காக்க எவ்விடத்தும் திரிவர்.

"உயிர் அளிப்பான் மாகங்கள் எல்லாம் திரிந்து" (திருவிருத்தம் 32)
"நீதில் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து"(பெருமாள் திருமொழி 2,6)

**"உயிரளிப்பான் தீர்த்தகரராய்த் திரிந்து"** ***(சூத்.155)***

மேகம் மழையாலே தடாகத்தை நிறைக்கும்; இவர்களும் ஞானமாகிற மடுவைத் தாங்கள் பெய்கிற பகவானுடைய குணங்களாகிற தண்ணீரால் நிறைப்பர்.

**"ஞான ஹ்ரதத்தைப் பூரித்து தீங்கின்றி
வாழ நிதி சொரிந்து"** ***(சூத். 155)***

மேகமானது மழை பெய்யாத போது "இன்னமும் கொடுக்க பெற்றிலோமே நாம் செய்தது போருமோ?" என்று வெட்கி வெளுத்துப் போய்க் கண்களுக்குப் புலப்படாது இருக்கும். இவர்களும் மக்களுக்கு உபதேசம் செய்யாத காலத்து உடம்பு வெளுத்து மறைந்து இருப்பர்.

**"கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து
வெளுத்து, ஒளித்து** ***(சூத். 155)***

மேகமானது தனக்கு என்று காரியம் செய்யாது பிறர் நலத்துக்கே உதவும். இவர்களும் கொடுக்கும்போது சிஷ்யர்களுடைய நிறைவினைக் கொண்டு மகிழ்வர்.

**"கண்டு உகந்து பர சம்ருத்தியே பேறான
அன்புகூரும் அடியவர்"** ***(சூத். 155)***

இனி முழுச் சூத்திரம்

**"பூண்டநாள் சீர்க்கடலை உட்கொண்டு,
திருமேனி நன்னிறம் ஒத்து,
உயிரளிப்பான் தீர்த்தகரராய் எங்கும் திரிந்து,
ஜ்ஞாநஹ்ரதத்தைப் பூரித்து,**

*தீங்கின்றி வாழ நிதி சொரிந்து,*
*கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து, வெளுத்து ஒளித்து,*
*கண்டு உகந்து பரசம்ருத்தியே பேறான அன்பு கூரும் அடியவர்,*
*உறையில் இடாதவர், புயற்கை அருள்மாரி, குணம் திகழ்*
*கொண்டல், போல்வாரை மேகம் என்னும்"* *(சூத். 155)*

*(ஹ்ரதம்—மடு; உறையில் இடாதவர் — திருமழிசைப் பிரான்; புயல் கை அருள்மாரி — திரு மங்கை ஆழ்வார்; குணம் திகழ் கொண்டல் — இராமானுஜன்)*

தூதுவிடக் காரணம்: ஆழ்வார் இப்படித் தூது விடும்படி முகம் காட்டாமைக்குக் காரணத்தைச் சொல்கிறார்.

நான்கு தூதுகளின் நோக்கம்:

*1)* பொறுமையை நினைவுபடுத்துதல்:

நம்மாழ்வார் நான்கு தூதுகள் விடுகிறார் "அஞ்சிறைய மடநாராய்" *(1,4,1)* என்ற திருவாய்மொழி முதல் தூது ஆகும். உயிர்கள் பிழைசெய்வது இயல்பு. அப்பிழையை பொறுக்கும் பொறுமை உடையவன் பகவான்.

*"என் பிழையே நினைந்தருளி"* *(திரு 1,4,7)*

அப்பொறுமையை வியூகத்தில் இருக்கும் பகவான் மறந்தான். அந்தப் பொறுமையை பராங்குச நாயகி நினைவூட்டுகிறாள்.

*"கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே*
*கண்வளரும் அடலாழி அம்மானைக்*
*கண்டக்கால் இது சொல்லியருள்"* *(திருவாய் 1,6.10)*

*"தம்பிழை மறப்பித்த க்ஷமையை*
*உணர்த்தும் வியூகம் தூது நான்கனுள்*
*முதல் தூதுக்கு விஷயம்"* *(சூத் 156)*

*(க்ஷமை—பொறுமை; வியூகம் — பாற்கடலில் இருக்கும் நிலை)*

*2)* செல்வத்தை மறப்பித்த நிலை:

*"வைகல் பூங்கழிவாய்"* *(6.1.1)*

என்ற திருவாய் மொழி இரண்டாம் தூது ஆகும். துன்புறுகின்றவர்களைக் காப்பது பகவான் கடமை ஆகும். இராமாவதாரத்தில் இலங்கையில் வாடும் பிராட்டி, "சக்கரவர்த்தி திருமகனுக்குக் காப்பாற்ற தகும் பொருள்களில் நானும் ஒருத்தி உளேன் என்று சொல்லுங்கோள்" என்கிறாள் அனுமனிடம்.

*"மாறிப் போர் அரக்கன் மதிள்நீறு எழச் செற்று உகந்த*
*ஏறு சேவகனார்க்கு என்னையும் உள்ள் என்மின்களே"* *(திரு 6.1.10)*

இது விபவத்தில் (அவதாரம்) விரதத்தைச் செல்வம்மறப்பித்த காலை, பகவானுக்கு விரதத்தை நினைப்பூட்ட நடந்த தூது. இங்கும் பராங்குச நாயகி "சிறந்த செல்வம் மல்கு திருவண் வண்டூர் உறையும்" *(6.1.3)* பெருமானுக்கு அவ்வூராகிய சிறந்த செல்வம் மறப்பித்த அடியாரைக்காக்கும் விரதத்தை உணர்த்தி விட்டது ஆகும்.

"சிறந்த செல்வம் மறப்பித்த தீக்ஷையை
உணர்த்தும் விபவம் இரண்டாம் தூதுக்கு விஷயம்" (சூத். 156)

(விபவம்—அவதாரம்; தீக்ஷ — விரதம் செல்வம் மறப்பித்த — செல்வச் செருக்கால் செய்யவேண்டியதை மறந்த)

### 3) ஒத்த சுவைத்தன்மையை நினைவுபடுத்தல்:

"பொன்னுலகாளீரே" (6.8.1)

என்ற திருவாய்மொழி மூன்றாம் தூது ஆகும்.

படைக்கப்பட்ட உலகத்தைக் காப்பாற்றுகின்ற பராக்கிலே, பகவான் அடியார்களோடு தனக்கு உண்டான ஒத்த இன்பத்தை மறந்து இருக்கப் பராங்குச நாயகி அதனை நினைவு படுத்துகிறாள்.

"வானவர் கோனைக் கண்டு யாம்இதுவோ
தக்கவாறு என்ன வேண்டும்" (திரு 6.8.4)

என்பது பரத்துவத்தில் விட்ட தூது.

"எங்குச் சென்றாகிலும் கண்டு இதுவோ
தக்கவாறு என்மின்" (திரு 6.8.5)

என்பது அந்தர்யாமித்வத்தில் விட்டதூது.

"படைத்தபடைப்பு மறப்பித்த சாரஸ்யத்தை
உணர்த்தும் பரத்வ துவயம் மூன்றாம் தூதுக்கு விஷயம் (சூத். 156)

(சாரஸ்யம் — ஒத்த சுவைத்தன்மை, பரந்துவதுவயம்—பரத்துவம், அர்தர்யாமித்வம் என்ற இரண்டு; கண்களால் காணமுடியாமையால் அந்தர்யாமித்வமும்பரத்துவத்தை ஒக்கும்)

### 4) தமருடைய வாசம் மறப்பித்த அழகினை உணர்த்தல்:

"எம் கானல் அகம் கழிவாய்" (9.7.1)

நான்காம் தூது ஆகும்.

தம்மை உகந்த பாகவதர்களுடன் சேர்க்கையால் பகவான் பராங்குச நாயகியை மறந்தான். "இவ்வடிவழகினைப் பிரிந்தார் தரிப்பரோ" என்று பராங்குசநாயகி அவ்வழகினை அறிவிக்கிறாள்.

"தமரோடு அங்குறைவார்க்கு" (9.7.2)
"செக்கமலத்து அலர்போலும் கண் கைகால்
செங்கனிவாய், அக்கமலத்து இலைபோலும்
திருமேனி அடிகளுக்குத் தக்கிலமே கேளீரே" (திருவாய் 9.7.3)

இது திருமூழிக்களத்து உகந்தருளியிருக்கும் தமருடைய வாசம் மறப்பித்த அழகினை உணர்த்தியிட்ட நாலாம் தூது ஆகும்.

"திருமூழிக்களத்தார்க்கு" (9.7.9)

என்றதனால் இது அர்ச்சாவதாரத்தில் தூது ஆகும்.

இதன் சூத்திரம்:

"தமரோட்டை வாசம் மறப்பித்த சௌந்தர்யத்தை
உணர்த்தும் அர்ச்சை நாலாம் தூதுக்கு விஷயம்" (சூத்.156)

(அர்ச்சை— திருக்கோயில்களில் எழுந்தருளும் விக்கிரகங்கள்) வாசம் — உடன் உறைதல்.

இனி முழுச்சூத்திரம்:

"தம்பிழையும், சிறந்த செல்வமும், படைத்த பரப்பும்,
தமரோட்டை வாசமும், மறப்பித்த, க்ஷமா, தீக்ஷா, சாரஸ்ய,
சௌந்தர்யங்களை உணர்த்தும், வியூஹ, விபவ, பரத்வதுவய,
அர்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம். (சூத். 156)

**பல இடங்களில் தூது விட்டாலும் அடையத் தக்க பரம்பொருள் ஒருவனே:**

இப்படிப் பல இடங்களிலும் தூதுவிட்டால், அடைய வேண்டிய இறைவர் பலரா? என்றால் அல்லர். பரத்துவம் முதலான ஐந்துநிலைகளிலும் இடங்கள்தாம் வேறு வேறே ஒழிய பரம்பொருள் ஒருவனே!

**நாடாளும் அரசனின் பல நிலைகள்:**

நாட்டை ஆளும் அரசன் எல்லோராலும் வணங்கப்படும் நிலையில் ஓலக்கத்தில் இருக்கிறான். நாட்டில் உள்ளவர்களுடைய குணங்கள், குற்றங்களைக் கண்டறிய மாறுவேடம் பூண்டு நகர சோதனை செய்கிறான். அரசாட்சியில் நல்லோரைக் காக்க மந்திராலோசனை செய்கிறான். மிருகங்களைக் கொல்ல வேட்டை ஆடுகிறான். அந்தக் களைப்பு நீங்க நந்தவனத்தில் தன் பட்டத்துத் தேவி முதலாயினரோடு விளையாடுகிறான்.

"பகல் ஓலக்கம் இருந்து,
கறுப்புடுத்துச் சோதித்து,
காரியம் மந்திரித்து,
வேட்டை ஆடி,
ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி" (சூத். 157)

(ஓலக்கம்—தர்பார்; ஆராமம்—நந்தவனம்)

அரசு வீற்றிருத்தல், நகர சோதனை செய்தல், மந்திரிகளோடு மந்திராலோசனை செய்தல், வேட்டையாடுதல், பூம்பொழிலில் இன்பநுகர்தல்— இவை வேறுவேறுஇடங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு வேடத்தோடு அரசன் செய்யினும், இத்தனையும் செய்கின்றவன் அரசன் ஒருவனே.

"விண்மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடற்சேர்ப்பாய்!
மண் மீதுழல்வாய்! இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்!
எண் மீதியன்ற புறவண்டத்தாய்! எனதாவி
உண்மீது ஆடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ! (திரு 6.9.5)

**பரத்துவம்:**

"விண்மீது இருப்பாய்" என்றதனால், நித்ய முக்தர்களோடும், பிராட்டியோடும் விஷ்ணு வைகுண்டத்தில் எழுந்தருளியுள்ள பரத்துவம் கூறப்பட்டது. இது அரச தர்பாரை ஒக்கும்.

**"இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்"** என்றதனால், உலகத்துப் பொருள்களுக்குத் தெரியாதபடி அந்தர்யாமியாய் அவர்கள் நினைப்பனவெல்லாம் பகவான் அறிகிறார்; இது அந்தர்யாமித்வம். அரசன் நகர சோதனை செய்வதை ஒக்கும்.

**வியூகம்:**

**"கடல் சேர்ப்பாய்"** என்றதனால் பாற்கடலில் யோகநித்திரை செய்து ஆன்மாக்களைக் காப்பாற்றும் வழியைச் சிந்திக்கும் வியூகம் கூறப்பட்டது. இது அரசன் மந்திராலோசனை செய்தலை நிகர்க்கும்.

**அவதாரம்:**

**"மண்மீது உழல்வாய்"** என்றது அடியார்களைப் பாதுகாப்பதற்காக வந்து அவதரித்த நிலையைச் சொல்கிறது. இந்நிலை அடியார்களின் விரோதிகளைக் கொல்கின்ற வேட்டையாடுதலை நிகர்க்கும்.

**அர்ச்சை:**

**"மலைமேல் நிற்பாய்"** என்றது விரோதிகளைக் கொன்ற களைப்பு நீங்க திருமலை முதலான திவ்ய தேசங்களில் இன்பம் தலைப்பட உகந்தருளியிருத்தலைக் குறிக்கிறது. இது அர்ச்சாவதாரம்.

அரசன் பூம்பொழில் நுகர்தலை நிகர்க்கும்.

இதனால் பரத்துவம் முதலான நிலைகளில் இடவேற்றுமையே ஒழிய பொருள் வேற்றுமை இல்லை.

> **ராஜநீதி ஆதும் சோராமல் செங்கோல் நடாவுகிற**
> **பாரளந்த என்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு**
> **விண்மீது என்கிற ஐந்திலும் காணலாம்.** *(சூத்.157)*

**பரத்துவம் முதலிய ஐந்து நிலைகளில் அர்ச்சாவதாரத்தை அதிகம் பாடியது ஏன்?**

பரத்துவம், வியூகம், அந்தர்யாமித்வம், அவதாரம் அர்ச்சை என்ற ஐந்து நிலைகளும் ஒன்று என்றால் பரத்துவம் முதலான நான்கு நிலைகளை மிகுதியாகப் பாடாமல் அர்ச்சாவதாரத்தை ஆழ்வார் அதிகமாகப் பாடுவானேன்?

வைகுண்டத்திலே (பரத்துவமாகிய பரமபதநிலையிலே) நித்யர்கள், முக்தர்கள் தாம் இருக்கலாம். பாற்கடலில் எம்பெருமானைத் தேவர்கள், ரிஷிகள் தாம் தரிசிக்கலாம். அவதாரத்தில் அந்தந்தக் காலத்தில் வாழ்ந்தவர்கள் தாம் அனுபவிக்கலாம். அந்தர்யாமித்வத்தில் (உடல் மிசை உயிர் எனக்கரந்து எங்கும் பரந்திருத்தல்) உள்ளுக்குள் இருக்கும் பரம்பொருளை யோகநிலையில் இருப்பவர்கள் தாம் உணர முடியும்.

அர்ச்சாவதாரம் என்றால் எந்தவிதத் தகுதியும் இல்லாத வேறு கதி ஏதும் இல்லாத, நம்மைப் போன்றவர்கள் (பத்தர்கள்) எல்லாக் காலத்தும், எல்லா நிலையிலும் எப்பொழுது பார்க்கவேண்டும் என்று தோன்றுகிறதோ அப்பொழுது பார்த்து அனுபவித்துத் தரிசிக்கலாம். அடியார்கள் விரும்பிய பொருள்களே பகவானின் திருமேனி; அவர்களுக்கு உகந்த திருப்பெயர்களே பகவான் திருப்பெயர்கள்.

*"தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே*
*தமர் உகந்தது எப்பேர் மற்றப்பேர்"* *(முதல் திருவந் 44)*
*"அடியேமுக்கே எம்பெருமான்*
*அல்லீரோ நீர் இந்தளூரீரே"* *(பெரிய திருமொழி 4.9.5)*
*பின்னானார் வணங்கும் சோதி*
*திருமூழிக்களத்தானாய்.* *(நெடுந்தாண் —10)*

*"தமர் உகந்தஅடியோமுக்கே என்னும்*
*பின்னானார் வணங்கும் இடத்திலே*
*எல்லாம் பூர்ணம்"* *(சூத்.158)*

# ஒவ்வொரு திருப்பதி, ஒவ்வொரு குணம்

*1.* திருவரங்கம் — சௌகார்த்தம்:

அர்ச்சாவதாரத்தில் எல்லாக் குணங்களும் நிறைந்திருக்குமாயின், எல்லாத் திருப்பதிகளிலும் எல்லாக் குணங்களும் ஒருசேரப் பிரகாசிக்குமா? என்பது அடுத்த கேள்வி. அப்படியன்று ஒவ்வொரு திருப்பதியில் ஒவ்வொரு குணம் முதன்மையாக விளங்கும்.

எல்லாத் திவ்யதேசங்களிலும் முதன்மை பெற்றது திருவரங்கம். திருவரங்கத்து இறைவன் முதலிலே பிரமலோகத்தில் எழுந்தருளிப் பிரமனால் வழிபடப்பட்டார். பூலோகத்தில் அயோத்தியில் இக்ஷ்வாகு மன்னன் வழிபடப் பிரமன் வழங்கினான். அப்பெருமானை ஸ்ரீராமபிரான் விபீஷணாழ்வாருக்கு வழங்க, இலங்கை செல்லும் வழியில் திருவரங்கத்தில் தங்கிவிட்டார்.

வியூகநிலையில் பாற் கடலிலே யோகநித்திரை செய்கின்ற பகவான், உயிர்களின் நன்மையையே சிந்தை செய்து கொண்டிருப்பான். இது சௌகார்த்தம் ஆகும். அதாவது நல்ல மனத்தோடு கூடியிருத்தல் திருவரங்கம் பெரிய கோயிலிலே வியூக நிலையிலே உள்ள சௌகார்த்த குணம் முதன்மையாகப் பிரகாசிக்கும்.

திருவரங்கத் திருப்பதி விஷயமான "கங்குலும் பகலும்" என்ற திருவாய் மொழியில் (ஏழாம்பத்து; 2ஆம் திருவாய்மொழி)

"வடிவுடைவானோர் தலைவனே" *(7.2.10)*ல் பரத்துவ அனுபவம்; "கடலிடம் கொண்ட கடல்வண்ணா" *(7.2.7)*ல் வியூக அனுபவம்; "கட்கிலி உன்னைக் காணுமாறு அருளாய் காகுத்தா" *(7.2.3)* என்கையாலே அந்தர்யாமி விபவ அவதார அனுபவம். இப்படி ஐவகை நிலைகளையும் அனுபவித்தாலும், வியூக அனுபவமே மிக்குத் தோன்றுகிறது.

"இவள் திறத்து என்சிந்தித்தாய்" *(7.2.4)*
"என் கொலோ முடிகிறது இவட்கு" *(7.2.2)*

என்று இவள் காரியமாகவே சிந்திப்பது மிகுதியாகப் பேசப்படுகின்றது. வியூகத்திலும் யோகநித்திரை, சிந்தை செய்தல்; திருவரங்கத் திருவாய்மொழியில் யோகநித்திரை, சிந்தைசெய்தல் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

> **"வன்பெருவானகம் முதல் உய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன்" திருப்பதி, வடிவுடை, கடலிடம், கட்கிலீ என்றுமவற்றில் இவள் திறத்து, என்கொலோ என்பிக்கிற வியூக சௌகார்த்தப் பிரதானம்"** *(சூத். 159)*

(வன்பெருவானகம் முதல் உய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன்" திருப்பதிக்கு அடைமொழி; திருப்பதி—திருவரங்கப் பெரியகோயில் வியூகம்—திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் நிலை. சௌகார்த்தம் — எப்பொழுதும் உயிர்களின் நன்மையையே சிந்தித்து இருத்தல்)

**2. திருவேங்கடம் — வாத்சல்யம்:**

கோயிலாகிய திருவரங்கத்திற்கு அடுத்துச் சொல்லப்படுவது திருமலையாகிய திருவேங்கடம், எல்லாக் காலங்களிலும், எல்லா உயிர்களுக்கும் எல்லாவிதமான உறவுமாய்க் கொண்டு எல்லார்க்கும் உயிராக இருப்பது அந்தர்யாமியின் குணம். இக்குணத்தைத் திருவேங்கடம் சிறப்பாகப் பெற்று இருக்கிறது.

"தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும்
மண்ணோர்க்கும் வைப்பு. *(நான்முகன் திருவந் 45)*

திருவேங்கடத்து எம்பெருமான் மிகவும் தண்ணியன்; யாதொரு தகுதியும் இல்லாத என்பால் பற்றுடையவன்; ஒப்பில்லாப் புகழ் உடையவன்; கன்றுக்குட்டிபால் தாய்ப்பசு வைத்திருக்கும் அன்பினைக் கொண்டவன். திருவேங்கடம் என்ற திருமலையில் அந்தர்யாமி நிலையில் உள்ள வாத்ஸல்யம் சுடர் விட்டுப் பிரகாசிக்கும்.

"எண்கள் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதி" *(திரு 3.3.4)*

அழகர்மலை, திருவேங்கடம் என்று இரண்டு திருமலைகள் இருக்க திருவேங்கடத்தைக் கூறுவானேன்? இறைவனின் ஐந்து நிலைகளில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு திருப்பதி சொல்ல வேண்டும். அழகர்மலையில் பிரகாசிக்கிற குணம் இத்திருப்பதிக்கு இல்லாமையினால் இதனை முன்னே வைத்தார்.

"மண்ணோர் விண்ணோர் வைப்பில், போகின்ற
ஏழுலகுக்கு உயிர் பாசம்வைத்த நிகர் இல்
வாத்சல்யம் உஜ்வலம்" *(சூத்.160)*

(வைப்பு—திருமலை; வாத்சல்யம்—தாய்ப்பாசம்; உஜ்வலம்—மிக்குப்பொலிதல்)

**3. திருக்குருகூர் — இறைமைத்தன்மை:**

ஆழ்வார் திருநகரி என்கிற திருக்குருகூரில் அருளப்பட்ட "ஒன்றும் தேவும்" என்ற திருவாய்மொழி சர்வேச்வரனின் பரத்துவத்தைக் கூறும் நான்கு திருவாய் மொழிகளில் ஒன்றாகும்.

"ஓம்" (அ+உ+ம்) என்பது பிரணவம். அ—சர்வேச்வரன்; ம—ஆத்மா; உ—ஏகாரம், சர்வேச்வரனையே பற்றுக் கோடாகக் கொண்டிருப்பது ஆன்மா. பிரணவம் இறைவன் ஆத்மா இரண்டையும் முதன்மைப் படுத்துகிறது அதுபோலத் திருக்குருகூர் ஆழ்வாரையும், பிரானையும் முதன்மைப்படுத்துகிறது. இதனால்

"உபயப்பிரதாந பிரணவமான உறைகோயிலில்"
எத்தேவும் என்னும் பரேசத்துவம் பொலியும் " *(சூத். 161)*

(உபயப்பரதாந பிரணவம்—ஜீவாத்மாவும், பரமாத்மாவுமான இருவருடைய முதன்மையையும் பேசுகிற பிரணவம்) இறைமைத்தன்மையோடு திருக்குருகூரில் எளியனாய் வந்து நிற்கிறான் என்றார் ஆழ்வார்.

திருக்குருகூர் அதனுள் பரன்" *(4.10.3)*
"திருக்குருகூர் அதனுள் ஈசன்" *(4.10.3)*

### 4. திருக்குறுங்குடி — அவதார அழகு:

வாமனாவதாரத்தில் பெருமான் தன்னுடைய உடைமையாக உலகையே தான் இரந்து பிச்சை கேட்கும்படி தன்னைத் தாழ்த்திக் கொள்கிறான். அதுபோலத் திருக்குறுங்குடியில் முற்றும் உணர்ந்த பெருமான் இராமானுஜரிடம் பாடம் கேட்கக்கூடிய அளவு எளியவனாக ஆனான். இத்திருவாய் மொழியை கற்றவர்களே வைணவர்கள் ஆவர்.

"வைஷ்ணவ வாமநத்தில்" (சூத்.162)

என்பது திருக்குறுங்குடியாயிற்று.

அவதாரத்தில் (விபவ) பிரகாசிக்கும் சமுதாய சோபையான அழகு திருக்குறுங்குடியின் குணம் ஆகும்.

"வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின்
ருசி ஜநக விபவ லாவண்யம் பூர்ணம்" (சூத்.162)

(வைஷ்ணவ வாமநம்—திருக்குறுங்குடி; ருசி ஜநக விபவ லாவண்யம் — ருசியை உண்டாக்குகின்ற இராமகிருஷ்ணாதி அவதாரங்களில் அழகு)

"நீல மேனியும் நான்கு தோளும் என்
நெஞ்சம் நிறைந்தனவே" (5.5.7)

### 5. சிரீவரமங்கலம் — ஔதார்யம்:

தானே முன்வந்து தன்னைக் கொடுக்கும் வள்ளன்மையாகிய ஔதார்ய குணம் சிரீவரமங்கலத்தில் கொழுந்துவிட்டு வளரும்.

"வந்தருளி என்நெஞ்சு இடம் கொண்ட
வானவர் கொழுந்தே" (திரு 5.7.7)

"ருசி விவசர்க்குப் பாதமே சரண் ஆக்கும்
ஔதார்யம், வானமாமலையிலே கொழுந்துவிடும்". (சூத். 163)

(ருசி விவசர்—மேற்கூறிய அழகின் ருசியினாலே பரவசப் பட்டவர்கள்; அதாவது தன்வசம் இழந்தவர்கள். ஔதார்யம்—வள்ளல்தன்னமை, வானமாமலை—சிரீவரமங்கலம் நகரில் எழுந்தருளியிருக்கும் இறைவன்).

### 6. குடமூக்கு — மாதுர்யம்:

காப்பாற்றும் தெய்வம் இவரன்றி வேறில்லை என்ற திடமான நம்பிக்கை உடையவர்களை உருக்குகின்ற மென்மையான இனிமைத்தன்மை (மாதுர்யம்) கும்பகோணத்தில் (குடமூக்கு) பிரவஹிக்கும்.

"களைவாய் துன்பம் களையாது ஒழிவாய்;
களைகண் மற்றிலேன்" (திரு 5.8.8)

"நீராய் அலைந்து கரைய
உருக்குகின்ற நெடுமாலே" (திரு 5.8.1)

"களைகண் அற்றாரை உருக்கும் மாதுர்யம்,
குடமூக்கிலே பிரவஹிக்கும்" (சூத். 164)

### *7. திருவல்லவாழ் —அருள்:*

பகவானது அருளை அனுபவிக்கப் பெறாமையால் நாள்தோறும் மெலிந்தாலும் காப்பாற்றுபவன் அவனே என்றதுணிவு கொள்ளச் செய்யும் அருள் (கிருபை) திருவல்லவாழில் நித்யமாக இருக்கும்.

பெருமானது தொல்லருளே (5.9.9)

"மெலிவிலும் சேமம் கொள்விக்கும்
கிருபை தென்னகரிலே நித்யம்" (சூத்.165)

(சேமம்—காவல்; தென்னகர்—திருவல்லவாழ்)

### *8. திருவண்வண்டூர் — உறுதி*

இறைவனுடைய எண்ணத்தை உள்ளபடி அறிந்திருப்பவர்களுக்கு இறைவன் அடியார்களை எக்காலத்தும் கைவிடமாட்டான் என்ற உறுதியைக் கொடுப்பது திருவண்வண்டூர் என்னும் திவ்வியதேசம்.

"வியவஸாயஜ்ஞர் ரக்ஷனஸ்தைர்யம்,
பம்போத்தர தேசஸ்தம்" (சூத். 166)

(வியவஸாயஜ்ஞர்—இறைவனாகிய அவனுடைய எண்ணத்தை உள்ளபடி அறிந்திருப்பவர்கள்; ஸ்தைர்யம்—அடியார்களை எக்காலத்தும் கைவிடமாட்டாத உறுதி. பம்போத்தரம்—பம்பை என்னும் நதிக்கு வடகரையில் உள்ள திருவண்வண்டூர் என்னும் திவ்வியதேசம். தேசஸ்தம்—நகரிலே நிலை பெற்று இருக்கும்).

### *9. திருவிண்ணகர் — சேராதனவற்றைச் சேர்க்கும் ஆற்றல்:*

இறைவன் காட்சி தரக் காலம் தாழ்த்த, பராங்குச நாயகி ஊடுகிறாள். அந்த ஊடலால் ஏற்பட்ட சினத்தை அழிப்பதாகிய சேராதனவற்றை சேர்க்கக் கூடிய ஆற்றல் திருவிண்ணகரில் பரந்து கிடக்கிறது.

"விளம்ப விரோதம்அழிக்கும் விருத்த கடநா சாமர்த்தியம்,
நன்னகரிலே விஸ்தீர்ணம்" (சூத். 167)

(விளம்பம்—காலதாமதம்; சாமர்த்தியம்—ஆற்றல்; விருத்த கடநா என்பது சாமர்த்தியத்துக்கு அடைமொழி; விருத்தம்—மாறுபட்டவைகள்; கடநா—சேர்த்தல். அதாவது சேராதவற்றைச் சேர்க்கும் ஆற்றல், நன்னகர்—திருவிண்ணகரம்: விஸ்தீர்ணம்—பரப்பு)

இறைவன் திருவிண்ணகரில் தன்னுடையஅகடிதகடநா சாமர்த்தியத்தை (அகடிதகடநா சாமர்த்தியம்—சேராதனவற்றைச் சேர்க்கும் ஆற்றல்) காட்டியே ஆழ்வார் நாயகியின் ஊடலை நீக்குகிறார்.

"அழித்தாய் உன் திருவடியால்" (திரு 6.2.9)

இதே அகடிதகடநா சாமர்த்தியம் (சேராதனவற்றைச் சேர்க்கும் ஆற்றல்) திருவிண்ணகர்ப் பதிகம் (6ஆம் பத்து ...3ஆம் திருவாய்மொழியில் அனைத்துப் பாசுரங்கள்) நெடுகக் காணக் கிடக்கிறது.

"நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானைச்
செல்வம் மல்கு குடி திருவிண்ணகர்க் கண்டேனே" (6.3.1)

(நல்குரவு செல்வம்; நரகு சுவர்க்கம்; பகை நட்பு; விடம் அமுதம்; ஒன்றுக்கொன்று சேராதது)

### 10. திருத்தொலைவில்லி மங்கலம் — பொருந்தா உறவு

தாயும், தோழியும் தாம் தலைவியை இறைவன் திருக்கோயிலில் சேர்த்தார்கள். அவர்களே தாம் தலைவியை "அவ்வூருக்குப் போகாதே போனால் எங்களை மறந்துவிடுவாய் என்கின்றனர். தலைவியைப் போகச் செய்யவேண்டும் என்ற விருப்பத்தை ஊட்டுவதும் திருத்தொலைவில்லிமங்கலம்தான். தலைவியைப் போகாமல் தோழி தடுக்கப் பண்ணுவதும் அவ்வூரே. இப்படி ஒன்றுக்கொன்று பொருந்தாமையாகிய இரட்டைப் பண்புகளைப் பெற்றிருப்பது "திருத்தொலைவில்லி மங்கலம்" என்ற இரட்டைத் திருப்பதி.

தாய், தோழி என்ற இவர்கள்தான் தலைவியைத் திருத்தொலை வில்லிமங்கலம் இறைவனுடன் சேர்த்தார்கள். அப்பெருமான் தலைவி தாயோடு பொருந்தாமல் தன்னோடு பொருந்தும் உறவுமுறையைச் செய்கிறான்.

> "இவளை நீர் இனி அன்னைமீர்
> உமக்கு ஆசை இல்லைவிடுமினோ" *(6.5.1)*

நாம் உறவினர்களாக நினைத்து இருக்கும் அனைவரும் போலி உறவினர்கள். இறைவன் ஒருவனே உண்மையான உறவு என்பது பெற்றாம்.

> "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும்
> தேவபிரானையே தந்தைதாய் என்று அடைந்த
> வண்குருகூர்ச் சடகோபன்" (திரு 6.5.1)

இத்திவ்ய தேசத்தில் இறைவனின் பாந்தவ (உறவு நிலை) குணம் தலைவிக்கு இனியதாய், தோழிக்கு இனிமையற்றதாய் இரட்டித்திருக்கும்.

> "கடித கடக விகடநா பாந்தவம்,
> அவ்வூரிலே துவி குணம்" (சூத். *168*)

(கடிதர்—சேர்க்கப்படுகிறவர்கள்; ஆழ்வார், கடகர்—சேர்ப்பவர்; தோழி. விகடநா பாந்தவம் — பொருந்தாமையைச் செய்கிற உறவு முறை; தலைவிக்கும் தோழிக்கும் பரஸ்பரம் பொருந்தாமையை விளைத்தது பகவானுடைய உறவு முறை. துவி குணம் — இரட்டைக்குணம்)

### 11. திருக்கோளூர் — ஆபத்துக்கு உதவுதல்:

இறைவனையே பற்றுக்கோடாக வைத்திருப்பவர்கள், போலிப் பேறுகள், போலி வழிகளைக் கைவிட்டு விடுவர். அதனால் அவர்கள் கைம்முதல் இழந்தவர்கள் ஆகிறார்கள். அவர்களுக்கு ஆபத்துக் காலத்தில் உதவும் நிதி போலத் திருக்கோளூர்ப் பெருமான் இருக்கிறான். திருக்கோளூர் இறைவனுக்கு "வைத்தமாநிதிப் பெருமாள்" என்பது திருப்பெயர்.

> "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும்
> வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" (திரு 6.7.1)
> "அவனே தாரகம்; அவனே போஷகம்;
> அவனே போக்யம்"
> "வைத்த மாநிதியாம் மதுசூதனனை" (திரு 6.7.11)

ஆபத்துக்குதவுதலாகிற பெருங்குணம் (ஆபத்சகத்வம்) திருக்கோளூரில் நிறைந்து இருக்கும்.

*"கைம்முதல் இழந்தார் உண்ணும் நிதியின் ஆபத்சகத்வம்,*
*புகும் ஊரிலே சம்ருத்தம்" (சூத்.169)*

(புகும் ஊர்—திருக்கோளூர்ப்பதிகத்தில் புகும் ஊர் என்று முடிகிறது. சம்ருத்தம்—நிறைவு)

**12. தென்திருப்பேரெயில் —அழகு:**

"பகவானை முறையாக அடையலாம்; பதற்றம் வேண்டா" என்று தடுக்கும் தோழி பேச்சைக் கேட்காது, விலக்கி விட்டுச் சேர விரும்பும் பராங்குச நாயகியின் நெஞ்சைக் கவரும் அழகு (சௌந்தர்யம்) தென் திருப்பேரை மாநகரில் விளங்கிக் காணப்படும்.

*"சென்று சேர்வார்க்கு உசாத்துணை அறுக்கும் சௌந்தர்யம்,*
*மாநகரிலே கோஷிக்கும்" (சூத்.170)*

(மாநகர்—தென்திருப்பேரையில் மாநகர்)

**13. திருவாறன்விளை — ஆனந்த வளர்ச்சி:**

திருவாறன்விளை இறைவன் மேல் உள்ள அன்பின் ஈடுபாட்டால் பரத்துவம் (மோட்சம்) கூட வேண்டா என்ற ஆனந்தவளர்ச்சி விளங்கிக்காணும்.

*"இன்பம் பயக்க எழில்மலர் மாதரும் தானும்*
*இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன்*
*வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" (திரு 7.10.1)*

இத்திவ்வியதேசத்தில் இறைவன் தானும் பெரிய பிராட்டியுமாக இன்பம் பிறக்கும்படி இனிதாக ஒருசேர எழுந்தருளியுள்ளான்.

இந்த ஏழ் உலகங்களையும் இன்பம் பிறக்கும்படி ஆள்கின்றான். இது ஆனந்த வளர்ச்சி தானே!

*"பிரவண சித்தம் பரத்வ விமுகம் ஆக்கும் ஆனந்த விருத்தி,*
*நீணகரிலே" (சூத். 171)*

(பிரவணம்—அன்பு; விமுகம் ஆக்குதல்—வேறுபடுத்துதல் திருவாறன்விளை இறைவன் தன்னை அல்லாது வேறு ஒன்றனை நினைத்திராத தன்மையைத் தருபவன், "சிந்தை மற்றொன்றின் திறத்தல்லாத்தன்மை தேவபிரான் அறியும்" (7.10.10) இங்கு மற்றொன்று என்பது பரத்துவம், நீணகர்—திருவாறன்விளை; விருத்தி—வளர்ச்சி)

**14. திருக்குளந்தை — செயல்களின் ஆச்சரியம்:**

திருக்குளந்தை என்னும் திவ்வியதேசத்தில் சேஷ்டிதாச்சரியம் என்னும் குணம் விளங்கும் (சேஷ்டிதம்—செயல்)

*"பல்வளையார் முன்பரிசு அழிந்தேன்" (திரு 8.2:4)*

என்றபடி பெண்மைக்கு உறுப்பாகிய நாணத்தை அழிக்கும் செயல்களின் ஆச்சரியம் கூறப்பட்டது.

"சாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம்
குளத்தே கொடிவிடும்" (சூத். 172)

(சாதரர்-அன்பினை உடையவர்கள். கொடிவிடும்—மிக்குவிளங்கும்)

### 15. திருவண்பரிசாரம் — மிருதுத் தன்மை:

பரமபதத்திலே இருக்கும்படியான இறைவன், மக்களுடைய துக்கத்தைப் போக்குவதற்காகத் தன் சிரமத்தையும் பொருட்படுத்தாது இந்த உலகத்தில் வந்து அவதரித்த மிருதுத்தன்மை (சௌகுமார்யம்) திருவண்பரிசாரத்தில் காணப்படும்.

"சிரமமனம் சூழும் ஸௌகுமார்ய பிரகாசம்,
ஆய்ச்சேரியிலே" (சூத். 173)

(சௌகுமார்யம்—மிருதுத்தன்மை; ஆய்ச்சேரி — திருத்தாயார் அவதரித்த திருவண்பரிசாரம்; ஆய்—தாய்)

"ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்" (8.3.3)

என்று திருவண்பரிசாரப்பதிகத்தில் கூறுவதனால் சங்கும் சக்கரமும் பகைவர்களை அழிக்கும் ஆயுதங்களாக இருந்தாலும், பகவானுக்கு ஆபரணங்களாக இருக்கின்றன. பூ ஏந்தினாற்போலே இருக்கிற திருவாழியும் திருச்சக்கரமும் பாரமாகத் தோன்றும்படி இருக்கிறதனாலே மிருதுத்தன்மை (சௌகுமார்யம்) வெளிப்படுகிறது.

### 16. திருச்செங்குன்றூர் — சூரனது தன்மை:

கண்ண பிரானுக்கு எங்கே தீங்குவந்து விடுமோ என்று கண்ணபிரானின் படுக்கையைத் தடவிப்பார்த்து அவனது மென்மையை நினைத்து விதுரர் போன்ற புத்திமான்கள் அஞ்ச வேண்டாத இடத்திலும் அஞ்சுவார்கள். அவர்கள் அச்சம் தீர்க்குமாறு சாணூரன், முஷ்டிகன், கம்சன் முதலானவர்களைக் கொன்று வெளிப்படுத்திய வீரியம், பராக்கிரமம் ஆகிய பண்புகள் (சௌர்யம்—சூரனது தன்மை) திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எனும் திவ்யதேசத்தில் விளங்கிக் காணப்படுகிறது.

"வார்கடா அருவி யானைமா மலையின்
மருப்பிணைக் குவடு இறுத்து உருட்டி
ஊர்கொள் திண்பாகன் உயிர்செகுத்து அரங்கின்
மல்லரைக் கொன்றுசூழ் பரண்மேல்
போர்கடா அரசர் புறக்கிட மாடம்
மீமிசைக் கஞ்சனைத் தகர்த்த
சீர்கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில்
திருச்சிற்றாறு எங்கள் செல் சார்வே" (திரு 8.4.1)

"மஹாமதிகள் அச்சம் கெட்டு அமரும் சௌர்யாதிகள்
சிற்றாற்றிலே கொழிக்கும்" (சூத். 174)

(மஹாமதிகள்—விதுரர் முதலாயினோர்; சௌர்யம்— சூரனது தன்மை; சிற்றாறு — திருச்செங்குன்றூரிலுள்ள திவ்வியதேசம்)

## 17. திருக்கடித்தானம் — செய்ந்நன்றியறிதல் ஆகிற வாசனை

அடைய வேண்டிய பொருள் (சாத்யம்) கிடைத்துவிட்டால் அடைந்த வழியை (சாதனம்) மறந்துவிடுவது இயல்பு. ஆழ்வார் மனத்தில் தங்கி அவரைப் பூரணமாக அனுபவிக்கப்பகவான் விரும்பினான். திருக்கடித்தானத்தில் வந்து எழுந்தருளியமையால் ஆழ்வார் கிடைத்தார். ஆழ்வார்—சாத்யம்; திருக்கடித்தானம்—சாதனம். ஆழ்வார் கிடைத்து விட்டதனால் பகவான் திருக்கடித்தானத்தை மறக்கவில்லை. ஆழ்வாரைத் தந்த செய்ந்நன்றி அறிதலை (கிருதஜ்ஞதா கந்தம்) வெளிப்படுத்தத் திருக்கடித்தானத்திலேயே தங்கிவிட்டான். பகவானின் செய்நன்றி அறிதலாகிய குணம் திருக்கடித்தானத்தில் வெளிப்படுகிறது.

"திருக்கடித்தானமும் எனது சிந்தையும்
ஒருக்கடுத்துள்ளே உறையும் பிரான்" (திரு 8.6.2)

இதற்கான சூத்திரம்

"ஸாத்ய ஹ்ருதிஸ்தனாயும் ஸாதநம்
ஒருக்கடுக்கும் கிருதஜ்ஞதா கந்தம்,
தாயப்பதியிலே" (சூத் 175)

(ஸாத்ய ஹ்ருதிஸ்தனாயும்—ஆழ்வாருடைய மனத்தில் இருந்து வசித்தலாகிற பலம் கிடைத்திருக்கச் செய்தேயும். ஸாத்யம்—பலம்; சாதனம்—ஆழ்வாருடைய மனத்தில் வசிப்பதற்குச் சாதனமாக இருந்த திவ்யதேசம்; ஒருக்கடுத்தல்—ஒருங்க அடுத்தல். கிருதஜ்ஞதா கந்தம்—செய்ந்நன்றி அறிதலாகிய வாசனை; தாயப்பதி—திருக்கடித்தான எட்டாம் பாசுரம் முடிவில் தாயப்பதியே என்று முடிவதனால் திருக்கடித்தானத்தைக் குறிக்கிறது

## 18. திருப்புலியூர் — தலைமைத் தன்மை:

தன் திருவருளில் மூழ்கிறவர்களை மற்றொருவர்க்கு அன்றி தனக்கே உரியராக்கும் தலைமைத் தன்மை (நாயக லக்ஷணம்) திருப்புலியூரில் நிறைந்திருக்கும்.

திருப்புலியூர் புகழ் அன்றி மற்று. பரவாள்
இவள் நின்று இராப்பகல்" (திரு 8.9.9)

திருப்புலியூர் இறைவனையன்றித் தலைவி பிறரை வழிபடமாட்டாள் என்பதனால் நாயகத் தன்மை (தலைமை) வெளிப்படுகிறது.

"அவகாஹித்தாரை அநந்யார்ஹம் ஆக்கும் நாயகலக்ஷணம்
வளம் புகழும் ஊரிலே குட்டமிடும்" (சூத்.176)

(அவகாஹித்தல் — மூழ்குதல்; அநந்யார்ஹமாக்குதல் — பிறர்க்கு உரிமை ஆகாமல் அவன் ஒருவனுக்கே உரித்தாக்குதல்; வளம்புகழும் ஊர் — புலியூர்; குட்டமிடும் — நிறைந்து இருக்கும்)

## 19 — 21. திருப்புளிங்குடி திருவரகுணமங்கை, திருவைகுந்தம் — பதற்றம்:

பசிவந்தவன் சோறு சமைக்குமுன் சமையலறையில் வந்து ஆலாய்ப் பறப்பான், அதுபோல ஆழ்வார்க்குப் பரமபக்தியாகிற பாகம் பிறக்கும் அளவும் சர்வேச்வரனுக்கு உண்டாகும் பதற்றம் திருப்புளிங்குடி, திருவரகுணமங்கை, திருவைகுந்தம் என்னும் திவ்விய தேசங்களில் தெரியும்.

"புளிங்குடிக் கிடந்து வரகுணமங்கை
இருந்து வைகுந்தத்துள் நின்று தெளிந்த
என் சிந்தை அகம் கழியாதே" (9.2.4)

புளிங்குடி, வரகுணமங்கை, திருவைகுந்தம் ஆகிய திவ்விய தேசத்து இறைவன் ஆழ்வாரின் சிந்தையை விட்டுச் சற்றும் நகராமல் இருப்பதினால் இறைவனின் பதற்றம் தெரிகிறது.

"போக்ய பாகத்வரை, தெளிந்த சிந்தைக்கு
முன்னில் மூன்றிலும் பிரகடம்" (சூத். 177)

(போக்யம் — இனியபொருள்: த்வரை — பதற்றம்: தெளிந்த சிந்தைக்கு முன்னில் மூன்றிலும். "தெளிந்த என் சிந்தை" என்ற தொடருடைய திருப்பாசுரத்தில் முன் அடியில் கூறப்படும் திவ்ய தேசங்கள் மூன்றிலும்; பிரகடம் — தெரியும்)

## 22. திருக்காட்கரை — சேஷ சேஷிபாவம் மாறாடிப் பரிமாறும் சீலகுணம்:

ஆழ்வார் பகவானை அப்படியே விழுங்கிவிட ஆசைப்படுகிறார். பகவானும் அதேபோல ஆழ்வாரிடம் அன்பு பரிமாறிய சீலகுணம் திருக்காட்கரையில் தெரிகிறது.

"வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணில் என்று
ஆர்வு உற்ற என்னை ஒழிய, என்னில்முன்னம்
பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினான்.
கார் ஒக்கும் காட்கரை அப்பன் கடியனே" (திரு 9.5.9)

இறைவனைக் கண்டால் அப்படியே விழுங்கிவிடவேண்டும் என ஆழ்வார் ஆசைப்படுகின்றார். ஆழ்வார்க்குமுன்பே தான் எண்ணி ஆழ்வாரை அடியோடு பருகி விட்டான் காட்கரை அப்பன் அவன் கடியன்.

"போகத்தில் தட்டுமாறும் சீலம்,
காட்கரையிலே கரை அழிக்கும்" (சூத். 178)

(தட்டுமாறுதல் — முறைமாறுதல்; சீலமாவது, பெரியவன் தாழ்ந்தவர்களோடே புரையறக்கலக்கும் தன்மை)

## 23. திருமூழிக்களம் — பிரிவினைப் பொறாமல் இருக்கும் சௌகுமார்யம்:

மகாத்மாக்களுடைய பிரிவினைப் பொறாமல் இருக்கின்ற சௌகுமார்ய குணம் திருமூழிக்களத்தில் காணக்கிடக்கிறது, முன்னே கூறிய சௌகுமார்யம் விக்கிரகத்தைக் குறித்தது. இங்குக் கூறிய திவ்ய மங்கள சௌகுமார்யம் திவ்யாத்ம சொருபத்தைப் பற்றியது.

"மூழிக்களத்து வளத்தினை" (பெரிய திருமடல் 128)

"மஹாத்மாக்கள் விரஹம் சஹியாத மார்த்தவம்,
வளத்தின் களத்தே கூடு பூரிக்கும்" (சூத் 179)

(மஹாத்மாக்கள் — பாகவதர்கள்; விரஹம் — பிரிவு, மார்த்தவம் — மென்மையாகிற சௌகுமார்யகுணம்; களம் — திருமூழிக்களம்; கூடுபூரிக்கும் — நிறைந்து இருக்கும்)

### 24. திருநாவாய் — அருள்

பகவானைப் பிரிகையால் வந்த துன்பக்கடலைக் கடக்கும் ஓடமாக (நாவாய்) இருந்து அடியார்களைக் கடத்துகின்ற திருவருள் திருநாவாயில் காணப்படும்.

"பிரிந்த துன்பக்கடல் கடத்தும் விஷ்ணுபோத
ஆந்ருசம்ஸ்யம், நாவாயிலே நிழல் எழும்" (சூத் 180)

(பிரிந்த துன்பக்கடல் கடப்பதற்கு நாவாய்த்தலத்து இறைவன் நாவாயாகி (கப்பல்) இருக்கிறான். விஷ்ணு போதம் — விஷ்ணுவாகிற ஓடம்; ஆந்ருசம்ஸ்யம் — அடியார்களுக்குச் செய்யும் அருள்)

### 25. திருக்கண்ணபுரம் — மோட்சத்தைக் கொடுக்கும் தன்மை:

எல்லார்க்கும் புகலாகப் பற்றுவதற்குத் தக்கவனாயிருக்கும் பகவானுடைய மோட்சத்தைக் கொடுக்கும் தன்மை, திருக்கண்ணபுரத்தில் பிரசித்தம்.

"சரண்ய முகுந்தத்வம்,
உத்பலாவதகத்திலே பிரசித்தம்" (சூத்.181)

(சரண்யன் — தனது தாள் அடைந்தார்க்குப் புகலிடம் தருபவன்; முகுந்தத்வம் — மோட்சம் கொடுக்கும் தன்மை; உத்பலாவதகம் — திருச்கண்ணபுரம்: திருக்கண்ணபுரத்தில் உள்ள விமானம் உத்பலாவதகம் எனப்படும். பலம் —மாமிசம்; உத்பலம் — மாமிசம் நீங்கியவர் அதாவது மாமிச சரீரம் உடையார் இறைவனை அடையத் தம்மைவருத்திச் சரீரத்தை உலர்த்துகையால் மாமிசம் நீங்கியவர்; முமுக்ஷுக்கள்)

"சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம்
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" (திரு 9.10.5)

என்ற திருக்கண்ணபுரப் பாசுரத்தில் மோட்சம் கொடுக்கும் முதன்மைக் குணம் வெளிப்படுகிறது.

### 26. திருமோகூர் — தாபத்தைத் தீர்க்கும் குளிர்ச்சி:

செல்லுகின்ற வழிக்குத் துணைவனாகிற பகவானுடைய, பிறப்பு இறப்புகளாய் உழன்று திரிவதால் உண்டான தாபத்தைத் தீர்க்கும் குளிர்ச்சி திருமோகூரில் காணப்படும்.

"மார்க்கபந்து சைத்யம்,
மோஹநத்தே மடுவிடும்" (சூத் 182)

(மார்க்கபந்து — வழித்துணைவன்; சைத்யம் — குளிர்ச்சி; மோஹனம் — மயக்கம், அமுதத்தைக் கொடுக்கும் சமயத்தில் அசுரர்களை மயங்கச் செய்த தலம் திருமோகூர்; மோஹனம் மடுவிடும் — நிறைந்து நிலைபெற்று இருக்கும்)

"காளமேகத்தை அன்றி மற்றொன்று இலம்கதி" (10.1.1)
"மரகத மணித்தடம்" (திரு 10.1.8)

என்று திருமோகூர்ப்பிரானை ஆழ்வார் அழைப்பதினால் "தண்மை" வெளிப்படுகிறது.

### 27. திருவனந்தபுரம் — வேறுபாடு பாராத ஒத்தகுணம்:

சேனையோடு கூடின சேனை முதலியார் வழிபடத்திருமுகம்; புதல்வன் ஆகிய பிரமன் வழிபடத்திருநாபி; ஆழ்வார்களுடைய

சிடர்களான அந்தணன் வழிபட திருவடி; ஆகிற இவற்றை மூன்றுபாகங்களாக — வழிகளாக திருவனந்தபுரத்தில் மூன்று திறத்தாருக்கும் காட்சியளிப்ப மூன்றாலும் காட்டுகிறார். நித்யசூரிகள், உலக மக்கள் என்ற வேறுபாடு பாராது ஒத்திருக்கும் குணம் வெளிப்படுகிறது.

"ஸ
ஸைன்ய புத்ர சிஷ்ய
ஸாத்ய சித்த பூசுர அர்ச்சனத்துக்கு
முக நாபி பாதங்களைத்
துவார த்ரயத்தாலே காட்டும் சாம்யம்
அநந்த சயனத்திலே வியக்தம்" *(சூத் 183)*

(ஸ — கூடிய; ஸைன்ய, புத்ர, சிஷ்ய ஒவ்வொன்றிற்கும் முன்னால் 'ஸ' சேர்த்துக் கொள்ள வேண்டும். ஸைன்ய — சேனை; சாத்யர் — சேனை முதலியார், பூசுரர் — நிலத்தேவர், சிஷ்யர் — ஆழ்வாருடைய சிஷ்யர்கள். புத்ரர் — பிரமன்; திருமாலின் நாபியில் தோன்றியவர். அர்ச்சனம் — வழிபாடு. துவாரத்ரயம் — மூன்று திருவாசல்கள். வியக்தம் — தெளிவு; அனந்தசயனம் — திருவனந்தபுரத்தில் கண்வளருதல்)

"அநந்தபுரத்து அமர்கோன் அர்ச்சிக்கின்று,
அங்கு அகப்பணி செய்வர் விண்ணோர்" *(திரு 10.2.6)*

**திருவனந்தபுரத்தில் நித்யசூரிகளின் தலைவரான சேனைமுதலியார் தொண்டுசெய்தல்**

அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதிசேர் அனந்தபுரம்" *(திரு 10.2.6)*
(அமரர் — பிரமன் முதலானதேவர்)

**பிரமன் முதலான தேவர் வணங்குதல்**

"படமுடை அரவில் பள்ளி பயின்றவன்
பாதம் காண நடமினோ நமர்கள் உள்ளீர்" *(திரு 10.2.8)*

திருவனந்தபுரத்தில் பெருமானைப் பாதம் காண ஆழ்வாருடைய சிடர்கள் நடப்பர். இவற்றில் திருவனந்தபுரத்து; பெருமான் நித்யசூரிகள், பிரமன் முதலியோர், சிடர்களாகிய உலகமக்கள் அனைவர்க்கும் வேறுபாடு காட்டாது ஒத்திருக்கும் குணம் புலப்படுத்தப்படுகிறது.

### 28. திருவாட்டாறு — அடியார்கட்குப் பரதந்திரப்பட்டு இருக்கும் தன்மை:

அடியார்கட்கு மோட்சத்தைக் கொடுப்பதில் இறைவன் அடியார்கள் விதிக்கின்ற படியே செய்வானாய் அவர்கள் வசப்பட்டுப் பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை திருவாட்டாற்றில் கரைபுரண்டு வெள்ளமாய்ப் பெருக்கெடுக்கும்.

"விண்ணுலகம் தருவானாய்
விரைகின்றான் விதிவகையே" *(திரு 10.6.3)*
"மோக்ஷ தானத்தில் பிரணத பாரதந்தர்யம்
வளம்மிக்க நதியிலே கரைபுரளும்" *(சூத் 184)*

(மோக்ஷ தானத்தில் — மோக்ஷத்தைக் கொடுப்பதில். பிரணதர் — அடியார்கள்)

*29.* திருமாலிருஞ்சோலை — *அடியார் சரீரத்தில் கொண்ட கழிபெருங்காதல்:*

முமுக்ஷுக்களுக்கு மீண்டும் பிறவி கிடையாது. அப்பிறவிதான் கடைசியாகும். அந்தப்பிறவிமேல் — சரீரம் கேவலம் என்று கூடப்பாராமல் — ஆசை கொண்டு குடிகொள்ள இறைவன் விரும்புவான். அரசகுமாரன் தன்மனைவியின் எச்சிலை விரும்புவது போலப் பகவான்கேவலம் பாரான். திவ்ய தேசங்களில் விரும்பி எழுந்தருளுவது போல முமுக்ஷுக்களின் சரீரத்திலும் விருப்பம் கொள்வன்.

"மாய ஆக்கை இதனுட் புகுந்து" *(திரு 10.7.3)*
"திருமாலிருஞ்சோலையே
திருப்பாற்கடலே என்தலையே" *(திரு 10.7.8)*
"தியாஜ்ய தேஹவியாமோஹம், மருள்கள்
கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்" *(சூத் 185)*

(தியாஜ்ய தேஹம் — விடத்தக்க சரீரம்; முமுக்ஷுக்கள் சரீரம். வியாமோஹம்— கழி பெருங்காதல். மயல்மிகு பொழில் — திருமாலிருஞ்சோலை)

*30.* திருப்பேர்நகர்:

புண்ணியம் சிறிதும் செய்யாமல் இருந்தவரையும், அவர் போகிற போக்கிலே திருமாலிருஞ்சோலை என்றதற்கு "அடடா இவன் என் ஊரைச் சொன்னான், இவனுக்கு வீடுபேறு தரவேண்டியது தான்" என்று அங்கீகரிக்கச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கும் சுவாமித்வம் திருப்பேர்நகரில் பிரசித்தமாயிற்று. தான் உடையவன் அவன்தன் உடைமை என்று காக்க வேண்டிய தன்மை விளங்கும்.

"திருமாலிருஞ்சோலைமலை என்றேன் என்னத்
திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (திரு 10,8:1)
"அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும்
ஸ்வாமித்வம், பெருநகரிலே பேர்பெற்றது *(சூத் 186)*

# திருவாய்மொழி அருளிய காலம் அதிகாரிநியமம், இனிமை

## பிரபந்தம் அருளிய காலம், அதிகாரிநியமம்

இத்திவ்ய தேசங்களில் இனிமையில் இவருக்கு ஊற்றம் உண்டானது எப்பொழுது? பிரபந்தம் எந்தவயதில் அருளிச் செய்தார்? இப்பிரபந்தத்திற்கு அதிகாரி நியமம் உண்டா? இதன் இனிமை என்ன?

இவ்வர்ச்சாவதார திவ்விய தேசங்களில் அன்பு இவர்க்கு பதினாறுவயதிலேயே வந்துவிட்டது.

"முலையோ முழுமுற்றும் போந்தில பெருமான் மலையோ
திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகம் இவள் பரமே" *(திருவி 60)*

இப்பிரபந்தம் தான் — பிறர் என்னும் வேறுபாடு, நித்தியசூரிகள், இவ்வுலக மக்கள் என்னும் வேறுபாடு, இறைவன். இவ்வுலகம் என்னும் வேறுபாடு என்று எந்த விதவேறுபாடும் இல்லாமல் இரண்டு வகைப்பட்ட உலகங்களும் அனுபவிப்பதற்குத் தகுதியாகப் பாடப்பட்டது.

பாலும் அமுதமும் கலந்தாற்போலே அமைந்துள்ளது. தன்னை உண்பாரை என்றும் உள்ளவராகச் செய்யும் அமுதத்தின் தன்மையது

இவற்றில் பிராவண்யம் இவள் பரமே என்ன உண்டாய்,
ஷோடசகலாபூர்ணமான சந்த்ரமண்டலம்போலே பதினாறு
திருநக்ஷத்திரம் நிரம்பினவாறே, தேவபோக்யமான அதில்
அம்ருதம் போல் அன்றிக்கே, என்னாத் தமிழர் இன்சகாரர்
முதற்பத்தர்வானவர் என்னம்மான் பார்பரவு என்னும்படி
சேச்வர விபூதி போக்யமான பாலோடு அமுதன்ன
மென்மொழி முகம் செய்தது" *(சூத். 187)*

*(ஷோடசகலா — பதினாறு கலைகள்; சேச்வரவிபூதி —ஈச்வரனோடு கூடிய உலகம்; முகம் செய்தது — அவதரித்தது)*

*(இவ்வர்ச்சாவதார திவ்விய தேசங்களில் அன்பு, "இவள் பரமே" என்னும்படி பருவம் நிரம்புவதற்கு முன்னே உண்டாய், பதினாறு கலைகளும் நிறைந்த சந்திர மண்டலம் போலே, பதினாறு வயது நிறைந்தவாறே, தேவர்களுக்கு இனிய உணவாகையாலே அதிகாரி நியமுடைத்தான அந்தச் சந்திர மண்டலத்தில் அமுதம் போல் அல்லாமல், "என் நாவில் இன்கவி" என்றும், "பாலேய் தமிழர் இசைகாரர்" என்றும், "தூமுதல் பத்தர்" என்றும் "வானவர்" என்றும், "தென்னா என்னும் என்னம்மான்" என்றும், "பார் பரவு இன்கவிபாடும் பரமரே" என்றும் சொல்லுகிறபடியே.*

இந்தப் பிரபந்தம் அருளுகிற காலத்தில் "இப்படித்தாம் பகவானைப்பாட வேண்டும் என்று நினைத்திருந்து பாடினாரா? இல்லை என்க.

நீர்பாலாய் — பால் நெய்யாய் — நெய் அமிருதமாய் — நிரம்பினால் ஒரு ஏரி கரைபுரண்டு உடைத்துக் கொண்டு வெள்ளமாய்ப் பிரவகிக்கும்.

அதுபோல பகவானுடைய திருவருள் பக்தியாய் — பரஞானமாய் — பரமபக்தியாய் — பொங்கி வழிய, சொற்கள் "என்னைக் கொள்க என்னைக் கொள்க" என்று போட்டி போட்டுக் கொண்டு மொழிபட்டு ஓடும் கவியமுதமே அந்தாதியான இந்த ஆயிரம் பாசுரங்கள் ஆகும்.

"நீர்பால் நெய் அமுதமாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே,
பரபக்தியாதிமய ஜ்ஞாநாம்ருத அப்திநிமிகிற
வாய்கரை மிடைந்து, மொழிபட்டு அவாவில்
அந்தாதி என்று பேர்பெற்றது" *(சூத் 188)*

*(பரபக்தி ஆதிமய — பரபக்தி தொடங்கி, பரஞானம், பரமபக்தியாய் முதிர்தல்; ஜ்ஞாந அம்ருத அப்தி — ஞான அமுதக்கடல்;)*

"நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க
நெக்கு ஓசிந்து கரையுமே" *(திரு.6.5.2)*

*(நிமிதல் — நெளிதல்)*

பக்தி பொங்கிவழிந்து நெளியும்நிலை.

"மிடைந்த சொல் தொடை ஆயிரம்" *(திரு 1.7.11)*

*(மிடைதல் — நெருங்குதல்)*

சொற்கள் போட்டிப் போட்டுக் கொண்டு நெருங்குதல்

"மொழிபட்டு ஓடும் கவியமுதம்" *(திருவி 8.10.5)*

அனுபவத்தால் உண்டான பிரீதி சொற்களின் உருவமாக வெளிவருகின்ற கவிகளாகிய அமுதம்.

# கீதைக்கு ஒப்பு

சொல்லப்படுகிற பொருள்களின் ஒப்புமையாலே நம்மாழ்வார் அருளிய பிரபந்தம் பகவத்கீதையை ஒக்கும்.

## தத்துவ விவேகத்தில் ஒப்பு

"சரீரம் வேறு; ஆன்மா வேறு" 'என்றும், "சீவான்மா வேறு பரமான்மா வேறு" என்றும் "சீவான்மாக்களே ஒன்றுக்கொன்று வேறுபடும்" என்றும் பகவத்கீதை கூறுகிறது.

*"அடியேன் உள்ளான்:*
*உடல் உள்ளான்"* *(திரு 8.8.2)*

என்கிறார் நம்மாழ்வார். இதனால் சீவான்மா வேறு, பரமான்மா வேறு என்பதும், சீவான்மாக்களும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவை என்பதும் புலனாகின்றன.

*"சென்று சென்று பரம் பரமாய்"* *(திரு — 8.8.5)*

என்பதனால் ஆன்மாவானது சரீரம் முதலியவற்றினின்றும் வேறுபட்டது என்று உணர்த்துகிறார். இதனால் தத்துவவிவேகத்தில் ஒப்புமை பெற்றாம்.

*"தத்துவ விவேகம்"* *(189)*

## ஆன்மா நிலைத்தது: சரீரம் நிலையற்றது:

"நித்தியனாயும், அழிவில்லாதவனாயும் இருக்கின்ற ஆன்மாவினுடைய இந்தச் சரீரங்கள் அழியக் கூடியவை" என்பதுகீதை *(2,18)*

*"மின்னின் நிலையில மன்னுயிர் ஆக்கைகள்* *(திரு 1.2.2)*
*"உள்ளதும் இல்லதும்"* *(திரு 1.2.8)*

என உயிர் நிலைத்தலையும், உடல் நிலையாமையையும் நம்மாழ்வார் கூறுகின்றார்.

"நித்யத்வ அநித்யத்வம்" *(சூத். 189)*

### எல்லோரையும் நிர்வகிக்கும் தன்மையில் ஒப்புமை:

"பூமி, தண்ணீர், தீ, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் என்று எட்டுவகையாக வேறுபட்டிருக்கின்ற இந்த மூலப்பகுதி என்னுடையது". *(கீதை 7.4.5.)* என்பதனால் உயிர்ப் பொருள் உயிரல்லாத பொருள்களுக்கெல்லாம் பகவான் ஆன்மாவாய் இருக்கிறான் என்பது தெரியவருகிறது. இதே கருத்தினை நம்மாழ்வாரும் கூறுகிறார்.

*"பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்து உளன்*
*பரந்த அண்டம் இதுஎன நிலம்விசும்பு ஒழிவுஅறக்*
*கரந்த சில் இடம்தொறும் இடம்திகழ் பொருள்தொறும்*
*கரந்து எங்கும் பரந்து உளன்"* *(திரு 1.1.10)*

"பரந்து இருக்கின்ற குளிர்ந்த சமுத்திரத்தில் உள்ள நீர் அணுத்தொறும் பரந்த அண்டம் இது என்று கூறும்படி பரந்து இருக்கிறான்; அவ்வாறே பூமி, ஆகாயம் இவற்றிலும் எங்கும் பரந்து நிறைந்து இருக்கிறான். மிகவும் சூக்குமமான உடல்தோறும் அவ்வவ்வுடல்களில் வசிக்கின்ற உயிர்தோறும் கண்களுக்குத் தெரியாதவாறு பரந்து இருக்கின்றான்" என்பது பொருள் ஆகும்.

"தன்னால் உண்டாக்கப் பட்டதாயும் மூலப்பகுதி என்ற பெயருடையதாயும் இருக்கிற, ஆன்மசொரூபமான சர்வேச்வரனுடைய இந்தச் சரீரத்தில் இருக்கிற எல்லா உயிர்களையும் மாயையாலே கர்மங்கட்குத் தகுதியான காரியங்களைச் செய்வித்துக் கொண்டு சர்வேச்வரன் எல்லா உயிர்களுடைய மனங்களிலும் இருக்கிறான் என்பது கீதை *18:61*

இதனால் இறைவன் எல்லா உயிர்களினுடைய மனங்களிலும் தங்கி இருப்பவனாய் நின்று, தொழில் செய்தல் செய்யாமைகளாகிற எல்லாக் காரியங்களையும் செய்விக்கிறான் என்பது பெற்றாம். எல்லாப் பொருள்களையும் நிர்வகிக்கும் இறைவனின் தன்மை (நியந்த்ருத்வம்) வெளிப்படுகிறது. பொருள்களின் தொழில் செய்தல் செய்யாமை ஆகிய இறைவனின் செயல்பாட்டை நம்மாழ்வாரும்,

*"நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்,*
*நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்"* *(திரு 1.1.6)*

என்ற பாசுரத்தில் விளக்குகிறார்.

*"நியந்த்ருத்வம்"* *(சூத். 189)*
*(எல்லாப் பொருள்களையும் ஏவுகின்ற — நியமிக்கின்ற தன்மை)*

### *சௌலப்யம்:*

எப்போதும் என்னிடம் இருக்கவேண்டும் என்று ஆசை கொண்டிருக்கிற அந்த ஞானிக்கு நான் எளிமையாய் அடையத்தக்கவன்" கீதை *8:14*.

பக்தர்களுக்காகவும், அவதாரம் காரணமாகவும் பகவான் எளிவந்த தன்மையனாக (சௌலப்யன்) இருக்கிறான்.

*"பத்துடையடியவர்க்கு எளியவன்"* *(திரு 1.3.1)*
*"பலபிறப்பாய் — எளிவரும் இயல்வினன்"* *(திரு 1.3.2)*

என்று அன்புடையவர்களுக்கு எளியவன் என்றும் அவதாரங்களால் எளியவன் என்றும் கூறுகிறார்.

### *சாம்யம்:*

"நான் எல்லா உயிர்களிடத்திலும் சமமாய் இருக்கிறேன். எனக்குப் பகைவனும் இல்லை நட்டோனும் இல்லை" (கீதை *9:29*) என்று தன்னை வணங்குபவர்கள் அத்தனை பேருக்கும் சமமாக இருப்பதனைக் கண்ணன் கூறுகிறான்.

*"பற்றிலன் ஈசனும்*
*முற்றவும் நின்றனன்"* *(திரு 1.2.6)*

என்று அவனை அடையும் முறையில் சமமான தன்மையை (சாம்யம்) நம்மாழ்வார் கூறுகிறார்.

### அகங்கார தோஷம்:

ஸ்ரீகீதையில் "மூலப்பகுதியினுடைய மூன்று குணங்களால் பலவகையாகச் செய்யப்படுகின்ற காரியங்களை அறிவில்லாத இந்த சீவன் "நான் செய்கிறேன்" என்று நினைக்கிறான்" (கீதை 3,27) என்று அகங்காரத்தின் குற்றம் கூறப்பட்டுள்ளது.

"நீர் நுமது என்றிவை
வேர்முதல் மாய்த்து" (திரு 1.2.3)

பிறப்பிற்குக் காரணம் அகங்காரமாகிய குற்றம் என நம்மாழ்வார் கூறுகிறார்.

"அகங்கார தோஷம்" (சூத். 189)

### இந்திரிய பலம்:

"ஒருமனிதனுடைய மனத்தைக் கலங்கச் செய்கின்ற இந்திரியங்கள் வலியனவாய் மனத்தை இழுத்துக் கொண்டு போகின்றன" என்று கீதையில் (2.60) இந்திரியங்களின் வலிமை சொல்லப்படுகிறது.

"விண்ணுளார் பெருமாற்கு அடிமை
செய்வாரையும் செறும் ஐம்புலன்" (திரு 7.1.6)

என்று நம்மாழ்வாரும் சொல்கிறார்.

"இந்திரிய பலம்" (சூத் 189)

### மன அடக்கம்:

"மனத்தை அடக்குதல் செய்ய முடியாத காரியம்"(கீதை 6.34)
"மனத்தை வலித்து" (திரு 5.1.4)
"மந; பிராதாந்யம்" (சூத். 189)
(மனத்தினை அடக்குதல் அருமை; ஆதலின் மனத்தின் முதன்மை கூறப்பட்டது)

### கரணங்களை அடக்குதல்:

"எவனுக்கு இந்திரியங்கள் தன்வசத்தில் இருக்கின்றனவோ அவனுக்குப் புத்தியானது ஒரே நிலையில் நிலைத்திருக்கிறது" (கீதை 2.61) என்று கீதை கரணத்தை அடக்குதலைச் சொல்கிறது. இதனையே நம்மாழ்வாரும்,

"உள்ளம் உரை செயல்
உள்ள இம்மூன்றையும்
உள்ளிக் கெடுத்து" (திரு 1.2.8)

என்கிறார்

"கரணநியமனம்" என்பது சூத்திரம் 189.

*நால்வகைப்பட்ட நல்வினையாளர்கள்:*

"தன்னைவிட்டு நீங்கிய செல்வத்தை மீண்டும் விரும்புகிறவனும் (இவன் ஆர்த்தன்) கைவல்யத்தை விரும்புகிறவனும் (இவன் ஜிஜ்ஞாசு — அதாவது பகவானை விலக்கி ஆன்மாவை மட்டும் அறிய வேண்டும் என்றும் விருப்பமுடையவன்) வறியனாக இருந்து செல்வத்தை விரும்புகிறவனும் (அர்த்தார்த்தி), பகவானை அடைய விருப்பமுடையவனும் (ஞானி) ஆக நால்வகைப்பட்ட நல்வினை மக்களும் என்னை வணங்குகிறார்கள்" என்கிறது கீதை (7.16)

"ஒரு நாயகமாய் ஓட உலகு உடன் ஆண்டவர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்" (திரு 4.1.1)

என்றதனால் நீங்கிய செல்வத்தை விரும்புகிற ஆர்த்தனும்

(உலகையே ஆண்ட பேரரசர் செல்வம் முற்றும் இழந்து பிச்சை எடுக்கும் நிலைக்கு வருவர். அவர்களை அழியாச் செல்வமான இறைவனை பற்றுங்கோள் என்கிறார்)

"இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும்" (திரு 4.1.10)

(இறுகல் — இறுக்கிப்பிடித்தல்; இறப்பு — மோட்சம்) என்பதனால் கைவல்யத்தை விரும்பும் ஜிஜ்ஞாசுவும்

"குணங்கொள் நிறைபுகழ் மன்னர்" (திரு 4.1.8)

என்பதனால் புதிய செல்வத்தை விரும்புகிற அர்த்தார்த்தியும்,

"திருநாரணன் தாள் காலம்பெறச்
சிந்தித்து உய்ம்மின்" (திரு 4.1.1)

என்பதனால் பகவானை அடைய விரும்பும் ஞானியும் ஆனநால்வகைப்பட்ட நல்வினையாளர்களை நம்மாழ்வாரும் கூறுகிறார்.

"சுக்ருதிபேதம்" (சூத். 189)

(சுக்ருதி — புண்ணியத்தைச் செய்த நால்வகை மக்கள்)

*தேவஅசுர வேறுபாடு:*

தேவர் என்றும் அசுரர் என்றும் வேறுபாடு கூறுகிறது கீதை (16.4)

"நண்ணா அசுரர் நல்ல அமரர்" (திரு 10.7.5)

என்று நம்மாழ்வாரும் தேவஅசுர வேறுபாட்டைக் கூறுகிறார்.

"தேவாசுர விபாகம்" (சூத்.189)

*எல்லாப் பொருள்களிலும் கலந்து இருத்தல்:*

"என்னுடைய நல்லவையும் தீயவையுமான செல்வங்களைச் சொல்கிறேன். விஷ்ணு என்ற சூரியன் நான்; இருளைப் போக்கும் கிரணங்களை உடைய சூரியன் நான்" என்று எல்லாமாய் கலந்து இருக்கும் செல்வத்தை (விபூதியோகம்) கீதை சொல்கிறது (10.19)

"நல்குரவும் செல்வும்" (திரு 6.3.1)

என்கிறார் நம்மாழ்வார்.

"விபூதி யோகம்" (சூத்.189)

**விச்வரூப தரிசனம்:**

"உலகமே உருவமான உன்னுடைய சரீரத்தில் எல்லாவிதமான தேவர்களையும் அப்படியே பிராணி விசேடங்களின் கூட்டங்களையும், பிரமனையும், சிவனையும் தெய்வலோகத்தில் உள்ள எல்லா இருடிகளையும், பாம்புகளையும் பார்க்கிறேன்" என்பது கீதை *(11.15)*

*"நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய் சீரார் சுடர்கள்*
*இரண்டாய்ச்சிவனாய் அயனானாய்" (திரு 6.9.1)*

என்று நம்மாழ்வாரும் விச்வரூபதரிசனம் சொல்கிறார்.

**அங்கங்களுடன் கூடின பக்தி:**

"என்னிடத்தில் மனத்தை வைத்தவனாயும், என்னிடத்தில் பக்தியை உடையவனாயும் என்னை ஆராதிக்கிறவனாயும், என்னை நமஸ்காரம் செய்கிறவனாயும், என்னைச் சரணம் அடைந்தவனாயும் இவ்விதமான மனத்தை உடையவனாய் என்னையே அடைவாய்" என்று அங்கத்தோடு கூடிய பக்தியை கீதை கூறுகிறது. *(9.34)*

*"மாலை நண்ணி காலை மாலை கமல மலர் இட்டு*
*தொழுது எழுமினோ" (திரு 9.10.1)*

என்கிறார் நம்மாழ்வார்.

*"சாங்கபத்தி" (சூத் 189)*

**இருவகையான பிரபத்தி:**

'என்னைச்சரணம் அடைபவர்கள் இந்த மாயையைத் தாண்டுவார்கள் என்று பக்திக்கு அங்கமாகச் செய்யப்படும் அங்கப்பிரபத்தியைக் கீதை கூறும் *(7.14)*

*"அவனுடைய உணர்வு கொண்டு உணர்ந்து" (திரு 1.3.5)*

என்று அவன் அருளிச் செய்த ஞானத்தைத் துணையாகக்கொண்டு செய்யப்படும் பக்திக்கு அங்கமாகிய பிரபத்தியை ஆழ்வாரும் கூறுகிறார்.

*"எல்லாத்தர்மங்களையும் விட்டு என்னையே*
*சரணமாக அடைவாய்" (கீதை 18.86)*

என்று கீதை சுதந்திர பிரபத்தியைச் கூறுகிறது. ஆழ்வாரும் இதனையே "சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்" *(திருவாய் 9.10.5)* என்கிறார்.

இவ்விதமான பிரபத்தியினையும் கீதையும், திருவாய் மொழியும் கூறுகின்றன. இவ்வாறு கூறியவற்றுள் கீதையும், திருவாய் மொழியும், ஒப்பு என்று ஆயிற்று

*"பிரபத்தி துவைவித்யம்" (சூத். 189)*

*(அங்கப் பிரபத்தி என்றும் சுதந்திரப் பிரபத்தி என்றும் இருவகையான பிரபத்தி)*

*"மனம் செய் எல்லையில் ஞான இன்பத்தை நின்மலமாக வைத்தவர், ஞானப்பிரானை ஞானத்து வைம்மின்என்ற இது, தத்வவிவேக நித்யத்வ அநித்யத்வ நியந்த்ருத்வ ஸௌலப்ய ஸாம்ய அகங்கார இந்திரிய தோஷ பல மந: பிராதாந்ய கரணநியமன ஸுக்ருதி பேத தேவாஸுர விபாக விபூதியோக விச்வரூபதர்சந ஸாங்கபக்தி பிரபத்தி துவைவித்யாதிகளாலே அன்றுஓதிய கீதா ஸமம் என்னும்"* *(சூத். 189)*

(நின்மலம் — குற்றம் இல்லாமை; நியந்த்ருத்வம் — எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்ற தன்மை; சாம்யம் — எல்லார்க்கும் ஒத்திருத்தல்; ஸுக்ருதி — புண்ணியத்தைச் செய்த மக்கள்; விபூதி — செல்வம்; சாங்க பக்தி — அங்கங்களுடன் கூடின பக்தி)

## கீதையை விட உயர்வு

ஸ்ரீ கீதையை விடத் திருவாய்மொழி உயர்வு என்றுகருத்துச் சொல்கிறார்.

### கீதை அறிவுரை:

ஸ்ரீ கீதை தத்துவ உபதேசம்; அறிவுரை Theory எனலாம். திருவாய்மொழி தத்துவ தர்சி வசனம்; நம்மாழ்வார் தாமே பகவானைக் கண்டு அனுபவித்த மொழி Practical எனலாம்.

### திருவாய் மொழி அனுபவ உரை:

"எல்லா உலகங்கட்கும் காரணம் நானே; எல்லா உலகங்களும் லயப்படுவதும் என்னிடத்திலேயே; சேஷியும் நான் தான்;ஆதலால் நானே பரம்பொருள்; என்னைக் காட்டிலும் வேறான பரம்பொருள் ஒன்றும் இல்லை. என்னையே சரணமாகப் பற்று".(கீதை 7.6) என்று தன் பெருமையைப் பகவான் தானே சொல்கிறான். இது சிற்றறிவினர்க்கு ஏற்காது.

*"மண்ணும் விண்ணும் எல்லாம் உடன் உண்ட நம்*
*கண்ணன் கண்; அல்லது இல்லையோர் கண்ணே"* (திரு 2.2.1)
*"கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரண்*
*திண்ணமா நும் உடைமை உண்டேல் அவன்*
*அடி சேர்த்து உய்ம்மினே"* (திரு 9.1.10)

என்று நடுநிலையில் நின்று நம்மாழ்வார் தாம் பெற்ற அனுபவத்தைச் சொல்கிறார்.இது சிற்றறிவினர்க்கும் ஏற்புடையது ஆகும்.

*"அது தத்வ உபதேசம்" இது தத்வதர்சி வசனம்"* *(சூத் 190)*

### திருவாய் மொழியின் நோக்கம் மோட்சம் மட்டுமே:

ஸ்ரீகீதை பாண்டவர்கள் ஐவரை வெல்லச் செய்து துரியோதனாதிகள் நூற்றுவரைக் கொல்ல ஏற்பட்டது. திருவாய்மொழி இருபத்து நான்கு தத்துவங்களும் ஆன்மாவும் ஆக இருபத்தைந்து தத்துவங்களைக் கடந்த வழிவகுப்பது. கீதை மோட்ச சாத்திரமேயானாலும், தோன்றும் பொழுது

நூற்றுவரை முடிக்கவேண்டும். என்ற மற்றொரு கருத்தும் கொண்டது. திருவாய் மொழியோ மோட்சம் ஒன்றனையே நோக்கமாகக் கொண்டு அருளப்பட்டது.

> அது ஐவரை வெல்வித்துப் பதித்தைந்திரட்டி
> படச் சொன்னது. நாடாகத் தோற்றோம்
> என்று ஐயைந்து முடிப்பான் சொன்னது. *(சூத்.191)*

**தொடக்கம் — முடிவு:**

ஸ்ரீகீதையில் "நான் தேவரீர்க்குச் சிஷ்யன்; தேவரீரைச் சரண்அடைந்த என்னை நியமிக்க வேண்டும்" என்று அர்ச்சுனன் வேண்டுகோள் விடுத்தபின், பகவான் அன்போடு ஆரம்பிக்கிறார். கீதையை முடிக்கின்ற பொழுது அர்ச்சுனன் உபதேசத்தில் சிரத்தை இல்லாதவனாக இருப்பதைப் பார்த்து "அர்ச்சுனா! நீ சிரத்தை இல்லாது இருக்கிறாய், கெட்டபுத்தி உடையவனாய் இருக்கிறாய் உனக்குநான் கூறுவதில் உனக்குவிருப்பம் இருக்க போவதில்லை" என்று வெறுப்போடு முடிக்கிறார். ஆனால் நம்மாழ்வாரோ

> "ஏ பாவம்! பரமே! ஏழுலகும்
> ஈ பாவம் செய்து அருளால் அளிப்பார் ஆர்" *(திரு 2.2.2)*

என்று அறியாமையில் மூழ்கி இருக்கும் மக்களைப் பார்த்து வெறுப்போடு ஆரம்பிக்கிறார். உலகம் முழுவதும் திருந்த வேண்டும் என்ற நினைவோடு

> "பொலிக பொலிக" *(திரு 5.2.1)*

என மங்களாசாசனம் செய்து

> "உகந்து பணி செய்து" *(திரு 10.8.10)*

என்று அன்போடு முடிக்கிறார்.

அர்ச்சுனன் போரைத் தொடங்க மட்டும் கீதை பயன்பட்டதே ஒழிய முழுப்பலன் கொடுக்கவில்லை. திருவாய்மொழி முழுப்பலன் கொடுத்தது.

> "அங்கு' நம்பிரான்' என்று தொடங்கி முடிவில்
> 'அப்ரியம்' என்றது; இங்கு 'பரமே' என்று இழிந்து
> 'பொலிக' என்று உகந்தது" *(சூத் 192)*

**திருவாய்மொழியில் விதியும் உண்டு; அனுஷ்டானமும் உண்டு:**

ஸ்ரீகீதையில், "என்னையே சரணமாகப் பற்று" என்று விதிமட்டும் உள்ளது. திருவாய்மொழியில்,

> "திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்து உய்ம்மினோ" *(திரு 4.1.1)*

என்று விதியும்

> "புகல் ஒன்றில்லா அடியேன் உன்
> அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" *(திரு 6.10.10)*

என்று தாம் அனுஷ்டித்த அனுஷ்டானமும் கூறப்படுகின்றன.

*"அதில் சித்த தர்ம விதி;*
*இதில் விதி அனுஷ்டானங்கள்"* *(சூத் 193)*

**கீதையின் உயர்வுக்கு நம்மாழ்வார் அங்கீகாரம் தேவைப்படுகிறது:**

திருமால் புத்தமுனியாக இருந்து பௌத்தசாத்திரமும், கபிலமுனியாக இருந்து சொன்ன சாங்கிய சாத்திரமும் வேதத்திற்கு முரண்பட்டிருப்பதனால் பகவானே அருளியிருந்தும் வைதிகர்கள் ஏற்றுக் கொள்ள வில்லை.

*"பண்டே பரமன் பணித்த பணிவகையே*
*கண்டேன் கமலமலர்ப் பாதம்"* *(திரு 10.4.9)*

என்று பரம வைதிகரான நம்மாழ்வார் ஸ்ரீகீதையைப் பிரமாணமாகக் கொண்டமையினால் கீதை ஏற்றம் பெற்றது. இவர் திருவாக்கிலே பிறந்த திருவாய் மொழிக்குப் பிறரொருவர் அங்கீகாரம் தேவைப்படவில்லை.

இதுகாறும் கூறியவற்றால் ஸ்ரீகீதையைக் காட்டிலும், திருவாய்மொழி உயர்வு என்பது நிறுவப்பட்டது.

"பகவன், ஞானவிதி, பணி வகை' என்று
இவர் அங்கீகாரத்தாலே,
அதுக்கு உத்கர்ஷம்" *(சூத் 194)*

*(உத்கர்ஷம் — ஏற்றம்)*

# நால்வகையார்க்கு உபதேசம்

**ஆழ்வார் உபதேசம் அனைவர்க்கும் பொருந்தும்:**

வேத உபதேசம், கீதோபதேசம், வேதத்தின் பொருள்களை அறிந்த மகரிஷிகளின் உபதேசம் — இறைவனுடைய தன்மையை அறியாத சம்சாரிகளுக்கே பொருந்தும். ஆனால் ஆழ்வாரின் உபதேசம் அந்தச்சம்சாரிகளுக்கு மட்டுமல்லாது பகவானே உபாயம் என்று கொண்டிருக்கும் ஞானிகள், பகவானுடைய சொரூப, ரூப, குண விபூதிகளை நேரே அறிந்து அனுபவிக்கும் மகான்கள், ஏன் சர்வேச்வரனுக்கும் கூடப் பொருந்தும்.

**வேத வேத்ய வைதிகோபதேசம் ஆவித்யர் அளவிலே; சூத். 195 நால்வகையான உபதேசம்:**

மேலே கூறிய நான்கு பேருக்கும் ஒன்று போலவா உபதேசம் அமையும்? அன்று.

*(1) **சாதாரண மக்கள்:*** முதலில் சாதாரண மக்கள்; பகவானைப் பற்றிய ஞானம் சிறிதும் இல்லாதவர்கள்; அறிவு கேடர்கள். அவர்கட்கு "நாரணன் தானே உய்வு பெறுதற்கு உபாயம்" என்று உபாயத்திலே மூட்டுவார்.

*"அறியாதார்க்கு உய்யப் புகுமாறும்"* *(சூத் 196)*

*2) **உபாயத்தில் ஊன்றியவர்கள்:*** அடுத்து வருபவர்கள் உபாயத்தில் ஊன்றியவர்கள். பிறவிப் பெருங்கடலைக் கடக்க இறைவனே தெப்பம் என்று உணர்ந்து பகவானே உபாயம் என்று உணர்ந்தவர்கள் இவர்கள் கைவல்ய இன்பத்தில் திளைப்பவர்கள். பகவானின் சீலகுணத்தை அனுபவிப்பதிலேயே நின்று விடுவார்கள். அவர்களுக்கு மோட்சத்தை உணர்த்த வேண்டும். அப்படிப் பேற்றினில் ஊன்றச் செய்வார்.

*"இக்கரை ஏறினார்க்கு இன்ப வெள்ளமும்"* *(சூத்.196)*
(இவர்கள் பிறவிப் பெருங்கடலில் இக்கரையை ஏறினவர்கள்)

*3) **பேற்றிலே ஊன்றினவர்கள்:*** அடுத்து முமுட்சுக்கள். இவர்கள் பேற்றிலே ஊன்றினவர்கள். இந்த இடத்தில் பள்ளம் இந்த இடத்தில் மேடு என்று தெரியவேண்டும். இவர்களுக்கு ஆழங்கால் அறிவிக்க வேண்டும்.

*"நிலை அறியாதார்க்கு ஆழங்காலும்"* *(சூத் 196)*

*4) **சர்வேச்வரன்:*** அடுத்து சர்வேச்வரன்! அப்பா! 24 தத்துவங்களையும் நீதான் கொடுத்திருக்கிறாய்! இவற்றையெல்லாம் தாண்டி வருவது சிரமமாக இருக்கிறது. இவையெல்லாம் விடப்பண்ண நீதான் உதவவேண்டும் என்பார்.

"கரை ஏற்றுமவனுக்கு நாலாறும்
அறிவிக்கவேண்டும்" *(சூத். 196)*

*(கரை ஏற்றுமவன் — சர்வேச்வரன்; நாலாறு — இருபத்து நான்கு தத்துவம்)*

*1)* **"பகவானைத் தவிர உபாயம் இல்லை":** சாதாரண மக்கள் பகவானை அறியாதவர்கள். அவர்கள் பகவானின் கோபத்திற்கு இலக்கானவர்கள். அவர்களுக்கு "பகவானைத் தவிர உய்வு பெறும் உபாயம் இல்லை" என்று தாம் அறுதியிட்ட சிறந்த பொருளைக் காட்டுவர்.

"அவன் முனிந்தார்க்குத் தாம் கண்டது" *(சூத்.197)*

*2)* **"என் கண்கொண்டு பார்மின்":** "பகவானைத் தேடிப்போக நாம் முயல வேண்டா, அவனாகவே ஆட்கொள்வான், பதறாதே" என்று தலைவியைக் கடிந்து சொல்லும் தாய்க்கு "பகவானை அடைய வேண்டும் என்ற என் தாபம் உனக்கு எப்படி தெரியும். என் கண் கொண்டு பார்க்கவும்" என்பாள் தலைவி.

"தம்மை முனிவார்க்குத் தம் கண்" *(சூத்.197)*

*3)* **சீலகுணத்தில் ஆழ்ந்து போகாதீர்:** மூன்றாமவர் செஞ்சொற் கவிகள்; அவர்க்கு, "அவனது சீல குணத்தில் ஆழ்ந்து போகாதீர்கள். அவன் செயலிலேயே கண் வையுங்கள்" என்பர்.

"காணாதது காண்பார்க்குக் கண்மாறுமிடம்" *(சூத்.197)*

*(கவிகளாய்க் கூர்க்கக் காணுமவர் ஆகையாலே புறம்பே ஒருவர் காணாததும் காண வல்லவர்களுக்கு, அவன் சீல குணத்திலே கண் வையாதே கொள்ளுங்கோள் என்று கண்மாறுமிடம் காட்டுவார்)*

*4)* **சரீரம் குற்றம் உடைத்து:** ஆழ்வார் மேல் வைத்த ஆசையால் இறைவன் கண் மூடப்பட்டவன் (ராகாந்தகன்) அவனுக்கு "பகவானே! என்மேல் வைத்த ஆசையினால் சரீரத்தோடு மோட்ச உலகத்தில் ஏற்க விரும்புகிறாய். இச்சரீரம் குற்றம் உடையது. இது மோட்ச உலகத்துக்கு வரல் ஆகாது" என சரீரத்தின் குற்றங்களைச் சொல்வார்.

"மங்க ஒட்டு உன் மாமாயை" *(10.7.10)*

"ராகாந்தனுக்கு மாயாதோஷம்"
இவர் காட்டுமவை *(சூத்.197)*

*(ராகாந்தகன் — ஆசையாலே கண் மூடப்பட்டவன்: இறைவன்)*

## சாமான்யருக்கும் சர்வேச்வரனுக்கும் பலகாலும் உபதேசம் சொல்லுகிறார்:

இந்த நான்கு பேருக்கும் உபதேசம் பலகாலும் செய்கிறார் என்றால் இல்லை என்க. இரண்டாம் நிலையில் உள்ள உபாயத்தில் ஊன்றினவரையும் மூன்றாம் நிலையில் உள்ள பேற்றில் ஊன்றினவரையும் ஆழ்வார் விட்டு விடுகிறார்.

"சாதன சாத்யஸ்த மத்யஸ்தரை விட்டு" *(சூத்.198)*

*(சாதனம்—உபாயம்: சாத்யம் —பேறு)*

## கொள்ளத்தக்கனவும் தள்ளத்தக்கனவும் உபதேசித்தல்:

சாதாரண மக்களுக்கு இறைவனை அடைதற்குரிய வழி இன்னதென்றும்: அதனால் விளையும் பயன் இன்னது என்றும் தெரியா. அவர்களுக்கு தள்ளத் தக்கவை இன்னவை என்றும், கொள்ளத் தக்கவை இன்னவை என்றும் பலகாலும் உபதேசிக்க வேண்டும்.

முதற்பத்தில் "வீடுமின் முற்றவும்" என்று விடத்தக்கவைகளைச் சொல்கிறார். பத்தாம் பத்தில் "சுனை நன்மலர் இட்டு நினைமின்" என்று பற்றத்தக்கவை சொல்கிறார்.

"அவற்றில் கலங்கும் ஜீவர்க்கு,
வீடுமின், நினைமின்.
என்று இவர் பலகாலும்
ஹித அஹிதங்கள் சொல்லுவர்" *(சூத்.198)*

*(ஹித அஹிதங்கள் — நன்மை, தீமைகள்)*

## பகவான் கலக்கம் போக்குதல்:

ஆழ்வார் அன்பில் வசப்பட்ட பகவான் "ஆழ்வார் நம்மை விட்டுப் போய்விடுவாரோ" என்று கலங்குவான். அப்படிக் கலங்குகிற பகவானுக்கு

*"உன்னை நான் அடைந்தேன் விடுவேனோ?" (திரு 2.6.10)*

என்று கூறுகிறார்.

## "குழல் ஊதுக":

"கோபியர் பிருந்தாவனத்தில் உனக்காக இருக்கிறார்கள் பசுக்களை அங்கே போகவிட்டுக் குழலினை ஊதுவாயாக!" என்று பகவானுக்கு வழியும் சொல்வார்.

## "பாவையைப் பறிக்காதே":

"அவர்கள் வாடி நிற்கின்றார்கள். எங்கள் கையில் உள்ள பாவையைப் பறிக்காதே. பசுக்கள் பின்னே செல்லாதே" என்று செய்யக்கூடாதன பற்றியும் சொல்கிறார்.

## நல்லவர்களை அணுகு:

உன்னை விரும்பும் நல்லவர்களை அணுகு" என்று செய்யத்தக்கனவும் அறிவுறுத்துகிறார்.

இப்படி இறைவனுக்கு நல்லதும், கெட்டதும் பலகாலும் ஆழ்வார் உணர்த்துவார்.

"அவற்றில் கலங்கும் ஜீவஈச்வரர்களுக்கு,
விடுமின், நினைமின், பிடித்தேன், விடுவேனோ, வைத்தெழ
ஊது: வாடிநிற்க, கன்மம் அன்று: ஆன்பின், கைகழியேல்:
உழிதராய், என் சொற்கேள்: என்று இவர்
பலகாலும் ஹித அஹிதங்கள் சொல்லுவர்" (சூத்.198)

**பகவானுக்குச் சொல்வது பிரேமத்தினால்: மக்களுக்கும் சொல்வது ஞானத்தால்:**

பகவான் சாமான்யர் இவ்விருதிறத்தார்க்கு மட்டும் பலகால் சொல்வானேன். பகவானுக்குச் சொல்வது அவன் மேல் உள்ள பிரேமத்தினால் என்க. "சாமான்யர் அறிவில்லாமல் இருக்கின்றார்களே. தாம் பகவானை அனுபவித்தது போல அவர்களும் அனுபவிக்க வேண்டும் என்று ஞானத்தால் மக்களுக்குச் சொல்கிறார்.

"கதிர் ஞானமூர்த்திக்கு உணர்த்துவது பிரேமத்தாலே:
தமம் மூடுவார்க்கு வேட்கை எழுவிப்பது
ஞானத்தாலே" (சூத்.199)

(கதிர்ஞான மூர்த்தி — இறைவன்; பிரேமம்—அன்பு, பக்தி, தமம் — இருள்; அறிவின்மை)

**அடுத்தவர் துக்கம் தாங்காத அரும்பண்பு:**

இறைவனுக்குச் சொல்வதும் சரி; மக்களுக்குச் சொல்வதும் சரி, இரண்டுமே அடுத்தவர் துக்கத்தைத் தாங்காத தன்மையினால் தான் என்க.

"கொண்டாட்டும் குலம்புனைவும் தமர் உற்றார் விழுநிதியும், வண்டார்
பூங்குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல்
கண்டு ஆற்றேன் உலகியற்கை" (திரு 4.9.3)

என்று மக்கள் வாழ்க்கை இறைவனை அனுபவிக்காமலே முடிந்து போகிறது என்ற துன்பம் பொறுக்காமல் அருளுகிறார்.

"அசுரர்கள் தலைப்பெய்யில் என்கொல் என்று
ஆழும் என்னுயிர்" (திரு 10.3.8)

"காட்டுக்குப் போகின்றாயே" கண்ணா" அசுரர்கள் வந்தால் என்னாகுமோ?" என்று இறைவன் துன்பம் பொறாத நிலையில் பாடுகிறார்.

"உயிர் மாய்தல் ஆழும் என்னாருயிர்
என்னும் பரதுக்கம் ஸஹியாமை
இரண்டிலும் உண்டு" (சூத்.200)

இறைவன் ஆழ்வாரைத் தனது ஆன்மாவாகக் கருதுகிறான். அதனால் ஆழ்வார் பகவானுக்கு ஒரு துன்பம் வரப் பொறுக்கமாட்டார்.

"என்னது உன்னது ஆவியும்" (திரு 4.3.8)
என்னதுன்னதாவியிலே அறிவார் ஆத்மாவென்று
அவன் மதம் தோன்றும் (சூத்.201)

பகவான் ஆழ்வாரின் சீடர்:

ஆழ்வார் சர்வேச்வரனுக்கு இத்தனை உபதேசம் செய்கிறாரே? அவன் என்ன ஆழ்வாரின் சீடனா? எனில் ஆம்.

உத்தம சீடனுக்கு உள்ள இலக்கணங்கள் பகவானிடம் உள்ளன.

*1)* **ஆசாரியனை அவர்க்கு விருப்பமான இடத்தில் வைத்தல்:** உத்தம சிஷ்யன் தன் ஆசாரியனை அவருக்கு விருப்பமான இடத்திலே வைத்து இருக்கவேண்டும். பகவான் ஆழ்வாரைத் தன் பொன்னடிக்குக்கீழ் வைத்து இருக்கிறான்.

"இருந்தும் வியந்தும் என்னைத்தன்
பொன்னடிக்கீழ்" *(திரு 8.7.1)*

**"இருந்தும்"** ***(சூத்.202)***

*2)* **ஆசாரியன் விருப்பப்படி நடத்தல்:** சீடன் ஆசாரியன் விருப்பப்படி நடக்க வேண்டும். பகவான் இவர் நினைவிலே ஒழுகுகிறார்.

"என் என் தான் ஆனான்" *(திரு 1.8.7)*

**"எண்தானாய்"** ***(சூத்.202)***

*3)* **திருமேனியில் விருப்பம்:** சீடன் ஆசாரியன் திருமேனியில் விருப்பமுடையவனாக இருக்க வேண்டும்.

"பொய்கலவாது என் மெய்கலந்தானே" *(திரு 1.8.5)*

**"பொய்கலவாது"** ***(சூத்.202)***

*4)* **அன்பு செலுத்தல்:** எல்லா அன்பையும் ஆசாரியன் பால் செலுத்த வேண்டும். பரமபதத்தில் காட்டும் அன்பைப் பகவான் ஆழ்வாரிடம் காட்டுகிறார்.

அந்தாமத்து அன்பு செய்து *(திரு 2.5.1)*

**"அன்பு செய்து"** ***(சூத்.202)***

*5)* **பற்றற்று இருத்தல்:** ஆச்சாரியன் தவிர மற்ற விஷயங்களில் பற்றிலனாய் இருக்கவேண்டும். ஈசன் பரமபதத்தில் கூட பற்றில்லாதவனாக இருக்கிறான்.

"பற்றிலன் ஈசன் முற்றவும் நின்றனன்" *(திரு 1.2.6)*

**"பற்றிலனாய்"** ***(சூத்.202)***

*6)* **பசித்தவன் போல் இருத்தல்:** பசித்தவன் சோற்றை உண்பது போல ஆவலோடு ஆசாரியனை அனுபவிக்க வேண்டும். இறைவனும் அப்படியே கழிபெருங் காதலுடன் ஆழ்வாரை அனுபவித்தான்.

"நாளும் நாள் வந்து என்னை முற்றவும்
தான் உண்டான்" *(திரு 9.6.8)*

**"க்ஷுத்பீடிதனைப் போலே உண்டு"** ***(சூத்.202)***

க்ஷுத்பீடிதன் — பசியுள்ளவன்

*7)* **நீர் வேட்கை உடையவன் போல் அனுபவித்துப் பருகுதல்:** நீர்வேட்கை உடையவன் தண்ணீரைப் பெற்றது போல ஆசாரியனை

அனுபவிக்க வேண்டும். பகவானும் அவ்வாறே ஆழ்வாரை முற்றப்பருகினான்.

"தான் என்னை முற்றப் பருகினான்" (திரு 9.6.10)

"த்ருட் பீடிதனைப் போலே பருகி" (சூத்.202)

(த்ருட்பீடிதனை — நீர் வேட்கை உடையவன்)

*8) வறியவன் போல் அனுபவித்தல்:* காசில்லாதவன் செல்வத்தைப் பெற்றாற்போல ஆசாரியனை அனுபவிக்கவேண்டும், பகவானும் அவ்வாறே செய்கிறான்.

"இருந்தான் கண்டுகொண்டு" (திரு 8.7.2)

"நிர்த்தநரைப் போலே கண்டு கொண்டு" (சூத்.202)

(நிர்த்தநன் — வறியவன்)

*9) உடல், பொருள், ஆவி அனைத்தும் கொடுத்தல்:* சீடன் தன் உடல், பொருள், ஆவி அனைத்தும் ஆசாரியனுக்குக் கொடுக்க வேண்டும். பகவானும் தனது பரிசனங்களாகிய சாமரம், திரு ஆபரணங்கள், திவ்விய ஆயுதங்கள், ஸ்ரீவைகுண்டம், தன்னுடைய திருமேனி அனைத்தும் தந்துவிட்டான்.

"எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" (திரு 2.7.11)

"பரிஜநாதிகளோடே தன்னைத் தந்து" (சூத்.202)

*10) ஏங்குதல்:* "எல்லாம் செய்தாலும் ஆசாரியன் செய்த உபகாரத்துக்கு ஈடு இல்லையே" என்று ஏங்கவேண்டும். அதேபோல பகவானும்,

"உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி" என்று (பெரிய திருவந் 53) இருக்கிறான்.

"என்செய்வன் என்றே இருந்து" (சூத்.202)

*11) குடும்ப பாரத்தைச் சுமத்தல்:* ஆசாரியன் தன் குடும்ப பாரத்தை எல்லாம் சீடன் மேல் போட்டிருக்க, அவன் அதனைச் சுமக்க வேண்டும்.

"வேங்கடத்து உறைவார்க்கு நம என்னலாம்
கடமை அது சுமந்தார்கட்கே" (திரு 3.3.6)

என்றபடி ஆழ்வார் "நம" என்ற சொல்லின் மூலம் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்கள் முதலான அத்தனை பாரத்தையும் சமர்ப்பிக்க இறைவன் சுமக்கிறான்.

"அகிலபரத்தையும் சமர்ப்பிக்க" (சூத்.202)

*12) அல்லும் பகலும் பிரியாது இருத்தல்:* பகல் இரவு எந்நேரத்திலும் சீடன் பிரியமாட்டான். ஆசாரியன் சீற்றம் கொண்டு போ என்று விரட்டினாலும் போகமாட்டான்.

"அல்லும் நன்பகலும் இடைவீடின்றி
நல்கி என்னை விடான்" (திரு 1.10.8)

என்று பகவான் இரவும் பகலும் ஆழ்வார் பக்கத்தில் இடைவிடாது இருப்பான்.

*"அல்லும் நன்பகலும்அகல்வானும் அல்லனாய்"* *(சூத்.202)*

*13) சீறினாலும் அகலாது இருத்தல்:*

"போகு நம்பீ" (திரு 2.2)

என்று ஆழ்வார் சீறிப் போகச் சொன்னாலும் அகலமாட்டான்.

"அகல்வானும் அல்லன் இனி" (திரு 2.6.7)

"போகு என்றாலும் அகல்வானும் அல்லனாய்" *(சூத்.202)*

என்றபடி அகலாது இருக்கிறான்.

*14) உகப்பானவற்றையும் விட்டுவிடுதல்:* ஆசாரியனுக்கு விருப்பம் இல்லை என்றால் தனக்குப் பிடித்தவற்றையும் சீடன் விட்டுவிடுவான். பகவானுக்கு வைகுண்டத்தை விட உகப்பானது பசுக்கூட்டம் "ஆன்பின் போகேல்" (திரு 10.3.8) என்று ஆழ்வார் கூறவும் தனக்கு உகப்பான பசுக்கூட்டம் மேய்த்தலையும் பகவான் விட்டுவிடுகிறான்.

"திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி" (திரு 10.3.10)

"போகேல் என்றால் உகப்பையும் தவிர்ந்து" *(சூத்.202)*

*15) விதித்தபடி நடத்தல்:*

ஆசாரியன் விதிக்கின்ற விதிப்படிதான் சீடன் நடக்க வேண்டும். அவன்தான் உண்மையான சீடன்.

"அருள்தருவான் அமைகின்றான் அது நமது விதி வகையே" (திரு 10.6.1)

என்று நம்மாழ்வார் விதித்தபடி சர்வேச்வரன் நடப்பதால் உபதேசத்துக்கு சிறந்த உண்மையான பாத்திரம் அவனே என்றாகிறது.

"விதிவகையே நடத்தும் அவனே உபதேச சத்பாத்ரம்" *(சூத்.202)*

**உண்மையான சீடனின் உயர்ந்த பண்புகள்— உலகவாழ்க்கையில் வெறுப்பு**

*1)* பகவானிடத்தில் பக்தி இல்லாத இவ்வுலக வாழ்க்கை தோல், இரத்தம், இறைச்சி இவற்றால் ஆனசரீரம் — நல்வினை, தீவினைகளால் உண்டான குற்றங்கள் இவற்றைக் கண்ட சீடன் வெறுப்படைகிறான்.

"நண்ணாதார் மெய்யில் ஊன் ஆசை
நிர்வேகத்தோடே" *(சூத்.203)*

(நிர்வேதம்—வெறுப்பு)

*2) சாத்திரங்களில் நம்பிக்கை உண்மை:* அப்படிப்பட்ட சீடன் சாத்திரங்கள் நம்பிக்கை உடையவன்;தர்மவான்; ஒழுக்க சீலன்; விஷ்ணுபக்தன்; காம்பீர்யம்; சாதுர்யம், தைரியம் ஆகிய குணங்களை உடையவன்.

"ஆஸ்திக்யம்" *(சூத்.203)*

(ஆஸ்திக்ய — சாத்திரங்களில் நம்பிக்கை உடைமை)

*3) மேன்மக்களை அலட்சியப் படுத்தாது இருத்தல்:* உயர்ந்தவர்களை அலட்சியம் செய்யாமல் இருப்பது, கர்மானுஷ்டங்களைப்

பெருமைக்காகச் செய்யாமல் இருப்பது, முக்கரணங்களாலும் பிறர்க்குத் துன்பம் செய்யாமலிருப்பது, பொறுமையோடு இருப்பது, எல்லாரிடத்திலும் சமமாக இருப்பது,ஆன்மாவிலேயே மனத்தினை வைப்பது ஆகிய பண்புகளும் பெற்றிருப்பான்.

*"அமாநித்வ ஆதிகள்விஞ்சின"* *(சூத்.203)*

*(அமாநித்வ—மேன்மக்களை அலட்சியப்படுத்தாது இருத்தல்)*

*4) சீடனின் பிற செயல்கள்:* இப்படிப்பட்ட சீடன் ஆசாரியனை வணங்குதலும் ஆசீர்வாதத்தை வேண்டிப் பெறுதலும், (அபிவாதந) ஐயங்களைக் கேட்டுத் தெளிதலும், (பரிபிரச்ந) தொண்டு புரிதலும் (சேவாபரர்) ஆகிய செயல்களைச் செய்வான்.

**காதோடு காதாக உபதேசித்தல்:**

இப்படிப்பட்ட உண்மையான சீடனுக்கு ஆசாரியன் காதோடு காதாக உபதேசிக்கக்கூடிய உயர்ந்த பொருள் பகவத் விஷயம்.

*"உளம் கொள் பேசும் அளவன்று*
*என்னும் அர்த்தத்தை"* *(சூத்.203)*

**சொன்னால் விரோதம் ஆகினும் சொல்லுவன்:**

இவ்வளவு உயர்ந்த பொருளை "வம்மின் புலவீர்" *(3.9.6)* என்று வலிய அழைத்து, "சொன்னால் விரோதம் இது ஆகிலும் சொல்வன் கேண்மினோ" *(3.9.1)* என்று கேட்ப்வர்க்கு விரோதம் என்று தெரிந்திருந்தும் தவம், பக்தி யாதும் இல்லாத, உபதேசம் பெற அருகதையற்ற மக்களுக்கு ஆழ்வார் உபதேசிக்கிறார்.

*"வம்மின் விரோதம் ஈனச்சொல்*
*எவ்வுயிர்க்கும் அறிய என்று அடைவுகெட*
*அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது"* *(சூத்.203)*

*(அதபஸ்கர்—தவம் இல்லாதவர்)*

**அருகதையற்ற மக்களுக்கு உபதேசிக்கக் காரணம்:**

இப்படி முறைகேடாகத் தேவையில்லாதவர்களுக்கு அவர் உபதேசிப்பானேன்! "பகவான் உடையான்; உலக மக்கள் அவன் உடைமை" என்ற சம்பந்தம் இருக்கிறது. அது மட்டுமன்று. உலக வாழ்க்கையில் உழன்று வீணாகிப் போகிறார்களே என்று ஆழ்வாரால் பொறுக்கமுடியவில்லை. இவ்விரண்டு காரணங்களாலேதான் ஆழ்வார் உபதேசம் செய்கிறார். இது அவருடைய பரம கருணையாகும்.

*"ஞாலத்தார் பந்தபுத்தியும், அக்ர்த்தம்*
*கண்டு ஆற்றாமையும் மிக்க கிருபையுமிறே"* *(சூத்.203)*

**பிராட்டி, பிரகலாதன் வீடணன், எம்பெருமானார் இதேபோல உபதேசித்தல்:**

இதுபோல உபதேசித்தவர்கள் வேறுயாரும் உளரோ எனில் தாயான சீதாப்பிராட்டியும், இரணியன் மகனான பிரகலாதனும், இராவணன் தம்பியான விபீஷணாழ்வானும், இவர் அடி பணிந்து உய்ந்த எம்பெருமானாரும், இப்படி உபதேசித்திருக்கிறார்கள்.

"தாய்க்கும், மகனுக்கும், தம்பிக்கும்,
இவர்க்கும், இவர் அடிபணிந்தவர்க்குமே
இவை உள்ளது". *(சூத்.204)*

**பக்தியற்ற மக்களுக்கு உபதேசித்ததனால் கிடைத்த பயன்:**

இப்படிப் பகவானிடத்தில் பக்தி இல்லாத இவ்வுலக மக்களுக்கு ஆழ்வார் இப்படி உபதேசிக்கிறாரே? இதில் ஏதேனும் பயன் கிடைத்ததா?

**தொண்டருக்குத் தொண்டன்:**

நம்மாழ்வாருக்குப் புகழில் விருப்பம் இல்லை; செல்வத்தில் விருப்பம் இல்லை; மற்றவர்கள் எல்லாம் மதிக்க வேண்டும் என்று எண்ணவில்லை. பாகவதர்களுடைய அடிமைக்கு அடிமையாக — தொண்டனுக்குத் தொண்டனாக இருக்கவேண்டும். என்று தான் விரும்புகிறார்.

"தொண்டர் தொண்டர் தொண்டர்
தொண்டன் சடகோபன்" (திரு 8.9.11)

இத்திருவாய்மொழியினைக் கற்கின்றவர்களைத் தமக்குத் தலைவர்களாக நினைக்கிறார். அதனால் தம்மை பூஜை செய்ய வேண்டும் என்று விருப்பு அற்றவராக இருக்கிறார்.

**புகழ்,செல்வம், மதித்தல் வேண்டாநிலை:**

ஒரு ஆசாரியன் புகழ், செல்வம், வழிபடுதல் ஆகிய தன்னை மதித்தல் என்ற மூன்றினை விரும்புவான். இந்த மூன்றினையும் ஆழ்வார் விரும்பவில்லை. இம்மூன்றினையும் விரும்பாததோடு, தம்முடைய ஆத்ம புஷ்பத்தை இறைவனுடைய அடியவர்களுக்கு அர்ப்பணிக்கிறார். அதனால் இவர் சொன்னதை உலகம் கேட்டது.

"மலர்நாடி ஆட்செய்ய"
கியாதி லாப பூஜாபேக்ஷை அற" *(சூத்.205)*

**உபதேசித்ததால் கிடைத்த பயன்:**

இதனால் என்ன விளைந்தது? இந்த உலக மக்கள் துன்பப் படுகின்றார்களே; இவர்கள் உய்யவில்லையே என்ற ஆழ்வாரின் வருத்தம் தீர்ந்தது.

"உய்யக் கொண்டு என்கிற இழவும்" *(சூத்.205)*

ஆழ்வாருக்கும் பேச்சுத் துணைக்குக் கூட ஆள் இல்லாது இருந்தது. இதுபோல இவர் செய்ததினால் இவரோடு பேச—பேச்சைக் கேட்கப் பக்தர் கூட்டம் சேர்ந்தது.

"ஆரைக் கொண்டு என்கிற இழவும்" *(சூத்.205)*

பகவான் மென்மையானவன் ஆயிற்றே! ஊர்வலம் வரும் பொழுது தனியாக வருவானே; இந்த உலக மக்களிடம் மாட்டிக் கொள்வானே என்ற வருத்தமும் தீர்ந்தது. பக்தர்கள் நிறையப்பேர் ஆழ்வார் பேச்சைக் கேட்டுப் பகவான் புகழ் கூற ஆரம்பித்து விட்டார்கள்.

"வாளும் வில்லும் கொண்டு என்கிற கிழவும்"
தீரப்பெற்றது" *(சூத்.205)*

**சீடர்கள் நற்குணங்கள் அற்றவர்களா?:**

நம்மாழ்வார் காலத்தில் நாம் இருந்தோமா? அப்பொழுது சீடர்களுக்கு உண்டான நற்குணங்களுடன் இருந்தவர்கள் உபதேசம் பெற்றிருக்கலாமே; அவர்களைக் குணம் அற்றவர்கள் என்று எப்படி கூறலாம்?

உண்மையான சீடன் எப்படி இருக்க வேண்டும்? கர்மங்களின் பலன்களான இவ்வுலக இன்பங்களின் சிறுமை, நிலை நில்லாமை தெரிந்திருக்க வேண்டும். அதுமட்டும் அன்று. ஐம்பொறிகளையும் அடக்கியவனாய், மனத்தினையும் அடக்கியவனாய், காணிக்கை கொண்டு ஆசாரியனை வழிபட, ஆசாரியனும் "ஒரு வருடமாவது இவன் குருகுல வாசம் பெற்றிருக்கவேண்டும். அதன் பின்தான் உபதேசிக்கலாம்" என்கிற நிலை வரும். அதுபோலச் சீடர்கள் நம்மாழ்வாருக்கு இருந்து இருக்கலாம் அன்றோ? நல்ல சீடனாக இருந்தால் அவனாக ஆழ்வாரிடம் வந்துஇருப்பான்; இவரும் மகிழ்ச்சி பொங்க உபதேசம் செய்திருப்பார். ஆனால் அப்படியில்லை. "ஐயோ! பாவமே! இந்த மக்களுக்குஒன்றும் தெரியவில்லையே! இவர்களுக்குச் சொல்லும்படியாகி விட்டதே! என்று மனம் நொந்து சொல்கிறார்.

"ஏ பாவம் பரமே" *(திரு 2.2.2)*

**மதுரகவியாழ்வாருக்கும் இதே நிலை:**

இவர்தான் இப்படி என்றால் இவரது சீடரான மதுரகவியாழ்வாரும் இதேபோல மனம் நொந்து போய்த்தான் பாடியுள்ளார். பயன் இல்லாதவர்களானாலும், குணக் கேடர்களானாலும் அவர்களைத் திருத்தி வழிகாட்டும் நம்மாழ்வார் என்று மதுரகவியாழ்வாரும் சீடர்கள் நற்குணங்களற்ற நிலையே சொல்கிறார்.

"பயன் அன்றாகிலும் பாங்கலர் ஆகிலும்
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்" *(கண்ணிநுண் 10)*

### கைம்மாறு கருதாத உபதேசம்:

அதனால் இருவர் கூற்றுப்படியும் மக்கள் மந்த புத்தியினராய், பகவானோடு சம்பந்தம்உடையவர்கள் ஆயினரே, அது தெரியாது வீணாகப் போகிறார்களே என்று காருண்யம் கொண்டு அவர்களுக்குக் கைம்மாறு கருதாது உபதேசிக்கின்றார்.

"பிரஹ்மநிஷ்டரும் சம்வத்சர வாசிகளுமாகில்
ஏபாவம், பயன் அன்றாகிலும் சேராது" *(சூத்.206)*

(சம்வத்சரவாசி — ஒரு வருடம் குருகுல வாசம் செய்தவன்; ப்ரும்மநிஷ்டன் — பரம்பொருளில் நிலைபெற்ற ஆசிரியர்)

### ஆழ்வாரின் இறையனுபவத்திற்கு உபதேசம் இடையூறு அன்று:

ஆழ்வார் முழுக்க முழுக்கப் பகவானையே அனுபவித்துக் கொண்டு இருக்கும் பொழுது, நடுநடுவில் மக்களுக்கு உபதேசம் செய்ய வாய்ப்பு இருக்குமா? அப்படி இருந்தாலும் அந்த முழு அனுபவம் இடையறவுபடாதா? என்பது அடுத்தவினா.

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்தில் முதல்பாடலாகிய

"மெய்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே"

தொடங்கி,

"மங்கவொட்டு உன் மாமாயை"

திருவாய்மொழி (10.7.10) வரை பாடியருளிய பாடல்கள் அனைத்தும் ஆழ்வாருடைய அனுபவமும், அனுபவத்தை உள்ளடக்கிய உபதேசமும் ஆகும், இதில் ஆழ்வாரின் நான்கு பிரபந்தங்களும் அடங்கும். எனவே அனுபவத்திற்கு இடையூறு என்பதே இல்லை.

"மெய்ந்நின்று, மங்கவொட்டுக்கு"
நடுவு அநுபவ கர்ப்ப உபதேசம் *(சூத்.207)*

(அநுபவ கர்ப்பஉபதேசம் — அனுபவம் மனத்திலே நடந்து கொண்டிருக்கும் போதே செய்யும் உபதேசம். கர்ப்பம்—உட்கொண்டது)

# திருவெட்டெழுத்துத் திருமந்திரத்தின் பொருள்

### திருவிருத்தம் — திருவாசிரியம்

### நான்கு பிரபந்தங்களும் மூன்று மந்திரங்களின் பொருளே:

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகியநான்குபிரபந்தங்களும் திருமந்திரம், சரமச் சுலோகம்,துவயம் என்ற மூன்று மந்திரங்களின் பொருள்களையும் சொல்கின்றன. எல்லாச் சாத்திரங்களுக்கும் உட்பொருளானது திருவெட்டெழுத்துத் திருமந்திரம் ஆகும். இறைவனை உபாயமாகப் பற்றுவதனை அங்கத்தோடு விதிப்பது சரமச் சுலோகம். இறைவனைப் பற்றும் முறையும், கைங்கர்யப் பிரார்த்தனையும் எப்பொழுதும் அநுசந்தானம் செய்வது துவயம்.

*"இவற்றுக்கு மந்த்ரவிதி அநுசந்தாந*
*ரஹஸ்யங்களோடே சேர்த்தி"* *(சூத்.208)*

### திருமந்திரம் "ஓம் நம;" வின் பொருள்: திருவிருத்தம்:

நான்கு பிரபந்தங்களிலும் மூன்று மந்திரங்கள் சொல்லப்பட்டு இருக்கின்றன என்றீர்களே! எந்த எந்த நூலில் என்னென்ன சொல்லப்பட்டுள்ளது.

திருமந்திரத்தில் "ஓம் நம" என்னும் இரண்டு பதங்களின் பொருள்களைத் திருவிருத்தம் கூறுகிறது.

பிரணவத்தின் முதல் எழுத்தான அகாரத்தின் பொருள் இறைவனுடைய காக்கும் தன்மை ஆகும்.

*"உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" (திருவிருத்தம் 1)*

என்பதினால் இறைவன் காக்கும் தன்மை கூறுகிறார்.

பிரணவத்தின் இரண்டாம் எழுத்தான உகாரம், வேறொருவருக்கும் அடிமை ஆகாது அவனுக்கே அடிமையாய், சரீரத்தின் வேறுபட்டதாய் உள்ளதைக் குறிக்கிறது.

மூன்றாம் எழுத்தான மகாரம் ஆத்ம சொரூபத்தைக் குறிக்கிறது.

*"மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் விண்ணப்பமே".*
*"அடியேன் அடிஆவி அடைக்கலம்"* *(திருவிரு 85)*

என்ற பாடலில் ஆத்ம சமர்ப்பணம் செய்கிறார்.

"நம" என்பதனால் அவன் அடியார்களுக்கு இவ்வான்மா அடிமை எனப்படுகிறது

*"திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன்" (திருவிரு 100)*

"நம: பதத்தில் வரும் மகாரம், ஆத்மாவிற்குத் தொடர்பில்லாத

தேகத்தினைப் பற்றிய சிந்தனையும், அதன் காரணமான அறியாமையும், அவற்றின் காரியமாக வருகிற தீயன செய்தல், பிறவியில் அழுந்துதலையும் குறிக்கும்.

"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா
ஒழுக்கும் அழுக்குடம்பும்" (திருவிரு 1)

என்றதனால் ஆன்மா உடம்பைப் பற்றி நினைத்தலும், அதன் காரியமான தீய ஒழுக்கமும், அதனைப் பற்றிய ஞானமும் குறிக்கிறார்.

"ந" பதம் "ம"வின் மறுதலையாய் இவ்வுலக வாழ்க்கையாகிய சேற்றிலிருந்து விடுபடுதலைக் குறிக்கிறது.

"அழுந்தார் பிறப்பாம், பொல்லா அருவினை
மாய வன்சேற்று அள்ளல் பொய்ந்நிலத்தே" (திருவிரு 100)

சர்வேச்வரன் ஒருவனுக்கே அடிமையாய், ஞான ஆனந்த வடிவமாய், அவனுடைய அடியார்களுக்கு அடிமை என்கிற ஆன்ம சொரூபத்தையும், பிறப்பு இறப்புகட்குக் காரணமாக இருக்கிற அறியாமை முதலிய விரோதி நீக்கத்தையும் "திருவிருத்தம்" கூறுகிறது.

"ஓம் நம:" என்னும் முதல் இரண்டு பதங்களின் பொருளும் இதுவே ஆகும்.

"அளிப்பான் அடியேன் அடைக்கலம் சூடிய
பொய் யாதானும் அழுந்தார் என்று
ஸ்வரூப விரோதி நிவ்ருத்திகளையும்" (சூத்.209)

**திருவாசிரியத்தின் பொருள் நாராயண பதம்:**

'நாராயண" பதம் பரம்பொருளையும், பரமபதத்தையும், இவ்வுலகத்தையும் குறிக்கும்.

"தாமரை உந்தித் தனிப்பெரு நாயக" (திருவாசிரியம் — 1) என்று தொடங்கி "எம்பெருமாமாயன்" (திருவாசி—7) என்று முடிக்கையாலே பரம்பொருளைப் பற்றியும் பரமபதத்தையும் சொல்கிறது.

"தனி மாத் தெய்வத்து அடியவர்க்கு
இனி நாம் ஆளாகவே இசையும் கொல்" (திருவாசி—3)

என்றும்,

"ஊழிதோறு ஊழி ஓவாது
வாழிய என்று யாம் தொழ இசையும் கொல்" (திருவாசி—4)

என்றும் கூறுவதனால் பரம்பொருளுக்குச் செய்யப்படும் கைங்கர்யம் எடுத்துரைக்கப்படுகிறது.

ஆக,

திருவிருத்தம் — ஓம் நம;

திருவாசிரியம் — நாராயண

என்று பொருள் முற்றும் உரைத்தலினால், இந்த இரண்டு நூல்களும் திருமந்திரத்தின் பொருளைச் சொல்கின்றன.

*"தாமரை உந்திப் பெருமா மாயன்,*
*ஆளாகவே வாழிய*
*என்று பிராப்ய பலன்களையும்"* *(சூத்.209)*

*சரமசுலோகத்தின் பொருள் பெரிய திருவந்தாதி:*

இறைவனை ஒழிந்த பிற வழிகளை நீக்குதல் சரம சுலோகம்,

*"நெறிகாட்டி நீக்குதியோ"* *(பெரிய திரு 6)*

என்றதனால் வேறு உபாயங்களைக் காட்டி என்னை நீக்கப் பார்க்கிறாயா என்கிறார் நம்மாழ்வார்.

இறைவனையே மனத்தால் பற்றுவது சரம சுலோகம்.

*"வெம் கோட்டேறு ஏழ் உடனே,*
*கொன்றானையே மனத்துக் கொண்டு"* *(பெரிய திரு—48)*

என்றதனால் மனத்தால் பற்றுதலாகின்ற சரணடைதலைத் தெரிவித்தார். "உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்" *(கீதை 18.66)* என்று கண்ணபிரான் சரம சுலோகத்தில் சொல்கிறார்.

*"சீரார் மனத் தலைவன் துன்பத்தை மாற்றினேன்"* *(பெரிய திரு—25)*

என்றும்,

*"வல்வினையைக் கானும் மலையும் புகக்கடிவான்"* *(பெரிய திரு—26)*

என்றும் ஆழ்வார் கூறுவதனால் கண்ணபிரான் எல்லாப் பாவங்களினின்றும் விடுவித்தலைத் தெரிவிக்கிறார்.

"நானும் வேண்டா, நீயும் வேண்டா,
அவை தன்னடையே விட்டுப் போம்"

என்பது சரமசுலோகம்.

*"வன்துயரைமருங்கு கண்டிலமால்"* *(பெரிய திரு—54)*
*"யாதாகில் யாதே இனி"* *(பெரிய திரு—70)*

என்றதனால் இனி கர்மம் இருந்து என்? நசித்து என்? யாதானால் நமக்கு என் வரும்? என்று ஆழ்வார் புலப்படுத்துகிறார்.

எனவே சரமசுலோகத்தின் பொருள் பெரிய திருவந்தாதி ஆகும்.

நெறி காட்டி மனத்துக்கொண்டு கண்ணனாலடித்து
கண்டிலமால் யாதாகில் என்று உபாயத்தையும்
சொன்னவை மந்திர சுலோகங்களோடே சேரும். *(சூத் 209)*

# துவயத்தின் பொருள் திருவாய் மொழி:

## துவயம் என்றால் என்ன?

ஆசாரிய ஹிருதயத்தின் ஆசிரியரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் தமையனார் பிள்ளை லோகாசாரியர் ஆவார். அவர் எழுதி அருளிய பதினெட்டு இரகசியங்களில் "சாரசங்க்ரகம்" என்பது ஒன்று.

சாரசங்க்ரஹத்தில் பிள்ளை லோகாசாரியார் "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நமஹ" என்ற துவயத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்.

> துவயார்த்தம் தீர்க்க சரணாகதி என்றது
> ஸாரஸங்க்ரஹத்திலே *(சூத்.210)*

"திருமகளோடு கூடியிருக்கிற எம்பெருமான் வழிபடத்தக்கவன்; நான் திருமகளோடு கூடிய எம்பெருமானையே வணங்குகிறேன்" என்பது பொருள். பிராட்டியோடு கூடியிருக்கிற பெருமான் பக்கல் முழுமையாகச் சரணாகதி அடைதலே துவயத்தின் பொருள்.

> அகலகில்லேன் இறையும் என்றுஅலர்மேல் மங்கை உறைமார்பா!
> நிகரில் புகழாய்! உலக மூன்றுடையாய்! என்னை ஆள்வானே!
> நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!
> புகல் ஒன்றில்லா அடியேன் உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே" (திரு 6.10.10)

துவயத்தின் பொருளை இத்திருப்பாசுரம் விளக்குகின்றது. இத்திருப்பாசுரத்தில் ஆழ்வார் சரணாகதியினுடைய சீர்மையை அருளிச் செய்கிறார். (அலர்மேல் மங்கை— ஸ்ரீ; அகலகில்லேன்—மத்; உறைமார்பா என்றதனால் நித்திய யோகமும்; "நிகரில் புகழ்" என்றது முதல் "திருவேங்கடத்தானே" என்றது முடிய "நாராயண" என்ற சொல்லின் பொருளும், "புகல் ஒன்றில்லா அடியேன்" என்றதனால் உத்தமனாய்ப் போதருகின்றஅதிகாரியும், "உன்னடிக் கீழ்" என்றதனால் "சரணௌ" என்ற சொல்லின் பொருளும், "அமர்ந்து புகுந்தேனே" என்றதனாலேயே "சரணம்" என்ற பொருள் வெளிப்பட்டு விட்டன)

## "துவயத்தைச் சாமான்யனும் புரிந்துகொள்ளலாம்:

"திருமந்திரம்" புரிந்து கொள்ள சாத்திரார்த்தம் எல்லாம் தெரிந்திருக்க வேண்டும். ஆசாரியனிடம் இருந்து தங்கி உபதேசம் பெறவேண்டும். "சரமச்சுலோகம்" புரிந்து கொள்ள அதற்கென்று ஒரு தகுதி வேண்டும். (Qualified Person) ஆக இருக்க வேண்டும். அனைத்துப் பற்றுக்களையும் விடவேண்டும். எனவே இவையிரண்டும் சிரமமானவை. "துவயமோ" எல்லோரும் சொல்லலாம். இன்னார் இனியார் என்பது கிடையாது. அதனைப் புரிந்து கொள்ள ஒரு தகுதியும் வேண்டா. ஒன்றும் தெரியாத சாதாரணனும் பின்பற்றலாம். எனவே துவயம் உயர்ந்தது. நான்காவது

பிரபந்தமான திருவாய்மொழி துவயத்தின் பொருளைச் சொல்வதால் சிறந்து நிற்கிறது.

துவயம் இரண்டு வாக்கியங்களைக் கொண்டது; பத்து அர்த்தங்களை உடையது. அந்தப் பத்து அர்த்தங்களையும் திருவாய்மொழியில் பத்துப் பத்துக்களில் நம்மாழ்வார் எடுத்துரைக்கிறார்.

## *துவயத்தின் பத்து அர்த்தங்களும், அவற்றிற்கான திருவாய்மொழி பத்துப்பத்துக்களும் வருமாறு:*

### *1) திருமகள் கேள்வன் ஆதல் — முதற்பத்து*

*"மலர்மகள் விரும்பும் நம் அரும் பெறல் அடிகள்" (திருவாய் 1.3.1)*

இதே கருத்து

*"மலராள் மைந்தன்" (1.5.9.);*
*"திருமகளார் தனிக்கேள்வன்" (1.6.9);*
*"திருவின் மணாளன்" (1.9.1);*
*"பூமகளார் தனிக்கேள்வன்" (1.9.3);*
*"மைந்தனை மலராள் மணவாளனை" (1.10.4).*

### *2) நாராயணனாக இருத்தல் — இரண்டாம் பத்து*

*"எம் பெருமான் நாரணற்கு" (திரு 2.1.7)*

இதே கருத்து

*"எம்பெருமான் எம்மான் நாராயணனாலே" (2.7.1);*
*"நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" (2.7.2).*

### *3) நாராயணனுடைய திருவடித் தாமரைகள் — மூன்றாம் பத்து*

*"நாள் மலராம் அடித்தாமரை" (திரு 3.3.9)*

இதே கருத்து

*"அங்கதிர் அடியன்" (3.4.3);*
*"அவன்பாத பங்கயம்" (3.6.4);*
*"அன்று தேர்கடவிய பெருமான் கனைகழல்" (3.6.10);*
*"மூவுலகும் தொழுது ஏத்தும் சீர் அடியான்" (3.8.1);*

### *4) திருவடிகளே உபாயமாக இருத்தல் — நான்காம் பத்து*

விருப்பு இல்லாதனவற்றை நீக்க வேண்டும்; விருப்பு உடையனவற்றைப் பெற வேண்டும். இதனைச் செய்ய உபாயமாக இருப்பன நாராயணனின் திருவடிகள். வினை, நோய்கள், பிறப்பு, இறப்பு, மூப்பு இவையெல்லாம் நீக்கப்படவேண்டும்.

*"வல்வினை தீர்க்கும் கண்ணனை" (திரு 4.4.11)*
*"பிறந்தும் செத்தும் நின்று இடறும்*
*பேதைமை தீர்ந்தொழிந்தேன்" (திரு 4.7.7)*
*"வேட்கை எல்லாம் விடுத்துக் கூட்டரிய*
*திருவடிக்கண் கூட்டினை" (திரு 4.9.9)*

இதே கருத்து

"இலங்கை நகர் அம்பு எரி உய்த்தவர்" (4.2.8);
"வெய்யநோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீயவே" (4.5.2);
"மேவிநின்று தொழுவார் வினைபோக" (4.5.4);
"நோயே மூப்பு இறப்புப் பிணியே என்றிவை ஒழிய" (4.9.7);
"அஃதே உய்யப் புகுமாறு" (4.1.11);
"உய்வு உபாயம் மற்று இன்மை தேறி" (4.3.11)

5) திருவடிகளைப் பற்றி நின்றுஆன்மா இன்னது தான் வேண்டுதல் என உணர்த்துதல் — ஐந்தாம் பத்து.

"ஆறு எனக்கு நின்பாதமே சரணாக" (திருவாய் — 5.7.10)

இதே கருத்து,

"தமியேனுக்கு அருளாய்" (5.7.2);
"உன்னால் அல்லால்" (5.8.3);
"கழல்கள் அவையே சரணாகக் கொண்ட" (5.8.11);
"நம்பெருமான் அடிமேல் சேமம் கொள் தென்குருகூர்ச் சடகோபன்" (5.9.11);
"நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று நாடொறும், ஏகசிந்தையனாய் (5.10.11);

6. கைங்கர்யத்தைத் தந்து அருளுவதற்கு உறுப்பான திருமகள், அவளுடைய நாயகன், இவர்களுடைய நித்திய சம்பந்தம் (ஆறாம்பத்து):

"திருமாமகளிரும் தாம் மலிந்திருந்து" (திரு 6.5.8)

இதேகருத்து

"அடிமை செய்வார் திருமாலுக்கே" (6.5.11);
"ஓசிந்த ஒண்மலராள் கொழுநன்" (6.7.8);
"என் திருமார்வற்கு" (6.8.10);
"கோலத் திருமாமகளோடு உன்னை" (6.9.3);

7) கைங்கர்யத்துக்குக் காரணமான சர்வேச்வரனின் எல்லை இல்லாத இனிமை — ஏழாம் பத்து

"கன்னலே, அமுதே" (தி 7.1.2)

இதேகருத்து

"கொடியேன் பருகு இன்னமுதே" (7.1.7);
"அலைகடல் கடைந்த ஆர் அமுதே" (7.2.5);
"திருமாலின் சீர் இறப்பு உதிர்காலம் பருகிலும் ஆர்வனோ" (7.9.9);
"இவ்வேழுலகை இன்பம் பயக்க" (7.10.1).

8) எல்லாப் பொருள்கட்கும் தலைவனாக இருத்தல் — எட்டாம் பத்து

"நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன்" (திரு 8.9.11)

இதேகருத்து

"அடியேன் பெரிய அம்மானே" (8.1.3);

*"விண்ணவர்கோன் நங்கள்கோனை" (8.2.2);*
*"அமர்ந்த நாதனை" (8.4.10); "மூவுலகாளி" (8.9.5);*

### 9) நித்தியமாய் உளதான தொண்டு — ஒன்பதாம் பத்து

*"நானும் மீளா அடிமைப் பணி செய்யப் புகுந்தேன்" (திரு 9.8.4)*

இதே கருத்து

*"பண்டைநாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள்*
*திருவருளும் கொண்டு நின்கோயில் சீய்த்து" (9.2.1);*
*"நின் தீர்த்த அடிமைக் குற்றேவல்" (9.2.2);*
*"தொடர்ந்து குற்றேவல் செய்து" (9.2.3);*
*"கொடுவினையேனும் பிடிக்க" (9.2.10);*
*"உறுவது இது என்று உனக்கு ஆட்பட்டு" (9.4.4);*
*"ஆட்கொள்வான் ஒத்து" (9.6.7);*

### 10) கைங்கர்யத்திற்குத் தடைகளாக உள்ள அனைத்தும் நீங்குதல் பத்தாம் பத்து

*"துயர் கெடும் கடிது" (திரு 10.1.8)*
*"தீரும் நோய் வினைகள் எல்லாம்" (திரு 10.2.3)*
*"பிறவித்துயர் கடிந்தோம்" (திரு 10.4.3)*
*"தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்" (திரு 10.8.3)*

இதே கருத்து

*"கெடும் இடராய" (10.2.1); "எழுமையும் ஏதம் சாரா" (10.2.2)*
*"இப்பிறப்பு அறுக்கும்" (10.2.5.);*
*"உன்தன் திருவுள்ளம் இடர்கெடும் தோறும் நாங்கள் வியக்க*
*இன்புறுதும் எம் பெண்மை ஆற்றோம்" (10.3.9);*
*"பிணி ஒன்றும் சாரா பிறவி கெடுத்து ஆளும்" (10.4.7);*
*"விண்டே ஒழிந்த வினை ஆயின எல்லாம்" (10.4.9); "அமரா வினைகளே" (10.5.9);*
*"கடுநரகம் புகல் ஒழித்த (10.6.11) "பிறவிகெடுத்தேன்" (10.8.3);*
*"அந்தி தொழும் சொல்லு"; "அவா அற்று வீடுபெற்ற" (10.10.11)*

இப்படித் திருமகள் கேள்வனாக இருத்தல் முதலாக, கைங்கர்யத்துக்குத் தடைகளாக உள்ளவை அனைத்தும் ஒழிந்தமை ஈறாக உள்ள பத்து அர்த்தங்களைச் சொல்லக்கூடிய இரண்டு வாக்கியங்களாகிய துவயமும், திருவாய்மொழியும் சரீரம் உள்ளவரை கடைப்பிடிக்க வேண்டியவை.

# திருவாய்மொழியின் சாரம்

இறைநிலை, உயிர்நிலை, இறைவனை அடையத் தடைகள், இறைவனை அடையும் வழி (ஆறு) இறைவனை அடைதல், (பேறு) ஆகிய ஐந்து பொருள்களை உள்ளடக்கியது திருவாய்மொழி. இந்த ஐந்தினையும் ஆறு, பேறு என்ற இரண்டிற்குள் அடக்கிவிடலாம். நிறைவான இறைவனை அடைதலே (பேறு) திருவாய்மொழியின் சாரம் எனலாம்.

திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என்னும் மூன்று பிரபந்தங்களிலும் இறைநிலை, உயிர்நிலை, நெறியியல், தடையியல், வீட்டியல் எனும் ஐம்பொருள்களும் சுருக்கிக் கூறப்பட்டுள்ளன. இந்த ஐம்பொருள்களும் திருவாய்மொழியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

"மூன்றில் சுருக்கிய ஐந்தையும்" (சூத்.211)

(மூன்று — திருவிருத்தம், திருவாசிரியம் — பெரிய திருவந்தாதி, ஐந்து — ஐம்பொருள்கள்)

**இறைநிலை:**

"உயர்வற உயர்நலம் உடையவன்" (திரு 1.1.1)

எனும் திருவாய்மொழியால் பரத்துவத்தில் முதன்மையும்

"திண்ணன் வீடு" (2.2.1)

எனும் திருவாய் மொழியால் அவதாரத்தில் முதன்மையும்,

"அணைவது அரவணை" (திரு 2.8.1)

எனும் திருவாய்மொழியால் மோட்சத்தைக் கொடுக்கும் தன்மையையும்

"ஒன்றும் தேவும்" (திரு 4.10)

எனும் திருவாய் மொழியால் அர்ச்சாவதாரத்தில் (கோயில்களில் எழுந்தருளியிருக்கும் விக்கிரக நிலை) பரத்துவமும் கூறப்படுவதால் இந்த நான்கு திருவாய்மொழிகளிலும் இறைநிலை கூறப்பட்டுள்ளது.

"உயர் திண் அணை ஒன்று" (சூத்.211)

(உயர் "முதலான ஒவ்வொரு சொல்லும் ஒரு பாசுரத்தின் தொடக்கம் (உ—ம்) 'உயர்வற"; இப்படியே தொடர்ந்து கொள்க)

**உயிர்நிலை:**

உயிர் பகவானுக்கு அடிமைப்படுவதைக் காட்டிலும், அவனுடைய அடியார்க்கு அடிமைப்படுதலை வலியுறுத்துவது

"பயிலும் சுடர் ஒளி" (திரு3.7.1)

எனும் திருவாய்மொழி

மேற்கூறிய அடிமைத்தனத்திற்கு புறம்பான பொருள்கள் எல்லாம் விடத்தக்கவை என்று வலியுறுத்துவது

"ஏறாளும் இறையோனும்" (திரு 4.8.1.)

எனும் திருவாய்மொழி

"உயிர் இறைவனுக்குச் சரீரமாய் இருக்கின்றது; உயிர் உடம்பிலும் வேறானது, உயிர் ஞான ஆனந்த லட்சணமாய் இருப்பது" என வலியுறுத்துவது

"கண்கள் சிவந்து" (திரு 8.8.1)

எனும் திருவாய்மொழி.

"இந்த ஆன்மா இறைவனைத் தவிர வேறு யாருக்கும் அடிமையில்லை: தனக்கும் அடிமையில்லை" என்று உணர்த்துவது

"கருமாணிக்க மலைமேல் அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்" (8.9.1)

எனும் திருவாய்மொழி.

"பயில் ஏறு கண் கரு" (சூத்.211)

3.7., 4.8., 8.8., 8.9., ஆகிய நான்கு திருவாய்மொழிகளும், உயிரின் தன்மை கூறுகின்றன.

தடையியல்:

அகங்கார மமகாரங்களைப் போக்க வேண்டும் என்று சொல்வது" வீடுமின் முற்றவும்" (திருவாய் 1.2.1) எனும் திருவாய் மொழி.

அடிமை செய்யத் தகாதவர்களுக்கு அடிமை செய்யக்கூடாது என்று சொல்வது "சொன்னால் விரோதம்" (திருவாய் — 3.9.1) எனும் திருவாய்மொழி. ஐச்வர்யமும், கைவல்யமும் விடத் தக்கன என்று கூறுவது, "ஒரு நாயகமாய்" எனும் திருவாய்மொழி.( திருவாய் — 4.1.1) சரீரசம்பந்தமான உறவினர்கள் எல்லாம் விடத்தக்கவர் எனக்கூறுவது "கொண்ட பெண்டிர்" எனும் திருவாய் மொழி (திருவாய் 9.1.1)

"வீடு சொன்னால் ஒரு கொண்ட" (சூத்.211)

நெறியியல் (ஆறு):

பகவான் திருவடிகளைச் சரணடைதலே வழி என்று "ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" (திருவாய் 5.7.10)

என்று உரைக்கும் 5.7., 5.8., 5.9., 5.10., ஆகிய நான்கு திருவாய் மொழிகளும் இறைவனை அடையும் வழி கூறுகின்றன.

"நோற்ற நாலும்" (சூத்.211)

வீட்டியல் (பேறு):

எனக்காக மோட்சமும் வேண்டா. இறைவன் உகப்புக்கு உரியதை அடைதலே வேண்டும் என்று கூறும் "எம்மா வீட்டுத் திறமும் செப்பம்" (திருவாய் 2.9.1) திருவாய்மொழி, "கைவல்யமும் வேண்டா காலம் எல்லாம் அடிமை செய்ய வேண்டும்" என்று கூறும் "ஒழிவில் காலம்

எல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும்" (திருவாய் 3.3.1) எனும் திருவாய்மொழி, அந்தத்தொண்டு பாகவதர்களுக்குச் செய்வதாக இருக்க வேண்டும். என்னும் "நெடுமாற் அடிமை" (திருவாய் 8.10.1) எனும் திருவாய்மொழி "தனக்குத் துன்பமாக இருந்தாலும் எம்பெருமானுக்கு மனநிறைவாக இருக்கவேண்டும்; என்று சொல்லும் "உன்றன் திருவுள்ளம் இடர்கெடும் தோறும்" (திருவாய் 10.3.1) 'வேமருதோளினை' ஆகிய நான்கு திருவாய் மொழிகளும் பல சொருபத்தை — வீட்டியலை — பேற்றினை விளக்கிக் கூறுவன.

"எம்மா ஒழிவில் நெடு வேய்" (சூத்.211)

இறைநிலை, உயிர்நிலை, நெறியியல், தடையியல், வீட்டின் இயல் ஆகிய ஐம்பொருள்களையும் மேற்கூறிய இருபது திருவாய்மொழிகளில் ஆழ்வார் தெளிவாகக் கூறுகின்றார். இதே ஐம்பொருள்களை எஞ்சியுள்ள எண்பது திருவாய்மொழிகளில் விரிவாகக் கூறுகின்றார்.

"இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே" (சூத்.211)

(விசதமாக்கி — வெளிப்படுத்தி)

### நெறி, பலன் இரண்டிலும் அடக்குதல்:

இதே ஐம்பொருள்களையும் ஆறு, பேறு (வழி, வீட்டின்பம் அடைதல்) ஆகிய இரண்டில் அடக்கி விடலாம். மயக்கம் தீர ஏற்படுகிற ஞானம் தான் வழி.

"மயர்வற மதிநலம் அருளினன்" என்று முதல் திருவாய்மொழியிலே ஆறு சொல்லப்படுகிறது. அவா அறுத்து வீட்டின்பம் அடைதலே பலன் என்பதை

"அவா அற்று வீடுபெற்ற" என்ற நிறைவு திருவாய்மொழியில் கூறுகின்றார். முதல் திருவாய்மொழியில் ஆற்றில் (வழி) தொடங்கி நிறைவு திருவாய்மொழியில் பேற்றில் (பலன்) முடிக்கின்றார்.

"அருளினன் வீடுபெற்ற என்கையாலே
ஐந்திலும் இரண்டையும்" (சூத்.211)

(ஐந்து—ஐம்பொருள்கள்; இரண்டு—ஆறும், பேறும்)

### இறைவனை அடைதலே (பலன்) முடிந்த முடிவு:

நெறி என்றால் யார் பின்பற்றுவது? யார் சொல்லித் தருவது? அதனால் என்ன இடையூறுகள் வரும்? என்ற மூன்றும் (உயிரியல், இறையியல், தடையியல்) நெறியின் கண் அடங்கும்.நெறியெல்லாம் எதற்கு? இறைவனை அடைவதற்கு வழி. இறைவனை அடைதலே (பலன்) முடிந்த முடிவு.

எப்பொழுதும் தொழுது கொண்டு இருத்தல், மகிழ்ச்சியாய் இருத்தல், நம: என்று சொல்லிக் கொண்டு இருத்தல், பணி செய்தல், எல்லாமே இறைவனை அடைவதற்காகச் செய்யப்படுவன. எனவே பலன் ஒன்றே

திருவாய் மொழியில் சொல்லப்பட்ட பொருள் ஆகும்.

"தொழுது களித்தேன் சொல்லுப் பெற்றேன் பணிசெய்
என்கிற முக்த லக்ஷண விருத்தியாலே
இரண்டில் ஒன்றையும் இதுக்குப் பிரமேயம் என்னும்" *(சூத்.211)*

*(இரண்டு—ஆறும் பேறும்; ஒன்று—பேறு)*
*(பிரமேயம் — சொல்லப்பட்ட பொருள்)*

இறைவனை அடைதற்குரிய வழியும், அடைந்தால் கிடைக்கும் பலனும் திருவாய்மொழியில் முக்கியமாகச் சொல்லப்படுகின்ற பொருள்கள். இந்த வழியினைக் கடைப்பிடிக்க வேண்டிய பொருள் ஆன்மா. அதனால் உயிரியல் சொல்லப்பட்டது. இந்த வழியினை உயிர் பின்பற்றத் தடைகள் பல நேரும். அதனால் தடையியல் சொல்லப்பட்டது.

எனவே இறைத் தொண்டு முக்கியம். அத்தொண்டு செய்கிறவனையும், தொண்டினை ஏற்றுக் கொள்ளுகின்றவனையும், அதற்குத் தடையாக இருப்பவற்றையும், அத்தடையை நீக்குகின்ற வழியையும் சொல்லவேண்டியதாயிற்று. எனவே பலன்தான் முக்கியம்.

# திருவிருத்தம்–திருவாய்மொழி

## முதல் திருப்பாசுரங்கள்: ஐம்பொருள்களின் பிழிவு

திருவிருத்தத்தின் நூறு பாடல்களும் "பொய்ந்நின்ற ஞானம்" என்ற முதல் திருப்பாசுரத்தில் அடங்கும். திருவாய்மொழியின் ஆயிரம் பாடல்களும் "உயர்வற உயர் நலம்" என்ற முதல் திருப்பாசுரத்தில் அடங்கும். இரண்டும் அர்த்தபஞ்சகம் (ஐம்பொருள்கள்) தான்.

திருமந்திரத்துக்குச் சுருக்கம் "ஓம்" என்ற பிரணவம். "ஓம்" என்ற எழுத்தின் முதல் "அ". அதுபோல திருவிருத்தத்திற்குச் சுருக்கம் அதன் முதல் திருப்பாசுரம்; திருவாய்மொழிக்குச் சுருக்கம் அதன் முதல் திருப்பாசுரம்:

*"ரஹஸ்யத்துக்கு ஓரெழுத்தும் அதுக்கு
ஓர் உருவும் போலேயானவற்றில்"* *(சூத்.212)*

(ரஹஸ்யம்—திருமந்திரம்; ஓரெழுத்து—பிரணவம்; அதுக்கு — அந்தப் பிரணவத்திற்கு; ஓர் உரு—ஓர் உறுப்பாக அமைந்த அகரம். போலேயானவற்றிலே—போலே இருந்துள்ள)

### இறையியல்:

"பொய்ந்நின்ற" "உயர்வற" என்ற இரண்டு திருப்பாசுரங்களிலே திருவிருத்தம் "இமையோர் தலைவா" என்கிறது. திருவாய்மொழி "அமரர்கள் அதிபதி" என்கிறது.

பெரியவர்களுக்கு எல்லாம் பெரியவர்கள் நித்யசூரிகள். அவர்களால் வணங்கத்தக்கவன் இறைவன். எனவே அனைத்திற்கும் உயர்ந்த பரம்பொருளின் நிலை (இறையியல்) சொல்லப்பட்டது.

*"இமையோர் அதிபதி"* *(சூத்.212)*

### உயிரியல்:

திருவிருத்தத்தில் "அடியேன்" என்றும் திருவாய்மொழியில் "என் மனனே" என்றும் சொல்வதனால் உயிரியல் சொல்லப்பட்டது.

*"அடியேன் மனனே"* *(சூத்.212)*

### தடையியல்:

திருவிருத்தத்தில் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்கு உடம்பும்" என்றும், திருவாய்மொழியில் "மயர்வு" என்றும் சொல்வதனால் தடையியல் சொல்லப்பட்டது.

*"பொய் மயர்வு"* *(சூத்.212)*

### நெறியியல்:

திருவிருத்தத்தில் "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்"

என்றும், திருவாய்மொழியில் "மயர்வற மதிநலம் அருளினன்" என்றும் உலகத்தைக் காக்கும் பொருட்டு அவதாரங்கள் செய்த இறைவனின் திருவருளே கடைத்தேற்ற வழி என்பதனால் "நெறியியல்" சொல்லப்பட்டது.

*"பிறந்து அருளினன்" (சூத்.212)*

**பலன்:**

திருவிருத்தத்தில் "செய்யும் விண்ணப்பம்" என்றும் திருவாய் மொழியில் "தொழுது எழு" என்றும் இறைவனை மனமொழி மெய்களால் வணங்கிச் செய்யும் கைங்கரியம் சொல்வதனால் பலன் சொல்லப்பட்டது.

*"விண்ணப்பம் தொழுது எழு" (சூத்.212)*

ஆக ஐம்பொருளும் முதற் பாசுரங்களில் சுருக்கிச் சொல்லப்பட்டன.

**"பொய்ந்நின்ற ஞானம்":**

இந்த உடல் தோன்றுதல், இருத்தல் அழிதலை உடையது. எனவே உடல் இல்லாமல் போகும் என்ற எண்ணம் வரல்வேண்டும். ஆனால் உடலே ஆன்மா என்று நினைத்துக் கொண்டு உலக வாழ்க்கையில் ஈடுபட்டுத் தீவினைகளைச் செய்கின்றது. இதற்குக் காரணமான உடம்பு, இரத்தம், சீழ், நரம்பு, தசையால் ஆனது. உடல் வினைத்தொடர்பால் தோன்றுகிறது. அதனால் இவ்வுலக வாழ்க்கைக்குக் காரணமாகிறது. ஆன்மாவின் உண்மைச் சொரூபம் மறைக்கப்படுகிறது. மேலே மேலே வரக்கூடியனவற்றிற்கு முன்னையது முன்னையது காரணமாக இருக்கின்றன. ஆன்மா அநாதி; நல்ல ஞானத்தால் இத்தடைகளை விலக்கலாம் என்றெல்லாம் "பொய்ந்நின்ற ஞானம், பொல்லா ஒழுக்கு, அழுக்கு உடம்பு" என்றவார்த்தைகளால் அறியக் கிடக்கின்றன.

*"அவித்யாதி ஸ்வரூபம் ஸ்வபாவம்" (சூத்.212)*

**இறை—உயிர் தொடர்பு:**

திருவிருத்தத்தில் "இமையோர் தலைவா—அடியேன்" என்றும், திருவாய்மொழியில் "அதிபதி—அடிதொழுது" என்றும் கூறியுள்ளதனால் ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் உள்ள உடையான்—அடியவன் என்ற உறவு புலப்படுகிறது.

*"ஆத்ம ஈச்வர பந்தம்" (சூத்.212)*

**இறைவனுடைய பாதுகாக்கும் முறை:**

திருவிருத்தத்தில் "உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றும், திருவாய்மொழியில் "மயர்வற மதிநலம் அருளினன்" என்றும் கூறியுள்ளதனால், இறைவன் ஆன்மாக்களைப் பாதுகாக்கப் பல அவதாரங்கள் எடுத்தமையும், ஆன்மாக்களின் பிறப்பு இறப்புகளுக்குக்

காரணமான அறியாமையைப் போக்கி ஞானத்தைக் கொடுத்துப் பாதுகாக்கும் முறையும் புலப்படுகின்றன.

*"ரக்ஷணக்ரமம்"* *(சூத்.212)*

**இறைவனின் திருமேனியும் பண்புகளும்:**

"உயர்வற உயர் நலம்" என்றதனால் இறைவனின் குணங்களும் "துயர் அறு சுடர் அடி" என்றதனால் இறைவன் திருமேனியும், "அமரர்கள் அதிபதி" என்றதனால் உலகங்களை உடையவனாயிருத்தலும் "இமையோர்" "அமரர்கள்" என்று பெரியவர்களின் பெரியவர்களான நித்யசூரிகளைக் (அடியார்களில் பெரியவர்கள்) குறித்தலால் அடியார்கள் அபிமானமும் புலப்படுகின்றன.

*"குண விக்ரஹ விபூதியோகம் ததீய அபிமானம்* *(சூத்.212)*

*(யோகம்—கூடியிருத்தல்; ததீயர்—அடியார்கள்)*

"நின்று கேட்டருளாய்" "தொழுது எழு என் மனனே" என்றதனால் மனம் போல அடியவர் தமக்கு அடங்கியுள்ள ஈச்வரனும் அப்படி இருப்பவர்களும் என்பது உபதேசத்திற்கு விஷயம்.

*"உபதேச விஷயம்"* *(சூத்.212)*

**பக்தி:**

"நலம் அருளினன்" என்றதனால் பக்தியைத் தந்தான் எனப்பட்டது. தாயார் கூற்றாகவும், தோழி கூற்றாகவும், தலைவி கூற்றாகவும் திருவிருத்தம், திருவாய்மொழியில் திருப்பாசுரங்கள் பக்தி முதலானவற்றைச் சுருக்கமாகச் சொல்கின்றன.

*"உபதேச விஷயம் அந்யாபதேச ஹேது ஆதிகளும்"* *(சூத்.212)*

*(அந்யாபதேச—வெளிப்படைப் பொருளாக)*

"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே"

*(திருவிருத்தம்—முதற்பாடல்)*

*"உயர்வற உயர்நலம் உடையவன் யவன் அவன்*
*மயர்வற மதிநலம் அருளினன் யவன் அவன்*
*அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன் அவன்*
*துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே"*

*(முதல் திருவாய்மொழி—முதற்பத்து—முதற் பாசுரம்)*

## வாழ்த்து, வணக்கம், வருபொருள்:

ஒரு நூல் என்று சொன்னால் அந்நூல் இடையூறு இன்றி இனிது முடிய—வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என முறைப்படி இருக்க வேண்டாவா?

திருவாய்மொழி முதல் திருப்பாசுரத்தில் "அடி" என்பதனால் வருபொருள் உரைத்தலும், "தொழுது" என்பதனால் வணக்கமும், "எழு" என்பதனால் வாழ்த்தும் உண்டு.

மேலும் ஸ்ரீ ஆழ்வார் இதுபோலத் திட்டமிட்டு ஒரு பிரபந்தம் இயற்ற வேண்டும் என்றெல்லாம் சிந்திக்கவில்லை. நிரம்பி வழிந்த ஏரி எந்த நேரமும் வாய்கரையை உடைத்துக் கொண்டு பிரவாகமாகப் புறப்படுவது போல — இறைவன் சிந்தனையாகவே இருக்கும் ஸ்ரீ ஆழ்வாருக்குச் சொற்கள் பிரவாகமாக வந்து நிரம்பின. ஆதலினால் எல்லா இலக்கணங்களும் தாமாகவே வந்து நிரம்பின.

"அடி தொழுது எழு" என்ற இதிலே வஸ்து
நிர்த்தேச நமஸ்கார ஆசீஸ்ஸீக்களும் உண்டு. *(சூத்.213)*

(வஸ்து நிர்த்தேசம்—வருபொருள் உரைத்தல்; நமஸ்காரம்—வணக்கம்; ஆசீ—வாழ்த்து)

## இறைவனும், திருவாய்மொழியும் ஒப்புமை:

பகவான் பத்து அவதாரங்கள் எடுத்தார்; பகவான் பத்துக் குணங்கள் நிரம்பியவர். அதுபோலத் திருவாய்மொழியும் பத்துப்பத்தாக அருளப்பட்டது.

### நல்லவர்களைக் காத்தலும், தீயவர்களை அழித்தலும்:

நல்லவர்களைக் காக்கவும், தீயவர்களை அழிக்கவும் இறைவன் அவதரித்தான்.

"பரித்ராணாய ஸாதுநாம் விநாசாயச துஷ்க்ருதாம்
தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே". (பகவத்கீதை 4.8)

("நல்லவர்கள் தம்மை நலம் புரிந்து காத்தற்கும் பொல்லாரைப் பொன்று நெறி போக்கற்கும் யுகம் தோறும் இசைந்து நான் பிறப்பன்)

"சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு" (திரு 3.5.5)

இத்திருவாய்மொழியும் பகவானிடத்தில் பக்தி இல்லாத அசுரத்தன்மை வாய்ந்தவர்கள் மண் உண்ணவும், பகவானிடத்தில்பக்தி உடையவர்களான தெய்வத் தன்மை வாய்ந்தவர்களாக வாழவும் அருளப்பட்டது.

"நண்ணா அசுரர் நலிவெய்த நல்ல
அமரர் பொலிவெய்த" (திரு 10.7.5)

**"சாது சனம் நண்ணா" (சூத்.214)**

(ஆசாரிய ஹிருதய சூத்திரங்களைப் படிக்கும் பொழுது மிகவும் கவனம் தேவை. ஒவ்வொரு சொல்லும் திருவாய்மொழி திருப்பாசுரங்களின் முதல் சொல்லாகத் தேடிப்பிடித்துச் செதுக்கி உள்ளார்.

(சாதுசனம் — திருவாய்மொழி 3.5.5)

(நண்ணா — திருவாய்மொழி 10.7.5)

### அறிவின்மையைப் போக்குதலும், ஞானத்தையும், பக்தியையும், கொடுத்தலும்:

இறைவன் அடியார்களின் அறிவின்மையைப் போக்கி ஞானத்தையும், பக்தியையும் கொடுக்கிறான்.

"மயர்வற மதிநலம் அருளினன்" (திரு 1.1.1)

அதேபோலத் திருவாய்மொழியும் ஞானத்தையும் பக்தியையும் கொடுக்கிறது.

"ஒலிபுகழ் ஆயிரத்து இப்பத்து
உள்ளத்தை மாசறுக்குமே" (திரு 3.2.11)
"தெருள் கொள்ளச் சொன்ன ஓராயிரம்" (திரு 2.10.11)
"தூய ஆயிரத்து இப்பத்தால் பக்தர் ஆவர். (திரு — 5.4.11)

**"மயர்வற மாசறுக்கும் தெருள் கொள்ளப் பத்தராவர்" (சூத்.214)**

**ஆன்மாவை இறைவனுக்கே அடிமையாக்குதல்:**

இறைவன் ஆன்மாவைத் தனக்கே உரிய அடியவனாக அங்கீகரிக்கிறான்.

*"அடிமை அறக் கொண்டாய்" (திரு 4.9.6)*

திருவாய்மொழியும் ஆன்மாவை வேறு ஒருவருக்கும் இன்றி அவனுக்கே அடிமை ஆக்குகிறது.

*"உரிய தொண்டர் ஆக்கும் உலகம் உண்டாற்கே" (திரு 6.9.11)*

*"அடிமை அற உரிய" (சூத்.214)*

**நோய்களை அறுக்கும் மருந்து:**

இறைவன் பிறப்பு, இறப்பு ஆகிய நோய்களை அறுக்கும் மருந்து ஆகிறான்.

*"அறிந்தனர் நோய்கள் அறுக்கும் மருந்தே" (திரு 9.3.3)*

திருவாய்மொழியும் உலக வாழ்வால்உண்டாகும் எல்லாப் பாவங்களும் உருத்தெரியாமல் அழிக்கும் மருந்து ஆகிறது.

*"உடைந்து நோய்களை ஓடுவிக்குமே" (திரு 1.7.11)*

*"நோய்கள் அறுக்கும் உடைந்து" (சூத்.214)*

**பரமபதம் அடைதலைச் செய்வித்தல்:**

ஆன்மா பரமபதம் அடைதலை இறைவனும் செய்விக்கிறான். திருவாய்மொழியும் செய்விக்கிறது.

**இறைவன்:**

*"ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் நமக்கு" (திரு. 7.5.10)*

**திருவாயமொழி:**

*"வானின் மீது ஏற்றி அருள்செய்து" (திரு. 8.4.11)*

*ஏற்றரும் வானின்" (சூத்.214)*

**திருவடிகளின் கீழே சேர்த்தல்:**

இறைவன் ஆன்மாவைத் தன் திருவடிகளின் கீழேசேர்த்துக் கொள்கிறான்.

*"தன்தாளின் கீழ்ச்சேர்த்து*
*அவன்செய்யும் சேமத்தை" (திரு 7.5.10)*

திருவாய்மொழி ஆன்மாவை அவன் திருவடிகள் கீழே சேர்த்து வைக்கின்றது.

*"ஆயிரத்துள் இப்பத்தால் அருளி*
*அடிக்கீழிருத்தும்" (திரு 8.8.11)*

*"தாளின்கீழ் அடிக்கீழ்" (சூத்.214)*

**எல்லையற்ற ஆனந்தத்தோடு கூடிய பேற்றினைஅளித்தல்:**

தன்னை அடைந்தவர்க்கு இறைவன் எல்லையற்ற ஆனந்தமாகிய பேற்றினைக் கொடுக்கிறான்.

"இன்பக்கதி செய்யும் தெளிவுற்ற கண்ணனை" *(திரு 7.5.11)*

திருவாய்மொழியும், தன்னைக் கற்கிற மக்களுக்குப் பகவானுடைய அனுபவமான ஆனந்தத்தை உண்டாக்குகிறது.

"எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே" *(திரு 7.9.11)*
"இன்பக்கதி பயக்கும்" *(சூத்.214)*

**நீர்ப்பண்டம் ஆக்குதல்:**

இறைவன் தன்னை அனுபவிக்க இழிந்தாரை நீர்ப்பண்டம் ஆகும்படி உருக்குகிறான்.

"ஊடுபுக்கு எனது ஆவியை உருக்கி
உண்டிடுகின்ற நின் தன்னை" *(திரு 5.10.10)*

திருவாய்மொழியும் அனுபவித்துக் கற்கக் கற்க ஒருவனை நீர்ப்பண்டமாய் ஆக்கும்.

"ஒன்பதோடு ஒன்றுக்கும்
மூவுலகும் உருகுமே" *(திரு 9.5.11)*
"ஊற்றின்கண் நுண்மணல்போல்
உருகாநிற்பர் நீராய்" *(திரு 6.8.11)*
"ஊடு புக்கு மூவுலகும் உருகாநிற்பர்" *(சூத்.214)*

இதுவரை கூறப்பட்டபடி இறைவனுக்கும், திருவாய்மொழிக்கும் உள்ள ஒப்புமையினால் இறைவன் பத்து அவதாரம் எடுத்து உலகைக் காப்பது போலத் திருவாய் மொழியும் உலகைக் காக்கும் நிமித்தம் பத்துப் பத்தாகப் பாடி அருளப்பட்டது.

"என்னும் சாம்யத்தாவே
வாச்யன் பத்தினாய தோற்றம்போலே,
தோற்றங்கள் ஆயிரத்தின்
பத்துப்பத்தான இதின் ஆவிர்ப்பாவம்" *(சூத்.214)*

*(சாம்யம் — ஒப்புமை; வாச்யன் — சொல்லப்பட்ட பொருள்; இறைவனாகிய ஸ்ரீமந் நாராயணன்; பத்தினாய தோற்றம்—பத்து அவதாரம்; தோற்றங்கள் ஆயிரம் — ஆயிரம் பாடல்கள்; பத்துப்பத்தான நூறு பாசுரங்களைக் கொண்டது. ஒரு பத்து—இதுபோல பத்துபத்துக்களைக் கொண்டது. ஆவிர்ப்பாவம் — தோற்றம்)*

## திருப்பாசுரங்கள் அமைப்புமுறை:

அடுத்துத் திருவாய்மொழியில் உள்ள திருப்பாசுரங்கள் எப்படி அமைந்துள்ளன என்று பேசப்படுகிறது.

பத்துத் திருப்பாசுரங்கள் கொண்டது ஒரு திருவாய்மொழி; பத்துத் திருவாய்மொழி (நூறு திருப்பாசுரங்கள்) சேர்த்துப் "பத்து" (முதலாம்பத்து இரண்டாம் பத்து) என்று அழைக்கப்படுகின்றது. பத்து பத்துக்கள் (ஆயிரம் திருப்பாசுரங்கள்) கொண்டது. "திருவாய்மொழி" என்ற பிரபந்தம்.

பத்துத் திருப்பாசுரங்களில் சில சமயம் முதல் ஐந்து திருப்பாசுரங்கள் ஒரு கருத்தினையும், அடுத்த ஐந்து திருப்பாசுரங்கள் ஒரு கருத்தினையும் வெளிப்படுத்தும்.

"ஐந்தினோடு ஐந்தும் வல்லார்" (திரு 10.12.11)

"ஐந்தினோடு என்னுமது போலே" (சூத்.215)

சிலசமயம் ஒன்பது திருப்பாசுரங்கள் ஒரு கருத்தினையும், ஒரு திருப்பாசுரம் ஒரு கருத்தினையும் வெளிப்படுத்தும்.

"ஒன்பதோடு ஒன்றுக்கும்" (9.5.11)

"ஒன்பதோடு என்னுமது போலே" (சூத்.215)

பத்து திருப்பாசுரங்களுக்கும் சேர ஒரு கருத்து இருக்கும்

"பாடல் ஓராயிரத்துள் இவையும் ஒருபத்து" (3.4.11)

"பத்து என்னுமது போலே" (சூத்.215)

நூறு நூறாக ஒரு கருத்து விளக்கப்பட்டிருக்கும்.

"நூறே சொன்ன ஓராயிரம்" (9.4.11)

"நூறே சொன்ன என்றதும்" (சூத்.215)

பத்துநூறாக ஒரு கருத்து வலியுறுத்தப்பட்டிருக்கும்.

"பத்து நூற்றுள் இப்பத்து" (6.7.11)

"பத்து நூறு என்றதும்" (சூத்.215)

ஆயிரம் திருப்பாசுரங்களும் சேரச் சொல்லப்பட்டிருக்கும்.

"அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும்" (10.10.11)

"ஓராயிரம் என்றதும்" சாபிப்பிராயம்" (சூத்.215)

(சாபிப்பிராயம் — ஒரு கருத்தை உட்கொண்டது)

## உபதேசம் செய்யும் திருப்பாசுரங்கள்:

ஒரு பாட்டு என்றால், அதில் ஒரு வினைமுற்று இருக்க வேண்டும். பத்து திருப்பாசுரங்களில் ஒரு திருப்பாசுரம் உட்கருத்தினைக் கொண்டிருக்கும். நூறு திருப்பாசுரங்களில் பத்துத் திருப்பாசுரங்கள் உபதேசம் செய்வதாக இருக்கும்.

நித்தியசூரிகள் பகவானிடம் தாங்கள் அனுபவித்த கல்யாண குணங்களைக் கூடிக் கலந்து பேசி மகிழ்வார்கள். ஸ்ரீ ஆழ்வாருக்கு அதுபோல நித்தியசூரிகள் கிடைக்காததால் நித்ய சம்சாரிகளைப் பார்த்து, இவ்வுலக மக்களுடைய தாழ்ந்த குணங்களைப் பொருட்படுத்தாது, பகவானுடைய குணங்களில் ஈடுபடச் செய்ய உபதேசம் செய்கிறார். எனவே உபதேசப் பத்து முக்கியம்.

"பாட்டுக்குக் கிரியையும் பத்துக்குக் கருத்தும் போலே
நூற்றுக்கு உபதேசப் பத்து" *(சூத் 216)*

*(கிரியை—வினைமுற்று; பத்து—பத்துத் திருப்பாசுரங்களை உடைய பதிகம்)*

ஒவ்வொரு பத்திலுமாகப் பரோபதேசம் செய்யும் திருப்பதிகங்கள் வருமாறு;

முதற்பத்து — "வீடுமின் முற்றவும்"; இரண்டாம் பத்து — "கிளரொளி இளமை"; மூன்றாம் பத்து — "சொன்னால் விரோதம்"; நான்காம் பத்து — "ஒன்றும் தேவும்"; ஐந்தாம் பத்து — "பொலிக பொலிக"; ஆறாம் பத்து — "நல்குரவும் செல்வும்"; ஏழாம் பத்து — "இன்பம் பயக்க"; எட்டாம் பத்து — "எல்லியும் காலையும்"; ஒன்பதாம் பத்து — "மாலை நண்ணி"; பத்தாம் பத்து — "கண்ணன் கழலிணை";

### அடியார்களை வணங்குதல் பகவானை வணங்குதலில் ஒரு கூறு:

சுவர்க்கத்தை விரும்புகிறவன் ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகம் செய்வான். ஜ்யோதிஷ்டோமம் என்ற யாகத்திற்கு வேதத்தில் விதி கூறுகின்ற பொழுது, பிரயாஜம் முதலிய சிறு யாகங்களுக்கும் விதிகள் கூறப்பட்டிருக்கின்றன. பிரயாஜம் முதலிய யாகங்களையும் அனுஷ்டித்தால் தான் ஜ்யோதிஷ்டோமம் செய்வதில் பலன் உண்டு. சிறுயாகம் என்று விடக்கூடாது. பிரயாஜம் முதலிய யாகங்களின் விதிகள் ஜ்யோதிஷ்டோம விதிக்கு அங்கம் ஆகின்றன.

அதுபோலப் பாகவதர்களை (அடியார்கள்) வணங்கும் வணக்கத்தையும் பகவானை வணங்கும் வணக்கத்திற்கு அங்கமாக்கிக் கொள்ள வேண்டும்.

"பகவத் பக்த பரங்கள்,
ஆச்ரயண விதி சேஷங்கள்" *(சூத் 217)*

*(பகவத் பக்த பரங்கள்—பகவானுடைய அடியார்களைப் பற்றிக் கூறுகின்ற திருப்பாசுரங்கள்; சேஷங்கள் — உறுப்புகள்)*

## பத்து பத்துக்களும், இறைவன் பண்புகளும் ஆழ்வார் பெற்ற பேறுகளும்

*இறைவனின் பத்துப் பண்புகள்:*

திருவாய்மொழியில் உள்ள பத்துப் பத்துக்களில் ஒவ்வொரு பத்திலும் இறைவனுக்குள்ள ஒவ்வொரு குணம் சொல்லப்படுகின்றது. ஆழ்வாருக்கு உண்டான பேறும் சொல்லப்படுகிறது.

முதல் பத்து — பரத்வம் — எல்லாப் பொருள்கட்கும் மேலானவன் ஆதல்

இரண்டாம் பத்து — காரணத்வம் — எல்லாப் பொருள்கட்கும் காரணன் ஆதல்

மூன்றாம் பத்து — வியாபகத்வம் — எல்லாப் பொருள்கள் உள்ளும் பரந்து தாங்குகிறவனாதல்

நான்காம் பத்து — நியந்த்ருத்வம் — எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்றவனாதல்

ஐந்தாம் பத்து — காருணிகத்வம் — பேரருளாளனாதல்

ஆறாம் பத்து — சரண்யத்வம் — எல்லாப் பொருள்கட்கும் புகலிடனாதல்

ஏழாம் பத்து — சக்தத்வம் — அளவிலாச் சக்தியை உடையனாதல்

எட்டாம் பத்து — சத்யகாமத்வம் — தேவியர், நித்தியசூரிகள், பரிசனங்கள் முதலிய உடையன் ஆகையாலே சத்யகாமனாதல்

ஒன்பதாம் பத்து — ஆபத்சகத்வம் — ஆபத்திலே துணைசெய்யுமவனாதல்

பத்தாம் பத்து — ஆர்த்திஹரத்வம் — பிறவித் துன்பத்தை நீக்குமவனாதல்

இப்படிப் பத்துப் பத்துக்களாலும் சொல்லப்படுகிற பத்துக் குணங்களோடும் கூடியிருக்கிற சர்வேச்வரன் ஞானத்தைக் கொடுத்தல் மூலமாக அறிவின்மையைப் போக்குகின்றான்.

*"பரத்வ, காரணத்வ, வியாபகத்வ, நியந்த்ருத்வ,*
*காருணிகத்வ, சரண்யத்வ,சக்தத்வ, சத்யகாமத்வ,*
*ஆபத்சகத்வ, ஆர்த்திஹரத்வ விசிஷ்டன், மயர்வை*
*அறுக்க"* *(சூத் 218)*

*(விசிஷ்டன் — கூடினவன்)*

ஆழ்வார் பெற்ற பேறுகள்:

இனி, தாம் பெற்ற பேற்றினை ஒவ்வொரு பத்தில் வெளியிடுகிற படியைத் தெரிவிக்கிறார்.

### 1) உண்மை அறிவில் மறப்பு இல்லாமையாகிற பேறு:

முதற்பத்தில் இறைவனைப் பற்றிய உண்மை அறிவில் மறப்பு இல்லாமையாகிய பேறு வெளிப்படுகிறது.

"மறப்பேனா இனியான் என்மணியை" - *(திரு. 1.10.10)*

**"தத்துவ வேதந மறுப்பு அற்று"** *(சூத் 218)*

*(தத்வ வேதநம்—உண்மை அறிவு)*

### 2) மோட்சப் பேறு:

அந்த ஞானத்தின் பலமான மோட்சத்தை இரண்டாம் பத்தில் வெளியிடுகிறார்.

"நின் செம்மா பாதபற்புதலை சேர்த்து" *(2.9.1)*

**"ஜ்ஞப்திபலமுக்தி தலைசேர நிஷ்கரிஷித்து"** *(சூத் 218)*

*(ஜ்ஞப்திபலமுக்தி—ஞானத்தின் பலனான மோட்சம்; நிஷ்கரிஷித்து—அறுதியிட்டு)*

### 3) கைங்கர்யமாகிற பேறு:

அந்த மோட்சத்தின் பலமான கைங்கரியத்தை மூன்றாம் பத்தில் புலப்படுத்துகிறார்.

"வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" *(திரு 3.3.1)*

**"மோட்ச பல விருத்தி செய்ய அர்த்தித்து"** *(சூத் 218)*

*(மோட்ச பல விருத்தி—மோட்சத்தின் பலனான கைங்கர்யம்; அர்த்தித்து — விரும்பி)*

### 4) உலக வாழ்க்கையில் பற்று நீங்குகிற பேறு:

அந்தக் கைங்கரியத்துக்குப் பலன் உலக வாழ்க்கையிலே உள்ள பற்று எனப்படும் பொருள்களில் ருசி நீங்குதல். இதனை நான்காம் பத்தில் வெளிப்படுத்துகிறார்.

"ஐங்கருவி கண்ட இன்பம், தெரிவரிய அளவில்லா
சிற்றின்பம் கண்டு ஒழிந்தேன்" *(திரு. 4.9.10)*

**"புருஷார்த்த பல அந்ய ருசி ஒழிந்து"** *(சூத் 218)*

### 5) இறைபக்தியாகிய பேறு:

உலக வாழ்வில் விரக்திக்குப் பலனான பகவானிடத்தில் பக்தி மிகுதல். இதுஐந்தாம் பத்தில் தெரியவருகிறது.

"கழிய மிக்கதோர் காதல்" *(திரு. 5.5.10)*

**"விரக்தி பல ராகம் கழியமிக்கு"** *(சூத் 218)*

*(விரக்தி பல ராகம் — விரக்திக்குப் பலனான (பகவானிடத்தில்) ஆசை)*

### 6) இறைவனைப் பற்றுதலாகிய பேறு:

பகவானிடத்தில் உள்ள எல்லை இல்லாத பக்திக்குப் பலன் இறைவனைப் பற்றுதலே ஆகும். இதனை ஆறாம் பத்தில் தெரிவிக்கிறார்.

"அலர்மேல் மங்கை உறைமார்பா! உன்னடிக்கீழ்
அமர்ந்து புகுந்தேன்" (திரு 6.10.10)

"பிரேம பல உபாயத்தே புகுந்து" (சூத் 218)

(உபாயமாக இருக்கின்ற இறைவனைப் பற்றுதல்)

### 7) கைம்மாறு காணாமல் தடுமாறுகிற பேறு:

மேல் பத்தில் கூறப்பட்ட சரணாகதியில் உபாயமாக இருக்கின்ற இறைவனாலே கிடைத்த பலனான உபகாரத்திற்குப் பிரதி உபகாரமாக எதனையாவது கொடுக்க ஸ்ரீ ஆழ்வார் எண்ணுகிறார். எல்லாமே அவனுடையது. எதனைக் கொடுப்பது? ஆன்மாவைக் கொடுக்கலாம் என்றால் அதுவும் அவனுடையது ஆகிறது. இவ்வாறு கைம்மாறு காணாமல் தடுமாறுதலாகிற பேறு பெற்றமையை ஏழாம் பத்தில் தெரிவிக்கிறார்.

"உதவிக் கைம்மாறு என்னுயிர் என்ன உற்று எண்ணில்
அதுவும் மற்று ஆங்கவன் தன்னது என்னால் தன்னைப்
பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு
எதுவும் ஒன்று இல்லை செய்வது இங்கும் அங்கே" (திரு. 7.9.10)

"சாதனபல உபகாரக் கைம்மாறு இன்றி" (சூத் 218)

(சாதனைபல உபகாரம்—இறைவனால் கிடைத்த பலனான உபகாரம்; சாதனம் — இறைவன்)

### 8) ஆன்ம அறிவு பெறுகிற பேறு:

செய்ந்நன்றி அறிதலுக்குப் பிரதி உபகாரமாக பக்தியினாலே கலங்கி ஸ்ரீ ஆழ்வார்ஆன்ம நிவேதனம் செய்கிறார். ஆன்மா உடம்பினின்றும் வேறுபட்டது; பகவானுக்கு உடம்பாக ஆன்மா அமைந்துள்ளது. எனவே அந்த அடிமைத் தன்மை அறிந்து அந்த ஆன்மா அவனுக்கே உரியது: வேறுயார்க்கும், உரியதன்று என்ற ஆன்ம அறிவு பெறுகிற பேறுஎட்டாம் பத்தில் உணர்த்தப்பட்டது.

"தோள்களை ஆரத் தழுவி என்னுயிரை
அறவிலை செய்தனன்" (திரு 8.1.10)
"நின்ற ஒன்றை உணர்ந்தேன்" (திரு.8.8.4)

"கிருதஜ்ஞதா பல பிரதி கிருதமானத்தை உணர்ந்து" (சூத் 218)

(கிருதஜ்ஞதா பல — செய்ந்நன்றி அறிதலுக்குப் பயனான. பிரதிகிருத மானம்—பிரதி உபகாரமாகக் கொடுக்கப்பட்ட ஆன்மாவின் தன்மை).

### 9) ஆன்ம நிவேதனத்திற்கு நாளிட்டுத் தருகிற பேறு:

ஆன்மாவின் தன்மையை ஸ்ரீ நம்மாழ்வார் அறிகிறார். அதன்பலன் இறைவனை அடைதலே என உணர்கிறார். அந்த ஆன்ம நிவேதனத்தை இச்சரீரமுடிவில் தரப் பகவானே நாளிட்டுக் கொடுத்த பேற்றினை ஒன்பதாம் பத்தில் பேசுகிறார்.

"மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" (திரு 9.10.5)

"ஆத்ம தர்சந பலபிராப்தி மரண அவதியாகப்பெற்று" (சூத் 218)

(அங்ஙனம் ஆன்மாவின் தன்மையைக் கண்ட தன் பலனான பகவானை அடைதலைச் சரீரத்தின் முடிவிலே பண்ணித் தருகிறோம் என்று அவனால் நாள் இட்டுக் கொடுக்கப்பெற்று.)

## 10) பரமபதத்திற்கு அழைத்துச் செல்கிற பேறு:

இறைவனை அடையும் காலம் நெருங்கியது. அர்ச்சிராதி மார்க்கத்தில் பரமபதம் செல்ல வேண்டியதாகிறது. அதற்கும் அழைத்துப் போக உற்ற துணையாகஇறைவனையே கொண்டமை பத்தாம் பத்தில் அருளப்படுகிறது.

"அத்தன் தாமரை அடியன்றி மற்றிலம் அரணே" (10.1.6)

"கால ஆசக்தி பல கதிக்குத் துணை கூட்டின தம் பேற்றை" (சூத் 218)

(கால ஆசக்தி—எல்லையிடப்பட்ட நாள். பலகதி — பயனாகிய விதி மார்க்கம்)

இப்படி இறைவன் தமக்கு அருளிய பேறுகளைப் பத்துப் பத்துக்களால் நம்மாழ்வார் பாடியிருக்கிறார்.

"பிறரறியப் பத்துத் தோறும் வெளியிடுகிறார். (சூத் 218)

# நான்காம் பகுதி

- முதல் பத்து.
- இரண்டாம் பத்து.
- மூன்றாம் பத்து.
- நான்காம் பத்து.
- ஐந்தாம் பத்து.
- ஆறாம் பத்து.
- ஏழாம் பத்து.
- எட்டாம் பத்து.
- ஒன்பதாம் பத்து.
- பத்தாம் பத்து.
- காலம் தாழ்த்திய வீடுபேறு.
- பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி.

## நான்காம் பகுதி

# முதற்பத்து

இறைவன் குணம், இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உபகாரம், ஆழ்வார் உலகமக்களுக்கு உபதேசித்தவை என முதற்பத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்க வேண்டும்.

### I இறைவனின் குணம்:

முதற்பத்தில் இறைவனுடைய முதன்மை (பரத்துவம்) கூறப்படுகின்றது.

*1.* எல்லா உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் செய்யும் கருத்தா ஆவான்.

*"சுரர் அறிவு அருநிலை விண்முதல் முழுவதும்*
*வரன் முதலாய் அவை முழுது உண்ட பரபரன்*
*புரம் ஒரு மூன்று எரித்து அமரர்க்கும் அறிவியந்து*
*அரன் அயன் எனஉலகு அழித்து அமைத்து உளனே" (திரு 1.1.8)*

*(பிரமன் முதலிய தேவர்களாலும் அறிய அரிதான நிலையினை உடைய மூலப்பகுதி தொடக்கமாகவுள்ளஎல்லாவற்றிற்கும் சிறந்த காரணமாகிப் பின் அவற்றை எல்லாம் அழித்த பரபரன், சிவனாக இருந்து ஒப்பற்ற முப்புரங்களையும் அழித்துப் பின் உலகங்களை எல்லாம் அழித்தும், பிரமனாக இருந்து தேவர்கட்கு ஞானத்தை உபதேசித்துப் பின் ஒரு காலத்தில் உலகத்தை எல்லாம் படைத்தும், அவ்விருவருடைய உயிர்களுக்குள் உயிராகத் தங்கியிருக்கிறான். ஸ்ரீ புருஷோத்தம நாயுடு உரை)*

*2.* லீலா விபூதி "நித்திய விபூதி ஆகிய உபய விபூதியினையும் (இருவேறு உலகம்) உடையவன் இறைவன்.

*(லீலா விபூதி — விளையாட்டுக்குரிய உலகங்கள்; அவை இவ்வுலகம் முதல் சத்திய லோகம் ஈறாக உள்ள உலகங்கள். நித்திய விபூதி — வீட்டு உலகு)*

*"கரவிசும்பு எரிவளி நீர்நிலம் இவை மிசை*
*வரன் நவில் திறல்வலி அளிபொறையாய் நின்ற (திரு 1.1.11)*

*(திடமான ஆகாயமும், நெருப்பும், காற்றும், தண்ணீரும், மண்ணும் என்றும் இவற்றின் தன்மைகளான சிறந்த ஒலியும், தெறலும், வலியும், தண்ணளியும் பொறுத்தலும் ஆகியஇவையாகி நின்ற இறைவன் (ஸ்ரீ புருஷோத்தம நாயுடு உரை) இப்பாடலில் ஐம்பெரும் பூதங்களை அருளிச் செய்தலால் லீலாவிபூதி கூறினார். நித்திய விபூதியும் உபலட்சணத்தால் கொள்க)*

*3.* லீலாவிபூதி, நித்ய விபூதி ஆகிய உபய விபூதிகட்கும் தலைவன்

*"வளவேழ் உலகின் முதலாய் வானோர் இறை" (திரு. 1.5.1)*

*(வளப்பம் பொருந்திய ஏழ் உலகங்கட்கும் காரணனாய நித்தியசூரிகள் தலைவன். "வளவேழ் உலகு" என்றதனால் லீலாவிபூதியும், "வானோர் இறை" என்றதனால் நித்திய விபூதியும் இப்படி இரண்டு உலகங்கட்கும் தலைவன் என்று சொல்லப்பட்டது)*

4. பேறும் இறைவனே; ஆறும் (நெறி) இறைவனே. அவன் எல்லை இல்லாத ஆனந்தத்தை உடையவன்.

"வைப்பாம் மருந்தாம்" (திரு 1.7.2)

(வைப்பு — இறைவன் அடியார்கட்குச் சேமநிதிதானம். விரும்பிய காலத்தில் நுகர்வதற்குச் சேமித்துவைக்கும் சேமநிதி, போன்று ஒருவன் நினைத்த வகைகள் எல்லாம் அனுபவிக்கலாம்படி இறைவன் தானே தன்னை இஷ்ட விநியோகத்திற்கு ஆக்கி வைப்பவன்.இது பிராப்யத்துவம்; அதாவது அடையத் தக்க பொருளின் தன்மை; பேறு)

(மருந்து — தன்னை அடைவதற்குத் தடையாக உள்ளவினைகளை நீக்கும் மருந்து).

சிறிய விஷயங்களைக் கூட ஜீரணம் ஆக்கி கொள்ள மாட்டாத உயிர்கள். அந்தச் சிறுகுறை கூட வாராதபடி, தடைகளை (விரோதிகளை) நீக்கித் தன்னை அனுபவித்ததற்கான, வலிமையைக் கொடுத்துத் தன்னையும்கொடுக்கிறான். இது பிராபகத்துவம்; பகவானை அடைதற்குரிய வழியின் தன்மை; ஆறு.

"நலத்தால் உயர்ந்து உயர்ந்து அப்பாலவன்" (திரு 1.7.2.)

(ஆனந்தத்தால் மேன்மேல் உயர்ந்து அப்பாற்பட்டவன்)

5. இயங்கியற்பொருள் நிலையியற் பொருள்கள் எல்லாவற்றையும் சரீரமாக உடையவன். ஆதலாலே எல்லாச் சொற்களுக்கும் பொருளாய் இருக்கும் தன்மையன்.

"இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
யவையும் யவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்" (திரு1.9.1)

(அண்மையில் உள்ளவையும், சேய்மையில் உள்ளவையும் நடுவிடத்து உள்ளவையுமான அஃறிணைப் பொருள்கள் அனைத்தையும், அண்மையில் உள்ளவர்களும், சேய்மையில் உள்ளவர்களும் நடுவிடத்துள்ளவர்களுமானஉயர்நிலைப் பொருள்கள் அனைத்தையும், 'தான்' என்ற சொல்லுக்குள்ளேஅடங்கிஇருக்கும்படி அழித்தும், பின்னர் அவற்றை உண்டாக்கியும், உண்டாக்கிய பொருள்களைக் காத்தும் அவ்வவ்வுயிர்களுக்குள் உயிராய்த் தங்கியும் இருக்கின்ற ஒப்பற்ற காரணன் என் தலைவன்)

6. நித்திய சூரிகட்கு நிர்வாஹகனாவான் (அடக்கி ஆள்பவன்)

"உம்பர் வானவர் ஆதி அம்சோதி" (திரு 1.10.9)

(பரமபதத்தில் எழுந்தருளியிருக்கின்ற நித்தியசூரிகளுடைய தொழில்கட்கெல்லாம் காரணனான பரஞ்சோதி)

7. நித்திய சூரிகள் எப்பொழுதும்அனுபவித்துக் கொண்டு இருந்தாலும் எல்லை காண ஒண்ணாத பெருமையை உடையன் ஆதலாலும் உயர்வற உயர்ந்த சர்வேச்வரன்.

"உயர்வற உயர் நலம் உடையவன் யவன் அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவன் அவன்" (திரு 1.1.1)

(மேன்மேல் உயர்ந்து கொண்டே செல்லுகின்ற நற்குணங்களை உடையவன் யாவனோ அவன் மறதி என்பது சிறிதும் இல்லாத நித்திய சூரிகட்குத் தலைவன்)

"பரபரன் ஆய்நின்ற வளவேழ் வைப்பாம்"
அவையுள் உம்பர் வானவர் அதிபதி" (சூத் 219)

## II இறைவன் ஆழ்வாருக்குச் செய்த உபகாரம்

### இறைவன் ஆழ்வாருக்கு அருள்புரிந்த வகை:

ஆன்மாவை மூன்று வகையான அக இருள் சூழ்கிறது. தேகமே ஆன்மா என்றிருத்தல் முதல் வகை. இதுபொருளைப் பற்றிய அறிவு பிறவாத நிலை. ஆன்மா பிற தெய்வங்கட்கு அடிமை என்றிருத்தல் இரண்டாவது வகை. இது பொருளின் தன்மை பற்றிய அறிவின்மை, சுதந்திரமாகவும், போக்கியமாகவும் நினைத்திருக்கும் கேவலனுடைய அறிவு மூன்றாவது வகை. கைவல்ய இன்பமே இன்பம் என நினைதல் அதற்கு மேல் வீடு பேறு வேண்டாது இருத்தல். இது ஒன்றனை மற்றொன்றாக அறிகின்ற அறியாமை. இந்த மூன்று வகையான அக இருளையும் ஆழ்வார்க்கு அடியோடு போக்கிப் பக்தியாக வடிவு எடுத்த ஞானத்தைக் கொடுத்து ஆழ்வார் திருவுள்ளத்தில் பகவான் புகுகிறான்.

*"மயர்வற மதிநலம் அருளினன்"* *(திரு 1.1.1)*
*"மயர்வற என் மனத்தே மன்னினான்"* *(திரு 1.7.4)*
*"மயர்வற மன்னி"* *(சூத் 219)*

அப்படிப் புகுந்த இறைவன் ஆழ்வாருடன் பின்னிக் கிடந்த நல்வினை தீவினைகளையும் புறப்பொருள்களில் உள்ளருசி வாசனைகளையும் போக்கினான். தன் சீல குணத்தைக் காட்டித் தன் பக்கலிலே மனத்தை வைக்கும்படி திருத்தினான்.

*"சார்ந்த இருவல்வினைகளும் சரித்து மாயப்பற்று*
*அறுத்துத் தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி"* *(திரு 1.5.10)*
*"மனம் வைக்கத் திருத்தி"* *(சூத் 219)*

ஒருவேளை ஆழ்வார்நம்மை மறக்கக்கூடும் என்று பகவான் எண்ணி, எல்லை இல்லாத சிநேகத்தைச் செய்து, இவரைவிடாது அழகிய திருக்கண்களால் குளிர நோக்கிக் கொண்டு ஒரு நாளும் மறக்க முடியாதபடி ஆழ்வார் திருவுள்ளத்தில் நிலைத்து இருந்தான்.

*"மறக்கும் என்று செந்தாமரைக் கண்ணொடு*
*மறப்பற என்னுள்ளே மன்னினான்"* *(திரு 1.10.10)*
*"மறக்கும் என்று நல்கிவிடாதே மன்ன"* *(சூத் 219)*

### இறைவன் திருவருள் புரிந்தபின் ஆழ்வார்க்கு உண்டான நிலை:

இறைவன் ஆழ்வார்க்குத் திருவருள் புரிகிறான். எல்லை இல்லாத இனியன் ஆனவனை எப்பொழுதும் அனுபவித்துப் பிறவியினால் வரும் அக இருள் நீங்கப் பெறுகிறார். அத்தகைய பேருதவி புரிந்தவனை அவர் எவ்வாறு மறப்பார்? மறக்கவும் கூடுமோ? எதனைச் சொல்லி மறப்பது என்று ஐயம், திரிபு மறதி கலவாத தத்துவ ஞானத்தை ஆழ்வார் பெறுகிறார்.

*"தூய அமுதைப் பருகிப்பருகி என்*
*மாயப் பிறவி மயர்வு அறுத்தேன்"* *(திரு 1.7.3)*
*"எம்பிரானை என் சொல்லி மறப்பனோ"* *(திரு 1.10.9)*

"அயர்ப்பிலன் அறுத்தேன் என் சொல்லி மறப்பனோ
என்னும்படி தத்துவஜ்ஞானவர்" (சூத் 219)

(தத்துவஜ்ஞர் — தத்துவ ஞானத்தை உடையவர்)

**ஆழ்வார் தாம் பெற்ற அனுபவம் உலக மக்களும் பெற விரும்புதல்:**

தாம் பெற்ற இன்ப அனுபவம் உலக மக்களுக்கு இல்லாமல் ஆழ்வாரை மாத்திரம் அங்கீகரிக்கிறான் எம்பெருமான்.

"நீசன்: நிறைவொன்றுமிலன்" என்று ஒதுக்கித் தள்ளாது பல காலமாக ஈட்டிய நல்வினை தீவினைகள், இவ்வுலக வாழ்வில் ஈடுபாடு வேறு பயன்களில் முயற்சி, வேறு உபாயங்களில் பற்று முதலிய குற்றங்கள் ஒன்றும் சேராமல் பார்த்துக் கொள்கிறான். திருவுள்ளமும் தாமும் கூடி அனுபவித்த பகவானுடைய அனுபவம் தனியே அனுபவிக்க ஒண்ணாது என நினைக்கிறார் ஆழ்வார். இறைவனோடு கூடிய தொடர்பு அனைவருக்கும் பொதுவானது ஆனதாலும், பிறருடைய கேட்டினைக் காணப்பொறாத பேரருளாலும் இவ்வனுபவம் உலக மக்களுககும் கிடைக்க வேண்டும் என்று கருதுகிறார்.

"சுடரடி தொழுது எழு என் மனனே" (திரு 1.1.1)

"நீயும் நானும் இந்நேர் நிற்கில் மேல் மற்றோர்
நோயும் சார் கொடான் நெஞ்சமே சொன்னேன்" (திரு 1.10.6)

"சுடர் அடி எம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானும்
என்கிற ஸஹ்ருதய அனுபவம் சம்சாரிகளுக்கும் ஆம்படி" (சூத் 219)

(ஸஹ்ருதயம் — மனத்தோடு கூடியது)

## III ஆழ்வார் உபதேசம்

## *(2ஆம் திருவாய்மொழி)*

**ஆழ்வார் உபதேசம்:**

உலக மக்களுக்குத் தாம் பெற்ற இறையனுபவம் கிடைக்க அறிவுரை பகர்கிறார்.

**விடத்தக்கன:**

முதலில் விடத்தக்கனவற்றின் தன்மையைக் கூறுகிறார்.

"வீடுமின் முற்றவும்" (திரு 1.2.1)

பிறகு விடத்தக்கனவற்றின் சிறுமை, நிலையின்மை முதலிய குற்றங்களைக் கூறுகின்றார்.

"மின்னின் நிலை இல மன்னுயிர் ஆக்கைகள்" (திரு. 1.2.2)

அடுத்து அவற்றைவிடுகின்ற முறையினை விளக்குகிறார்.

"நீர்நுமது என்றிவை வேர்முதல் மாய்த்து" (திரு 1.2.3)

"வீடுமின் என்று தியாஜ்ய தோஷம் பரித்தியாகம்" (சூத் 219)

(தியாஜ்யம் — விடத்தக்கவை; தோஷம் — குற்றம்)

*பற்றத்தக்கன:*

விடத்தக்கனவற்றைச் சொன்ன ஆழ்வார் பற்றத்தக்கனவற்றைச் சொல்கிறார்.

பற்றத் தக்க பகவானின் சொருபத்தையும், அந்தப்பகவானுடைய குணத்தையும், அந்தப் பகவானிடத்தில் ஆன்மாவைச் சேர்க்கும் முறையையும் அப்படி இறைவனோடு சேர்க்கும் தன்மை வடிவான திருமந்திரத்தோடே உபதேசிக்கிறார்.

"வீடுடையான்" (திரு 1.2.1)
"எல்லையில் அந்நலம்" (திரு 1.2.4)
"உம்முயிர் வீடு செய்ம்மின்" (திரு 1.2.1)
"வண்புகழ் நாரணன்" (திரு 1.2.10)

"வீடு என்று உபாதேய குண சமர்ப்பணகிரம ஸாலம்பந மந்திரமாக உபதேசித்து" *(சூத் 219)*

(உபாதேயம் — பற்றத் தக்கது; சாலம்பநம் — பற்றுக்கோடு)

## IV *3ஆம் திருவாய்மொழி முதல் 10ஆம் திருவாய்மொழி வரை:*

முதல் திருவாய்மொழியில் இறைவன் பெருமையும் இரண்டாம் திருவாய்மொழியில் அடியார்கள் இறைவனை அடையும் வழியும் கூறினார். இனி மூன்றாம் திருவாய்மொழி முதல் பத்தாம் திருவாய்மொழி முடிய உள்ள திருப்பதிகங்களின் பொருள்களைச் சுருக்கி அருளிச் செய்கிறார்.

*மூன்றாம் திருவாய்மொழி:*

பக்தியுடைய அடியார்களுக்குக் கண்களால் காண முடியாதவன் என்று இல்லாதபடி இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்கள் எடுத்து எளியனாக் காட்சி தருகிறான். இதனால் இறைவனுடைய சௌலப்ய குணம் (எளிவந்த தன்மை) சொல்லப்பட்டது.

"பலபிறப்பாய் எளிவரும் இயல்வினன்" (திரு.... 1.3.2)

"எளிதாக அவதரித்து" *(சூத் 219)*

*நான்காம் திருவாய்மொழி:*

பக்தர்களின் குற்றங்களைப் பொறுத்துக் கொள்கிறான். இதனால் இறைவனின் பொறையுடைமை தெரிவிக்கப்பட்டது.

"என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" (திரு 1.4.7)

"பிழைகளைச் சகித்து" *(சூத் 219)*

*ஐந்தாம் திருவாய்மொழி:*

தங்கள் குற்றம் கண்டு தாங்களே அகலுவாரையும், தன் குணத்தைக் காட்டிக் குற்றமறக் கலக்கும் குணசீலன். இறைவனின் சீலகுணம் தெரிவிக்கப்பட்டது.

"திசைகள் எல்லாம் திருவடியால்
தாயோன் தான் ஓர் உருவனே" (திரு 1.5.3)

"புரை அறக் கலந்து" (சூத்.219)

## ஆறாம் திருவாய்மொழி:

அடியார்கள் என்ன தருகின்றார்களோ அதில் நிறைவு கொண்டு எளிய ஆராதனைக்கும் இடம் கொடுக்கிறான்.

"புரிவதுவும் புகை பூவே" (திரு 1.6.1)

"அல்ப சந்துஷ்டனாய்" (சூத் 219)

## ஏழாம் திருவாய்மொழி:

அமுதையே ஔடதம் ஆக்குவது போலத் தன்னையே பிறவி நோய்க்கு மருந்து ஆக்குகிறான்.

தூய அமுதைப் பருகிப் பருகி, என் மாயப்பிறவி மயர்வு அறுத்தேனே (திரு 1.7.3)

அம்ருதமே ஔஷதமாக்கி (சூத் 219)

## எட்டாம் திருவாய்மொழி:

தண்ணீரானது மக்கள் காட்டின வழியே செல்லும் தன்மையது; அது போன்று இறைவனும் மக்கள் செல்லும் வழிகளிலேயே செல்லும் தன்மையன். இதனால் இறைவனின் ஆர்ஜவகுணம் (அடியவர்க்கு எளியவனாய் இருத்தல்) தெரிவிக்கப்பட்டது.

"நீர்புரைவண்ணன்" (திரு 1.8.11)

"நீர் புரையத் தன்னை நியமித்து" (சூத் 219)

## ஒன்பதாம் திருவாய்மொழி:

மாட்டினுடைய குளம்பு அடிச்சுவட்டில் கடல் கொள்ளுமோ? ஆழ்வார் உள்ளத்தில் அத்துணைப் பெரியவனான பகவான் வரத் தாங்குமோ? என்ற ஐயத்தை நிவர்த்தி செய்வது போல

"என்னுடைய சூழலுளான்" (1.9.1) என்று தொடங்கி
"உச்சியுளானே" (1.9.10) என முடிக்கிறார்.

"போகத்தைச் சாத்மிப்பித்து" (சூத் 219)

(சாத்மிப்பித்து — செரிக்கச் செய்து)

## பத்தாம் திருவாய்மொழி:

பரமபக்திக்கும் காட்சி தருவான். இருபத்தாறாவது தத்துவம் பரமாத்மா என்ற (சரீரம் — 24 தத்துவம்; ஆன்மா — 25ஆவது தத்துவம்; பரமாத்மா — 26வது தத்துவம்) நூற்கொள்கை புரியாத ஒருவன் வேடிக்கையாக ஒன்று, இரண்டு என்று சொல்லி வருகையில் இருபத்தாறு என்று சொல்லும்பொழுதும் தன்னைத் தான் குறிப்பதாகக் கொண்டு இறைவன் காட்சி தருவான். அந்த அளவு எளிமையானவன்.

"கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால்
தொழில் எண்ணிலும் வரும்" (திரு 1.10.2)

"பக்திகனைகளுக்கு ஒக்க வரும் அவன்" *(சூத் 219)*

*(கனைை — பரிசுகளை; எண்ணுதல்)*

## V. *பக்தி:*

### *இறைவனை வணங்குதலே வழி:*

இறைவன் வணங்குதற்கு எளியவன், இனியவன்:

*"பத்துடை அடியவர்க்கு எளியவன்"* (திரு 1.3.1)
*"அமுதிலும் ஆற்ற இனியன்"* (திரு 1.6.6)

"சேவைக்கு எளிமையும் இனிமையும் உண்டு" *(சூத் 219)*

(சேவை — வணக்கம்)

இறைவனை வணங்கினால் பேற்றிற்குத் தடைகளாக உள்ளனவற்றை அடியோடு போக்கி, அழிவில்லாதனவாகிய பெறுதற்கு அரிய பயன்களையும் தருவான்.

*"அவனைத் தொழுதால்
வழிநின்ற வல்வினை மாள்வித்து
அழிவின்றி ஆக்கம் தருமே"* (திரு 16.8)

"தொழுதால் அரும்பயனாய தரும்" *(சூத் 219)*

ஆன்மாவினை முடிக்கின்ற மிகக் கொடிய தீவினைகள். இறைவனை வணங்கத் தொடங்கின அளவிலே அழியும்.

*"நாளும் நம் திருவுடை அடிகள் தம் நலம் கழல் வணங்க
நாளும் நின்று அரும் நம் பழமைஅம் கொடுவினை உடனே மாளும்"* *(1.3.8)*

"உத்யோகத்தே வினைகளும் மாளும்" *(சூத் 219)*

வணங்கும் வழியாது? இறைவன் கூறியருளிய வணக்கத்தை உடைய பக்தி நெறியில் நிற்க வேண்டும்.

*"ஆதி அம் பகவன்
வணக்குடைத் தவநெறி வழிநின்று"* (திரு 1.3.5)

"அவன் உரைத்த மார்க்கத்தே நின்று" *(சூத் 219)*

கீதையிலும் ஸ்ரீ கிருஷ்ண பகவான், "என்னிடத்திலேயே வைக்கப்பட்ட பக்தியினாலேயே என்னை அடைவதற்குத் தகுந்தவனாக இருக்கிறேன் என்கிறான்.

ஆழ்வார் "இந்தத் தெய்வத்தை வழிபடுவதா? அந்தத் தெய்வத்தை வழிபடுவதா" என்ற ஐயத்தை அடியோடு போக்குகிறார்.

*"நாரணன் நான்முகன் அரன் என்னும் இவரை
ஒன்றநும் மனத்து வைத்து உள்ளிநும் இருபசை அறுத்து"* (திரு 1.3.7)

(நாராயணனும், நான்முகனும், அரனும் என்னும் இவர்களை உங்கள் மனத்தில் சமனாக வைத்து ஆராய்ந்து, பிரமன் சிவன் இவர்களிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற பற்றினை நீக்கி)

"இருபசை மலம் அற" *(சூத் 219)*

இறைவனைப் பற்றிய ஞானத்தைக் கொண்டு "வேறொரு பயனைக்

கருதாத பக்தி செய்யுங்கோள்" என்கிறார்.

"நன்று என நலம் செய்வது அவனிடை" (திரு 1.3.7)

"உணர்வு கொண்டு நலம் செய்வது என்று" (சூத் 219)

சர்வேச்வரன் ஆழ்வார்க்கு மயர்வற மதிநலம் அருளியது போல நம்மாழ்வார் இந்த முதற் பத்திலே இறைவனுடைய உண்மைநிலை, உய்யும் உபாயம், உயிர்கள் அடையும்பேறு ஆகியவற்றில் உலக மக்களுக்கு இருக்கும் அறியாமையைப் போக்கி ஞான பக்திகளை உபதேசித்துப் பகவானை வணங்கும் வணக்கத்தை உபதேசிக்கிறார்.

"தாம் மயர்வற மதிநலம் அருளி பஜனத்திலே
சேர்க்கிறார் முதற்பத்தில்" (சூத் 219)

# இரண்டாம் பத்து

*1.* இறைவனுடைய காரணத்வம் (காரணமாக இருக்கும் தன்மை) *2.* இறைவன் ஆழ்வார்க்கு அருளிச் செய்த பாங்கு *3.* ஆழ்வார்க்கு உபதேசம் என மூன்றாகப் பிரிக்க வேண்டும்.

## I இறைவனுடைய காரணத்வம் (உலகிற்குக் காரணன்):

இறைவனுடைய காரணத்வம்: உயிர்களை பத்தர், முத்தர், நித்தர் என மூவகையாகப் பிரிக்கலாம். பத்தர் — பாசப் பிணைப்பிலுள்ள மனிதர்; முத்தர் — மோட்சத்துக்குச் செல்பவர்; நித்தர் — வைகுந்தத்தில் என்றும் நித்யமாக இருப்பவர்கள். இம்மூவகையினர்க்கும் முதற்காரணம் துணைக்காரணம், நிமித்த காரணம் ஆகிய மூவகைக் காரணமாயிருக்கிறான் எம்பெருமான், இவ்வுலகில் சூக்குமமாய அறிவுடைப் பொருள், அறிவில் பொருள் — இவற்றுடன் கூடியிருக்கும் பொழுது முதற்காரணமாயிருக்கிறான். ஞானம் சக்தி முதலிய குணங்களோடு கூடியிருக்கும் தன்மையால் துணைக் காரணமாயிருக்கிறான். சங்கல்பத்தோடு கூடியிருக்கும் தன்மையாலே நிமித்த காரணமாய் இருக்கிறான். இப்படி மூன்று வகையான அறிவுடைப் பொருட்கும் அறிவில் பொருட்கும் மூன்றுவகைப்பட்ட காரணமாய் இருக்கிறான்.

பிராகிருதம் (உலக சம்பந்தம்), அப்ராகிருதம் (மோட்ச உலக சம்பந்தம்) காலம் என்னும் மூவகையான அறிவில் பொருட்கும் முதல், துணை, நிமித்த காரணமாயிருக்கிறான்.

*"சோராதஎப்பொருட்கும் ஆதியாம் சோதி"* *(2.1.11)*
*"மூவாத் தனிமுதலாய்"* *(2.8.5)*
*"எப்பொருட்கும் வேர் முதலாய் வித்தாய்"* *(2.8.10)*

*"சோராத மூவா வேர் முதலாய் உலகம் படைத்தவன்*
*என்கிற சித் அசித் திரய த்ரிவித காரணமானவன்"* *(சூத் 220)*

*(சித்துத்திரயம் — நித்தியர், முத்தர்,பத்தர் என்னும் மூன்றுவகைப்பட்ட உயிர்கள்; அசித்துத் திரயம் — பிராகிருதம், அப்ராக்ருதம், காலம் என்ற மூவகைப் பொருள்கள்; திரிவிதகாரணம் — முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் என்பன)*

## II இறைவன் ஆழ்வார்க்கு அருளிச் செய்த பண்பு:

நெஞ்சு தெளிதல்: இப்படிப்பட்ட சர்வேச்வரன், இறைவனுடைய உண்மைநிலை, உய்யும் வழி, உயிர்கள் அடையும் பேறு ஆகிய அறியாதனவற்றை மிகத் தெளிவாக ஆழ்வார்க்கு அறிவிக்கிறான். அதனால் இவரும் அவனை நெருங்க நெஞ்சு தெளிவடைகிறார்.

*"அறியாதன அறிவித்த அத்தா"* *(திரு 2.3.2)*
*"அடியை அடைந்து உள்ளம் தேறி"* *(திரு 2.6.8)*

*"அறியாதன அறிவிக்க உள்ளம் தேறி"* *(சூத் 220)*

அறியாமை இருள் நீங்குதல்:

இதனால் ஆழ்வார் தூய மனத்தினராய் அறியாமை இருள் நீங்கப் பெறுகிறார்.

"தூ மனத்தனனாய்" (திரு 2.7.8)
"தூ மனம் மருளில்" (சூத் 220)

அடியார் குழாங்களைக் கூட ஏங்குதல்:

ஞானத்தின் பலன் வீடுபேறு தானே! இவ்வுலக வாழ்வில் உழலுவதால் வரும் செருக்கு, கிலேசம், அறுவகைப்பட்ட விகாரங்களும் நீங்கப் பெறவேண்டும்.

(அறுவகைப்பட்ட விகாரங்கள் — உண்டாதல், பிறத்தல், வளர்தல், பெருத்தல், குறைதல், நசித்தல் என்பன)

அங்ஙனம் நீங்கப் பெற்ற நிலையில் ஒளிவடிவம் பெற நித்யசூரிகளின் கூட்டத்தில் கூடும் வாய்ப்பு உடனே கிடைக்காமையால் வாடுகிறார்.

"களிப்பும் கவர்வும் அற்றுப் பிறப்புப் பிணிமூப்பு இறப்பு அற்று
ஒளிக்கொண்ட சோதியமாய் உடன் கூடுவது என்று கொலோ?
........ ........ ........ அடியார்கள் குழாங்களையே" (திரு...2.3.10)

(நினைத்த பொருள் கிடைக்கப் பெற்றமையால் உளதாகும் களிப்பும், அது கிடைக்கப் பெறாமையால் உளதாகும் துன்பமும் நீங்கி, இவை இரண்டற்கும் அடியான பிறப்பும், பிறப்புள்ள இடத்தே சென்று புகுகின்ற நோயும், வேறு ஒன்றால் நீக்க ஒவ்வாத மூப்பும், இறப்பும் நீங்கிப் பேரொளி மயமான திருமேனியினை உடையோமாய் இறைவனைச் சார்ந்த நித்ய சூரிகளுடைய கூட்டத்தைக் கூடுவது என்றோ? ஸ்ரீ பி.ஆர்.புரு)

"ஞானபலமான ஒளிக்கொண்ட மோட்சம் தேடி வாட" (சூத் 220)

அந்தாமத்து அன்பு:

இறைவனை அடைய வேண்டும் என்ற ஆழ்வார் தாபம் அடங்கும்படி பரமபதத்திலே நித்திய சூரிகளிடம் செலுத்தும் அன்பை இறைவன் இவரிடம் செலுத்தும்படி எல்லை இல்லாத கலவியைச் செய்கிறான்.

"அந்தாமத்து அன்பு செய்தும் என் ஆவிசேர் அம்மானுக்கு" (திரு 2.5.1)
"உலராமல் ஆவிசேர்ந்து" (சூத் 220)

மனத்தே புகுதல்:

ஆழ்வாரோடு கலந்துவிட்டால் பிற சிந்தனைகள் இருக்கக்கூடாது என்னலாம்படிக்குத் தன் நினைவின் ஆயிரத்தின் ஒரு கூற்றிலே உலகங்கள் அனைத்தையும் ஒரு காலே வைத்து, இனிப் பெயராதபடி ஆழ்வார் மனத்தில் புகுகின்றான்.

"சிக்கெனச் சிறிது ஓர் இடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுகள்
ஒக்கவே விழுங்கிப் புகுந்தான்" (திரு 2.6.2)
"சிக்கெனப் புகுந்து" (சூத் 220)

### எழுபிறவியில் தொடர்புடையார்க்கும் வீடுபேறு:

இவர் மட்டு மல்லாது, இவரோடு இப்பிறவியில் இவரோடு தொடர்புடையவர்கள் இவரோடு பல பிறப்புகளிலும் தொடர்புடையவர்கள் அனைவர்க்கும் இவருடைய தொடர்பு காரணமாக மோட்சத்தைக் கொடுக்கிறான்.

"கீழ்மேல் எமர் ஏழ் எழுபிறப்பும்
மாசதிர் இதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" (திரு 2.7.1)
"சம்பந்திகளும் சேர்தல் மாறினர் என்ன வாழ்வித்து,
உபகரிக்கிற நீந்தும் கெடலில் எம்மா வீட்டை" (சூத் 220)

### வேண்டுவது திருவடிப்பேறே:

அந்த மோட்சம் கொடுக்கை உடையவனான இறைவனின் சொரூபத்திற்கும் அடியவரான ஆழ்வாருடைய சொரூபத்திற்கும் தகுதியாக இருக்கவேண்டும். இந்நிலையில் ஆழ்வார் வேண்டுவது சர்வேச்வரனுடைய திருவடிகளைத் தம் தலையில் சூட்டிக் கொள்வது ஒன்று மட்டுமே.

" நின்
செம்மா பாதபற்புத் தலைசேர்த்து;
அம்மா! அடியேன் வேண்டுவது இஃதே" (திரு..2.9.1)
"உபய அநுகுணம் ஆக்கினவர்" (சூத் 220)
(உபயம — இரண்டு; அநுகுணம் — தகுதி)

### III ஆழ்வார் உபதேசம்:

### இறைவனுடைய முதன்மையை நிலை பெறுத்துவன:

இனி அடுத்து இறைவனுடைய முதன்மையை நிலை பெறுத்துவனவற்றை வெளிப்படுத்துகிறார்.

"ஆச்ரயணீயனுக்கு பூர்வ உக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற" (சூத் 220)
(ஆச்ரயணியன் — தொழத் தக்கவன்; பூர்வம் — முன்; உக்தம் — கூறிய)

மோட்சம் முதலான எல்லாப் பேறுகளையும் கொடுப்பவன் சர்வேச்வரன்.

"வீடு முதல் முழுதுமாய்" (2.2.1)
"சகல பல பிரதத்துவம்" (சூத் 220)
(எல்லாப் பலன்களையும் கொடுத்தல்)

தேவர்களையும் மற்ற எல்லாப் பொருள்களையும் படைக்கும் காரணன் ஆகிறான்.

"மிகும் தேவும் எப்பொருளும் படைக்கத் தகும்" (2.2.5)
"காரணத்வம்" (சூத் 220)

ஆதிசேடன் மேல் படுத்திருக்கிறவன்.

"அணைவது அரவணை மேல்" *(2.8.1)*

**"சேஷசாயித்வம்"** *(சூத் 220)*

(ஆதிசேடன் மேல்படுத்திருத்தல்)

மக்களை உய்விக்க, பல்வேறு அவதாரங்களையும் எடுக்கும் எளிமையானவன்.

"இணைவனாம் எப்பொருட்கும்" *(2.8.1)*

**"சௌலப்பியம்"** *(சூத் 220)*

திருமகள் கணவன் ஆகிறான்.

"பூம்பாவை ஆகம் புணர்வது" *(2.8.1)*

**"ஸ்ரீய: பதித்வம்"** *(சூத் 220)*

(திருமகள் கேள்வனாக இருத்தல்)

சகல பலபிரதத்வம், காரணத்வம் என்னும் இரண்டையும் "திண்ணன்" என்ற திருவாய்மொழியிலும் (2ஆம் பத்து; 2ஆம் திருவாய்மொழி), சேஷசாயித்வம், சௌலப்யம், மோட்சம் கொடுத்தல் ஆகிய மூன்றையும் "அணைவது" என்ற திருவாய்மொழியிலும் (2ஆம் பத்து, 8ஆம் திருவாய்மொழி) அருளிச் செய்தார்.

இனி அந்த ஐந்தனையும் "திண்ணன் என்ற திருவாய்மொழியிலும் "அணைவது என்ற திருவாய்மொழியிலும் அருளிச் செய்கிறார்.

## IV "திண்ணன்" "அணைவது" திருப்பதிகங்கள்

அ. 2ஆம் பத்து 2ஆம் திருவாய்மொழி — "திண்ணன்" என்னும் திருப்பதிகம்.

ஆ. 2ஆம் பத்து 8ஆம் திருவாய்மொழி — "அணைவது" என்னும் திருப்பதிகம்

**1. எல்லாப் பலன்களையும் கொடுக்கின்றவனாதல்.**

அ) "வீடு முதல் முழுதும் ஆய்" *(2.2.1)*

ஆ) "வீடு முதல் ஆம்" *(2.8.1)*

**2. எல்லாப் பொருட்கும் காரணனாதல்**

அ) "கருத்தில் தேவும் எல்லாப் பொருளும் வருத்தித்த மாயப்பிரான்" *(2.2.8)*

ஆ) "இருவர் அவர் முதலும் தானே" *(2.8.1)*

**3. ஆதிசேஷசயனன் ஆதல்**

அ) "ஆழி அம் பள்ளியாரே" *(2.2.6)*

ஆ) "அணைவது அரவணைமேல்" *(2.8.1)*

*4.* திருமகன் கேள்வன் ஆதல்

அ) "பூமகள் தன்னை வேறின்றி விண்தொழத் தன்னுள் வைத்து" *(2.2.3)*

ஆ) "பூம்பாவை ஆகம் புணர்வது" *(2.8.1)*

*5.* அவதாரத்தால் எளியனாதல்

அ) "கண்ணன் கண் அல்லது இல்லை ஓர் கண்ணே" *(2.2.1)*

ஆ) "இணைவன் ஆம் எப்பொருட்கும்" *(2.8.1)*

*(2.8.1)* பிறவிப் பெருங்கடல் நீந்துவார்கள் புணைவன்" என்பதனால் மோட்சத்திற்கு உபாயமாக இருத்தலையும், "மூவுலகும் காவலோன்" *(2.8.5)* என்றதனால் எல்லாப் பொருள்களையும் காப்பவன் ஆதலையும், "ஆனை இடர் கடிந்த" *(2.8.2)* என்றதனால்" ஆபத்திற்குத் துணைவன் ஆதலையும் உணர்த்தினார்.

"திண்ணன், அணைவது" என்று வெளியிட்டு *(சூத் 220)*

V. நாரணனே பரம்பொருள்

நாரணனே பரம்பொருள் தேவர்களின் வார்த்தைகளே சான்று"

சிவபெருமான், பிரமன், இந்திரன், மற்றும் பிற தேவர்களும், "கள்வா", எங்களையும் மற்ற உலகங்களையும் நின்னிடத்தினின்றும் தோன்றச் செய்த இறைவனே" *(2.2.10)* என்று வணங்குவர். தேவர்களுடைய வார்த்தையால் அவனே பரம்பொருள்" என்றாயிற்று.

"கள்வா ! எம்மையும் ஏழுலகும் நின்
உள்ளே தோற்றிய இறைவா ! என்று
வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்
புள்ளூர்தி கழல் பணிந்து ஏத்துவரே". *(2.2.10)*

"கள்வா என்று வசனம் காட்டி" *(சூத் 220)*

"கண்ணனே பரம்பொருள்" அருச்சுனன் சாட்சி:

அருச்சுனன் கண்ணபிரான் திருவடிகளைப் பூசித்து அழகிய மலர் மாலை அணிவிக்க அம்மாலையே சிவபெருமானுடைய சடையில் இருக்கக் கண்டான். கண்ணபிரானே இறைவன் என்று இறைவன் பரத்துவத்தை காட்சியளவில் நேரே அருச்சுனன் கண்டான்.

"தீர்த்தன் உலகு அளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன் முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்து ஒழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே" (திரு 2.8.6)

"தீர்த்தன் என்று பிரத்யட்சம் காட்டி" *(சூத் 220)*

VI ஒரு பாடல்: ஒரு விளக்கம்

**சம்சாரத்துக்கம்; மோட்ச ஆனந்தம்; சாதன ரசம் ("புலன் ஐந்துமேயும்")**

இறைவனை வழிபடுகின்றவர்களுக்கு விடத்தக்கனவற்றில் வெறுப்பும், பேற்றிலே பேரவாவும், அடைகின்ற வழியில் ருசியும் இருக்கவேண்டும்.

ஐம்பொறிகளின் வழியில் சென்று ஐம்புல இன்பங்களை நுகர்வது இறைவனை அடையத் தடையாகும். இதுவிடத்தக்கது. இதனை வெறுத்து ஒதுக்க வேண்டும்.

"புலன் ஐந்து மேயும் பொறி ஐந்தும் நீக்கி" *(2.8.4)*

**"புலன் ஐந்து என்று சம்சார"** *(சூத் 220)*

மோட்சத்தில் இன்பத்திற்கு ஓர் எல்லையே கிடையாது.

"நலம் அந்தம் இல்லது ஓர் நாடு புகுவீர்" *(2.8.4)*

(அந்தம் — முடிவு; நலம் — இன்பம்; நாடு — மோட்ச உலகு)

**"மோட்ச சாதனத்துக்கு"** *(சூத் 220)*

இறைவனை அடைகின்ற வழியும் இனிமையானது. சர்வேச்வரனுடைய நற்குணங்களில் மூழ்கிக் கிடந்தால் கிடைக்கும் இன்பமே இன்பம்!

"பலமுந்து சீரில் படிமின்" *(2.8.4)*

**"சாதன ரசம்"** *(சூத் 220)*

**"புலன் ஐந்து" என்று சம்சார மோட்ச சாதன துக்க ஆனந்த ரசம் முன்னாக விதிக்கிற அந்தர்கத குண உபாசநத்தை"** *(சூத் 220)*

VII. ஒரு பதிகம் ஒரு விளக்கம்

**உலக வாழ்க்கையில் விலக்கத் தக்கன: (பத்தாம் திருப்பதிகம்)**

பரம்பொருளை வழிபட சாத்திரங்களில், விலக்கியனவற்றை நீக்க வேண்டும். திவ்விய தேசங்களில் வசிக்கவேண்டும். இதனை உபதேசிக்கும் திருவாய்மொழி "கிளர் ஒளி"

இவ்வுலக வாழ்வில் பற்று வைத்து அதனால் பாவங்களைச் செய்து இளமையை வீணாக்கலாகாது.

மனிதன் அழகும் இளமையும் உள்ள பெண்கள் தாழ்ச்சி உண்டாகுமாறு பேசும் வார்த்தைகளையும் செய்யும் செயல்களையும் மதிக்கிறான்.

"சதிர் இள மடவார் தாழ்ச்சியை மதியாது" *(2.10.2)*

**"மதித்து"** *(சூத் 220)*

பலவகையான வலிமைகளால் கொடிய பாவங்களைச் செய்து தீவினைகளை அதிகப்படுத்திக் கொள்கிறான்.

"நிறமுடை வலத்தால் தீவினை பெருக்காது" (2.10.5)
"பெருக்கி" (சூத் 220)

அப்படியே வினையில் மூழ்குகிறான்

"வல்வினை மூழ்கி" (திரு 2.10.9)
"மூழ்கி" (சூத் 220)
(வல்வினை மூழ்கி (2.10.9)

நரகில் அழுந்திப் போகிறான்.

"நரகு அழுந்தி" (திரு 2.10.7)
"அழுந்தி" (சூத் 220)

கீழான விஷயங்களில் விருப்பத்தைச் செலுத்தி "கீழ்மை" (2.10.6) தனது வலிமையை இவற்றிலே வீணாக்கி "வலம் கழித்து" (2.10.1)"சூதும் செய்து" (2.10.10) இளமையும் வீணாகிறது

"இளமை கெடாமே" (2.10.1)
"மதித்துப் பெருக்கி மூழ்கி அழுந்திக் கீழ்மை
வலம் சூதும் செய்து இளமை கெடாமல்" (சூத் 220)

செய்யத்தக்கன:

பின் இளமையில் செய்யத் தக்கன யாவை?

திவ்விய தேசங்களில் வசிக்கவேண்டும்?

"மாலிருஞ்சோலை சார்வது சதிரே" (2.10.1)
"பதியது ஏத்த" (2.10.2)
"க்ஷேத்ர வாச சங்கீர்த்தந" (சூத் 220)

சென்று தொழ வேண்டும்.

"தொழக் கருதுவதே (2.10.9)
"அஞ்சலி" (சூத் 220)

வலம் வரவேண்டும்.

"வலம் செய்து நாளும் மருவுதல் வழக்கே" (2.10.8)
"பிரதக்ஷிண" (சூத் 220)

அந்த நெறியே நினைக்க வேண்டும்.

"நெறிபட அதுவே நினைவது நலமே" (2.10.6)
"கதி சிந்தனா" (சூத் 220)

திவ்ய தேசவாசம், தொழுகை, வலம்வருதல், நெறி நினைத்தல் இவையே வழிபாட்டின் அங்கங்களாகும்.

"அங்க யுக்தம் ஆக்குகிறார் இரண்டாம் பத்தில்" (சூத் 220)

# மூன்றாம் பத்து

இறைவனுடைய "சர்வ வியாபகத்வம்" (எங்கும் பரந்திருக்கும் தன்மை) மூன்றாம் பத்தில் சொல்லப்படுகிறது.

## I. இறைவனின் குணம்

### சர்வ வியாபகத்வம்: (எங்கும் பரந்து இருக்கும் தன்மை)

சர்வேச்வரனை தேசம், காலம் பொருள்களால் அளவிட்டு அறியமுடியாது. அறிவுடைப் பொருள், அறிவில் பொருள் எல்லாவற்றிலும் பரந்து வியாபித்திருப்பவன்.

*"எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவற நிறைந்துநின்ற" (3.2.7)*
*"அளவுடை ஐம்புலன்கள் அறியாவகையால்*
*அருவாகி நிற்கும்" (3.10.10)*

"முழுதுமாய் எங்கணும் ஒழிவற அருவாகி நின்று" (சூத் 221)

எல்லாவற்றிலும் பரந்து இருந்தாலும், அவற்றின் குற்றங்கள் அவனைத் தீண்டப்பெறா.

*"யாவையும் எவரும் தானாய்*
*அவரவர் சமயம் தோறும்*
*தோய்விலன்" (3.4.10)*

"தோய்விலனாம் சர்வவியாபகன்" (சூத் 221)

### அடியவர்களைக் காக்கும் வள்ளல் தன்மை:

அடையும் பேறும், அடைவிக்கும் வழியும் எம்பெருமானே என்ற திடமான உறுதியுடைய அடியவர்களைப் பிறவியில் புகாமல் காக்கிறான். இந்தஉடலைவிட்டு உயிர் நீங்கும் காலை அவர்களைப் பரமபதத்திற்குக் கொண்டு சென்று, தன் உருவத்தைப் பெறுகின்ற தன்மையினைத் தந்து, தன் திருவடிகளில் சேர்த்துக் கொள்கிறான்.

*"தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ள வல்ல" (3.5.11)*
*"சன்ம சன்மாந்திரம் காத்து அடியார்களைக் கொண்டுபோய்த்*
*தன்மை பெறுத்தித் தன் தாளிணைக் கீழ்க்கொள்ளும் அப்பன்" (3.7.7)*

"தீர்ந்த அடியார்களைத் தாள்
இணைக்கீழ்க்கொள்ளும் தன்படிக்கும்" (சூத் 221)

## II ஆழ்வார் அனுபவம்

### எம்பெருமான் திருவடிகளையே சார விரும்பும் ஆழ்வார்காதல்:

"எம்பெருமானை அடையவே இந்த உடம்பு தரப்பட்டது. ஆனால் இறைவனை அடைய நினையாது, இவ்வுடம்பு சென்ற வழி நான் சென்று சென்று எனக்குக் கேட்டினைச் சூழ்ந்து கொண்டேன்.

*"அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்"* *(திரு 3.2.1)*

*"நீ தந்த"* *(சூத் 221)*

உன்னுடைய பலவகைப்பட்ட பெரிய மாயை காரணமாக வருகின்ற பலவகையான பிறவிகளில் நான் உழலுகிறேன்.

*"பல்மாமாயப் பல் பிறவியில் படிகின்ற யான்"* *(திரு 3.2.2)*

*"மாமாய"* *(சூத் 221)*

அறுக்கமுடியாத அளவுக்குக் கேட்டினை உடைய இந்த உடலோடு சம்பந்தம் வைத்திருக்கிறேன்.

*"பொல்லா ஆக்கையின் புணர்வினை அறுக்கலறா"* *(3.2.3)*

*"புணர்வினை"* *(சூத் 221)*

கர்மங்கள் காரணமாக மீண்டும் ஆன்மா பிறவியில் அழுந்துகின்றது.

*"வினையியல் பிறப்பு அழுந்தி"* *(3.2.7)*

*"பிறப்பு அழுந்தி"* *(சூத் 221)*

சம்சாரமாகிய புதரில் சிக்கிக் கொண்டு வழி தெரியாமல் கூவிக்கூவிச் சுழலுகிறேன்.

*"கொடுவினைத் தூற்றுள்" நின்று*
*பாவியேன் பலகாலம் வழிதிகைத்து அலமருகின்றேன்"* *(3.2.9)*

*"அலமருகின்றேன்"* *(சூத் 221)*

## இந்த வினைகள் வேரொடு அரிந்து என்று உன்னைக் கூடுவேன்?

*"வினைகள் வேர் அறப் பாய்ந்து*
*எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவன்"* *(3.2.1)*

*"வேர் அற அரிந்து, எந்நாள் எங்குவந்து*
*தலைப்பெய்வன் என்று"* *(சூத் 221)*

உன்னுடைய குணங்களை அனுபவித்துக் கொண்டே காலத்தைக் கழித்து உன் திருவடிகளில் புக விரும்பும் காதலன் நான்.

*"காயம் கழித்து அவன் தாளிணைக்*
*கீழ்ப்புகும் காதலன்"* *(3.9.8)*

*"கழித்துப் புகும் தம் காதலுக்கும்"* *(சூத் 221)*

## வடிவழகை அனுபவித்தல்:

ஆழ்வார் காதலும், இறைவன் ஆட்கொள்ளலும் ஆனபின்னர், "நீயே கண்டு கொள் எனப் பரமபதத்தைக் காட்டுகிறான். பரமபதத்தின் பலன் பகவானை அனுபவிக்கும் அனுபவமும் கைங்கர்யமுமே ஆகும். ஆதலால் அவன் அழகையும், அணிகலன்களையும் அனுபவிக்கிறார்.

*"வானவர் நாட்டையும் நீ கண்டுகொள் என்று*
*வீடும் தரும் நின்று நின்றே"* *(3.9.9)*
*"ஊனம் இல் மோக்கம் என்கோ"* *(3.4.7)*
(மோக்கம் — பரமபதம்)

*"நீ கண்டு கொள் என்னும் ஊனமில் மோக்ஷ பலமான*
*முடிச்சோதியில் அனுபவத்தாலே"* *(சூத் 221)*

III 2 முதல் 10ஆம் திருவாய்மொழி முடிய:

**ஆன்மா தரித்தல் (2ஆம் திருவாய்மொழி):**

இந்த வடிவழகை அனுபவிக்கும் அனுபவத்தாலே ஆழ்வார் ஆன்மா தரிக்கப் பெற்றது.

"நிலைபெற்று என்நெஞ்சம் பெற்றது நீடுயிரே" (3.2.10)

"நித்யவஸ்து நீடுபெற்று" (சூத் 221)

(நித்யவஸ்து — ஆன்மா: நீடுபெற்று — தரிக்கப் பெற்று)

**எல்லை இல்லாத கைங்கர்யம் (மூன்றாம் திருவாய்மொழி):**

எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைகளிலும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்யவேண்டும் என்பது மூன்றாம் திருவாய்மொழியில் சொல்லப்படுகிறது.

"ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" (திரு 3..3.1)

"அவச் சேதம் அற்ற அடிமை செய்யவேண்டும்படி" (சூத் 221)

(அவச் சேதம் — பிரிவு இடைவீடு)

**எங்கும் பரந்து இருக்கிறான் (4ஆம் திருவாய்மொழி):**

ஐம்பெரும் பூதங்கள், அப்பூதங்களின் சேர்க்கையாலான பொருள்கள், மாணிக்கங்கள், இனிய சுவையுடைய பொருள்கள், இசைநூல் முதலான நூல்கள், மோட்சம் முதலான பேறுகள், பிரமன், சிவன் முதலானோர், இவற்றிற்கெல்லாம் காரணமான மூலப்பகுதியும், புருஷனும் — ஆகிய இவை எல்லாவற்றையும் உடையவன்; இவற்றில் எல்லாம் நீக்கமற நிறைந்து இருக்கிறான்; இவற்றின் குற்றங்கள் தன்னைத் தீண்டப்படாதவனாக இருக்கிறான்.

"புகழும் நல்ஒருவன் என்கோ" (3.4.1)

"சர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து" (சூத் 221)

(சர்வாத்ம பாவம் — எங்கும் உறையும் தன்மை)

**மனம், மொழி, மெய்களால் அனுபவித்தல் (5ஆம் திருவாய்மொழி):**

பாடியும் புகழ்ந்தும், வழிபட்டும், சிரித்தும், நெஞ்சுருகிக் கரைந்தும் இவ்வாறு மன, மொழி, மெய்களால் இறைவனை அனுபவிக்கும் விதம் ஐந்தாம் திருவாய்மொழியில் சொல்லப்பட்டது.

"எம்மானைச் சொல்லிப் பாடி
எழுந்தும் பறந்தும் துள்ளாதார்" (3.5.1)

"பரஞ்சுடரை நினைந்து ஆடி
நெஞ்சம் குழைந்து நையாதே" (3.5.7)

"சொல்லி, பாடி, ஏத்தி, பிதற்றி, எழுந்தும் பறந்தும்
துள்ளி, குனிந்து, தடுகுட்டம் கும்பிடு நட்டமிட்டு
சிரிக்கக் குழைந்து நையும் பிரீதி உகள" (சூத் 221)

### ஏழாம் திருவாய்மொழி:

### அடியார்களைக் கூடுதல்:

இறைவனைக் கூடுவதைக் காட்டிலும், அவன் அடியார்களைக் கூடுவது ஏழாம் பதிகத்தில் உரைக்கப்பட்டது. (ஆறாம் திருப்பதிகம் பின்னர்ப் பரோபதேசம் பற்றிக் கூறுகையில் எடுத்தாளப்படுகிறது. திருப்பதிகம் — திருவாய்மொழி)

"அடியார் அடியார் தம் அடியார் தமக்கு
அடியார் அடியார் தம் அடியார் அடியோங்களே" (3.7.10)
"தம் அடியார் என்ன உடன்கூடும் சாத்யம் வளர"

### எல்லையற்ற அன்பினால் பொறிகள் முறைமாறி அனுபவிக்க விரும்பல்: (8ஆம் திருப்பதிகம்):

சர்வேச்வரனுக்குப் படுக்கையாக இருக்கும் திரு அனந்தாழ்வான் கண்களையே காதுகளாக உடையவன். ஓர் உறுப்பின் செயலை வேறொரு உறுப்பு செய்யும் இயல்பினன். (பாம்பு) அதுபோல் ஆழ்வார்க்கு அன்பு மீதூர்தலினால் வாக்கின் செயலை மனமும், கையின் செயலை வாக்கும், கண்களின் செயலைக் கைகளும், காதுகளின் செயலைக் கண்களும் ஆசைப்படும்படியான நிலையினை 8ஆம் திருவாய்மொழியில் விளக்குகிறார்.

"கைகளால் ஆரத் தொழுது தொழுது உன்னை
வைகலும் மாத்திரைப் போதும்ஓர் வீடுஇன்றிப்
பைகொள்பாம்பு ஏறி உறைபரனே! உன்னை
மெய்கொள்ளக் காண விரும்பும் என் கண்களே" (3.8.4)

(பைகொள் பாம்பு — படத்தைக் கொண்டுள்ள பாம்பு)

"பைகொள் பாம்புபோல இந்திரிய விருத்தி நியமம் அற" (சூத் 221)

### மானிடம் பாடமாட்டேன் (9ஆம் திருவாய்மொழி):

சர்வேச்வரன் அல்லாமல் பிறரையோ — மானிடரையோ கவி பாடமாட்டாத திறத்தினை 9ஆம் திருப்பதிகம் சொல்கிறது.

"வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேன் அல்லேன்" (3.9.9)

"பாடவந்த கவிஅன்றிக்கே படைத்தான்
சுலோகக் கிருத்தாய்" (சூத் 221)

(சுலோகம் — நான் கவிபாடுகிறவன்" என்ற உபநிடத வாக்கியம். சுலோகக் கிருத் — செய்யுளைச் செய்தவர்)

### யாதும் ஓர் குறைவில்லை 10ஆம் திருவாய்மொழி:

இந்த நிலை வந்துற்றபின் பரமபதத்திலே சென்று அனுபவிக்கப் பெற்றிலேன் என்கிற குறை இல்லை; இவ்வனுபவத்தில் ஆழ்வார்க்கு ஒரு தடையும் இல்லை; மனத்தில் சிறிதளவு துன்பமும் இல்லை. இந்த உலகத்தில் இருப்பதனாலும் துன்பம் இல்லை.

*"யான் ஓர் துக்கம் இலனே"* *(3.10.8)*

*"குறை முட்டுப் பிரிவு இடர் துயர் துன்பம்*
*அல்லல் துக்கம் தளர்வு கேடுகள் இன்றி*
*அம்ருதாநந்த மக்நரானவர்"* *(சூத் 221)*

## IV. உபதேசப் பதிகம்

### அர்ச்சாவதார எளிமை:

"செய்ய தாமரைக் கண்ணன்" ஆறாம் திருப்பதிகம்: தாமரைக் கண்ணனாதல் முதலான பரத்துவ குணங்களை உடையவன் சர்வேச்வரன். நித்தியசூரிகளுக்குத் தலைவன். சம்சாரிகளான நம்மால் அவனை அடைய முடியுமோ என்று அஞ்ச வேண்டா! நீங்கள் உங்கள் நெஞ்சில் எந்த அர்ச்சாவதார வடிவம் கொண்டு அவனை நினைக்கிறீர்களோ அந்த வடிவமாக அருள்பவன் என்று உபதேசிப்பது 6ஆம் திருப்பதிகம்.

*"தஞ்சம் ஆகிய தந்தை தாயொடு தானுமாய் அவை அல்லனாய்*
*எஞ்சல் இல் அமரர் குலமுதல் மூவர் தம்முளும் ஆதியை*
*அஞ்சி நீர் உலகத்துள்ளீர்கள் அவன் இவன் என்று கூழேன்மின்;*
*நெஞ்சினால் நினைப்பான் எவன்? அவன் ஆகும் நீள்கடல் வண்ணனே"* *(3.6.9)*

*"செய்ய தாமரைக் கண்ணன் அமரர் குலமுதல்*
*என்று அஞ்சாதபடி"* *(சூத் 221)*

எம்பெருமானுடைய எளிமை "முதற்பத்தில்" எளிவரும் இயல்வினன்" என்ற திருப்பாசுரப் பகுதியாலும், இரண்டாம்பத்தில் "இணைவனாம் எப்பொருட்கும்" என்ற திருப்பாசுரப் பகுதியாலும் அருளப்பட்டிருந்தாலும், "செய்யதாமரைக் கண்ணன்" என்ற திருவாய்மொழியில் அருளிச் செய்யப்படும் அர்ச்சாவதார எளிமை மிக உயர்ந்தது. இந்த எளிமைக்கு முன் அவதாரம் முதலியவை பரத்துவத்திற்குச் சமம் ஆகும்.

*"செய்ய தாமரைக் கண்ணன் அமரர் குலமுதல் என்று*
*அஞ்சாதபடி எளிவரும் இணைவனாம் என்றவை*
*பரத்வமாம்படி சௌலப்ய காஷ்டையைக் காட்டி"* *(சூத் 221)*

*(சௌலப்ய காஷ்டை— அர்ச்சாவதாரம்)*

*(சௌலப்யம் — எளிமை, காஷ்டை — எல்லைநிலம்)*

### மானிடம் பாடேன் "சொன்னால் விரோதம்" எனும் 9ஆம் திருப்பதிகம்:

பகவானோடு வாழ்கிற அனுபவமே அனுபவம். தன்னை நோக்கி ஒரு சொல் சொல்லுவார் உளரோ என அவன்காத்து நிற்க, அவனை விட்டு ஒரு சொல்லுக்கும் பொறாத மானிடரைக் கவி பாடுவது இழிவு அன்றோ?

சர்வேச்வரன் விரும்பிய அனைத்தும் தருபவன்; தன்னை ஒக்க அருள் செய்பவன்; அவனையே சேவித்து அவனுக்கே அடிமை ஆவோம்.

> ***"வழியை தரும் அவன் நிற்க, இழியக்கருதுவது***
> ***என்னாவது, வேண்டிற்றெல்லாம் தரும், தன்னாகவே***
> ***கொள்ளும், கவி சொல்ல வம்மின் என்று முக்த***
> ***ஐச்வரியத்தை முன்னிட்டு ச்வவிருத்தியை மாற்றி***
> ***ஸ்வவிருத்தியிலே மூட்டுகிறார் மூன்றாம் பத்திலே"*** ***(சூத் 221)***

*(ச்வவிருத்தியை மாற்றி ஸ்வவிருத்தியிலே மூட்டுகிறார் — மானிடரைப் பாடும் தகுதியில்லாத விஷயத்தை மாற்றி இறைவன் விஷயத்தில் அடிமை செய்ய மூட்டுகிறார்; ச்வவிருத்தி — நாய் விருத்தி; ஸ்வவிருத்தி — தன்ஸ்வருபத்தால் சேர்ந்த விருத்தி)*

# நான்காம் பத்து

*1.*இறைவனுடைய நியாமகத்வம் *2.* இறைவன் ஆழ்வார்க்குச் செய்த திருவருளும், அதனால் ஆழ்வார் அடைந்த நன்மையும், *3.* ஆழ்வார் மக்களுக்குச் செய்யும் உபதேசம் என நான்காம் பத்து மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

## I இறைவனுடைய நியாமகத்வம் (ஏவுதல்)

இவ்வுலகம் (லீலாவிபூதி) வான்உலகம் (நித்தியவிபூதி) ஆகிய இரு உலகங்களிலும் எம்பெருமான் பரந்து இருக்கிறான் என்று முன்பத்தில் சொல்லப்பட்டது. ஆகாயமும் பரந்து வியாபித்துத்தான் இருக்கின்றது. ஆனால், அது போலல்லாது தன்னுடைய ஆணையைச் செலுத்தி, எல்லாப் பொருள்களையும் நியமிக்கின்றவனாயும் இருக்கின்றான் எம்பெருமான்.

"வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செல்ல" *(4.5.1)*
"ஈசனை ஈசன் ஈசன்பால் என்ன ஏர்கொள்
வானத்தும் ஆயே என்கிற வியாப்தி நிறம்பெறத்
தனிக்கோல் செலுத்தும் சர்வநியந்தா" *(சூத் 222)*

*(ஈசன் — நியமிக்கிறவன்; வியாப்தி — பரந்திருத்தல், நிறம் பெற — விளக்கம் பெற, தனிக்கோல் — ஆணை; நியந்தா — நியமிக்கின்றவன்)*

## II இறைவன் ஆழ்வாருக்குச் செய்த திருவருளும், அதனால் ஆழ்வார் அடைந்த தன்மையும்:

### இரண்டாம் திருப்பதிகம்:

ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி இருக்க ஆசைப்பட்டவர் ஆழ்வார். பாலனாக ஏழு உலகங்களையும் உண்ட காலத்திலும், வராக அவதாரம் எடுத்துப் பூவுலகை மீட்ட காலத்திலும் கிடைக்கக்கூடிய அனுபவத்தை எம்பெருமான் ஆழ்வாருக்குச் சமகால அனுபவமாக அனுபவிக்கச் செய்கிறான்.

"பாலனாய் ஏழ்உலகு உண்டு" *(4.2.1)*
"ஒழிவில் காலத்துக்குச் சேர பூர்வ
போகங்களை ஓதும் மால் எய்தின
சாபலத்துக்குச் சேரச் சமகாலம் ஆக்கி" *(சூத் 222)*

### மூன்றாம் திருப்பதிகம்:

பல்வேறு அவதார காலங்களில் எம்பெருமானை அனுபவித்துப் பூவும் நீரும் இட்டு வழிபடவில்லையானாலும் எம்பெருமான் திருமேனிக்குப் பூசுகின்ற செஞ்சாந்து ஆழ்வாரின் நெஞ்சமே ஆகும். இது மனவழிபாடு.

"பூவை வீயா நீர் தூவிப் போதால் வணங்கேனேலும், நின்
பூவை வீயாம் மேனிக்குப் பூசும் சாந்து என் நெஞ்சமே" *(4.3.1)*

எம்பெருமானுக்குச் சூட்டப்பெறும் மாலை ஆழ்வாரின் திருப்பாசுரங்களே ஆகும். இது மொழியால் வழிபடுதல் ஆகும்.

"புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய்மாலையே" *(4.3.2)*

எம்பெருமானுடைய அணிகலன்கள் ஆழ்வார் கைகளால் கூப்பித் தொழுகின்ற வணக்கமே ஆகும். இது மெய்யால் வழிபடுதல் ஆகும்.

"என்கை கூப்புச் செய்கையே" *(4.3.2)*

இதனால் முக்கரண வழிபாடு கூறலாயிற்று.

இப்படி அந்தந்த அவதாரக் காலத்தில் வழிபடக் கூடியதான அனுபவத்தை வழங்கிய எம்பெருமானின் காதல் குணத்தில் ஆழ்வார் அறிவு மயங்கி அன்பு மேலிடுகிறார்.

"போதால் வணங்காமை தீர்த்த பிரணயித்வத்திலே
காதல் மையல் ஏறிய பித்தாய்" (சூத் 222)

(பிரணயித்வத்திலே — அவன் காதல் குணத்திலே)

அன்பு மேலீட்டால் பகவானை (4ஆம் திருப்பதிகம்) ஒத்த பொருள்களையும் அவனுடைய சம்பந்தமுடைய பொருள்களையும் அவனாகவே கருதிப் பேசும்படி பித்து ஏறுகிறது. குடக்கூத்து ஆடுகிறவனைப் பார்த்தால் கோவிந்தனாகத் தெரிகிறது. குழலோசை கேட்டால் கண்ணன் குழலோசையாகக் கேட்கிறது. வெண்ணையைப் பார்த்தால் அவன் உண்ட வெண்ணையாகத் தெரிகிறது.

"கூத்தர் குடம் எடுத்து ஆடில், கோவிந்தனாம்" எனா ஓடும்;
வாய்த்த குழல் ஓசை கேட்கில் 'மாயவன்' என்று மையாக்கும்;
ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் அவன் உண்ட வெண்ணெய் ஈது
என்னும் பேய்ச்சி முலை சுவைத்தாற்கு என் பெண்கொடி ஏறிய பித்தே" (4.4.6)
"ஏறியபித்தாய்" (சூத் 222)

## ஏழாம் திருப்பதிகம்:

பரமபதத்துக்கு ஆசைப்பட்டாலும், தேசதூரம் குறுக்கே இருக்கிறது. அழகிய திருமேனியைக் காணுமாறு அவனும் வருவதில்லை; தான் இருக்குமிடத்திற்குக் கூவிக் கொள்கின்றான் இல்லை.

"காலம் தோறும் யான் இருந்து கைதலை பூசலிட்டால்
கோலமேனி காண வாராய்; கூனிவிம் கொள்ளாயே" *(4.7.1)*

(கைதலை பூசலிடுதல் — கையைத் தலையிலே குவித்துக் கொண்டு அழைத்தல்)

"தேசதூரத்துக்குக் கூவியும் கொள்ளாய் என்றது தீர" (சூத் 222)

## ஒன்பதாம் திருப்பதிகம்:

பரமபதத்திலே பெரிய பிராட்டியாரும் எம்பெருமானும் ஒருங்கே இருக்கும் அரிய காட்சியைப் பரமபதத்திலுள்ளார் அனுபவித்து இன்பம் அடையுமாப்போல ஆழ்வாரும் இங்கே கண்டு அனுபவித்து

இன்புறுகிறார்.

*"ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப கண்ட சதிர் கண்டொழிந்தேன்"* *(4.9.10)*

**"கண்ட சதிரையும் ஒருநிலம் ஆகக் காட்ட"** **(சூத் 222)**

*(சதிர் — நேர்பாடு; ஒரு நிலம் ஆகக்காட்ட — பரமபதத்தைப் பூவுலகத்திலேயே ஒரு நிலமாகக் காட்ட)*

## 5ஆம் திருப்பதிகம்:

அவனை அனுகியதால் ஆழ்வார் அழிவில்லாத ஆனந்தம் பெற்றார். யார்க்கும் கிட்டவொண்ணாத் திருவடிகளில் ஆழ்வாரைச் சேர்த்துக் கொண்டான். இது மானச அனுபவம் ஆகும்.

*"வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன் மேவியே"* *(4.5.3)*

*(வீவில் — நித்தியமான)*

**"வீவில் இன்பம் கூட்டினை" என்று** **(சூத் 222)**

## 6ஆம் திருப்பதிகம்:

அந்த மானச அனுபவம் பெற்ற பின்னர்ப் பிறிது ஓர் தெய்வத்தைத் தொழாத வைராக்கியம் பெறுகிறார்.

*"உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள்"* *(4.6.10)*

**"முக்த போக மானச பிராப்தி பலமான தேவதாந்தர வைராக்கியம்"** **(சூத் 222)**

## 8ஆம் திருப்பதிகம்:

அவனைக் கண்டு அனுபவிக்க முடியாத உடம்பையோ உயிரையோ வைத்துக் கொண்டுதான் என்னபயன் என்ற வைராக்கியம் பிறக்கிறது.

*"உயிரினால் குறையிலமே"* *(4.8.10)*

*"உடம்பினால் குறையிலமே"* *(4.8.9)*

**"ஆத்ம ஆத்மீய வைராக்கியம்"** **(சூத் 222)**

*(ஆத்மீய — ஆத்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்; இங்கு சரீரம்)*

அத்துடன் இவ்வுலக வாழ்க்கையிலும் செல்வத்திலும், ஆத்ம அனுபவத்திலும் வைராக்கியம் பிறக்கிறது.

*"கொடு உலகம் காட்டேலே"* *(4.9.7)*

**"லோக யாத்ரா வைராக்யம்"** **(சூத் 222)**

*"ஐங்கருவி கண்ட இன்பம் ஒழிந்தேன்"* *(4.9.10)*

*"சிற்றின்பம் ஒழிந்தேன்"* *(4.9.10)*

**"ஐச்வர்ய அக்ஷரங்களில் வைராக்கியம்"** **(சூத் 222)**

## III ஆழ்வார் மக்களுக்குச் செய்யும் உபதேசம்

## முதல் திருப்பதிகம்:அரச வாழ்வு:

அரச வாழ்வே உயர்ந்தது என்று அரசர்கள் நினைப்பார்கள். அந்த அரச வாழ்வை இழந்துவிட்டால் அவர்கள் நிலைதான் என்ன? உடைந்த

பானையைக் கையில் ஏந்திக்கொண்டு அவர் நாட்டு மக்களே காணுமாறு பிச்சை எடுப்பார்கள். எனவே இந்த அரசுரிமை அல்பம் அன்றோ?

"ஒரு நாயகமாய் ஓட உலகு உடன் ஆண்டவர்
கரு நாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்" (திரு 4.1.1)
ஒரு நாயகம் என்று ராஜ்ய அல்பஅஸ்திரத்வத்தையும்" (சூத் 222)

## சுவர்க்க இன்பம் நிலையற்றது:

நிலத்தையும், செல்வத்தையும் துறந்து, ஐம்புல ஆசைகளையும் வென்று, இச்சரீரத்தை வருத்தித் தவம் செய்யும் முனிவர்களும், சுவர்க்கலோகத்துக்குச் செல்கிறார்கள். இறைவன் அருள் இல்லையென்றால், புண்ணியம் குறைந்த அளவில் மீண்டும் பூலோகத்தை அடைவார்கள். செய்த தவத்திற்குத்தக்க சுவர்க்க இன்பம் கிடைத்தாலும் அது நிலையற்றது என்றாகிறது.

"படிமன்னும் பல்கலன் பற்றோடு அறுத்து, ஐம்புலன் வென்று,
செடிமன்னும் காயம் செற்றார்களும், ஆங்கு அவனை இல்லார்
குடிமன்னும் இன்சுவர்க்கம் எய்தியும் மீள்வர்கள். (திரு.4.1.9)
"ஸ்வர்க்க அஸ்திரத்வத்தையும்" (சூத் 222)

(அஸ்திரத்வம் — நிலையில்லாதது)

## ஆத்ம அனுபவம்:

மனமானது தன்னைச் சார, தன் வசப்பட்ட ஓர் எல்லைக்குட்பட்டது. அம்மனத்தினை, ஞானிகள் ஞானசொருபமாக உள்ள ஆத்துமாவோடு சேர்த்து நன்றாகப் பார்த்து அந்த ஆத்ம அனுபவத்தையே மோட்சமாக, கருதியிருப்பர். இந்த அனுபவம் இன்பம் தருவதாயினும் பகவான் இன்பத்தைப் பார்க்கச் சிறியதே ஆகும். இந்த ஞானிகளும் தங்கள் அந்திம காலத்தில் இறைவனை நினைக்கவில்லையென்றால் மீண்டும் பிறக்க வேண்டியிருக்கும். எனவே இதுவும் முழுஇன்பம் தாராது.

"குறுகமிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட
இறுகல் இறப்பெனும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்,
சிறுக நினைவது ஓர் பாசம் உண்டாம்; பின்னும் வீடு இல்லை,
மறுகல் இல் ஈசனைப் பற்றிவிடாவிடில்; வீடு அஃதே" (திரு..4.1.10)
"ஆத்மானுபவ சாவதிகத்வத்தையும்" (சூத் 222)

(சாவதிகத்வம் — ஓர் எல்லையுடன் கூடியது)

## சிறு தெய்வவழிபாடு: 6ஆம் திருப்பதிகம்:

இதுமட்டுமன்று, சிறு தெய்வ வழிபாடு தவறாகிறது. தெய்வமோ மிகத் தாழ்ந்த தெய்வம்; பூசைக்குரிய பொருள் உலகத்தாரால் மிகவும் பழிக்கப்படுகின்ற கள்; சாஸ்திரமோ வேதங்களுக்குப் புறம்பான காமிகம் முதலான ஆகமங்கள்; ஆசிரியர்களோ பூசாரிகள்.

"எதுவானும் செய்து அங்கு ஓர் கள்ளும்
இறைச்சியும் தூவேன்மின்" (4.6.3)

"ஆடு, கள், இறைச்சி, கருஞ்செஞ்சோறு ஆகிற
நிந்தியங்களாலே இளம் தைவத்துக்கு இழைத்து
ஆடும் நிஹீநதையையும்" *(சூத் 222)*

*(நிந்தியம் — பழிக்கத்தக்கவை; நிஹீநதை — தாழ் மக்கள் தன்மை)*

### சிவன், பிரமன் முதலிய தெய்வங்களும், சமணம் முதலிய பிற சமயங்களும்: 10 ஆம் திருப்பதிகம்:

சிவன் பிரமன் தலையை அறுக்கத் துன்புற்ற பிரமன் சபிக்கிறான். குருவான பிரமன் தலையைக் கிள்ளிய சிவன் பெற்ற சாபம் நீங்கவில்லை. எனவே சிவன் திருமாலை வேண்டி அந்தச் சாபத்தைப் போக்கிக் கொண்டான். இதனால் பிரமன், சிவன் ஆகியோர் தங்களுக்கு வருகின்ற துன்பங்களை அறியாமையும், துன்பங்கள் வந்தால் போக்கிக் கொள்ள முடியாமையும், அவற்றைப் போக்குபவன் திருமால் ஒருவனே என்பதும் பெற்றாம்.

"பேசநின்ற சிவனுக்கும், பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே கபால நன்மோக்கத்துக் கண்டு கொண்மின்" *(4.10.4)*

"பேச நின்ற தேவதா அஞ்ஞான அசக்தி
சாபேக்ஷத்வாதிகளையும்" *(சூத் 222)*

*(தேவதா — சிவன், பிரமன், முதலான தெய்வங்கள்; அஞ்ஞானம் — அறிவின்மை; அசக்தி — ஆற்றல் இன்மை; சாபேக்ஷ — சாபத்தை நீக்க வேண்டிய)*

### இலிங்கபுராணம் முதலிய நூல்கள்; தாமத நிலை:

இலிங்கத்தைக் கடவுளாய் வழிபடும் இலிங்கபுராணம் வேதத்திற்கு முரண்பட்டது. தருக்க ரீதியாகச் சொல்வது போல வாதத் திறமையோடு சொல் நயம் மிக்கு இருக்கும்.

இவையெல்லாம் வேதத்திற்குப் புறம்பானவை. இவை தாமதநிலையைக் குறிக்கும்.

"இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் நும் தெய்வமும் ஆகி நின்றான். *(4.10.5)*

"இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டி
மத தமோ நிஷ்டதையையும் சொல்லி" *(சூத் 222)*

*(பாஹ்ய — வெளிப்படையாக கேட்க; குத்ருஷ்டி — வேதத்திற்குப் புறம்பான; தமோ நிஷ்டதை — தாமதநிலை)*

### எம்பெருமானுக்கு அடிமை செய்வதே சாலும்:

பல தெய்வங்களை வழிபட்டதனால் அதற்கான பலன்கள் கிடைக்கத் தான் செய்யும். அதற்கேற்பச் சுவர்க்க நரகங்கள் போய்ப் போய் வருவது, பிறவிகள் பல எடுத்து மீண்டும் மீண்டும் பிறப்பது ஆகியன இருந்துவரும். அவையெல்லாம் முழுப் பலன் தாரா.

"ஓடிஓடிப் பலபிறப்பும் பிறந்து, மற்றோர் தெய்வம்
பாடி ஆடிப்பணிந்து பல்படி கால்வழி ஏறிக்கண்டீர்" *(4.10.7)*

*"ஓடிக் கண்டீர்"* *(சூத் 222)*

இப்படிப் பல தெய்வங்களை நாடி ஓடி முழுப் பயன் பெறுவதில்லை. அதேசமயம் இவற்றையெல்லாம், இந்த மாயையை எல்லாம், தீர்க்கக் கூடியவன் எம்பெருமானே என்று புரியாது இருக்கின்றார்கள்.

*"கண்டும் தெளியகில்லீர் அறிந்து அறிந்து ஓடுமின்"* *(சூத் 222)*

எம்பெருமானுக்கு அடிமை செய்வதே சீரியது என்று உபதேசிக்கிறார்.

*"ஆள் செய்வதே உறுவது"* *(சூத் 222)*

என்று விரக்தி பூர்வமான ஆச்ரயணத்தை நான்காம்பத்தில் நிறுவுகிறார்.

# 5. ஐந்தாம் பத்து

*1) இறைவன் பேரருட்கடல் 2) இறைவன் செய்த திருவருளால் ஆழ்வார் அடைந்த தன்மை 3)* அத்தன்மையரான ஆழ்வார் செய்த காரியங்கள் என மூன்று பகுதிகளாக ஐந்தாம் பத்தினைப் பிரிக்கவேண்டும்.

## I இறைவன் — பேரருட்கடல் (அருளுடைமை)

தானே வந்த தன்னருள்:

எம்பெருமான் அந்தோ! அந்தோ! என்று இரங்கிவந்து ஆழ்வார் விரும்பாமலிருக்கவும் தன்னுடைய பேறாகத் திருவருளைச் செய்தான்.

"ஆஆ என்று அருள் செய்து" *(5.1.9)*
"தானே இன்னருள் செய்து" *(5.1.10)*
**"ஆஆ என்று தானே"** ***(சூத் 223)***

எம்பெருமான் பக்கம் மனம் வைத்ததினால் கலியுகத்தின் தோஷமே ஆழ்வார்க்கு வாராதபடி செய்துவிட்டான். இது சர்வேச்வரனுக்கு இயல்பிலே அமைந்ததினால்

"கலியுகம் ஒன்றும் இன்றிக்கே தன்னடியார்க்கு
அருள் செய்யும்" *(5.2.11)*
**"தன் அடியார்க்குச் செய்யும் தொல்லருள் என்று"** ***(சூத் 223)***

### அவன் எங்கே? நான் எங்கே?:

எல்லார்க்கும் சுவாமியும், நித்யசூரிகளுக்கு நாளும் காட்சி கொடுப்பவனும் உபகாரகனுமான சர்வேச்வரன் எங்கே? பிறப்பு இறப்புகளிலே உழன்று கொண்டிருப்பவர்களுடன் கலந்து இருக்கும் நான் எங்கே" என்று ஆழ்வார் எம்பெருமானின் பெருமையையும், தம்முடைய சிறுமையையும் நினைந்து பார்க்கிறார்.

"அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான்? யான் ஆர்?
எம்மா பாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்" *(5.1.7)*
**"பரத்வ ஆதிகளை உடையவன் எவ்விடத்தான் என்னும்
பாவியர்க்கும்"** ***(சூத் 223)***

*(பரத்வ ஆதிகளை உடையவன்— பரத்வம், காரணத்வம், வியாபகத்வம்,நியாமகத்வம்; முதலான குணங்களை உடையவன்; பாவியர் — பிறப்பு இறப்புகளில் உழலும் பாவியர்)*

ஆன்மாக்களை அவ்வவற்றினுடைய நல்வினை தீவினைகட்குத் தக்கவாறு காப்பாற்றுவதற்குக் காரணமான எவ்விதமான தடையும் இல்லாத இறைவனின் சுவாதந்திரியம் ஒருகரை; இறைவனுடைய திருவருள் தங்கள் பக்கம் வாராதபடி பாவங்களையே செய்யும் மக்களின் சுவாதந்திரியம் மற்றொரு கரை: ஆக இவ்விரு கரையும் அழியும்படி பெருகுகின்ற அருள் வெள்ளத்தை உடையவன் சர்வேச்வரன்.

"இரு கரையும் அழிக்கும் கிருபா
பிரவாகமுடையவன்" (சூத் 223)

II இறைவன் செய்த திருவருளால் ஆழ்வார் அடைந்த தன்மை

முதல் திருப்பதிகம்: பொய், கூத்து, வஞ்சக் களவு தவிர்தல்:

"கருமாணிக்கமே! தேனே! இன்னமுதே! என்று யசோதைப் பிராட்டியார் அன்பு கலந்து உண்ண அழைத்திட்ட அதே வார்த்தைகளை என் நெஞ்சு கலவாது மேம்போக்காகப் பொய்யாகப் பக்தி பரவசப்பட்டவரைப் போலே பாவித்து, மனம் புறவிஷயங்களில்; ஈடுபட்டிருக்கச் சொன்னாலும் உண்மையாகவே உன்னைப் பெற்றேன்" என்கிறார். இந்தப் பொய், கூத்து, வஞ்சிக்கும் கள்ள மனம் தவிர்க்க வேண்டும்.

"பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே ஆடி" (5.1.1)
"தேனே! இன்னமுதே! என்றென்றே சில கூத்துச் சொல்ல" (5.1.2)
"வள்ளல்! மணிவண்ணனே! என்றென்றே
உன்னையும் வஞ்சிக்கும் கள்ள மனம் தவிர்ந்தே" (5.1.3.)

"பொய்கூத்து வஞ்சக் களவு தவிர" (சூத் 223)

(கூத்து — ஒருவன் நினைவையும் செயலையும் மற்றவன் செய்வது; இங்கு யசோதைப் பிராட்டி அன்போடு சொன்ன வார்த்தைகளை ஆழ்வார் கூறியது.

"முற்றிலும் தானான எம்பெருமானை அகல்வது எவ்வாறு?":

இந்த வெறும் வார்த்தைகளை மட்டும் கேட்டு மகிழ்ந்து வந்து ஆழ்வார்க்கு எல்லாவித இனிய பொருள்களும் தானாகவே ஆய்விட்டான்.

"என்னை முற்றவும் தானானான்" (5.1.10)

அதன்பின் எம்பெருமானை விட்டு ஆழ்வார் அகல முடியாதபடி ஆனார்.

"இனி உன்னைவிட்டு என்கொள்வனே" (5.1.3)

"முற்றவும் தானாய், உன்னைவிட்டு
என்னப் பண்ணின" (சூத் 223)

எம்பெருமான் மேல் உள்ள அன்பினால் ஆழ்வார் சிற்றின்பத்திலும், கைவல்யத்திலும், வெறுப்புக் கொண்டார்.

"விரக்திபலம்" (சூத் 223)

பரமாத்மாவினிடத்தில் ஆசை மீதுற்றார்.

"பரமாத்ம ராகம்" (சூத் 223)

3, 4, 5 திருப்பதிகங்கள்: காதல் நோய்:

அளவிட்டு அறியமுடியாத அளவு ஆழ்வார்க்குக் காதல் பெருகிவிட்டது.

"பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த" (5.3.4)

பின் தொடர்ந்து நிற்கின்ற காதலானது ஆழ்வார் மனத்தினை வருத்துகின்றது.

"பின் நின்ற காதல்நோய் நெஞ்சம் பெரிதடுமால்" (5.4.6)

"மிக அதிகமானதோர் காதலை உடையவள் இவள்" என்று பக்கத்தில் இருப்பவர்கள் பேசும்படி ஆகிவிட்டது.

"கழிய மிக்கதொர் காதலள் இவள்" (5.5.10)
"பேரமர் பின்னின்று கழியமிக்கு" (சூத் 223)

### 6ஆம் திருப்பதிகம்: எம்பெருமானே ஆவேசித்தல்:

ஆழ்வார் முற்றிலுமாய்த் தாமான எம்பெருமான் அல்லரோ? எம்பெருமானே ஆவேசித்துச் சொல்வது போல உலகைப்படைத்தல் முதலான ஆச்சரியமான செயல்களைத் தாமே செய்ததுபோல ஆழ்வார் ஆறாம் திருப்பதிகம் முழுமையும் அருளிச் செய்கிறார்.

"கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும்" (திரு 5.6.1)
"யானே என்ன வாய்ந்து" (சூத் 223)

### 7ஆம் திருப்பதிகம்: ஆற்றாமை:

எம்பெருமானை விட்டு ஒரு கணமும் பிரிந்திருக்க முடியாத ஆற்றாமை ஆழ்வார்க்கு வந்துவிடுகிறது.

"உன்னைவிட்டு ஒன்றும் ஆற்றகிற்கின்றிலேன்" (5.7.1)
"ஆற்றகில்லாது" (சூத் 223)

### 8, 9, 10ஆம் திருப்பதிகங்கள்: நிலைகுலைந்து, மெலிந்து நீர்ப்பண்டமானார்:

எம்பெருமானுடைய அன்பினாலே ஆழ்வார் சரீரம் நிலைகுலைந்து, மெலிந்து போகின்றார். அன்பே ஓர் உருவமாகிப் பின்பு திரவமாகிக் கரையும்படி ஆழ்வார் உருகிப் போகின்றார்.

"ஆரா அமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே
நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே" (5.8.1)
"வைகலும் வினையேன் மெலிய" (5.9.1)
"நிறந்தனூடு புக்கு எனது ஆவியை
நின்று நின்று உருக்கி உண்கின்ற" (5.10.1)
"நீராய் மெலிய ஊடுபுக்கு வளர" (சூத் 223)

### பகவானிடத்தில் பக்தி, பாகவதர்களின் கூட்டுறவு:

இவற்றால் சம்சாரமாகிற விஷ மரத்திலே பகவானிடத்தில் பக்தி, பாகவதர்களின் கூட்டுறவு என்ற அமுதமாகிற இரண்டு கனிகளை ஆழ்வார் பெறுகிறார்.

"விஷவிருட்ச பலங்கள் கைகூடினவர்" (சூத் 223)

## III ஆழ்வார் செய்த காரியங்கள்

### அடிமை புக்காரும், ஆட்செய்வாரும்:

"மற்றைத் தெய்வங்கள் நாயகர் அல்லர்; திருமாலுக்குத் தொண்டு செய்வோம்" என்னும் ஸ்ரீவைஷ்ணவர்களையும், இப்படித் திருத்துகையாகிய அடிமை செய்தவரான தம்மையும் ஆழ்வார் பாடுகிறார்.

"தெய்வம் மற்றில்லை" (திரு 4.10.3)
"ஆட்செய்வதே உறுவது ஆவது" (திரு 4.10.10)
"அடிமை புக்காரையும், ஆட்செய்வாரையும் காண" (சூத் 223)

### அடியார்கள் தோற்றம்:

"ஸ்ரீவைகுண்டத்து உள்ளாரும், "சுவேதத் தீவில் உள்ளாருமான நித்ய சூரிகளைப் போன்றவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரள்திரளாக இவ்வுலகிற்கு வந்தார்கள். அவர்களைக் கண்ணாரக் கண்டோம். கண்டோம்! பொலிக! பொலிக! என ஆழ்வார் மங்களாசாசனம் செய்கிறார்.

"நேமிப்பிரான் தமர் போந்தார்" (5.2.6)
"கண்டோம் கண்டோம் கண்டோம்
கண்ணுக்கு இனியன கண்டோம்" (5.2.2)
"பொலிக பொலிக பொலிக" (5.2.1)
"லோக த்வீபாந்தரங்களில் நின்றும்
போந்த தேவர் குழங்களைக் கண்டு காப்பிட்டு" (சூத் 223)

(லோக — ஸ்ரீவைகுண்டம்; த்வீபாந்தரம் — வைகுந்தத்திலிருந்து வேறுபட்ட சுவேதத்திவம்; காப்பீட்டு — மங்களா சாசனம் செய்து)

### மக்கள் உய்ய அடியார்கள் எழுந்தருளல்:

பிரகலாதன் உபதேசித்த இரணியன் திருந்தவில்லை. வீடணன் உபதேசித்த இராவணன் திருந்தவில்லை. அதே போன்ற அரக்கத்தன்மை வாய்ந்த மக்களைத் தேடிப்பிடித்து உபதேசிக்கிறார்.

"பிரஹ்லாத விபீஷணர் சொல் கேளாத
அரக்கர் அசுரர் போல்வாரைத் தடவிப் பிடித்து" (சூத் 223)

"நோய், பகை, பசி இப்படித் தீயனவாயுள்ள எல்லாவற்றையும் போக்குவதற்காகப் பகவானுடைய அடியார்கள் பாடி ஆடிக் கொண்டு இவ்வுலகில் வந்தார்கள். அவர்களைச் சேர்ந்து உய்ம்மின்கள்" என்கிறார் ஆழ்வார்,

"கொன்று உயிர் உண்ணும் விசாதி பகைபசி தீயனஎல்லாம்
நின்று இவ்வுலகில் கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார்
நன்று இசைபாடியும் துள்ளி ஆடியும் ஞாலம் பரந்தார்
சென்று தொழுதுய்ம்மின் தொண்டீர் சிந்தையைச் செந்நிறுத்தியே" (5.2.6)

(விசாதி — நோய்)

"தேசகாலம் தோஷம் போக எங்கும் இடங்கொண்டவர்களை
மேவித் தொழுது உஜ்ஜீவியுங்கோள்" (சூத் 223)

பிற தெய்வங்கள் சர்வேச்வரனுக்குச் சரீரம்:

"நீங்கள் மற்றமற்ற தெய்வங்களை நெஞ்சில் நிறுத்தும்பொழுது, அத்தெய்வங்கள் சர்வேச்வரனுக்கு சரீரம் என்று உங்கள் வழிபாட்டைச் செய்யுங்கள்"

"நிறுத்தி நும் உள்ளத்துக் கொள்ளும் தெய்வங்கள் உம்மை உய்யக்கோள்
மறுத்தும் அவனோடே கண்டீர் மார்க்கண்டேயனும் கரியே
கறுத்தமனம் ஒன்றும் வேண்டா கண்ணன் அல்லால் தெய்வம் இல்லை
இருப்பதெல்லாம் அவன் மூர்த்தி ஆயவர்க்கே இறுமினே" (5.2.7)

"நீங்கள் நிறுத்துகிறவர்களைத்
தேவதைகளாக நிறுத்தினவனை" (சூத் 223)

சிவன் முதலான தெய்வங்கள் கண்ணனையே பொருந்தியுள்ளனர்:

சிவன், பிரமன், இந்திரன் முதலான தெய்வங்கள் எல்லாம் கண்ணபிரானுடைய விக்கிரகத்தைப் பொருந்திப் பற்றிக்கொண்டு எல்லா இடங்களிலும் பரந்திருக்கின்றனர். நீங்களும் அதுபோலக் கண்ணபிரானைப் பற்றிக் கொள்ளுங்கோள்; அப்படிப் பற்றினால் கலியுகத்தினால் வரும் தோஷங்கள் இல்லாமற்போகும்"

"மிக்க உலகுகள் தோறும் மேவிக் கண்ணன் திருமூர்த்தி
நக்க பிரானோடு அயனும் இந்திரனும் முதலாகத்
தொக்க அமரர் குழாங்கள் எங்கும் பரந்தன தொண்டீர்
ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுகம் ஒன்றும் இல்லையே" (5.2.10)

"மேவிப்பரம்பும் அவரோடு ஒக்கத் தொழில்
யுகதோஷம் இல்லையாம் என்று விஷ்ணுபக்தி பரராக்கி"(சூத் 223)

பக்தியாகிற சித்தாஞ்சனம்:

"கண்ணுக்கு இனியன கண்டோம். எல்லோரும் வம்மின்! சித்தாஞ்சனத்தைக் கண்ணில் அணிந்து கொண்டு பார்த்தால் மறைந்திருக்கின்ற பொருள் தெரியும். அதுபோலப்பக்தியாகிற சித்தாஞ்சனத்தை உடைய மனத்தில் விளங்குகிற யோகக் கண்ணால் பார்த்தால் சர்வேச்வரன் பெருமை வெளிப்படும்"

"கண்ணுக்கு இனியன காட்டலாம்படி ஆனார்
கண்ணிலே நோக்கிக் காணும் பக்தி
சித்தாஞ்சனத்தை இடுகிறார் ஐந்தாம் பத்தால்" (சூத் 223)

# ஆறாம் பத்து

## I இறைவனின் சரண்யத்வம் (எல்லாப் பொருள்கட்கும் புகலிடமாக இருத்தல்)

*யாவர்க்கும் சரண்:*

நித்திய சூரிகள், இவ்வுலகமக்கள், ஒரு பயனைப் பெற விரும்புகிறவர்கள், வேறு பயன் ஒன்றையும் விரும்பாதவர்கள், ஏனைய மனிதர்கள் என்கிற வேறுபாடு இல்லாமல் சர்வேச்வரன் அனைவர்க்கும் புகலிடம் ஆவான்.

*"யாவர்க்கும் வன்சரணே"* *(6.3.7)*
*"வன்சரண் சுரர்க்காய்"* *(6.3.8)*
*"என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய்"* *(சூத் 224)*

"எம் அடியார்கள் எல்லாம் எம் அடிக்கீழ் வாழ்மின்" என்று அருளாலே எம்பெருமான் இயம்பினான். அந்த வார்த்தைகள் கருத்துக்கு மேல் சொல்லப்படும் வெறும் வாய் வார்த்தைகள் அல்ல. கல்வெட்டுப்போல என்றும் நிரந்தரமானவை.

*"அடியீர் வாழ்மின் என்று கருணையாலே*
*சர்வலோக பூதேப்ய: என்றவை கடலோசையும்*
*கழுத்துக்கு மேலும் ஆகாமல் உபாயத்வம்*
*கல்வெட்டு ஆக்குகிற சரண்யன்"* *(சூத் 224)*

## II இறைவன் ஆழ்வார்க்குச் செய்த திருவருளும், ஆழ்வார் அடைந்த தன்மையும்:

*இறைவனை அடைய வேறுகதி இல்லாமை:*

இறைவனைத் தவிர வேறு உபாயங்களை அறியத்தக்க ஞானம் இல்லாமை, அவற்றைச் செய்யத்தக்க சக்தி இல்லாமை, எம்பெருமானுக்கே அடிமைப்பட்டிருக்கிற ஆன்மாவிற்கு அவனையே உபாயமாகப் பற்றியிருத்தல் ஒழிய அவனைத் தவிர்த்து வேறு உபாயங்களைப் பற்றுதல் தகாது என்கின்ற உண்மை உணர்கின்ற அறிவு — ஆக இம்மூன்றினாலும் சர்வேச்வரனைத் தவிர வேறுகதியில்லை என்பது பெற்றாம்.

*"அஞ்ஞான, அசக்தி, யாதாத்மிய ஞானங்கள்*
*அளவால் அன்றிக்கே"* *(சூத் 224)*

*"அங்குற்றேன் அல்லேன்; இங்குற்றேன் அல்லேன்:*

ஒரு சாதனத்தைச் செய்து முக்தி அடைவதாகவும் இல்லை ஆழ்வார் நிலை.

சாதனத்தைச் செய்கின்றவர்களில் ஒருவராகவும் இல்லை. இறைவனைக் காண வேண்டும் என்கிற ஆசையிலே அகப்பட்டு உபாயங்களைச் செய்கின்ற ஆற்றலும் இல்லாமல் போய்விட்டது.

"அங்குற்றேனல்லேன் இங்குற்றேனல்லேன் உன்னைக் காணும்
அவாவில் வீழ்ந்து நான் எங்குற்றேனும் அல்லேன். *(5.7.2)*

இறைவன் திருவடிகளைப் பற்ற ஒரு துணையும் இல்லாது போயிற்று. யாதொரு வழியும் இல்லாததனால் தம்மைச் சேர்த்துக் கொள்ள இறைவனையே வேண்டுகிறார்.

"அங்குற்றேன் என்நான் புணராய் என்னும்படி" *(சூத் 224)*

**திருவடிகளே சரணம்:**

அப்படிப்பட்ட ஆழ்வார்க்குத் தன் திருவடிகளையே சரணமாகப் பகவான் காட்டிக் கொடுத்தான்.

"ஆறு எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" *(5.7.10)*
"பாதமே சரண் ஆக்க" *(சூத் 224)*

**முதல் திருப்பதிகம்: ஆழ்வார் காதலும், ஊடலும்:**

(திருப்பதிகம் என்பது திருவாய்மொழியை) அவனை அடைந்தாலன்றித் தரிக்க இயலாத தம் காதன்மையை வெளிப்படுத்துகிறார்.

"காதன்மை கைகள் கூப்பிச் சொல்லீர்" *(6.1.1)*

எப்படி இரண்டு சிறகுகளாலே பறவைகள் ஆகாயத்தில் பறக்கின்றனவோ அப்படியே ஞானம் அனுஷ்டானம் எனும் இரண்டாலும் இறைவனை அடையலாம் என்று தலைக்கட்டுகிறார்.

"திரியக்குகளை இட்டு ஸ்வ அபிப்பிராயத்தை நிவேதித்து" *(சூத் 224)*
(திரியக்குகள் — விலங்குகள், பறவை, உட்பட)

இப்படித்தூது விடுத்து அறிவித்த அளவிலும் அவன் வரக் காலதாமதம் ஆனமையால் ஆழ்வார் ஊடல் கொள்கிறார்.

"விளம்ப ரோஷம் உபாயத்தாலே அழிய" *(சூத் 224)*
(விளம்ப ரோஷம் — காலதாமதத்தால் வந்த ஊடல்; உபாயம் — திருவடி)

**நான்காம் திருப்பதிகம்: எனக்கு ஆர் பிறர் நாயகரே!**

எம்பெருமானின் குணங்களையே நினைத்து உருகி நின்றார்.

"எம்பெருமானையே எண்ணி வணங்கப் பெற்றேன் எனக்கு யார் வேறு நாயகர்?" என்று தருக்கிப் பேசுகின்றார்.

"நண்ணி நான் வணங்கப் பெற்றேன் எனக்கு ஆர்பிறர் நாயகரே!" *(6.4.10)*
"உருகாமல் வரித்ததும்
நண்ணி வணங்கப் பலித்தவாறே" *(சூத் 224)*

### இறைவனே சரண்:

மற்றைய உபாயங்களை விட்டு, இறைவனைச் சரண் அடைதலே ஒரே வழி என்றாகிறது.

*"ஸப்ரகாரமாக ஸக்ருத் கரணீயம் என்று" (சூத் 224)*

*(ஸப்ரகாரமாக — எல்லாவற்றினோடும் கூட; ஸக்ருத்கரணீயம் — ஒருமுறை செய்யவேண்டியது)*

### போலிப் பேறுகள் வழிகள்:

தந்தை, தாய், மனைவி, பிள்ளைகள், பந்துக்கள், செல்வங்கள் ஆகியவற்றைத் துறக்க வேண்டும் என்று புராணம், பௌராணிகர் கூறியபடி துறக்கலாயிற்று; இவையெல்லாம் போலிப் பேறுகள், போலி வழிகள்.

*"புராண பௌராணிகர் தியாஜ்ய அம்சம் ஆக்கின*
*சித்து அசித்துப் பிராப்ய பிராபக ஆபாசங்களை" (சூத் 224)*

*(பௌராணிகர் — இராமாநுசர்; தியாஜ்யாம்சமாக்கின — துறக்கவேண்டிய பொருள்களாகக் கூறிய)*

*(சித்து பிராப்ய பிராபக ஆபாசங்கள் — அறிவுடைப் பொருள்களாகக் போலிப் பேறுகளும் போலி வழிகளும்; அசித்து — அறிவில் பொருள்கள்)*

### 5, 6, 7 திருப்பதிகங்கள்: போலிப் பொருள்கள் விடுபடும் வழிகள்:

மேலே கூறப்பட்ட போலிப் பொருள்களைத் தாமாகக் கைவிடுவதும் உண்டு. அப்பொருள்கள் தாமே கையொழிந்து போவதும் உண்டு. அப்பொருள்களை ஒன்றாக மதியாமல் உபேக்ஷித்துப் (புறக்கணித்தல்) போவதுமுண்டு. உறங்குபவரின் கைப்பண்டம் தானே நழுவும். அதுபோலப் பகவானிடம் பற்று வைத்தால் இப்பொருள்கள் தாமே நெகிழ்ந்து அகன்றுபோகும்.

*"அணிமாமயில் சிறுமான் இவள் நம்மைக் கைவலிந்து" (6.5.7)*
*"இழந்தது சங்கே" (6.6.1)*
*"இன்று எனக்கு உதவாது அகன்ற" (6.7.6)*
*"கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம்*
*கிடக்க நினையாது அகன்று" (சூத் 224)*

### 8ஆம் திருப்பதிகம்: பூவுலகை அடியார்களுக்கு நல்குதல்:

தம்மை இறைவனோடு சேர்ப்பவர்க்கு ஆழ்வார் பொன்னுலகும் கொடுக்கிறார்; புவனம் முழுவதும் கொடுக்கிறார்.

*"பொன்னுலகு ஆளீரோ புவனமுழுது ஆளீரோ" (6.8.1)*
*"ஆளீர் மேவீர் ஊதீர் என்று ததிய சேஷமாக்கியும்" (சூத் 224)*

*(ததீயசேஷமாக்குதல் — அடியார்களுக்கு உரியனவாக்குதல்)*

### 9ஆம் திருப்பதிகம்: ஆழ்வார் அலமருதல்:

இறைவனை அடைவதற்கு முன் ஐம்பொறிகளும் படுத்துமோ; சிற்றின்பத்தில் இழுத்துச் செல்லுமோ என்றெல்லாம் அலமருகின்றார்.

"ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்
பாவியேனைப் பலநீகாட்டிப் படுப்பாயோ" (6.9.9)

"புறத்திட்டுக் காட்டி என்று பிரசங்கிக்கில்
முடியும்படி விட்டு" (சூத் 224)

(புறத்திட்டு — இறைவனுக்குப் புறம்பான விஷயங்களுக்கு இழுத்துச் சென்று, பிரசங்கிக்கில் முடியும்படி — அவற்றைப் பேசிக் கொண்டிருக்கும்பொழுதே மூச்சு அடங்கும்படி.)

### தந்தை, தாய், வைத்த மாநிதி எல்லாமே அவன்:

தந்தை தாய் அவன்; உண்ணும் சோறு பருகுநீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்; ஆபத்திற்குச் சேமித்து வைத்த அழிவில்லாத நிதி; கிளிகள் பந்துகள் கூடத் திருமால் பெயரைச் சொல்லும்.

"தேவபிரானையே தந்தை தாய் என்று அடைந்த" (6.5.11)
"உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும்
எல்லாம் கண்ணன்" (6.7.1)
"வைத்தமா்நிதியாம் மதுசூதனனையே" (6.7.1)

"தந்தை தாய் உண்ணும் சோறு மாநிதி
பூவையாவையும் ஒன்றே ஆக்கி" (சூத் 224)

### 9ஆம் திருப்பதிகம்: என்று உன்னை அடைவேன்?

"உலகத்தைக் காப்பாற்றுகின்ற உன்னை அடையாது எத்தனைக் காலம் துன்புறுவேன்? திரிவிக்கிரம அவதாரகாலத்தில் எல்லோரின் தலைகளிலும் நின் திருவடி வைத்தாயே? எனக்கு அது கிட்டாது போயிற்றே? என்னை அழைத்துக் கொள்ள மாட்டாயா? என்று தவிக்கிறார்.

"கோலத் திருமாமக ளோடு உன்னைக் கூடாதே
சாலப்பலநாள் இன்னும் தளர்வேனே?" (6.9.3)
"கூவிக் கொள்ளும் காலம் இன்னும் குறுகாதோ?" (6.9.9.)

"தளர்வேனோ திரிவேனோ குறுகாதோ முதல்வாவோ
என்னும் ஆர்த்தியோடே" (சூத் 224)

(ஆர்த்தி — ஆசை)

### திரிவிக்கிரம அவதாரம்:

சர்வேச்வரன் வாமனனாகக் குள்ளனைப் போல அவதாரம் செய்கிறான். மகாபலியிடம் மூன்றடி மண் கேட்டு, திரிவிக்கிரமனாகி முதல் அடியாக உலகில் திருவடி எடுத்து வைக்கிறான். உயர்ந்தவனாகிய வசிட்டன் என்றும் தாழ்ந்தவனாகிய சண்டாளன் என்றும் வேறுபாடு காட்டாமல் அனைவர் மேலும் திருவடிகள் வைத்தமையால் இறைவனின் சௌசீல்யமும், பத்தி இல்லாதார் தலைகளிலும் திருவடிகளை வைக்கையாலே வாத்சல்யமும், அவதாரம் செய்து மண்ணுக்கு இறங்கி வந்து காரியம் செய்கையாலே சௌலப்யமும் "தே" என்கையாலே ஸ்வாமித்வமும், 'விபோ' என் கையாலே ஞானம், சக்தி முதலிய குணங்களின் நிறைவும் திரிவிக்கிரம அவதாரத்தில்

வெளிப்பட்டன. உலகமக்கள் எல்லாம் வியந்து போற்றக் கண்ணெதிரே நிகழ்ந்தது. அத்திருவடிகள் விரிவானவாய், வானும் விண்ணும் அளக்கக்கூடியவாய் இருந்தன.

*"மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மான்" (6.9.2)*

*"திரிவிக்கிரமனாகக் குறள் கோலப்பிரானாய் அடியை*
*மூன்றை இரந்த வன்கள்வன் கண்முகப்பே அகல் கொள்*
*திசை வையம் விண்ணும் தடவந்த தடந் தாமரைகளை" (சூத் 224)*

*திருமலைக் காட்சி:*

அந்தத் திருவடிகளை நித்தியசூரிகளும் அனுபவிக்க ஆசைப்படும்படி உலகிற்கு அணிகலனாக விளங்கும் திருமலையில் ஆழ்வார் கண்டு மகிழ்ந்தார்.

*"அன்று ஞாலம் அளந்தபிரான் பரன்*
*சென்றுசேர் திருவேங்கடமாமலை" (மூன்றாம் பத்து)*
*இணைத்தாமரைகள் காண இமையோரும்*
*வரும்படி சென்று சேர்ந்த உலகத் திலதத்தே கண்டு" (சூத் 224)*

*திருவடி சரணம்:*

தம்மிடத்தில் கைம்முதல் இல்லாமையும் தமக்கு வேறு கதி இல்லாமையும் உணர்ந்து ஆழ்வார் பெரிய பிராட்டியோடு கூடிய எம்பெருமானின் திருவடிகளை முற்றிலுமாகச் சரணடைந்தார்.

*"அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா!*
*நிகரில் புகழாய்! உலக மூன்றுடையாய்! என்னை ஆள்வானே!*
*நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!*
*புகல் ஒன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" (6.10.10)*

*(அகலகில்லன் இறையும் — சிறிது நேரமும் கூட அகலமாட்டேன். "நிகரில் புகழாய்" என்றதனால் வாத்சல்யமும், "உலக மூன்றுடையாய்" என்றதனால் ஸ்வாமித்வமும், "என்னை ஆள்வானே" என்றதனால் சௌசீல்யமும், "திருவேங்கடத்தானே" என்றதனால் சௌலப்யமும் கூறப்பட்டுள்ளன.*

*"அகலகில்லேன் என்று பூர்வவாக்யம் அநுசந்தித்தவர்" (சூத் 224)*
*(அனுசரித்தவர் — நினைப்பவர்)*

## III. ஆழ்வார் உபதேசம்

*அவனே துணை: 3ஆம் திருப்பதிகம்:*

பேற்றிற்கு வழி பக்தி, அப்பக்தி செய்யத் தடைகள் பல உள. எனவே தாம் அனுஷ்டித்த பக்தி நெறியை உலக மக்களுக்கு 3ஆம் திருப்பதிகத்தில் உபதேசிக்கிறார்.

"திருவிண்ணகர்ப்பிரான் திருவடிகள் அன்றி வேறு துணைஇல்லை" என்று தலைக்கட்டுகிறார்.

*"திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்கள்*
*அன்றி மற்றோர் களைகண் இலம்" (6.3.10)*

"பிணக்கறத் தொடங்கி வேதப்புனித இறுதி சொன்ன
சாத்ய உபாய சிரவண சசோக சஜாதியர்க்குத் தந்தனன்
மற்றோர் களைகண் இலம் புகுந்தேன் என்று ஸ்வசித்தோபாய
நிஷ்டையை உக்தி அனுஷ்டானங்களாலே
காட்டுகிறார் ஆறாம்பத்தில். (சூத் 224)

*(சாத்ய உபாய சிரவண — பேற்றிற்கு உபாயமான சாதன பக்தியைக் கேட்டதனாலே; சசோக (அது செய்ய முடியாது என நினைத்த) சோகத்தை உடைய சஜாதியர்க்கு — தம்மை ஒத்த அதிகாரிகட்கு. உக்தி — தமது வார்த்தை; அனுஷ்டானம் — தமது செயல்)*

# ஏழாம் பத்து

## I. இறைவனின் குணம் — பிராபகத்வம் (வியத்தகு சக்தி உடையன் — சக்தி என்னும் குணம்)

எம்பெருமான் எண்ணிறந்த ஆச்சரியமான குணங்களை உடையவன்

"எண்ணிலாப் பெருமாயனே" (7.1.1)

பிரமன்,திருமால், உருத்திரன் எனும் மூன்று மூர்த்தியுமாயிருந்து ராஜசம், சத்துவம், தாமசம் எனும் முக்குணங்களினையும் பெற்று, படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்பவன்.

"குணங்கள் கொண்ட மூர்த்தி ஓர் மூமுவராய்ப் படைத்து
அளித்துக் கெடுக்கும்". (7.1.11)

அவர் அவர்களுடைய அளவுகளை நினைந்து, அவர் அவர்கள் பொறுக்கக்கூடிய அளவிலே, இடத்திற்கேற்ப பகுதிப்பட்ட இன்ப துன்பங்களைப் படைத்தவன்.

"பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய்" (7.2.7)

கல்பம்தோறும் திருஉருவம், திருப்பெயர் செயல்கள் என்னும் இவற்றை வேறாக மாற்றிக் கொண்டு உலகத்தைக் காப்பாற்றுபவன்.

"ஊழிதோறு ஊழி உருவும் பேரும் செய்கையும் வேறவன்"
வையம் காக்கும்" (7.3.11)

ஆச்சரியமான செயல்களை உடையவன்

"மாயா வாமனனே" (7.8.7)

ஆன்மாக்கள்பல; அத்தனையும் காத்த சர்வேச்வரன் பல்வேறு உபாயங்களைச் சிந்தை செய்கிறவனாகிறான்.

"உள்ளப் பல்யோகு செய்தி" (7.8.4)

இப்படிப்பல வகையான ஆச்சரியமான சக்திகளை உடையவன்.

"எண்ணிலாக் குணங்கள் பால துன்பம் வேறவன் மாயாப் பல்யோகு
செய்தி என்னும் ஆச்சர்ய சக்தி யோகத்தாலே" (சூத் 225)

### புல், எறும்பு, பகைவனுக்கும் அருளும் வல்லமை படைத்தவன்:

இறைவனை அடைய மேற்கொள்ளும் முயற்சி சிறிதாகப் போதல், கிடைத்தற்கரிய பேறு என்பதனால் அரிய முயற்சியாக இருத்தல், செய்த பாவங்களின் மிகுதி இன்ன பிறவற்றால் இறைவனை அடைய முடியாமல் இருந்தாலும் அப்படி முயல்பவர்க்கும் ஸ்ரீ வைகுண்டத்தைத் தந்தருளும் தகைமையன். அறிவே இல்லாத விலங்குகள், பறவைகள், புல் பூண்டு முதலிய தாவரங்கள், விரோதிகள், இப்படி யாவராயினும், எதுவாயினும், உய்ய அருள் செய்யும் சர்வ வல்லமை படைத்தவன்

"புற்பா முதலாப்புல் லெறும்பு ஆதி ஒன்று இன்றியே
நற்பாலுக்கு உய்த்தனன்" (7.5.1)

"சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் திருவடி
தாட்பால் அடைந்த" (7.5.3)

"புற்பா எறும்பு பகைவனுக்கும் ஆக்க
வல்ல சர்வ சக்தி" (சூத் 225)

(புற்பா — புல் + பா; பா என்பது பொருள்; புல்லாகிற பொருள்)

## II. இறைவன் ஆழ்வார்க்குச் செய்த திருவருளும், அத்திருவருளால் ஆழ்வார் அடைந்த தன்மையும்

### முதல் திருப்பதிகம்: சரீரமாகிய சும்மாடு:

எம்பெருமான் திருவடிகளை விட்டுச் சிறிதும் அகலமாட்டேன் என்று சரணாகதி அடைந்த ஆழ்வார்க்குத் திருவடிகள் கிட்டாதபடி இந்திரியங்களின் நடுவே இவ்வுடம்பை வைத்து நலிவிக்கின்றான்.

"அன்புருகி நிற்குமது நிற்கச் சுமடு தந்தாய்
வன்பரங்கள் எடுத்து ஐவர் திசைவலித்து எற்றுகின்றனர்" (7.1.10)

(சுமடு — சரீரமாகிய சும்மாடு: வன்பரங்கள் — வலிய விஷயங்களாகிய பாரங்கள்)

### 2ஆம் திருப்பதிகம்; காதலியின் நிலை:

இறைவன் மேல் ஆசை மீதூர்ந்து பகல் என்றும் தெரியாது இரவு என்றும் தெரியாது ஒரு காதலியின் நிலையை ஆழ்வார் அடைகிறார். பெருமான் திருக்கண் வளர்கிற திருக்கோயில் திருவாசலிலே சென்று திருந்தாயர் முறையிடுகின்ற அளவுக்குப் பெருத்த துன்பம் அடைகிறார்.

"கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்; ......
செங்கயல் பாய்நீர் திருவரங்கத்தாய்!
இவள் திறத்து என் செய்கின்றாயே" (7.2.1.)

"கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில்
திருவாசலிலே முறைகெட்ட கேள்வி ஆக்கி" (சூத் 225)

### 3ஆம் திருப்பதிகம்: நெஞ்சினாரும் ஒழிந்தார்:

பராங்குச நாயகியின் துயர் மீதூர்கின்றது. அன்னையர், தோழிமார் பக்கத்தில் உள்ள சேரியில் உள்ளவர்கள் அனைவரும் தேற்ற முயல்கின்றனர்.

"நெஞ்சு என் வசத்திலே இல்லை; என் நெஞ்சினை என்னால் காக்க முடியவில்லை. எம்பெருமானின் சங்கு சக்கரத் திருமேனியைக் கண்டு நாணத்தையும் நிறையையும் இழந்துவிட்டேன். என்னுடைய மாமையை மீட்பதற்காகச் சென்ற நெஞ்சினாரும் அங்கேயே தங்கிவிட்டார். அப்படித் தங்கி விட்டாரைக் கூவ வல்லாரும் இல்லை; இனி யாரைக் கொண்டு என்ன சாதிப்பேன்? எனவே அன்னைமீர் என்னைத் தேற்ற வேண்டா" என்று புலம்புகிறாள்.

"தோழிமீர்கள்! அன்னையர்காள்! அயற்சேரியீர்கள்! நான் இத்தனி
நெஞ்சம் காக்கமாட்டேன் என் வசம் அன்று இது" (7.3.2.)
"நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் தோழீ!
நாணும் நிறையும் இழந்ததுவே" (7.3.5)
"இழந்த எம்மாமைத் திறத்துப் போன என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்
உழந்து இனி யாரைக் கொண்டுடன் உசாகோ" (7.3.4)
"பேரெயிற்கே புக்குஎன் நெஞ்சம் நாடிப் பேர்த்து வர எங்கும் காண மாட்டேன்;
ஆரை இனி இங்கு உடையம் தோழீ! என் நெஞ்சம் கூவ வல்லாருமில்லை;
ஆரை இனிக் கொண்டு என் சாதிக்கிறது?
என் நெஞ்சம் கண்டதுவே கண்டேனே" (7.3.7)
"அன்னையர்காள்! என்னைத் தேற்றவேண்டா" (7.3.9)

"தேற்ற ஒண்ணாதபடி தோற்று" (சூத் 225)

## 4ஆம் திருப்பதிகம்; எம்பெருமான் வெற்றிச் செயல்கள்:

இப்படி பிரிவுத் துன்பத்தினாலே மிகவும் தளர்ந்திருக்கிற ஆழ்வாரைத் தரிப்பிக்க எம்பெருமான் உலகளத்தல், திருப்பாற்கடல் கடைதல், வராக அவதாரம், மகாப் பிரளயத்திலே காத்தல், பாரதப்போர், இரணியனைக் கொல்லுதல், இராமசரிதம், வாணன் திண்தோள்களைக் கொண்டமை, உலகப் படைப்பு, கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் காத்தல் ஆகிய வெற்றிச் செயல்களைக் காட்டிக் கொடுக்க, ஆழ்வாரும் மிக்க நேசர் ஆனார்.

"ஒன்றி நிற்கப் பண்ணின பலாதாநம்" (சூத் 225)

(பலாதாநம் — வலிமை பெறுதல்)

## 5ஆம் திருப்பதிகம்: இராமாவதாரம்:

"எம்பெருமான் இராமபிரானாய் அவதரித்து அயோத்தி வாழ்மக்கள் — புல், எறும்பு — அனைவரையும் நன்னெறிக்கு உய்த்த நம்பி அல்லனோ?

"கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ?
புற்பா முதலாப்புல்லெறும்பு ஆதி ஒன்று இன்றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே" (7.5.1)

"மக்களை உய்விக்க அவதாரங்கள் பல எடுத்து அருள் பாலிக்கும் எம்பெருமானின் எளிமைதான் என்னே! பிரியம் தான் என்னே! ஹிதம் தான் என்னே! இதனை அறியாது மக்கள் வீணாகிப் போகிறார்கள். என்று மீண்டும் இரங்குகிறார்.

"மற்றும் கற்பார் இழவிலே சுவறி" (சூத் 225)

(சுவறி — சோர்ந்து போய்)

## 6ஆம் திருப்பதிகம்: காரணனாக இருத்தல் முதலிய அருட்செயல்கள்:

ஒரு துணையும் இன்றி, "உலக காரணனாக இருதல் முதலிய அவனுடைய செயல்களைச் சொல்லிப் பாராட்டுகிறார்.

"பாமரு மூவுலகும் படைத்த பற்பநாபாவோ!" (7.6.1)

"பழைய தனிமை கூப்பீடு தலை எடுத்து" (சூத் 225)

**7ஆம் திருப்பதிகம்: இறைவனுடைய உறுப்புகளை எண்ணி வருந்துதல்:**

எம்பெருமானின் ஒவ்வொரு உறுப்பாக ஆழ்வார் நினைவுக்கு வந்து துன்புறுத்தலாயிற்று. இப்படி எடுப்பும்,சாய்ப்புமாக அவர் துன்பம் மாறி மாறி வந்தது. வெற்றிச் செயல்களைக் காட்டித் தரிப்பித்த போது தலை சாய்ந்தது. மீளவும் கூப்பிடும்போது தலை எடுத்தது.

"ஆழவும் தாமரை நாள் மலர்போல் வந்து தோன்றும் கண்ணீர்" (7.7.1)

"சூழவும் பகைமுகம் செய்ய
எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடக்க" (சூத் 225)

(சூழவும் — நான்கு பக்கங்களிலும்; பகை — பகைவர்கள்; முகம் செய்ய — தோன்றி நலிய; எடுப்பு — எழுதல்; கிலேசம் — துன்பம்)

**8ஆம் திருப்பதிகம்: இறைவன், ஆழ்வார், இருபக்கலும், குறை இல்லை:**

உதவி செய்கிறவனிடத்தில் குறை இருக்கலாம். (உபாயதோஷம்); அல்லது உதவி பெறுகிறவனிடத்தில் குறை இருக்கலாம் (அதிகார தோஷம்) இங்கு இறைவனும் குறையற்றவன்; ஆழ்வாரும் குறையற்றவர்;

எம்பெருமான் தீ, நீர், நிலம், ஆகாயம், காற்று, தாய், தந்தை, மற்றும் எல்லாமும் அவனே; எனவே, அவனிடம் ஏதும் குறை இல்லை; முழுமையானவன்.

"தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்த் தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் நீயாய் நீ நின்றவாறு" (7.8.1)

ஆழ்வாருடைய பாசங்களை நீக்கி விட்டான். முழுமையாகவும் அடிமையாக்கிக் கொண்டான். அதனால் ஆழ்வார் பக்கமும் குறைவில்லை. "இத்தனையும் ஆனபிறகு, என்னை ஏன் இவ்வுலகில் வைத்திருக்கிறாய்?" என்கிறார் ஆழ்வார்.

"பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டிட்டுநீ
வாசமலர்த் தண்துழாய்முடி மாயவனே! அருளாய்
காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய்ப் பின்னும் நீ
மாயங்கள் செய்து வைத்தி; இவை என்ன மயக்குக்களே" (7.8.5)

(என்னை உனக்கே அறக்கொண்டிட்டு — என்னை உனக்கே அடிமையாகக் கொண்டு; காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய் — சரீரமும் ஆத்துமாவுமாய்; பிறப்பு இறப்புகளுமாய்)

"உபாய அதிகார தோஷம் ஒழிய,
மாயங்கள் செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க" (சூத் 225)

(வைசித்திரி — ஆச்சரியங்கள்)

### 9ஆம் திருப்பதிகம்: என்னால் தன்னை இன்கவி பாடும் வைகுந்தநாதன்:

ஆழ்வாரை வினை காரணமாக இவ்வுலகில் இருக்கச் செய்யவில்லை. எம்பெருமானுக்கே உள்ள விருப்பத்தினால் தனக்குத் தகுதியான கவிகளைப் பாடிக் கொண்டு இருக்கச் செய்தான்.

"என்றைக்கு என்னை உய்யக் கொண்டு போகிய
அன்றைக்கு அன்று என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை
இன்தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்
நின்ற என் சோதியை என் சொல்லி நிற்பனோ? (7.9.1)
"என் சொல்லால் யான் சொன்ன இன்கவி என்பித்துத்
தன் சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்" (7.9.2)
"ஆம்முதல்வன் இவன் என்று தன்தேற்றி என் நாமுதல் வந்து
புகுந்து நல் இன்கவி தூ முதல் பத்தர்க்குத் தான் தன்னைச்
சொன்ன என் வாய்முதல் அப்பனை என்று மறப்பனோ" (7.9.3)

(ஆம் முதல்வன் — கவிக்கு முதல்வன் ஆம் இவன்)

"ஐச்சமாக இருத்தி உறக்கொண்ட ஸ்வபர
பிரயோஜனத்தை அருளிச் செய்ய" (சூத் 225)

(ஐச்சமாக — இச்சை காரணமாக; உறக்கொண்ட — தனக்குத் தகுதியான கவிகளைப் பாடிக் கொண்ட; ஸ்வபர பிரயோஜனம் — தனக்கும் உலகுக்கும் பயன் கருதி)

### என்ன கைம்மாறு செய்வது?

வியாசர், பராசரர், வால்மீகி, முதலிய மகரிஷிகளும் முதலாழ்வார்களும் இருக்க, தம்மைக் கொண்டு கவி பாடுவித்த உபகாரத்தை நினைத்து மகிழ்கிறார். அதற்குக் கைம்மாறாக ஆன்மாவைக் கொடுக்கலாம் என்றால் அதுவும் அவன் தந்ததே அன்றோ?

"என் சொல்லி நிற்பனோ"
"என் சொல்லி எந்நாள் பார்விண் நீர் இறப்பு
எதிர் எதுவும் என்கிற உபகாரஸ்மிருதியோடே" (சூத் 225)

(உபகார ஸ்மிருதி — உதவியை நினைத்துச் செயற்படல்)

### 10ஆம் திருப்பதிகம்: பரமபதமும் வேண்டா நிலை:

இராமபிரான் தன் வரலாற்றை பிராட்டி இல்லாமல் தனியே கேட்டான். அதுபோல அல்லாமல் பெரிய பிராட்டியாரோடு நிலத்தேவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளிலே இருக்கையிலே திருவாறன்விளைப்பதியிலே திருவாய்மொழியினை கேட்பிக்கச் செய்தார். பரமபதத்திலும் விருப்பம் இல்லாதவராய்த் திருவாய்மொழி கேட்பிப்பது ஒன்றிலேயே ஆழ்வார் மனம் வைத்திருந்தார்.

"இன்பம் பயக்க எழில் மலர்மாதரும் தானும் இவ்வேழுலகை
இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" (7.10.1)
"நிலத்தேவர் குழு வணங்கும் சிந்தைமகிழ் திருவாறன்விளை" (7.10.10)

"தன் சரிதை கேள்வி ஆகாமல், இன்பம் பயக்க
இருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாகக்
கானகோஷ்டியையும் தேவபிரான் அறியமறந்தவர்" *(சூத் 225)*

*(சாமகானம் பாடுவோரையும் எம்பெருமான் மறந்துவிடுதல்)*

## III. ஆழ்வார் உபதேசம்

### திவ்வியதேசமே பேறு:

"பிரபத்தி நெறியில் ஊன்றிநிற்கும் அடியார்கட்கு எம்பெருமானைக் காட்டிலும் எம்பிரானுடன் தொடர்புடைய திருவாறன்விளைத் திருப்பதியே எல்லை நிலம்; அத்திவ்விய தேசமே பேறு. அங்கு எழுந்தருளியிருக்கின்றவனே வழி; அவனையே சரண் புகுங்கள் என்கிறார்.

*"நீணகரமதுவே மலர்ச் சோலைகள் சூழ்திருவாறன்விளை*
*நீணகரத்துறைகின்ற பிரான் சரண் அன்றி மற்றொன்று இலமே" (7.10.7)*

"சரமோபாய பரரானார்க்கு நீணகரம் அது;
துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலம்;
உள்ளித் தொழுமின் என்று பிராப்பிய சாதன அவதியைப்
பிரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்" *(சூத் 225)*

*(பிராப்பியசாதன அவதி — அடையத்தக்க பொருளின் கருவியின் எல்லை)*

# எட்டாம் பத்து

## I. இறைவனுடைய குணம் — சத்யகாமத்வம்

(எப்பொழுதும் உள்ளனவான பொருள்களை உடையனாய் இருத்தல்)

*சத்யகாமத்வம்:*

தேவிமார், அமரர், இடம், இனிய பொருள்கள், கருவிகள், ஆகியவற்றை எப்பொழுதும் உடையவன்.

*"தேவிமாராவார் திருமகள் பூமி, ஏவ மற்று அமரர் ஆட்செய்வார்*
*மேவியஉலகம் மூன்று அவை ஆட்சி" (8.1.1)*

*"தேவிமார் பணியா நேர்பட்ட நல்ல கோட்பாடு*
*என்னும்படி சக்தியாலே நித்தியமாகக் கல்பித்த*
*பத்நீ பரிஜன ஆதிகளை உடைய சத்யகாமன்" (சூத் 226)*

## II. இறைவன் ஆழ்வார்க்குச் செய்தஉதவி:

*முதல் திருப்பதிகம்: கவிபாடும் திறம் மறந்த நிலை:*

ஆழ்வார் எம்பெருமானைக் கவிபாடும் சொல்திறம் மறந்து, பகவானுடைய அனுபவம் கிடைக்கவில்லையே என்று கலங்குகிறார்.

*"காணுமாறு அருளாய் என்று என்றே கலங்கி" (8.1.2)*

*"கொண்ட வாக்விருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும்" (சூத் 226)*

(வாக்விருத்தி — சொற்களால் செய்யும் தொண்டு)

*சத்யகாமத்வத்திலே சந்தேகமும், அச்சமும்:*

எம்பெருமான் அடியார்கட்குப் பரதந்திரன் என்பதிலும், எல்லாப் பொருள்களையும் தனக்குச் சரீரமாக உடையவன் என்பதிலும் சந்தேகம் வந்துவிடுகிறது.

*"சிறந்த நின்தன்மை அதுஇதுஉது என்று*
*அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" (8.1.7)*

*"சங்கையும்" (சூத் 226)*

இவ்வுலக வாழ்வை நினைத்தலால் அச்சமும் வருகின்றது.

*"நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்" (8.1.9)*

நரகம் — உலக வாழ்வு

*"அச்சமும் தீர" (சூத் 226)*

*கவிபாடச் செய்த உபகாரம்:*

ஆழ்வார்க்கு நேர்ந்த கலக்கம், ஐயம், அச்சம் ஆகியன தீர்க்க அவரைத் தரிப்பிக்க எம்பெருமான் நினைத்தான். அதற்காக ஆழ்வாரைக் கவி

பாடச் செய்த உபகாரத்தை நினைப்பித்தான். அதற்குப் பிரதி உபகாரம் செய்யவேண்டி ஆழ்வார் நினைந்தார்.

"தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத் தந்த பேருதவி" (8.1.10)

"தலைசிறப்பத் தந்த அதில் கிருதஜ்ஞதா
பல பிரதியுபகாரமாக" (சூத் 226)

(கிருதஜ்ஞதா — நன்றியறிதல்)

ஆத்ம நிவேதனம்:

அரசர்களில் தலைவனான ஜனகராஜன் தனது திருமகளான சிதாப்பிராட்டியைக் கன்யாதானம் செய்து கொடுத்தது போல, நன்றியறிதலைத் தெரிவிக்க ஆழ்வார் தமது ஆன்மாவினை அவனது திருவடிகளுக்குச் சமர்ப்பித்தார்.

"உதவிக் கைம்மாறு என் உயிர் என்ன உற்று எண்ணில்
அதுவும் மற்று ஆங்கவன் தன்னது" (7.9.10)

"பேருதவிக் கைம்மாறு, தோள்களை ஆரத்தழுவி
என்உயிரை அறவிலை செய்தனன்" (8.1.10)

"வேந்தர் தலைவன் கன்யகாதானம் போலே,
ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே" (சூத் 226)

முதல் திருப்பதிகம்: ஆன்ம நிவேதனத்திற்குப் பின்பு எம்பெருமான் மேலும் விளங்கி ஒளி பெற்றார்:

ஜனகரால் கொடுக்கப்பெற்ற சீதாப் பிராட்டியாரைப் பெற்றதனால் ராமபிரான் மேலும் விளங்கி அழகுற்றார். அதுபோல ஆழ்வார் தமது ஆன்மாவை எம்பெருமானுக்கு நிவேதனம் செய்யப் பேரொளி பெற்று நூறாகப் பல்கி விரிந்தான்.

"தோள்கள் ஆயிரத்தாய்! முடிகள் ஆயிரத்தாய்!
துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய்!
தாள்கள் ஆயிரத்தாய்! பேர்கள் ஆயிரத்தாய்" (8.1.10)

"அதீவ விளங்கிப் பணைத்து" (சூத் 226)

2ஆம் திருப்பதிகம்: பாசம் விட்டு நீங்குதல்:

சீதாப்பிராட்டி ஸ்ரீ ராமபிரான் கைப்பிடித்தலும் அன்பின் மேலீட்டினால் பிறப்பிடமான மிதிலையை நினைத்தும் பார்க்கவில்லை. அதுபோல ஆழ்வாரும் எம்பெருமானின் திருவடிகள் கிட்டியதும் உண்டான பக்தியினாலே பாசங்களை விட்டு நீங்கினார்.

"பாதம் அடைவதன் பாசத்தாலே மற்றவர் பாசங்கள் முற்றவிட்டு" (8.2.11)

"ஜன்ம பாசம் விட்டு" (சூத் 226)

3ஆம் திருப்பதிகம்: அழகில் மயங்கிப் பிரிந்து வாடுதல்:

பிராட்டி பெருமானுடைய வடிவழகினைக் கண்டு வாசல்வரை சென்று மங்களாசாசனம் செய்தார். இவரும் அவன் அழகினைப் பரிந்து பாடினார்.

*"ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்"* *(8.3.3)*

*"ஆத்வாரம் ஆளும் ஆளார் என்று பரிந்து"* *(சூத் 226)*

*(ஆத்வாரம் — வாசலளவும்)*

### *4ஆம் திருப்பதிகம்: அச்சம் கெட்டு அனுபவித்தல்:*

*பிராட்டி பெருமானுடைய வீரம் முதலியவற்றை நினைந்து அச்சம் கெட்டு, பெருமாளோடு கூடி அனுபவித்தாள். இவரும் அச்சம் கெட்டு பெருமாளை அனுபவித்தார்.*

*"அமர்ந்த மாயோனை முக்கண் அம்மானை நான்முகனை அமர்ந்தேனே" (8.4.10)*

### *5ஆம் திருப்பதிகம்: பிரிவில் உலர்ந்து போதல்:*

*பிரிவு நிலையில் பிராட்டி, அருள் இல்லாதவரும் இரங்க வேண்டும்படியான நிலையை அடைந்தாள். இவரும் அவனைக் காண ஆசைப்பட்டுத் திசைகள் தோறும் கூப்பிட்டுக் கண்ணும் வாயும் நீர்ப்பசையற்று உலர்ந்து போனார்.*

*"காண வாராய் என்று கண்ணும் வாயும் துவர்ந்து"* *(8.5.2)*

*"பிரிவில் கிருபணதசையாகத் துவரும்"* *(சூத் 226)*

*(கிருபணதசையாக — பொறுக்க முடியாத நிலையாக)*

### *அன்பு வளர்தல்:*

*குணங்களைக் கண்ட காரணத்தாலே பிராட்டி பக்கல் பெருமாளுக்கு அன்பு வளர்ந்தாற்போன்று இவ்வாழ்வார் அளவில் இவர் பண்புகளால் எம்பெருமானுக்கு அன்பு வளர்ந்தது.*

*"சீதா குணங்களாலே பிரீதி வர்த்தித்து"* *(சூத் 226)*

### *6ஆம் திருப்பதிகம்: நினைக்கும்தோறும் தித்திப்பான்:*

*பெருமான் எப்போதும் பிராட்டி நெஞ்சிற்கு இனிதாக இருப்பான். அதுபோல் ஆழ்வார் நினைக்கும்தோறும் இனிப்புடையவனாய் அவர் திருவுள்ளத்தில் நித்தியவாசம் செய்தான்.*

*"உருவுகரந்து உள்ளும் தோறும் தித்திப்பான்"* *(8.6.3)*

*"தித்திக்க உள்ளே உறைந்து" கண்டு கொண்டிருந்து"* *(சூத் 226)*

### *7ஆம் திருப்பதிகம்: தேவபோகங்களை அனுபவித்தல்:*

*பிராட்டி பிரிந்த நிலையிலும், அயோத்தியில் வாழ்ந்த தெய்வ போகங்களை நினைவுபடுத்திக் கொண்டு இருந்தாள். அதுபோல, ஆழ்வாரும் ஈடுபட்டுப் பேசும்படி தேவபோகங்களை அனுபவிப்பித்தான்.*

*"செவ்வாய் முறுவலோடு எனது உள்ளத்து*
*இருந்த அவ்வாய் அன்றி யான் அறியேன் மற்றருளே"* *(8.7.7)*

*"அமானுஷ போகம் ஆக்கினவன்"* *(சூத் 226)*

மூன்று கண்டங்களை நீக்குதல்; "வளவேழ் உலகின்" *(1.5.1)*, "பொருமா நீள்படை *(1.10.1)*", "அந்தாமத்து அன்பு" *(2.5.1)*.

ஆகிய மூன்று திருப்பதிகங்களிலும் ஆழ்வார் தம்மைத் தாழ்வாக நினைத்துப் பாடிஅருளியிருக்கிறார். இம்மூன்று கண்டங்களையும் இறைவன் அவ்வப்போது நீக்கியிருக்கிறான்.

"அருவினையேன்" *(1.5.1)*
"பாவியேன்" *(1.10.1)*
"என்முடிவு காணாதே" *(2.5.1)*
**"மூன்று தத்துக்குப் பிழைத்த"** ***(சூத் 226)***

*(மூன்று தத்து — மூன்று கண்டங்கள்)*

**மயக்கம் நீக்குதல்:**

மேலே சொன்ன மூன்று கண்டங்களினாலும் ஆழ்வார் தன்னைவிட்டு நீங்கி விட்டால் என் செய்வது என்ற கவலையோடு எம்பெருமான் "இதுவந்தேறி: ஆன்மாவின் உண்மைத் தன்மை வேறு என்று வேறுபடுத்தி இம்மயக்கத்தை நீக்குகிறான்.

"அருள்தான் இனியான் அறியேன் அவன் என்னுள்
இருள்தான் அற வீற்றிருந்தான்" *(8.7.3)*
**"அருவினை நோய் மறுவலிடாமல்"** ***(சூத் 226)***

*(மறுவலிடாமல் — திரும்பி வந்து தாக்காமல்)*

**ஆன்ம சொருபத்தைக் காட்டல்:**

ஆழ்வாரின் ஆன்மா தன்னை விட்டுப் பிரிக்க முடியாதது என்றும் தனக்கு எல்லை இல்லாத இனிமை தருவது என்றும் எம்பெருமான் உணர்த்துகிறான்.

"தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து" *(8.8.4)*
**"சிறியேன் என்றதின் பெருமையைக் காட்ட"** ***(சூத் 226)***

**III ஆழ்வாருடைய தன்மையும் அவர் செய்த உபதேசமும்**

**"கருமாணிக்க மலைமேல்" 9ஆம் திருப்பதிகம்: ஆன்மா உடம்பினின்று வேறுபட்டது:**

ஆன்மா சரீரத்தினின்றும் வேறுபட்டது; இந்திரியங்களினின்றும் வேறுபட்டது; ஞான ஆனந்த மயமானது.

**"சென்று சென்று பரம்பரமாய்"**
**"தேஹாதிகளில் பரமாய்"** ***(சூத் 226)***

*(பரம் — வேறுபட்டது)*

பிராட்டியைப் போன்று ஆன்மா அவனுக்கே உரியது

"மற்றோர் உபாயம் என் இவள் அம்தண் துழாய் கமழ்தல்" *(8.9.10)*
**"நின்று நினைக்கில் லக்ஷ்மி துல்யமாய்"** ***(சூத் 226)***

*(துல்யம் — ஒப்பு)*

**"நெடுமாற்கு அடிமை" 10ஆம் திருப்பதிகம்: அடியார்க்கு அடிமை செய்தல்:**

"சர்வேச்வரனின் அடியவர்களின் கீழ்த்தொண்டாற்றுபவர்கள் எனக்குத் தலைவர்கள்; அவர்களுக்கே நானும் என் குடிகளும் காலமெல்லாம் அடிமை செய்து வாழவேண்டும்" என்கிறார்.

"மாகாயாம்
பூக்கொள் மேனி நான்குதோள் பொன்னாழிக்கை என்னம்மான்
நீக்கமிலா அடியார் தம்மடியார் அடியார் அடியார் எம்
கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே —
ஊழிதோறு ஊழிவாய்க்க தமியேற்கு" (8.10.10)

"அவர்க்கே குடிகள் ஆம் பரதந்திர ஸ்வரூபத்தை
அநுசந்தித்தவர்" (சூத் 226)

**6ஆம் திருப்பதிகம்: ஆறும், பேறும் ஒன்றே:**

ஆழ்வார்க்கு ஆறும், பேறும் ஒன்றே (உபாயமும், உபேயமும்)

ஸ்ரீவைஷ்ணவர்களும் அவ்வாறே கருதுகின்றனர். இறைவனை உபாயமாகவும், அவனுடைய திவ்ய தேசத்தை உபேயமாகவும் இருகரையாக அலையமாட்டார்கள்.

"ஸ்வ சாதன சாத்யஸ்தர்"
இரு கரையர் ஆகாமல்" (சூத் 226)

உபேயமாக உபதேசித்த அர்ச்சாவதார பூமியே — திருக்கடித்தானமே துக்கத்தைப் போக்குவது. எனவே அதுவே உபாயமும் ஆகும். எனவே மண்ணவரும் வானவரும் நண்ணும் திருக்கடித்தானத்தையே உள்ளத்துக் குறிக் கொள்மின் என்று ஆழ்வார் உபதேசிக்கிறார்.

"திருக்கடித்தானத்தை ஏத்தநில்லா; குறிக்கொள்மின்; இடரே" (8.6.6)

"மண்ணவரும் வானவரும் நண்ணும்
அத்தையே குறிக்கொள்மின் என்று
ப்ராப்ய ஏகபரர் ஆக்குகிறார் எட்டாம்பத்தில்" (சூத் 226)

# ஒன்பதாம் பத்து

## I. இறைவனின் குணம் — ஆபத்சகத்வம்
## (ஆபத்தைப் போக்குவதற்குத் துணைவனாக இருத்தல்)

*வயிற்றில் வைத்துக் காத்தல்:*

எல்லா உலகங்களையும், ஆத்மாக்களையும் பிரளயம் கொள்ளாமல் திருவயிற்றிலே வைத்துக் காப்பாற்றிய உபகாரத்தை உடையவன்.

"எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான்" *(9.1.1)*

"எண் திசையும்" *(சூத் 227)*

*படைத்தல் முதலாயின:*

அவனே பரந்த உலகம் முழுதினையும் படைத்தும் ஒரு காலத்தில் அண்டச்சுவர்களிலிருந்து பெயர்த்து எடுத்தும் ஒரு காலத்தில் உமிழ்ந்தும், ஒரு காலத்தில் அளந்தும் எல்லா உலகங்களையும் பாதுகாக்கின்ற மாயோன் ஆவான்.

"அகல் இடம் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து
அளந்து எங்கும் அளிக்கின்ற ஆயன் மாயோன்" *(9.9.2)*

"அகல்ஞாலம் எங்கும் அளிக்கின்ற
ஆலின்மேல் என்னும்படி" *(சூத் 227)*

*பிரளயத்தில் காத்தல்:*

பரமபதம் அழிவில்லாது இன்பமயமாய் இருக்க, இவ்வுலகத்தினைப் பிரளயம் முதலிய அழிவினின்றும் காப்பவன் ஆகிறான்.

"நித்யபோக பாதலீலா உபகரணத்தின் லயாதிகளைப்
போக்கும் ஆபத்சகன்" *(சூத் 227)*

(நித்யபோகம் — பரமபதம்; பாதலீலா உபகரணம் — பரமபதத்தை நோக்கக் கால்கூறான பரப்போடு இருக்கின்ற, விளையாட்டுக்கு உபகரணமாக இருக்கின்ற இந்த அண்டங்களிடம், லய ஆதிகள் — பிரளயம் முதலானவைகள்)

## 2. இறைவன் ஆழ்வார்க்குச் செய்த உபகாரம்: இறைவனது கலவியில் இன்பம்:

இறைவன் தம்மோடு கலந்த கலவியிலே ஆழ்வார் ஈடுபட்டவராய்ப் பேசுகிறார். அந்த ஆனந்தத்தை ஆழ்வாரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நாம் பட்ட நன்மையை நித்திய சூரிகளும் பட்டிருப்பார்களோ என்று வியக்கிறார்.

"ஆர் உயிர்பட்டது, எனது உயிர்பட்டது". *(9.6.9)*

"ஆருயிர் என்னப் படுத்தின ஆத்ம தர்சன பலம்" *(சூத் 227)*

(ஆத்மதர்சனபலம் — ஆன்மாவின் தன்மையினை உள்ளவாறே கண்ட பலம்)

*2ஆம் திருப்பதிகம்: இன்ப அனுபவம்:*

அந்த இன்ப அனுபவத்தால், ஆழ்வார் பிரலாபிக்கிறார், "திருப்பவளவாய் திறந்து ஒரு வார்த்தை அருளிச் செய்யவேண்டும். திருக்கண்களாலே குளிர நோக்கி அருள வேண்டும். திருவடிகளை என்தலை மேல் வைத்தருள வேண்டும். எம்பெருமானும் பிராட்டியும் கூட எழுந்தருளி இருக்கின்ற இருப்பை எனக்குக் காட்டியருள வேண்டும். என் முன்னே நாலடி உலாவி அருளவேண்டும். நீ என்னை அங்கு அழைத்தல் வேண்டும் அல்லது நீ இங்கு வந்தருள வேண்டும் உன் புன்முறுவல் காணவேண்டும்" என்றெல்லாம் பிரலாபிக்கிறார்.

*"வாய்திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காய்" (9.2.1)*
*"நின்பாத பங்கயமே தலைக்கு அணியாய்" (9.2.2)*
*"உன் தாமரை மங்கையும் நீயும்*
*இடம்கொள் மூவுலகும் தொழஇருந்தருளாய்" (9.2.3)*
*"நிலமகள் பிடிக்கு மெல் அடியைக்*
*கொடுவினையேனும் பிடிக்க நீ ஒரு நாள்*
*கூவுதல் வருதல் செய்யாயே" (9.2.10)*

"அனுபவ பரம்பரையைக்
கூவுதல் வருதல் என்று முடுகவிட்டு" *(சூத் 227)*

*3ஆம் திருப்பதிகம்: இராப்பகல் பாராது தரிசிக்க விழைதல்:*

சர்வேச்வரன் நித்யவாசம் செய்யும் பரமபதத்தை இரவு, பகல் வேறுபாடு இன்றிக் கண்டு அனுபவிக்க ஆழ்வார் விரும்புகிறார்.

*"மாகம் வைகுந்தம் காண்பதற்கு என்மனம்*
*ஏகம் எண்ணும் இராப்பகல் இன்றியே" (9.3.7)*

(மாகம் — பரமபதம்; ஏகம் — எப்போதும்)

"ஏகம் எண்ணி" *(சூத் 227)*

சங்கு சக்கரங்களைத் தாங்கியவனாய், பெரிய பிராட்டியாருடன் எம்பெருமான் எழுந்தருளும் காட்சியைக் காண விழைகிறார்.

*"காணக் கருதும் என்கண்ணே" (9.4.1)*

"காணக் கருதி" *(சூத் 227)*

*5ஆம் திருப்பதிகம்: குயில், அன்றில் நோக்கிப் புலம்பல்:*

எம்பெருமானை நினைப்பூட்டும் பொருள்களைக் காணும் பொழுதெல்லாம் ஆழ்வார் மனம் துன்புறுகின்றது.

*"இன் உயிர்ச் சேவலும் நீரும் கூவிக் கொண்டு இங்கு எத்தனை*
*என் உயிர் நோவ மிழற்றேன்மின் குயிற் பேடைகாள்" (9.5.1)*

"எழநண்ணி" *(சூத் 227)*

*6ஆம் திருப்பதிகம்: உருகுமால் நெஞ்சம்:*

அவனுடைய பண்புகளை நினைக்கும் தோறும் நெஞ்சு உருகுகிறது.

*"திருக்காட்கரை மருவிய மாயன்தன் மாயம்*
*நினைதொறும் நெஞ்சம் உருகுமால்" (9.6.1)*

"நினைதொறும் உருகி" (சூத் 227)

**7ஆம் திருப்பதிகம்: முறைகேடாகப் பேசுதல்:**

பிரிவாற்றாமையால் முறைகேடாகப் பேசுகிறார்.

"தமரோடு அங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீர்" (9.7.2)

"அலற்றி" (சூத் 227)

**8ஆம் திருப்பதிகம்: ஒருமித்த சிந்தனை:**

இரு வேறுபட்ட மனம் இன்றி ஒருமித்த சிந்தையர் ஆனார்

"கவை இல் மனம் இன்றி, கண்ணீர்கள் கலுழ்வன்" (9.8.3)

"கவையில் மனம் இன்றி" (சூத் 227)

**9ஆம் திருப்பதிகம்: பிரிவாற்றாமை:**

பிரிவாற்றாமையால் ஸ்ரீ பரதாழ்வார் பதினான்கு ஆண்டுகள் பொறுத்து இருந்தார். பதினான்கு ஆண்டுகள் நிறைந்தபின் அவர் ஒருநாள் கூடப் பொறுக்கவில்லை. சீதாப்பிராட்டி பத்து மாதங்கள் பொறுத்து இருந்தார். அதன்பின்னர் "ஒரு மாதத்திற்கு மேல் பிழைத்து இருக்க மாட்டேன்" என்று அனுமனிடம் பிராட்டி கூறினாள். கோபிமார்கள் ஒரு பகல் (பசுமேய்க்கப் பகலில் கண்ணன் போய் மீளும் வரை) பொறுத்து இருந்தனர். பராங்குச நாயகியான ஆழ்வாரோ ஒரு கணம் பொறுத்து இரார்.

"அசுரர்கள் கூற்றம் வாரான்
இனி இருந்து என் உயிர் காக்குமாறு என்" (9.9.2)

"பதினாலாண்டு பத்துமாசம் ஒருபகல் பொறுத்தவர்கள்
ஒரு மாச தின சந்த்யையில் படுமது
க்ஷணத்திலேயாக இரங்குகிற துவரைக்கு ஈடாக" (சூத் 227)

(பதினாலாண்டு பொறுத்தவர் ஒரு தினத்தில்படுமது — பரதாழ்வார்; பத்து மாசம் பொறுத்தவர் ஒரு மாசம் படுமது — சீதாப்பிராட்டி; ஒரு பகல் பொறுத்தவர்கள் ஒரு சந்த்யையில் படுமது — கோபிமார்கள்; க்ஷணத்திலேயாக இரங்கினவர் — ஆழ்வார் நாயகி; துவரைக்கு — பதற்றத்துக்கு)

**மன்மதனுடைய பத்து நிலைகள்:**

பார்த்தலால் உண்டாகும் ஆசை; பின் அதன் நினைவு; அதே நினைவு; உறக்கம் இன்மை; இளைத்தல்; மற்றைப் பொருள்களில் வெறுப்பு; நாணமின்மை, பித்துப்பிடித்தது போல் இருத்தல், மூர்ச்சை, சாக்காடு என்றும் இவை மன்மதனுடைய பத்து நிலைகள்.

"வேட்கை, ஒரு தலை உள்ளுதல், மெலிதல்
ஆக்கம் செப்பல், நாணுவரை இறத்தல்,
நோக்குவ எல்லாம் அவையே போறல்,
மறத்தல், மயக்கம், சாக்காடு என்று அச்
சிறப்புடை மரபினவைகளவென மொழிப" (தொல்)

காமுகர்கட்குப் பத்தாவது தசையில் மரணம் என்பது போல, பத்தாம்பத்தில் (பேறு) பரமபக்தி பிறக்கிறது.

"சரணமாகும் தனதாள் அடைந்தார்க்கு எல்லாம்
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" (9.10.5)

"இனிப் பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு" (சூத் 227)

(பத்து அவத்தைகளில் ஒன்றான, இறுதி உள்ள மரண அவத்தையிலே பேறு).

### 10ஆம் திருப்பதிகம்: சரீர முடிவிலே பேறு:

பரதாழ்வாருக்கு பதினான்கு ஆண்டுகள் பிரிவுக்குப்பின் நாளிட்டுக் கொடுத்தது போல நீட்சி ஆகாமல், ஆண்டாள் நாச்சியாருக்கு "நாளை வதுவை மணம் என்று நாள் இட்டுக்" கொடுத்தது போல, மரணமானால் பேறு என்று நாளிட்டுக் கொடுத்தமைக்கு ஆழ்வார் மகிழ்கின்றார்.

"நாட்கடலாகத் தம்பிக்கு இட்டது ஆகாமல்
நாளை வதுவை போலே நாள் இடப்பெற்றவர்" (சூத் 227)

### 3. ஆழ்வார் உபதேசம்: முதல் திருப்பதிகம்:

ஆழ்வார் தம் நல்லுரைகளைக் கேட்டுத் திருந்தாதவர்களும் திருந்தி இறைவனை அடையவேண்டும் என்ற பரம கருணையாலே "கொண்ட பெண்டிர்" என்ற உபதேசம் செய்தருளுகிறார்.

### மனைவி, மக்கள், உண்மை உறவினர் அல்லர்:

மனைவி, மக்கள் முதலாயினோர் நேரில் கண்டபோது அன்புடையவர் போல் நடிப்பவர்களே ஒழிய உண்மையான உறவினர்கள் அல்லர், பிரளய ஆபத்திலே துணையாக இருந்த சர்வேச்வரனே மேலான உறவினன்.

"கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டது அல்லால் காதல் மற்று யாதும் இல்லை
எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரான்
தொண்டரோமாய் உய்யல் அல்லால் இல்லை கண்டீர் துணையே" (9.1.1)

"இம்மட உலகர் கண்டதோடு பட்ட
அபாந்தவ பிரதிசம் பந்தியைக் காட்டி" (சூத் 227)

(அபாந்தவ பிரதி சம்பந்தி — பந்து ஆகாமை)

### செல்வத்தை மட்டுமே நாடும் உறவினர்களை நீங்குமின் !:

தாயாதிகளும், மற்றைய உறவினர்களும் செல்வம் இருக்குமானால் அட்டைகள் போல் உறிஞ்சிச் சுவைப்பர். ஆனால் வறுமை வரும் நேரத்தில், "அந்தோ பாவம்" என்று இரங்கக் கூடமாட்டார். ஆகையால் அவர்கள் காப்பவர் அல்லர். தான் பாதுகாக்கும் தன்மையிலே ஐயம் கொண்டிருப்பவர்களின் ஐயத்தையும் நீக்கி நம்பச் செய்து காக்கும் எளிவந்த பிரான் சர்வேச்வரன் ஒருவனே !

"துணையும் சார்வும் ஆகுவார்போல் சுற்றத்தவர் பிறரும்
அணைய வந்து ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்" (9.1.2)

"அரக்ஷக பிரதி சம்பந்தியைக் காட்டி" (சூத் 227)

(அரக்ஷக பிரதி சம்பந்தி—காப்பவர் ஆகாமை)

**போகம் நீங்கப் பெண்டிரும் நீங்குவர்:**

இன்பத்தைத் தருகின்ற பெண்களோ அந்த இன்பமும், இளமையும், செல்வமும் நீங்கிய பின் வெறுப்பார்கள்.

*"இன்மொழியார் மதுரபோகம் துற்றவரே வைகி:*
*மற்று ஒன்று உறுவர்"* *(9.1.5)*

*(துற்றவர் — இன்பங்களை அனுபவித்தவர்)*

***"அபோக்ய பிரதிசம்பந்தியைக் காட்டி"*** ***(சூத் 227)***

*(அபோக்ய பிரதிசம்பந்தி — இன்பம் ஆகாமை)*

**நிலையான இன்பம் தருபவன்:**

அவனை ஒழிய நிலையான இன்பம் தருவார் வேறொருவரும் இல்லை.

*"இல்லைகண்மீர் இன்பம் அந்தோ"* *(9.1.6)*

***"அசுக பிரதிசம்பந்தியைக் காட்டி"*** ***(சூத் 227)***

*(அசுகபிரதிசம்பந்தி — சுகம் தருபவர் ஆகாமை)*

***அவனே வழி:*** அவனை ஒழியக் காக்கும் பொருள் வேறு ஒன்றும் இல்லை.

*"யாதும் இல்லை மிக்கு அதனில்"* *(9.1.9)*

***"அநுபாய சம்பந்தியைக் காட்டி"*** ***(சூத் 227)***

*(அநுபாய சம்பந்தி — உபாயம் ஆகாமை)*

**சிந்திப்பே அமையும்:**

"இதற்கு மேல் செல்லக்கூடியது ஒன்றும் இல்லை; வேறு வழிகளைத் தேடித்திரிந்து அலைய வேண்டா; பெரிய இவ்வுலகத்திலே உள்ள எல்லா உயிர்கட்கும் இறைவனைப் பற்றிச் சிந்தித்தல் ஒன்றே போதுமானது. சுருங்க உபதேசிக்கத் தக்கதாய்,தனக்கு மேல் ஒன்றும் இல்லாமல் இருப்பதாய், எல்லாரும் செய்தற்குரியதாய், பற்றுதற்கு எளிதாய், உள்ளதும் அதுவே. மேலும் எப்பொழுதும் உள்ளது; பூரண அறிவினது; சர்வசக்தி உடையது; அபாயம் இல்லாதது; ஆன்மாவிற்குத் தக்கது; வேறு துணை வேண்டாதது.

*"மற்றொன்று இல்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்து எவ்வுயிர்க்கும்*
*சிற்றவேண்டா சிந்திப்பே அமையும்"* *(9.1.7)*
*"கண்ணன் அல்லால் இல்லை கண்மீர் சரணே"* *(9.1.9)*

***"மற்றொன்று கண்ணன் என்கிற வைகல்***
***வாழ்தலான சித்தோபாயம்"*** ***(சூத் 227)***

உயிர் உள்ளவரை அனுபவிக்க வேண்டிய உபாயம், அவனே பற்றுக்கோடாக அமைதலே ஆகும்.

**பத்தாம் திருப்பதிகம்: பக்தி நெறி:**

"அவனே பேறு" என்ற நினைப்பு — வைராக்கியம் ஆழமாக வர

எம்பெருமானுக்கு மலர் தூவுதல், நீரிட்டு வழிபாடு ஆற்றுதல் முதலான பக்தி முறைகளைப் பின்பற்றி வழிபடுவேன் என்கிறார்.

"மலரிட்டு நீர் இறைஞ்சுமின்" *(10.10.3)*

"அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலை நண்ணி
காலை மாலை விண்டு தேனை வாடா மலர் இட்டு.
அன்பராம் சாங்க பக்தி" *(சூத் 227)*

(சாங்க பக்தி — அங்கங்களுடன் கூடிய பக்தி)

## *பிரபத்தி நெறி:*

மலரிட்டு நீர் இறைத்து வழிபடும் பக்தி நெறியும் சிரமமானது எனச் சிலர் நினைக்கலாம். அப்படிப்பட்டவர்களுக்குப் பிரபத்தியை ஆழ்வார் உபதேசிக்கிறார். எம்பெருமானைத் தவிர எல்லாவற்றையும் விடுதலே பிரபத்தி. "எதுவுமே தன் செயல் அன்று என்றிருக்கும் இது எளிமையானது; எல்லார்க்கும் உரியது; உடலைவிட்டு உயிர் நீங்குகையில் பலன் தருவது.

"சரணமாகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்
மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்". *(9.10.5)*

"அதில் அசக்தர்க்குத் தாள் அடையும் பிரபத்தி".*(சூத் 227)*

## *சொல்லேபோதும்:*

வழிசிறிது; பலன் பெரிது; தடைகளும் பல.இப்படிப்பட்ட பிரபத்தி நெறி எவ்வாறு பலன் கொடுக்கும் என்று ஐயம் வந்தால், "திருக்கண்ணபுரம்" என்று போகிற போக்கிலே சொன்னாலே போதும்.

"திருக்கண்ணபுரம்"
சொல்ல நாளும் துயர் பாடுசாராவே" *(9.10.10)*

"அதில் அசக்தர்க்கு உச்சாரண மாத்திரம்" *(சூத் 227)*

## *திருவாய்மொழி பாடுங்கோள்:*

இவற்றுள் யாதுமே முடியவில்லையானால் தாம் இயற்றிய திருவாய்மொழியை அன்பு மீதூர்ந்து பாடி அவன் திருவடிகளில் விழுந்தால் போதும் என்று முடிக்கிறார்.

"சர்வ உபாய சூந்யர்க்கு இப்பத்தும் பாடி இடும்
தொண்டன் என்று" *(சூத் 227)*

மக்களுடைய ருசிக்கு ஏற்றவாறு கண்ணன் கீதையிலே உபதேசித்தது போல, நம்மாழ்வாரும் ஒவ்வொரு வகையான மக்களின் தரத்துக்கு ஏற்றபடி உபதேசிக்கிறார்.

"கீதாசார்யனைப் போலே அதிகார அநுகுணம்
நெறியெல்லாம் உரைக்கிறார் ஒன்பதாம் பத்தில்" *(சூத் 227)*

# பத்தாம் பத்து

பத்தாம் பத்தினைப் பன்னிரண்டு பிரிவுகளாகப் பிரிக்கவேண்டும். முதல் ஐந்து பிரிவுகளும் ஒருவகை, பின்னுள்ள ஏழு பிரிவுகளும் ஒரு வகை.

## I. இறைவனின் குணம் — ஆர்த்திஹரத்வம்

ஆர்த்திஹரத்வம்: அடியார்களுடைய ஆபத்தினைப் போக்குதற்குத் தகுதியாக வேண்டினபடியெல்லாம் உருவங்களை எம்பெருமான் மேற்கொள்கிறான்.

(பிறவித் துன்பத்தை நீக்குமவனாதல்)

"காமரூபம் கொண்டு எழுந்து அளிப்பான்" *(10.1.10)*

"ஆபத்தில் கொள்ளும் காமரூப கந்த ரூபத்தாலே"

(காமரூபம் — விரும்பத்தக்க அழகிய உருவம்; கந்தம் — மூலம்; காரணம்)

## II. முதல் பதிகம்

### வழித்துணை

### நிலத்தைச் சோதித்துப் பார்த்த கருணை:

அரசகுமாரன் வழிச்செல்லும்போது, வழி நடத்திச் செல்வோன், முன்னதாகச் சென்று நிலத்தைச் சோதித்து, வழியெங்கும் நிழலும், தடாகமும் உண்டு பண்ணுவான். அதுபோல எம்பெருமான் அடியார்களை வழிநடத்திச் செல்ல உலகு அளத்தலைத் தலைக்கீடாகக் கொண்டு நிலத்தைச் சோதித்துப் பார்த்தனன். தன் கால் பதிந்த இடத்தே நிழலும் தடாகமும் செய்தனன்.

"அண்ட மூவுலகு அளந்தவன்" *(10.1.5)*
"அவன் அடிநிழல் தடம்" *(10.1.2)*
"அண்ட மூவுலகும் கால்விழுந்திடத்தே நிழல் தடங்கள்
ஆக்கி அண்ட மூவுலகும் முன்னோடி" *(சூத் 228)*

### இராமாவதாரம்: கிருஷ்ணாவதாரத்தில் வழித்துணையாக அருளிய பாங்கு:

இதற்குமுன் இராமாவதாரத்திலும் கிருஷ்ணாவதாரத்திலும் குகன், சபரி போன்ற (வேடன்) (வேடச்சி) ஜடாயு, (பறவை), சுக்ரீவன் (குரங்கு), வானரசேனை, அயோத்தி மக்கள் (சராசரம்), சிந்தயந்தி என்ற இடைச்சி, ததி பாண்டன் (இடையன்), தயிர்த்தாழி, கூனி, மாலாகாரர் பிணத்தை (வேண்டடிசில் இட்டவர்) விருந்தாகப் படைத்த கண்டாகர்ணன், முனிவர் மனைவிகள், பிரஹ்லாதன் (மகன்), வீடணன் (தம்பி), கஜேந்திரன் (யானை), சுமுகன் (பாம்பு), கோவிந்தசுவாமி (மறையாளன்), மார்க்கண்டேயன் (பெற்றமைந்தன்) ஆகிய பலவகைப்பட்ட

திறத்தாரையும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே தானே வழித்துணையாய் நடத்தியிருக்கின்றான். அதேபோல திருமோகூரில் நின்றருளின காளமேகம் நமக்கும் வழித்துணையாக இருப்பான்.

*"பெருங்கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணையாக்கி" (சூத் 228)*

## III. பசுமேய்க்கப் போகேல்

### *3ஆம் திருப்பதிகம்: பசுமேய்க்கப் போகேல்:*

தமக்குத் துணையான கண்ணபிரான் தம்மைவிட்டு நீங்கக்கூடாது என்பதனால் அவனுக்கு உகப்பான பசுமேய்த்தலுக்குக் கூடப்போகக் கூடாது என்கிறார் ஆழ்வார்.

*"பசுமேய்க்கப் போகேல்" (10.3.9)*

## IV.செய்வனவும், தவிர்வனவும் (தம் நெஞ்சுக்கு உணர்த்தல்)

### *தவிர்வன:*

"அப்பரம்பொருளை நாள் தோறும் அனுபவி! மயக்கம் நீங்கப்பெறு! மனமே கைவிடாதே" என்று நெஞ்சிற்கு அறிவுறுத்துகிறார்.

*"பணி நெஞ்சே நாளும் பரம்பரமனை" (10.4.7)*
*"வாழி என் நெஞ்சே மறவாது வாழ்கண்டாய்" (10.4.8)*
*"மருள் ஒழி மடநெஞ்சே" (10.6.1)*
*"நரகத்தை நகு நெஞ்சே" (10.6.5)*
*"வாழி மனமே கைவிடேல்" (10.7.9)*

*"பணி மறவாது மருள் ஒழி நகு கைவிடேல் என்று" (சூத் 228)*

### செய்வன:

"நமக்கு இப்பேறு திருமலையாலே வந்துற்றது. அத்திருமலையைக் கைவிடாதே" எனக் கூறுகின்றார்.

*"கிருத்ய அகிருத்யங்களை விதித்து" (சூத் 228)*

(கிருத்யம் — செய்யத்தக்கன; அகிருத்யம் — தவிரத்தக்கன)

## V. செய்வன:

*(ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உரைத்தல்)*

### *2ஆம் திருப்பதிகம்:*

ஸ்ரீ வைஷ்ணவர்கள் தம் திருவுள்ளம் போன்று ஆழ்வார்க்கு அடக்கமானவர்கள். அவர்களுக்கு செய்யத் தகுவனவற்றை வெளியிருக்கிறார். ஸ்ரீ வைஷ்ணவர்களை "தொண்டீர் வம்மின்" (10.1.4) என்று அழைத்து,

*"கொண்ட கோயிலை வலம் செய்து இங்கு ஆடுதும் கூத்தே" (10.1.5)*

என்கிறார். இது செய்யத்தக்கது. (கர்த்தவ்யம்)

"எண்ணுமின் எந்தை நாமம்" (10.2.5)

இது நினைக்கத்தக்கது (ஸ்மர்த்தவ்யம்)

"பேசுமின் கூசமின்றி" (10.2.4)

இது பேசத் தக்கது (வக்தவ்யம்)

"நமர்களோ சொல்லக் கேண்மின்" (10.2.6)

இது கேட்கத் தக்கது (சுரோதவ்யம்)

"படமுடை அரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண நடமினோ" (10.2.8)

**"காண்பதற்குச் செல்லுங்கள்" என்றல்:**

இது பார்க்கதக்கதும் (திரஷ்டவ்யம்) செல்லத்தக்கதும் ஆம் (கந்தவ்யம்)

"அனந்தபுர நகர் புகுதும் இன்றே" (10.2.1)

இது வாசம் பண்ணத்தக்கது (வஸ்தவ்யம்). ஆகிய இத்தனையும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆழ்வார் வெளியிடுகின்றார்.

"நெஞ்சுபோல்வாரைத் தொண்டீர் என்று அழைத்து

(1) வலம்செய்து, (2) எண்ணுமின், (3) பேசுமின், (4) கேண்மின், (5) காண்மின், (6) நடமின், (7) புகுதும்

(1) கர்த்தவ்யம், (2) ஸ்மர்த்தவ்யம் (3) வக்தவ்யம் (4) சுரோதவ்யம் (5) திரஷ்டவ்யம் (6) கந்தவ்யம் (7) வஸ்தவ்யம் எல்லாம் வெளியிட்டு" (சூத் 228)

i) **பக்தியோகம்:**

முதலிலே முதற்பத்திலே "பிணக்கற அறுவகைச் சமயமும்" என்ற திருப்பாசுரத்தில் *(1.3.5)*

"வணக்குடைத் தவநெறி" என்ற பக்தி யோகத்தைத் தொடங்கினார். இப்பொழுது நிறைவாகப் பத்தாம் பத்தில்

"சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்" *(10.4.1)* என்று முடிக்கிறார். எனவே இந்நூல் எந்த பக்தியோகத்தில் தொடங்கியதோ (முதற்பத்து *...1.3.5)* அதே பக்தியோகத்தில் நிறைவுறுகின்றது (10ஆம் பத்து *10.4.1)*

ii) ***5ஆம் திருப்பதிகம்:***

**இறைவனை எளிதாக அடையும் தன்மை: திருமந்திரம் சொல்லுதல்: 5ஆம் திருப்பதிகம்:**

திருநாமமான திருமந்திரத்தின் சொல்லையும், பொருளையும் "நாரணம்" என்றும் "நாரணன் எம்மான்" என்றும் எளிதில் உணரும்படி சுருங்க உபதேசிக்கிறார்.

"எண்ணும் திருநாமம்" திண்ணம் நாரணமே" (10.5.1)
"நாரணன் எம்மான்" (10.5.2)

முதல் பாட்டில் நாரணம் என்று திருநாமத்தைச் சொன்னார். இரண்டாம் பாட்டில் அதன் பொருளாகிய (எம்மான்) "எம்முடைய தலைவன்" என்பதனைச் சொன்னார்.

"தன்பெருக்கில் எண்ணும் திருநாமத்தில்
சப்தார்த்தங்களைச் சுருக்கி" (சூத் 228)

**துவயம்:**

"நாராயணன்" என்று சொல்கிறபொழுதே "மாதவன்" என்று இரண்டுமுறை சேர்த்துச் சொன்னாலே துவயம் சொன்னதாகிவிடும்.

(திருமந்திரத்தில் "ஓம்" எனும் பிரணவத்தின் பொருளை விரிப்பது நம: 'பதமும், நாராயண பதமும், இவற்றின் பொருளைத் தெளிவுற விரிப்பது துவயம்)

"மாதவன் என்று என்று ஓதவல்லீரேல்" (10.5.7)

(என்று என்று — இருமுறை)

"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்பது துவயம். இரண்டு வாக்கியங்களால் சொல்லப்பட்டதால் இது துவயம் எனப்பட்டது. இந்தத் துவயத்திலே முதல் வாக்கியத்திலும் இரண்டாம் வாக்கியத்திலும் "ஸ்ரீமத்" என்ற பதம் வருகிறது. அதன் பொருள் பிராட்டியை உடையவன் "மாதவன்" ஆகும். இதனை இரண்டு முறை சொன்னாலே துவயம் சொன்ன பலன் கிடைத்தல்.

"மாதவன் என்று துவயம் ஆக்கி" (சூத் 228)

**மன,மொழி,மெய்களால் வழிபடல்:**

சர்வேச்வரனும் விரைவாகக் கொண்டுபோக விரும்புகிறான். அதற்குள் கேட்கிறவர்களுடைய அறிவிற்குப் புரிவது போலச் சுருங்கச் சொல்லவேண்டும்.

"தாள் வாய் மலரிட்டு நாள்வாய் நாடீரே" (10.5.4)

இது மெய் வழிபாடு.

"பாடீர் அவன் நாமம்" (10.5.5)

இது மொழியால் வழிபடுவது.

"சுனை நல்மலர் இட்டு, நினைமின் நெடியானே" (10.5.10)

இது மனத்தால் வழிபடுவது.

இப்படி மன, மொழி, மெய்களால் வழிபடும் பரந்த வழிபாட்டைச் சுருங்கப் பின்பற்றத் தக்க வகையில் ஆழ்வார் அறிவுறுத்துகிறார்.

"கரணத் திரயப் பிரயோக விருத்தி சம்சாரிகளுக்குக்
கையோலை செய்து" (சூத் 228)

(கரணத் திரய பிரயோக விருத்தி — மனம் வாக்கு காயம் என்னும் முக்கரணங்களைக் கொண்டு செய்யப்படுகின்ற செயல்)

**7ஆம் திருப்பதிகம்**

iii) *சீல குணத்தில் அழுந்தாதீர்:*

அநுபவ கைங்கர்யங்களிலே நிற்கிறவர்களுக்குச் சர்வேச்வரன் சீல குணத்தைக் காட்ட அதனில் அழுந்திப் போகாமல் அவனுக்கு அடிமை செய்யுங்கோள் என்று நெறிப்படுத்துகிறார்.

(*சீலகுணம்* — easy accessibility even to inferiors)

"செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்து ஆட் செய்ம்மின்" (10.7.1)

iv) *மாய ஆக்கை:*

விடத்தக்கதாகிய என்னுடைய இவ்வுடலில் சர்வேச்வரன் புகுகின்றான். "இச்சரீரம் குற்றமுடையது" என்கிறார்.

"என் மாய ஆக்கை இதனுள்புக்கு" (10.7.3)
"மங்கஒட்டு உன்மாமாயை
பொங்கு ஐம்புலனும், பொறி
ஐந்தும், கருமேந்திரியம் ஐந்து, ஐம்பூதம்,
இங்கு இவ்வுயிர், ஏய்பிரகிருதி, மான், ஆங்காரம், மனங்களே" (10.7.10)

இத் திருப்பாசுரத்தில் 25 தத்துவங்கள்கூறப்பட்டுள்ளன.

"தேஹதோஷம் அறிவித்து" (சூத் 228)

இந்தத் தோஷமுடைய சரீரத்தை விடுவிக்கவேண்டும் என்கிறார் ஆழ்வார்.

**8ஆம் திருப்பதிகம்**

v) *மூலப்பகுதியை அழித்தல்:*

இவ்வுலக வாழ்க்கையில் நிற்பதற்குக் காரணம் மூலப்பகுதியாகிய மாயை. அந்த மூலப் பகுதியையே ஆழ்வார் அழிக்கிறார்.

"மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை" (10.8.3)
"மாயையை மடித்து" (சூத் 228)

எம்பெருமானும் ஆழ்வார்க்குப் பரமபதத்தைத் தருவதற்காக ஒருப்பட்டான்.

"வானே தருவான் எனக்காய்" (10.8.5)
"வானே தரக் கருதி" (சூத் 228)

**ஆழ்வாரை அழைத்துக் கொள்வதிலேயே குறி:**

பூவுலகு (லீலாவிபூதி), மேலுலகு (நித்யவிபூதி) எம்பெருமான் இரண்டுக்கும் உடையவன்; இவை தவிர அவன் பார்த்துக் கொண்டிருக்க வேறு உலகம் இல்லை. எனவே அவன் வேறு எண்ணங்களுக்கு இடம் கொடுக்காது, ஆழ்வாரைத் தன்னிடம் அழைத்துச் செல்வதிலேயே குறியாக இருந்தான்.

"கருத்தின் கண் பெரியன்" (10.8.8)

"கருத்தின் கண் பெரியன் ஆனவனை" (சூத் 228)

## அன்று பாராமுகம் ஏன்?

"இன்று இப்படிக் காரணம் இல்லாமல் அடியனை அடிமையாக்கின நீ இத்துணைக் காலம் என்னை அடிமை கொள்ளாதிருந்தது ஏன்" என்று ஆழ்வார் வினவுகிறார்.

"இன்றுஎன்னைப் பொருளாக்கி, தன்னை என்னுள் வைத்தான்;
அன்று என்னைப் புறம்போக புணர்த்தது என் செய்வான்?
குன்று என்னத் திகழ் மாடங்கள் சூழ் திருப் பேரான்
ஒன்று எனக்கு அருள் செய்ய உணர்த்த லுற்றேனே" (10.8.9)

"இன்று அஹேதுமாக ஆதரித்த நீ,
அநாதி அநாதர ஹேது சொல்,
என்று மடியைப் பிடிக்க" (சூத் 228)

(அஹேதுகம் — காரணம் இல்லாமல்; அநாதி அநாதரஹேது — இதற்கு முன்னர் கணக்கிடமுடியாத முற்காலம் எல்லாம் என்னை ஆதரிக்காததற்குக் காரணம்)

## என்னவென்று சொல்வேன்?

ஆழ்வார் கேட்ட இந்தக் கேள்விக்கு விடை கூற எம்பெருமான் திணருகிறார். ஒவ்வொரு பதிலாகச் சொல்லப் பார்க்கிறார்.

### எம்பெருமான்:

நீரே பலமுறை கூறியிருக்கிறபடி, ஐம்புல இன்பங்களில் நீர் ஆசை வைத்ததனால் தான் தொன்று தொட்டு இவ்வுலக வாழ்வில் உழன்று வந்தீர்.

### ஆழ்வார்:

இதோ பாருங்கள்! அந்த ஐம்புலன்களும் உம்மிடம் விருப்பம் இல்லாதவர் உம்மை விட்டு அகன்று போக வேண்டும் என்று நீரே தந்தன அல்லவா? அந்தச் சேற்றிலே நானுமல்லவா மாட்டிக் கொண்டேன்!

"தூராக்குழி தூர்த்து எனை நான் அகன்றிருப்பன்" (5.8.6)
"அற்பசாரங்கள் அவை சுவைத்து அகன்று ஒழித்தேன்" (3.2.6)
"அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்களையும் அவை நன்கறிந்தனன்
அகற்றி என்னையும் நீ அருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய்" (5.7.8)

"இந்த்ரிய கிங்கரராய்க் குழி தூர்த்துச்
சுவைத்து அகன்றீர் என்னில், அவை
யாவரையும் அகற்ற நீ வைத்தவை என்பர்" (சூத் 228)

### எம்பெருமான்:

அப்பா! அவசரப்படாதே! அந்த ஐம்புலன்களுக்கு நீ வசப்பட்ட காரணம் இந்த உடலோடு உனக்குச் சம்பந்தம் இருந்ததனால் தான் அப்பா!

ஆழ்வார்: அதுவும் நீ தந்ததன்றோ?

"அந்நாள் நீ தந்த ஆக்கை" (3.2.1)
"அது நிற்கச் சுமடு தந்தாய் வன்பரங்கள் எடுத்து
ஐவர் திசைவலித்து எற்றுகின்றனர்" (7.1.10)
"அது தேஹ யோகத்தாலே என்னில்,
அந்நாள் நீ தந்த சுமடு என்பர்" (சூத் 228)

(சுமடு — சும்மாடு; இங்கே உடம்பு)

எம்பெருமான்:

அது சரிதான்! அந்தச் சரீர சம்பந்தத்திற்குக் காரணம் தொன்றுதொட்டு நீ செய்து வந்த நல்வினை, தீவினைகள் தாம்! எனவே பதறாதே!

ஆழ்வார்:

என்னது! பதறாதேயா! இந்த நல்வினை தீவினைகளான கர்மங்கள் சிறிது நேரத்தில் கழிக்கப்படக்கூடிய செயல்கள். அவை எல்லாம் உன்னுடைய சீற்ற வடிவமாகவும், அருள் வடிவமாகவும் பலிப்பவை அல்லவா? அக்கருமங்களும் நீ இட்ட வழக்கு அல்லவா?

"துன்பமே தரு துன்ப இன்ப வினைகளாய் அவை
அல்லனாய் உயரநின்றது ஓர் சோதியாய்" (3.6.8)
"முன்செய் முழுவினையாலே என்னில்,
அது துயரமே உற்ற இருவினை
உன்கோவமும் அருளும் என்பர்" (சூத் 228)

எம்பெருமான்:

கொடிய பாவங்கள் எத்தனை செய்தேன் என்றும் நான் செய்த பாவம் அநுபவித்தாலும் மாளாது என்றும் நீரே சொல்லியிருக்கிறீர். அதனால் நல்வினை, தீவினைகளைச் செய்தலும் அவற்றின் பயனை அனுபவித்தலும் உம்மதே!

ஆழ்வார்:

அதுசரி! நீரே இந்த ஆன்மாவில் விரும்பிப் புகுந்தீர்! நல்வினைகள், தீவினைகளான கருமங்கட்கும், அவற்றின் பயன்கட்கும் நீரே தலைவர். அவை எல்லாம் நீர் இட்ட வழக்கு அல்லவா? ஆகையால் கருமங்களைச் செய்கிறவனும், அவற்றின் பலன்களை உண்பவனும் நீரே'.

"ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல்" (4.7.3)
"மதியிலேன் வல்வினையே மாளாதோ" (1.4.3)
"தான் ஆங்காரமாய்ப் புக்குத் தானே தானே ஆனானை" (10.7.11)
"செய்கைப் பயன் உண்பேனும் யானே" (5.6.4)
"கருமமும் கருமபலனும் ஆகிய காரணன்" (3.5.10)

"ஈவிலாத மதியிலேன் என்னும் உம்மதன்றோ கர்த்ருத்வ
போக்த்ருத்வங்கள் என்னில்
ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப்பயன் உண்பேனும்
கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தா என்பர்" *(சூத் 228)*

(கர்த்ருத்வம் — கருத்தாவாக இருக்கும் தன்மை; போக்த்ருத்வம் — அனுபவிக்கின்றவனாக இருக்கும் தன்மை)

### எம்பெருமான்:

நீரே சொன்னபடி, அஞ்ஞானம், அந்யதாஞானம் (திரிபுணர்ச்சி) ஆகிய இரண்டு தன்மைகளையும் காணுகின்றீர். அந்த இரண்டு தன்மைகளும் உமக்கு உண்டாயின அல்லவா?

### ஆழ்வார்:

ஞானமும், அஞ்ஞானமும் நீர் இட்ட வழக்கு. ஆகையால் அஞ்ஞான, அந்யதாஞானங்கள் விளைத்தல் எம் தொழிலோ?

"யானே என்னை அறியகிலாதே யானே
என்தனதே என்றிருந்தேன்" *(2.9.9)*
"மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி" *(3.2.7)*
"அயர்ப்பாய்த் தேற்றமுமாய்" *(7.8.6)*
"மாட்டாத பல சமயமதி கொடுத்தாய்" *(3.1.4)*
"உள்ளம் பேதம் செய்திட்டு உயிர் உண்ட உபாயங்களும்" *(5.10.4)*

### அறிவு இறைவனைப் பற்றாது:

மேலே கூறியவை அல்லாமல் வேறு சில விஷயங்களையும் இறைவன் திருவுள்ளத்தில் நினைக்கலானான். இந்த ஆன்மாவின் அறிவானது யாதானும் ஒன்றைப் பற்றி நிற்கும் தன்மையது. இது இறைவனைப் பற்றாமல் உலகப் பொருள்களைப் பற்றிக் கொள்ளும் தன்மையது. "இது இறைவனைப் பற்றாது இறைவனை விட்டு நீங்கக்கூடிய ஒன்று" இந்த உண்மையை முற்றும் உணர்ந்தவன். இறைவன்.

"யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பு அவிழ்ந்தும்
மீதாவியில் தடுமாறும் உயிர் முன்னமே" *(திருவிரு 95)*
"ஜீவபிரகிருதி சைதந்யம் நீங்கும் விரத ஹேது
என்னும் சர்வஜ்ஞர் இவர்" *(சூத் 228)*

(ஜீவ பிரகிருதி — ஆன்மா, அசித்து இரண்டும்; சைதந்யம் — அறிவு; நீங்கும் விரத ஹேது — யாதானும் பற்றி நீங்கும் விரதம்; சர்வஜ்ஞர் — முற்றும் உணர்ந்த ஞானி)

### இறைவனின் சரீரம் ஆன்மா:

இறைவனின் சரீரம் ஆன்மா, அந்த ஆன்மா தன் சரீர சம்பந்தத்தினால் குற்றங்கள் செய்கிறது. அந்த ஆன்மாவிடத்தில் அன்புள்ள இறைவன் அக்குற்றத்தை நீக்க வேண்டியவன்; இது தன்னுடைய செயல் என இறைவன் உணருகிறான்.

"அகமேனி ஒழியாமே" *(9.7.10)*

"அகமேனியில் அழுக்கு அறுக்கை அபிமானி
கிருத்யம் என்னும் சர்வஜ்ஞர் இவர்" (சூத் 228)

(அகமேனி — ஆன்மா; இறைவனுக்கு அந்தரங்க சரீரமாக இருப்பது; அபிமானி — அபிமானத்தை உடைய இறைவன்; கிருத்யம் — செயல்)

### இறைவனின் சம்பந்தம் இயல்பானது:

இறைவனுக்கு உயிரிடம் உள்ள சம்பந்தம் ஒரு காரணம் பற்றி வந்ததன்று; அது இயல்பானது.

"தான் நல்கும் பந்தம் நிருபாதிகம்
என்னும் சர்வஜ்ஞர் இவர்" (சூத் 228)

(நிபாதிகம் — காரணம் பற்றாது இயல்பானது.)

### அவரவர் நல்வினை தீவினைக்கு ஏற்பப் படைத்தல்:

"நீ உபகாரம் செய்பவன்; இந்த உலகு அழியும் சமயத்திலே அறிவுடைப் பொருள்களையும், அறிவில் பொருள்களையும் பெயர் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி! உருவம் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; அவற்றை எல்லாம் வயிற்றுக்குள் அடக்கிப் படைப்புக் காலத்தே அவரவர் நல்வினை, தீவினைக்கு ஏற்பப் பிரித்துப் படைக்கக் கூடிய ஞானம் முற்றிலும் நிறைந்தவன் நீ".

"பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர்
கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞான மூர்த்தியினாய்" (8.10.7)

"பிணக்கிப் பேதியாத ஞாநாதி வைகல்யம் இல்லை
என்னும் சர்வஜ்ஞர் இவர்" (சூத் 228)

(பிணக்கி—கலந்து; பேதியாத—மாறுபடாத; வைகல்யம்—வேறுபாடு)

"உன்னை அடைவதற்கு நான் செய்கின்ற முயற்சிகளும் பலன்களும் உன்னுடைய அதீனத்தில் (custody) இருக்கின்றன. நீ சர்வ சுதந்தரன். இவ்வுலகம் எல்லாம் அழிகின்ற காலத்தே தேவர்கள் சிவனை அடைகிறார்கள்; சிவன் பிரமனை அடைகிறான்; நீ யாரையும் அடையாதவன்; உனக்கு வேறோர் பற்றுக் கொம்பு இல்லை. எல்லாக் காரியங்களிலும் துணை வேண்டாதவன். அறிவுடைப் பொருள், அறிவில் பொருள் அனைத்தின் சொரூபமும் நீ; அவற்றின் நிலைபேறும் நீ".

"தனிநின்ற சார்விலா மூர்த்தி"
"நாம் தனி நின்ற ஸ்வதந்த்ரர் என்று அவனே
அறிந்தனமே என்றும் சர்வஜ்ஞர் இவர்" (சூத் 228)

### "என் செய்வான் எண்ணினாய்?":

"இப்படிப்பட்ட நீர் வேறு உபாயங்களைக் காட்டி என்னை உம்மிடத்தினின்றும் நீக்கப் பார்க்கிறீரோ? உம்முடைய திருமேனியைக் காட்டி நான் அனுபவிக்கச் செய்வீரோ? அறிவில்லாத என்னை என்ன செய்யப்போகிறீர்? இதனை அருள்வீர்" என்று ஆழ்வார் கேட்க,

இவற்றிற்குப் பதில் கூற இயலாத எம்பெருமான் தலை கவிழ்ந்து நிலத்தைக் கீறி நின்றான்.

"நெறி காட்டி நீக்குதியோ? நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ? மேல்நாள் — அறியோமை
என்செய்வான் எண்ணினாய்? கண்ணனே! ஈதுரையாய்" (பெரிய திரு 6)

"நெறிகாட்டி அருகும் சுவடும் போலே இதுவும்
நிருத்தரம் என்று கவிழ்ந்து நிற்க" *(சூத் 228)*

*(சுவடு—இனிமை; நிருத்தரம்—விடை இல்லாதது)*

(நெறிகாட்டி — வேறு உபாயங்களைக் காட்டி; அருகு—உம் அருகு வருதல்).

"அருகும் சுவடும் தெரிவுணரோம்" *(பெரியதிரு 8)*

vi) ஒன்பதாம் திருப்பதிகம்

*பதில் தெரியாத பகவான் அர்ச்சிராதி நெறி காட்டுதல்:*

திருமணம் முதலிய விசேஷ காலங்களில் சடங்குகளைச் செய்யும் உபாத்தியாயர்க்கு மந்திரம் தோன்றாவிட்டால் மங்கள வாத்தியத்தை முழங்கச் சொல்லி மந்திர ஒலி காதுகளில் விழாமல் பண்ணிவிடுவார். அதுபோல ஆழ்வார் எழுப்பிய வினாக்களுக்குப் பதில் கூற முடியாத நிலையில் எம்பெருமான் அச்சிராதி நெறியைக் காட்டிப் பரமபதத்திற்குச் செல்கிற எழுச்சியைக் காட்டினான்.

"அமந்த்ரஜ்ஞ உத்சவ கோஷம் போலே,
ஏறப்பெறுகிற எழுச்சியைச் சூசிப்பிக்கிற" (சூத் 228)

*(அமந்த்ரஜ்ஞ — மந்திரம் தெரியாதவனுடைய; கோஷம் — ஒலி; எழுச்சி — எழுதல், புறப்படுதல்; சூசிப்பிக்கிற — குறித்துக் காட்டுகிற)*

*எங்கும் சங்கொலி: முரசொலி! வாழ்த்தொலியே!:*

பரமபதத்திற்குச் செல்லும் காலை, மேகங்களும், கடலும் முரசொலி எழுப்பின; எங்கும் கீதங்கள்; காளங்கள் சங்கங்கள் ஒலி; மடந்தையர் வாழ்த்து; தோத்திரஒலி; இவையனைத்தும் கலந்து எழுந்தன.

"சூழ்விசும்பு அணிமுகில் தூரியம் முழக்கின;
ஆழ்கடல் அலைதிரை கையெடுத்து ஆடின" *(10.9.1)*
"கீதங்கள் பாடினர் கின்னரர் கருடர்கள்" *(10.9.5)*
"காளங்கள் வலம்புரி கலந்து எங்கும் இசைத்தனர்" *(10.9.6)*
"வாள்ஒண்கண் மடந்தையர் வாழ்த்தினர்" *(10.9.6)*
"தொடர்ந்து எங்கும் தோத்திரம் சொல்லினர்" *(10.9.7)*

"மேக சமுத்ர பேரீ, கீத, காஹள, சங்கா,
ஆசீஸ், ஸ்துதி கோலாஹலம் வெளிப்பட்டவாறே" (சூத் 228)

*(பேரீ—முரசம்; காஹளம்—எக்காளம்; ஆசி—வாழ்த்து; ஸ்துதி—தோத்திரம்)*

*பரமபதக் காட்சி:*

அர்ச்சிராதி நெறியையும், பரமபதத்திற்குச் செல்லும்போது ஆதி வாஹிகர் செய்யும் உபசாரத்தையும், அங்கு ஆழ்வார்க்குக் கிடைத்த பெருமையையும், அனந்த மயமானதிருமாமணி மண்டபத்தில்

எம்பெருமான் இருப்பையும், அங்கு அடியார் அவன் திருவடித் தாமரைகளைப் பற்றுதலையும் ஆழ்வார்க்கு எம்பெருமான் ஞானக் கண்ணால் காட்டினான்.

## VII பத்தாம் திருப்பதிகம்

### "சாக்ஷாத்கரித்த பரப்பிராப்திக்குப் புற அனுபவம் வேண்டாவா?":

*(சாக்ஷாத்கரித்தல் — ஞானக்கண்ணால் அறிதல்; பரப்பிராப்திக்கு — பரம்பொருளை அடைதற்கு)*

மனத்தாலே ஞானக் கண்ணால் பார்த்தால் போதுமா? புறத்தே பார்க்கும் அனுபவம் வேண்டாவா? எனவே உன் திருவடிகளை என் தலைமேல் சூட்டு. இது என் ஆணை?" என்று ஆழ்வார் கூற, எம்பெருமானும், "நீவிர் அடிமையல்லிரோ? நாம் சொல்வதை நீர் நிறைவேற்றாமல், நீர் ஆணைஇட்டுத் தடுக்கலாமா?" என்று கேட்கிறான்.

"திரு ஆணை நின் ஆணை கண்டாய்" *(10.10.2)*

"தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு
போகாமல் தடுத்துத் திரு ஆணை இட்டு" *(சூத் 228)*

### என் சரீரத்தைக் கண்டு வெறுக்காது அங்கீகரித்தாய்:

"முற்றறிவினனாகிய நீ என்னுடைய முன் செயல்களால் உள்ள தாழ்வினைப் பார்த்துக் கூட வேற்றுமை பாராட்டாது என்னை அங்கீகரித்தாய். நீ வேறு நான் வேறு இல்லை என்று ஆக்கிக் கொண்டாய். அப்படியாக்கிக் கொண்ட பிறகு என் பிழை என்று என்ன இருக்கின்றது? எல்லாம் உன்னதன்றோ?

"நேசம் செய்து உன்னோடு என்னை உயிர்வேறு இன்றி
ஒன்றாகவே கூசம் செய்யாது கொண்டாய்" *(10.10.2)*

"கூசம் செய்யாது *(சூத் 228)*

(கூசாமல் இப்பிழை செய்து)

கொடி கொழுகொம்பு இல்லாது, தரிக்காது. அதுபோல என் ஆன்மா வாழ்வதற்கு நீயன்றி வேறு பொருள் இல்லை. எனக்கு வேறு கதியும் இல்லை. என் காரியமாக, நான் செய்வது எல்லாம் நீ ஏறிட்டுக் கொண்டு, இப்பொழுது உன்னிடமிருந்து என்னைப் பிரித்து உன் குணங்களுக்கு மதிப்பு இல்லாத இவ்வுலகில் என்னைத் தள்ளி நடமாட விட்டுவிட்டாயே! பழி உனக்கன்றோ?

"ஆவிக்கு ஓர் பற்றுக் கொம்பு நின்னலால் அறிகின்றிலேன் யான்" *(10.10.3)*

"எம்பரம் சாதிக்கல் உற்று என்னைப் போர விட்டிட்டாயே" *(10.10.4)*

(என் காரியத்தை நீயே செய்வநாக ஏறிட்டுக் கொண்டு, பின் அதனைச் செய்யாதே அறிவில் பொருளைப் போகடுமாறு போலே போகட்டு விட்டாயே)

"பற்றுக் கொம்பு அற்றகதிகேடு
போரவிட்ட பெரும்பழி" *(சூத் 228)*

### எவ்வழி கொண்டு எப்பேறு பெறுவன் யான்?

"போரவிட்டு விட்டுப் புறம்போய் விட்டால் நான் யாரைக் கொண்டு என் காரியத்தை முடிப்பேன்?

சர்வ சக்தியான நீயே வெறுத்த பின்பு சக்தி இல்லாத நான் எந்த உபாயத்தைக் கொண்டு எந்தப் பேற்றினை அடைவேன்? நீ இல்லாமல் நான் என்று ஒன்று உண்டோ? ஐயகோ! நான் வீணாக அன்றோ போவேன்".

*"போரவிட்டிட்டு என்னை நீ புறம்போக்கல் உற்றால், பின்னையான்*
*யாரைக் கொண்டு எத்தை அந்தோ! எனது என்பது என்?*
*யான் என்பது என்?"* *(10.10.5)*

**"புறம் போனால் வரும் இழவு"** ***(சூத் 228)***

### என்னை முழுமையாக அனுபவி:

"என்னுடைய தாழ்ந்த சரீரத்தையும் ஆன்மாவையும் அனுபவிக்க ஆரம்பித்துவிட்டாய். அவற்றை முற்றுமாக அனுபவியாது பாதியில் விடுவாயா? உண்ட சோற்றில் பாதியில் குறை வைப்பதா?"

*"எனது ஆவியை, இன்னுயிரை மனக்கு ஆராமை மன்னி,*
*உண்டிட்டாய்; இனி உண்டொழியாய்"* *(10.10.6)*

**"உண்டிட்ட முன் தீம்பு"** ***(சூத் 228)***

### பெரிய பிராட்டியின் அடியவன்:

"நான் பெரிய பிராட்டிமேல் அன்பு வைத்தவன். நான் அவரது பரிவாரம் ஆவேன். அது மூலபலம் அன்றோ? அதனால் என்பக்கம் உளதாகும் அன்புக்கு எல்லை உண்டோ?

*"கோல மலர்ப் பாவைக்கு அன்பு ஆகிய என் அன்பேயோ!" (10.10.7)*

**"அன்பு வளர்ந்த அடிஉரம்"** ***(சூத் 228)***

*(அடிஉரம் — மூலபலம்)*

### உயிர் உறவு:

"எனக்கு உயிரான உன்னைப் பெற்று இனி விட்டு விடுவேனா? உயிரை விட்டு உடல் தான் தரிக்குமோ?"

*"பெற்று இனிப் போக்குவனோ உன்னை என் தனிப் பேருயிரை" (10.10.8)*

**"உயிர் உறவு"** ***(சூத் 228)***

### மூன்றுதத்துவங்களையும் விடப் பரந்த ஆழ்வாரின் அன்பைக் குளப்படியாக்கும் இறைவனின் அவா:

மக்களுக்கு போக மோட்சங்களை விளைத்துக் கொள்ளலாம் நிலமான மூலப்பகுதி மிகப்பரந்தது. (மூலப்பிரகிருதி — அசித்து) அதனினும் பரந்தது எதுவெனில் ஞானம்எனும் குணத்தால் வியாபித்து மலர்ந்த ஒளி உருவமான ஆத்மா ஆகும். (ஆன்மா சொரூபம் — சித்து)

அதனினும் பரந்தது (ஈச்வரன்) ஞான ஆனந்தமாகிய ஈசுவர சொருபம். இந்த மூன்றையும் சிறிதாக்குவது ஆழ்வாரின் பக்தியாகும். ஆழ்வாரின் பக்தியைக் குளப்படியாக்குவது இறைவன் ஆழ்வாரை அடைய வேண்டும் என்று கொண்ட விருப்பம் ஆகும்.

(குளப்படி— மாட்டின் காலின் குளம்பு அடி) வைத்த பள்ளத்தில் தங்கும் நீர்

"சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவுஇல் பெரும் பாழேயோ
சூழ்ந்து அதனிற் பெரிய பர நன்மலர்ச் சோதியோ!
சூழ்ந்து அதனிற் பெரியசுடர் ஞான இன்பமேயோ!
சூழ்ந்து அதனில் பெரிய என் அவா அறச் சூழ்ந்தாயே" (10.10.10)

ஹரி என்ற தன் திருப்பெயருக்கு ஏறப ஆழ்வாரின் எல்லாத் துன்பங்களையும் அழித்து எல்லாரும் அறியும்படி பிரகாசிப்பித்தான்.

"அவா அற சூழ் அரியை" (10.10.11)

"பேரவா குளப்படியாம்படி, கடல் போன்ற
ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை
ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம்பத்தில்" (சூத் 228)

# காலம் தாழ்த்திய வீடுபேறு

ஆழ்வார் எம்பெருமானைச் சரணம் அடைந்த பொழுதே எம்பெருமான் விரோதிகளானவற்றை நீக்கித் தன்னிடம் அவரை அடைவிக்காமல், இத்துணைக்காலம் அவரை இவ்வுலகில் வைத்திருந்த காரணம் யாது?

**உலகமக்கள் திருந்தவே!:**

இவ்வுலக மக்கள் திருந்த வேண்டுமே என்ற பரம கருணையோடு மக்களைப் படைத்தான். ஆனால் உலக மக்கள் திருந்தவில்லை. எம்பெருமான் பல அவதாரங்கள் எடுத்தான். அவற்றாலும் மக்கள் திருந்தவில்லை. "நம்மாழ்வாருடைய உபதேசத்தாலாவது திருந்தமாட்டார்களா? அவரைப் போலவே எம்பெருமான் திருப்பெயரைக் கூறிக் கரையேற மாட்டார்களா?" என்ற காருண்ய நோக்கினால் ஆழ்வாரை விட்டுவைத்தான்.

"ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய
பேரும் தார்களுமே பிதற்ற" (6.7.2)

(தார் — மாலை)

உறாமையோடே உற்றேன் ஆக்காது
ஒழிந்தது, நாடு திருந்த" (சூத் 229)

**பிரபத்திநெறியைக் கண்டு மக்கள் அஞ்சி விலகாதிருக்க:**

பிரபத்தி செய்த உடனே முத்தராயிருந்தால், உலகமக்கள் எல்லாம் 'பிரபத்தி' என்றாலே ஏதோ நச்சுப் பொய்கை அதில் வசம் ஆனால் முத்தராகிவிடுவர் என அஞ்சி இந்நெறியைப் பின்பற்றாமல் போகலாம்.

"நச்சுப் பொய்கை ஆகாமைக்கு" (சூத் 229)

**திருவாய்மொழி நிறைவுபெற:**

ஆழ்வார் அருளத் தொடங்கிய திருவாய்மொழி முற்றுப் பெறவேண்டும் என எம்பெருமான் விரும்பினான்.

"பிரபந்தம் தலைக்கட்ட" (சூத் 229)

**ஆழ்வாரைச் சரீரத்தோடு அனுபவிக்க:**

வேரினைச் சூடுபவர்கள் அதன் வாசனையில் உள்ள விருப்பத்தால் அதிலுள்ள மண்ணைத் தட்டமாட்டார்கள். மண் இருக்க வாசனை நீடிக்கும். அதுபோல ஆழ்வாரின் பக்தி, ஞானம் ஆகியவற்றை அவருடைய சரீரத்தோடு .வைத்து அனுபவிக்க எம்பெருமான் விரும்பினான்.

### பிரபத்தி நிறைவுபெற:

எல்லையற்ற துன்பத்தால் தான் பிரபத்தி நிறைவுபெறும். எம்பெருமானைக் காணமுடியவில்லையே, காணமுடியவில்லையே என்று பலமுறை புலம்பி மனம் நொந்தால்தான் பிரபத்தி முழுமையாகும். உடனே வீடுபேறு தந்தால் துன்பம் இருக்காது. எனவே வீடுபேற்றுக்கு வேண்டிய காலத்தை நீட்டித்தான். இதுதான் தலையாய காரணம் ஆகும்.

"எந்நாள் யான் உன்னை இனிவந்து கூடுவனே" (3.2.1)
"ஆவி காப்பார் இனியார்" (5.4.2)
"தரியேன் இனி"
"உண்டிட்டாய் இனி உண்டொழியாய்" (10.106)

"வேர் சூடுவார் மண்பற்றுப் போலே
இனி இனி என்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தி.
அதிகார பூர்த்திக்கு என்னுமது முக்கியம். (சூத் 229)

(இனி இனி என்று இருபதின்கால் — இனி, இனி என்று இருபது இடத்தில் ஆழ்வார் இறைவனைக் கூடாமைக்காக வருந்துதல்)

# பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி

எம்பெருமானைக் அகக் கண்ணான மனத்தால் கண்ட காட்சியினைப் பத்துப் பாசுரங்களில் கூறுகிறார்.

*"என் கண்ணனை நான் கண்டேனே" (2.8.10)*

*(பிற பாசுரங்கள்: (1.9.9), (10.8.8), (3.2.10), (4.7.7), (5.7.5), (6.3.1), (5.8.1), (9.4.8), (10.4.9), (10.8.8))*

"கமலக்கண்ணன்" என்று தொடங்கிக் "கண்ணுள் நின்று இறுதி 'கண்டேன்' என்ற பத்தும் உட்கண்ணாலேயாய்" *(சூத் 230)*

புறக்கண்களால் எம்பெருமானைக் காண ஆசைப்பட்ட பாடல்கள் இருபது ஆகும்.

"கைய பொன்னாழி வெண்சங் கொடு
காண்பான் அவாவுவன் நான்" (திருவிரு 84)

*(ஏனைய பத்தொன்பது பாசுரங்கள்: 1.5.7; 2.4.2; 3.2.8; 3.8.7; 3.8.8; 4.7.1; 4.7.9; 4.7.10; 5.8.4; 5.8.9; 5.9.5; 6.9.4; 6.9.6; 8.1.1; 8.5.1; 8.5.6; 8.5.10; 9.4.1; 10.8.7;)*

"காண்பான் அவாவுதல் அதில் இரட்டி" *(சூத் 230)*

*(காண்பான் அவாவுதல்" என்ற பாசுரம் தொடங்கி 20 பாசுரங்கள்)*

உள் அனுபவம் ஒருபுறம் இருக்க, வெளி அனுபவத்திலேயும் விருப்பம் இருத்தலால் இது பரஞானத்தை உள்ளடக்கிய பரபக்தி ஆகும்.

"கண்டு களிப்ப அளவும்
பரஜ்ஞான கர்ப்ப பரபக்தி" *(சூத் 230)*

**பரஜ்ஞானம்:**

அர்ச்சிராதி நெறியிலே பரமபதத்திற்குச் சென்று பகவானுடைய சொருபம் முதலியவற்றைப் பரிபூரணமாகத் தானும் அனுபவித்துக் கொண்டு இருக்கிற நித்திய சூரிகள் கூட்டத்தில் கூடியிருத்தலே பரஞானம் ஆகும். இதனைக் கூறுவது பத்தாம் பத்தில் ஒன்பதாவது திருவாய்மொழியில் உள்ள பத்துப் பாசுரங்கள் ஆகும்.

"அந்தமில் இன்பத்து அடியாரோடு இருந்தமை" *(10.9.11)*

"இருந்தமை என்றது பூர்ண பரஜ்ஞானம்" *(சூத் 231)*

**பரமபக்தி:**

அந்தமில் பேரின்பத்து அடியாரோடு இருத்தல் மனத்தளவில் கிடைக்கின்ற அனுபவம். அதே அனுபவம் புறத்தேயும் கிடைக்க வேண்டும் என்று ஆழ்வார் பெரிதும் வேட்கையுறுகிறார். அந்த வேட்கையினால் தரிக்க முடியாதவராய்ப் பிரிவுத் துன்பம் மீதூர, பலவாறாகக் கூறுகிறார். இவ்வாறு பக்தியினுடைய முடிந்த நிலமே பரமபக்தி.

"முடிந்தஅவா இல் அந்தாதி இப்பத்து
அறிந்தார் பிறந்தார் உயர்ந்ததே" *(10.10.11)*

(முடிந்த அவா — பரமபக்தி)

"முடிந்த அவா என்றது பரமபக்தி" (சூத் 232)

**மூன்று நிலைகள்:**

எம்பெருமானைக் கூடுதலும், பிரிதலுமே இன்ப துன்பங்களாம் படியான பரபக்தியானது ஞான அவஸ்தை; எம்பெருமானுடைய சொரூப, ரூப, குண விபூதிகளை மிகத் தெளிவாக அறிகிற பரஞானமானது தரிசன அவஸ்தை; அப்படி அறிந்த எம்பெருமானை அப்போதே அனுபவிக்க விரும்பி அது நடக்காவிடில் உயிரே முடிந்து போம்படியான பரமபக்தி பிராப்தி அவஸ்தை.

"இவை ஜ்ஞாந தரிசன ப்ராப்தி அவஸ்தைகள்" (சூத் 233)

**திருவாய்மொழியின் திரண்ட கருத்து:**

பிறப்பு, இறப்புகட்குக் காரணமான அஞ்ஞானத்தைப் போக்குவதான ஞானத்தின் நிறைவினை ஞானம் முதலான குணங்கள் நிறைந்தவனான பகவான் கொடுத்தான். அந்தப் பகவான் யாதொரு காரணமும் இல்லாமல் புரிந்த திருவருளால் இவ்வுலக வாழ்வினை நீங்கி மோட்சத்தை அடைதலே இப்பிரபந்தத்தின் ஒன்றான கருத்துப் பொருள்.

"அவித்யா நிவர்த்தக ஜ்ஞாந பூர்த்தி—
ப்ரத பகவத் பிராசாதாத் மோக்ஷ லாபம் என்கை,
'மயர்வற, வீடுபெற்ற என்ற பிரபந்த ஐகார்த்தியம்" (சூத் 234)

(அவித்யா — அஞ்ஞானம்; அறிவின்மை; நிவர்த்தகம் — போக்க வல்லதான. ஞானபூர்த்தி — தத்துவ ஞானத்தின் நிறைவு. ப்ரத — கொடுத்த; அருளின.பகவத் பிரசாதாத் — பகவானுடைய கிருபையினாலே. மோக்ஷலாபம் — மோக்ஷத்திறுடைய நன்மை. ஐகார்த்தியம் — ஒரே பொருளாக இருக்கும் தன்மை)

**ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்**

# சூத்திரங்கள் 219 – 228

### சூத்திரம் 219

பரபரனாய் நின்ற வளவேழ் வைப்பாம் அவையுள் உம்பர் வானவர் அதிபதி, மயர் வற மன்னி மனம் வைக்கத் திருத்தி, மறக்கும் என்று நல்கி விடாதே மன்ன; அயர்ப்பிலன் அறுத்தேன் என்சொல்லி மறப்பனோ என்னும்படி தத்வஜ்ஞரானவர், சுடரடி எம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானும் என்கிற ஸஹ்ருதய அநுபவம் சம்சாரிகளுக்கும் ஆம்படி வீடுமின் என்று தியாஜ்ய உபாதேய தோஷ குண பரித்யாக சமர்ப்பண கிரமத்தை சாலம்பந மந்திரமாக உபதேசித்து, எளிதாக அவதரித்துப் பிழைகளைச் சகித்துப் புரை அறக்கலந்து அல்பசந்துஷ்டனாய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர்புரையத் தன்னை நியமித்துப்போகத்தைச் சாத்மிப்பித்து, பக்தி கணனைகளுக்கு ஒக்க வருமவனுடைய சேவைக்கு எளிமையும் இனிமையும் உண்டு; தொழுதால் அரும்பயனாய தரும்; உத்யோகத்தே வினைகளும் மாளும்; அவன் உரைத்த மார்க்கத்தே நின்று, இருபசை மலமற உணர்வுகொண்டு நலம்செய்வது என்று, தாம் மயர்வற மதிநலம் அருளி பஜநத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்,

### சூத்திரம் 220

சோராத மூவா வேர்முதலாய் உலகம்படைத்தவன் என்கிற சித் அசித் த்ரய த்ரிவித காரணமானவன், அறியாதன அறிவிக்க, உள்ளம்தேறி, தூமனம் மருளில் என்னும் ஞானபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடி வாட, உலராமல் ஆவி சேர்ந்து சிக்கெனப் புகுந்து, சம்பந்திகளும் சேர்தல் மாறினர் என்ன வாழ்வித்து, உபகரிக்கிற நீந்தும் கெடலில் எம் மா வீட்டை உபய அநுகுணமாக்கினவர், ஆச்ரயணீயனுக்குப் பூர்வ(ம்) உக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற சகலபல பிரதத்வ காரணத்வ சேஷசாயித்வ ஸ்ரீய:பதித்வ சௌலப்யாதிகளைத் 'திண்ணன், அணைவது' என்று வெளியிட்டு, 'கள்வா, தீர்த்தன்' என்று வசந பிரத்யக்ஷங்களும் காட்டி, 'புலன் ஐந்து' என்று சம்ஸார மோக்ஷ சாதந துக்க ஆநந்தரசம் முன்னாக விதிக்கிற அந்தர்கதகுண உபாசநத்தை, மதித்துப் பெருக்கி மூழ்கி அழுந்திக் கீழ்மை வலம் சூதும் செய்து இளமை கெடாமல் செய்யும் க்ஷேத்ரவாச சங்கீர்த்தந அஞ்சலி பிரதக்ஷிண கதி சிந்தநாதி அங்க யுக்தமாக்குகிறார் இரண்டாம்பத்தில்.

### சூத்திரம் 221

முழுதுமாய் எங்கணும் ஒழிவற அருவாகி நின்று தோய்விலன் ஆம் சர்வ வியாபகன் தீர்ந்த அடியார்களைத் தாளிணைக்கீழ்க் கொள்ளும் தன் படிக்கும், நீ தந்த மாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அலமருகின்றேன் வேரற அரிந்து எந்நாள் எங்கு வந்து தலைப்பெய்வன்

என்று கழித்துப் புகும் தம் காதலுக்கும் சத்ருசமாக, கண்டுகொள் என்னும் ஊனமில் மோக்ஷ பலமான முடிச்சோதியில் அநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று, அவச்சேதம் அற்ற அடிமை செய்யவேண்டும்படி சர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து, சொல்லிப்பாடி ஏத்திப் பிதற்றி எழுந்தும் பறந்தும் துள்ளிக் குனித்துத் தடுகுட்டக் கும்பிடு நட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்து நையும் பிரீதி உகள, தம் அடியார் என்ன உடன்கூடும் சாத்யம் வளர, பைகொள் பாம்புபோலே இந்த்ரிய விருத்தி நியமம் அற, பாட வந்த கவி அன்றிக்கே படைத்தான் சுலோகக் கிருத்தாய், குறை முட்டுப் பிரிவு இடர் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வு கேடுகள் இன்றி அம்ருதாநந்த மக்நரானவர் 'செய்ய தாமரைக் கண்ணன், அமரர் குலமுதல்' என்று அஞ்சாதபடி எளிவரும் இணைவனாம் என்றவை பரத்வமாம் படி 'அவனாகும்' சௌலப்ய காஷ்டையைக் காட்டி, வழியைத் தருமவன் நிற்க, இழியக் கருதுவது என்னாவது' வேண்டிற்றெல்லாம் தரும், தன்னாகவே கொள்ளும், கவி சொல்ல வம்மின் என்று முக்த ஐச்வர்யத்தை முன்னிட்டு ச்வவிருத்தியை மாற்றி ஸ்வ விருத்தியிலே மூட்டுகிறார் மூன்றாம் பத்தில்.

## சூத்திரம் *222*

"ஈசனை ஈசன் ஈசன்பால் என்ன ஏர்கொள் வானத்தும் ஆயே என்கிற வியாப்தி நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் சர்வநியந்தா", ஒழிவில் காலத்துக்குச் சேர, பூர்வபோகங்களை ஓதும் மால் எய்தின சாபலத்துக்குச் சேரச் சமகாலமாக்கி, போதால் வணங்காமை தீர்த்த பிரணயித்வத்திலே காதல் மையல் ஏறிய பித்தாய், தேச தூரத்துக்குக் கூவியும் கொள்ளாய் என்றது தீர, கண்ட சதிரையும், ஒரு நிலமாகக் காட்ட, வீவில் இன்பம் கூட்டினை என்று முக்த போக மாநச பிராப்தி பலமான தேவதாந்தர ஆத்ம ஆத்மீய லோகயாத்ர ஐச்வர்ய அக்ஷரங்களில் வைராக்கியம், உன்னித்து உயிர் உடம்பினால் கொடு உலகம் வேட்கை எல்லாம் ஒழிந்தேன் என்ன உடையரானவர், ஒரு நாயகம் என்று ராஜ்ய ஸ்வர்க்க ஆத்மா அநுபவ அல்ப அஸ்திரத்வ சாவதிகத்வாதிகளையும், ஆடுகள் இறைச்சி கருஞ்செஞ்சோறு ஆகிய நித்தியங்களாலே இளந்தெய்வத்துக்கு இழைத்து ஆடும் நிஹீதையையும், பேச நின்ற தேவதா அஜ்ஞாந அசக்கி சாபேக்ஷத்வாதிகளையும், இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டி மத தமோ நிஷ்டதையையும் சொல்லி, ஓடிக் கண்டீர்; கண்டும் தெளிய கில்லீர்; அறிந்தோடுமின்; ஆட்செய்வதே உறுவதாவது என்று விரக்தி பூர்வமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம் பத்தில்.

## சூத்திரம் *223*

ஆவா என்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லருள் என்று, பரத்வாதிகளையுடையவன் 'எவ்விடத்தான்' என்னும் பாவியர்க்கும்

இருகரையும் அழிக்கும் கிருபாபிரவாஹமுடையவன் பொய் கூத்து வஞ்சக்களவு தவிர, முற்றவும் தானாய், உன்னைவிட்டு என்னப்பண்ணின விரக்தி பல பரமாத்ம ராகம், பேரமர் பின்னின்று கழியமிக்கு, யானே என்ன வாய்ந்து, ஆற்றகில்லாது நீராய் மெலிய ஊடுபுக்கு வளர, விஷவிருக்ஷ பலங்கள் கைகூடினவர், அடிமை புக்காரையும் ஆட்செய்வாரையும் காண, லோக த்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு, பிரஹ்லாத விபீஷணர் சொற்கேளாத அரக்கர் அசுரர்போல்வாரைத் தடவிப் பிடித்து, தேச கால தோஷம் போக எங்கும் இடம் கொண்டவர்களை மேவித் தொழுது உஜ்ஜீவியுங்கோள்; நீங்கள் நிறுத்துகிறவர்களைத் தேவதைகளாக நிறுத்தினவனை மேவிப் பரம்பும் அவரோடு ஒக்கத்தொழில் யுகதோஷம் இல்லையாம் என்று விஷ்ணு பக்திபரராக்கி, கண்ணுக்கு இனியன காட்டலாம் படியானார் கண்ணிலே நோக்கிக்காணும் பக்தி சித்தாஞ்ஜனத்தை இடுகிறார் அஞ்சாம்பத்தில்.

## சூத்திரம் *224*

என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மின் என்று கருணையாலே 'ஸர்வலோகபூதேப்ய' என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலும் ஆகாமல் உபாயத்வம் கல்வெட்டு ஆக்குகிற சரண்யன் அஜ்ஞான அசக்தி யாதாத்மிய ஜ்ஞானங்கள் அளவால் அன்றிக்கே, அங்குற்றேன் என்னான் புணராய் என்னும்படி மெய்யமர் பக்திபூம பலமாகவும் அநந்ய கதித்துவமுடைய தமக்கு, பாதமே சரண் ஆக்க, அவையே சேமம் கொண்டு ஏகசிந்தையராய்த் திரியக்குகளை இட்டு ஸ்வாபிப்பிராயத்தை நிவேதித்து, விளம்பரோஷம் உபாயத்தாலே அழிய, உருகாமல் வரித்ததும் நண்ணிவணங்கப் பலித்தவாறே, சப்ரகாரமாகச் சக்ருத்கரணீயம் என்று புராண பௌராணிகர் தியாஜ்ய அம்சமாக்கின சித்அசித் பிராப்பிய பிராபக ஆபாசங்களை, கைவலிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாது அகன்றும், ஆளீர் மேவீர் ஊதீர் என்று ததியசேஷம் ஆக்கியும் புறத்திட்டுக் காட்டி என்று பிரசங்கிக்கில் முடியும்படிவிட்டு, தந்தைதாய் உண்ணும் சோறு மாநிதி பூவையாவையும் ஒன்றேயாக்கி, தளர்வேனோ திரிவோனோ குறுகாதோ முதல்வாவோ என்னும் ஆர்த்தியோடே, திரிவிக்கிரமனாகக் குறள்கோலப்பிரானாய் அடியை மூன்றை இரந்த வன்கள்வன் கண்முகப்பே அகல்கொள் திசை வையம் விண்ணும் தட வந்த தடம் தாமரைகளை, இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி சென்று சேர்ந்த உலகத்திலகத்தே கண்டு அகலகில்லேன் என்று பூர்வ வாக்கியம் அநுசந்தித்தவர் "பிணக்கற" த் தொடங்கி "வேதப்புனித" இறுதி சொன்ன சாத்ய உபாய சிரவண சகோக சஜாதீயர்க்கு, "தந்தனன், மற்றோர் களைகண் இலம், புகுந்தேன்" என்று ஸ்வசித்தோபாய நிஷ்டையை உக்தி அனுஷ்டானங்களாலே காட்டுகிறார் ஆறாம் பத்தில்.

### சூத்திரம் 225

எண்ணிலாக் குணங்கள் பால துன்ப வேறவன் மாயாப் பல்யோகு செய்தி என்னும் ஆச்சர்ய சக்தி யோகத்தாலே தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் பிராபகத்வம், புற்பா எறும்பு பகைவனுக்கும் ஆக்கவல்ல சர்வசக்தி பாதம் அகலகில்லாத தம்மை, அகற்றுமவற்றின் நடுவே இருத்தக் கண்டு, நலிவான் சுமடு தந்தாய் ஓ என்று சாதன பலமான ஆக்ரோசத்தோடே பழி இட்டு, கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வி ஆக்கி, தேற்ற ஒண்ணாதபடி தோற்று, ஒன்றி நிற்கப்பண்ணின பலாதாநம் மற்றும் கற்பார் இழவிலே சுவறி, பழைய தனிமைக்கூப்பீடு தலையெடுத்து சூழவும் பகைமுகம் செய்ய, எடுப்பும் சாய்ப்புமான கிலேசம் நடக்க, உபாய அதிகாரதோஷம் ஒழிய, மாயங்கள் செய்து வைத்த வைசித்திரியைக் கேட்க, ஐச்சமாக இருத்தி உறக்கொண்ட ஸ்வ பர பிரயோஜனத்தை அருளிச் செய்ய, என்சொல்லி எந்நாள் பார்விண் நீர் இறப்பு எதிர் எதுவும் என்கிற உபகார ஸ்மிருதியோடே, தன் சரிதை கேள்வி ஆகாமல், இன்பம் பயக்க இருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாகக் காநகோஷ்டியையும் தேவபிரான் அறிய மறந்தவர், சரமோபாய பரரானார்க்கு நீணகரம் அது; துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலம்; உள்ளித் தொழுமின் என்று பிராப்ய சாதந அவதியைப் பிரீதியாலே பிரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்.

### சூத்திரம் 226

"தேவிமார் பணியா நேர்பட்ட நல்லகோட்பாடு என்னும்படி சக்தியாலே நித்தியமாகக் கல்பித்த பத்நீ பரிஜந ஆதிகளையுடைய சத்யகாமன் கொண்டவாக் விருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமும் தீர, தலைச்சிறப்பத் தந்தவதில், கிருதஜ்ஞதா பல பிரதியுபகாரமாக, வேந்தர் தலைவன் கன்யகாதானம் போலே, ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே அதீவ விளங்கிப் பணைத்து, ஜன்மபாசம் விட்டு ஆத்வாரம் ஆளும் ஆளார் என்று பரிந்து அநுருபனோடே அமர்ந்து பிரிவில் கிருபணதசையாகத் துவரும் சீதா குணங்களாலே பிரீதி வர்த்தித்து, தித்திக்க உள்ளே உறைந்து, கண்டுகொண்டிருந்து அமாநுஷபோக மாக்கினவன், மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய் மறுவல் இடாமல், 'சிறியேன்' என்றதின் பெருமையைக் காட்ட தேகாதிகளில் பரமாய், நின்று நினைக்கில் லக்ஷ்மீதுல்யமாய், அவர்க்கே குடிகளாம் பரதந்த்ர ஸ்வரூபத்தை அநுசந்தித்தவர், ஸ்வ சாதன சாத்யஸ்தர் இருகரையர் ஆகாமல், மண்ணவரும் வானவருழ் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்து என்று பிராப்பையகபரர் ஆக்குகிறார் எட்டாம்பத்தில்.

## சூத்திரம் 227

எண்திசையும் அகல்ஞானம் எங்கும் அளிக்கின்ற ஆலின்மேல் என்னும்படி நித்யபோக பாதலீல உபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்சகன், ஆருயிர் என்னப்படுத்தின ஆத்மதர்சந பல அநுபவ பரம்பரையைக் 'கூவுதல் வருதல்' என்று முடுகவிட்டு, ஏகம் எண்ணி, காணக் கருதி, எழ நண்ணி, நினைதொறும் உருகி, அலற்றி, கவையில் மனம் இன்றி, பதினாலாண்டு பத்துமாசம் ஒருபகல் பொறுத்தவர்கள், ஒருமாசதின சந்த்யையில் படுமது, க்ஷணத்திலேயாக இரங்குகிற த்வரைக்கு ஈடாக, இனிப் 'பத்தில் ஒன்று தசம தசையிலே பேறு' என்று, நாட்கடலாகத் தம்பிக்கு இட்டதாகாமல் நாளைவதுவை போலே நாள் இடப்பெற்றவர் இம்மட உலகர் கண்டதோடுபட்ட அபாந்தவ அரக்ஷக அபோக்ய அசுக அநுபாய பிரதிசம்பந்தியைக் காட்டி மற்றொன்று கண்ணன் அல்லால் என்கிற வைகல் வாழ்தலான சித்தோபாயம், அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலை மாலை விண்டு தேனை வாடாமலர் இட்டு அன்பராம் சாங்கபக்தி, அதில் அசக்தர்க்குத் தாள் அடையும் பிரபத்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரண மாத்ரம், சர்வோபாய சூந்யர்க்கு இப்பத்தும்பாடி இடும் தெண்டன் என்று, கீதாசார்யனைப் போலே அதிகார அநுகுணம் நெறி எல்லாம் உரைக்கிறார் ஒன்பதாம் பத்தில்.

## சூத்திரம் 228

"சுரிகுழல் அஞ்சனம் புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயா என்னும் ஆபத்திற்கொள்ளும் காமரூப கந்தரூபத்தாலே பிரபந்த ஆர்த்திஹரனானவன், அருள்பெறும்போது அணுகவிட்டதற்குப் பலமான வானேறும் கதிக்கு, அண்ட மூவுலகும் முன்னோடிக் கால்விழுந்திடத்தே நிழல் தடங்கள் ஆக்கி, அமுதம் அளித்த தயரதன் பெற்ற கோவலன் ஆகையாலே, வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டசிவிட்டவர் அவன் மகன் அவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்றமைந்தன் ஆகிய பதினெட்டு நாடன் பெருங்கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணையாக்கி, அறியச்சொன்ன சுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கு ஒழித்து, மீள்கின்றதில்லை என்று நிச்சித்திருந்தவர், சஞ்சிதம் காட்டும் தசையானவாறே முந்துற்ற நெஞ்சுக்கு 'பணி மறவாது மருள்ஒழி நகு கைவிடேல்' என்று கிருத்யா கிருத்தியங்களை விதித்து, நெஞ்சுபோல்வாரைத் 'தொண்டீர்' என்று அழைத்து 'வலஞ்செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுதும்' என்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் சுரோதவ்யம் திரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யம் எல்லாம் வெளியிட்டு பிணக்கறவைச் சார்வாக நிகமித்து, எண்பெருக்கில் எண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி மாதவன் என்று துவயமாக்கி,

கரணத்திரய பிரயோக விருத்தி சம்சாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்து, செஞ்சொற் கவிகளுக்குக் கள்ளவழி காவலிட்டு, மனம் திருத்தி வீடு திருத்தப்போய் நாடு திருந்தினவாறே வந்து விண்ணுலகம் தர விரைந்து, அத்தை மறந்து குடிகொண்டு, தாம் புறப்பட்ட ஆக்கையிலே புக்குத்தான நகர்களை அதிலே வகுத்து, குரவை துரவைகளில் வடிவு கொண்ட சபலனுக்குத் தேகதோஷம் அறிவித்து, மாயையை மடித்து, வானேதரக்கருதிக் கருத்தின்கண் பெரியனானவனை, 'இன்று அஹேதுகமாக ஆதரித்த நீ அநாதி அநாதர ஹேது சொல்' என்று மடியைப் பிடிக்க, "இந்த்ரிய கிங்கரராய்க் குழிதூர்த்துச் சுவைத்து அகன்றீர் என்னில், அவையாவரையும் அகற்ற நீ வைத்தவை என்பர்; அது தேக யோகத்தாலே என்னில், அந்நாள் நீ தந்த சுமடு என்பர்; முன் செய்த முழு வினையாலே என்னில், அது துயரமே உற்ற இருவினை உன் கோவமும் அருளும் என்பர்; ஈவிலாத மதியிலேன் என்னும் உம் மதன்றோ கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் என்னில், ஆங்காரமாய்ப் புக்குச் செய்கைப்பயன் உண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தா என்பர்; யானே எஞ்ஞான்றும் என்றத்தாலே என்னில், அயர்ப்பாய்ச் சமய மதி கொடுத்து உள்ளம் பேதம் செய்கை உன் தொழில் என்பர்; ஜீவப் பிரக்ருதி சைதன்யம் நீங்கும் விரதஹேது, அகமேனியில் அழுக்கு அறுக்கை அபிமாநிகிருத்யம், தான் நல்கும் பந்தம் நிருபாதிகம், சௌகார்த்தம் எஞ்ஞான்றும் நிற்கும், பிணக்கிப் பேதியாத ஞாநாதி வைகல்யம் இல்லை, ஏகமூர்த்தியில் அல்லல் மாய்த்த யத்ந பலித்வங்கள் நம்மது, நாம் தனிநின்ற ஸ்வதந்த்ரர் என்று அவனே அறிந்தனமே என்னும் சர்வஜ்ஞர் இவர்; 'நெறிகாட்டி, அருகும் சுவடும்' போலே இதுவும் நிருத்தரம் என்று கவிழ்ந்து நிற்க அமந்த்ரஜ்ஞ உத்ஸவ கோஷம் போலே ஏறப்பெறுகிற எழுச்சியைச் சூசிப்பிக்கிற மேக சமுத்ர பேரீ கீத காஹள சங்கு ஆசீஸ் துதிகோலாஹலம் செவிப்பட்டவாறே, சாக்ஷாத்கரித்த பரப்பிராப்திக்குத் தலைமிசையாய் வந்த தாள்களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திருஆணை இட்டு, கூசம் செய்யாது செய்திப்பிழை, பற்றுக்கொம்பற்ற கதி கேடு, போரவிட்ட பெரும்பழி, புறம் போனால் வரும் இழவு, உண்டிட்ட முற்றீம்பு, அன்பு வளர்ந்த அடி உரம், உயிர் உறவு முதல் அளவு துரக்கைகளாலே பெறா ஆணை அல்ல ஆக்கின பேரவா சூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம் பத்தில்.

# சில அருஞ்சொற்களின் பொருள்

| | | |
|---|---|---|
| அக்ரதாம்பூலம் | — | முதல் மரியாதை |
| அக்ருத்யம் | — | தவிரத்தக்கன |
| அகடிதகடநா சாமர்த்தியம் | — | சேராதனவற்றைச் சேர்க்கும் ஆற்றல் |
| அசுகம் | — | நன்மை தருவது ஆகாமை |
| அதபஸ்கர் | — | தவம் இல்லாதவர் |
| அந்தர்யாமித்வம் | — | இறைவன் உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்திருக்கும் இருப்பு |
| அநந்யார்ஹத்வம் | — | இறைவன் ஒருவனுக்கே தான் உடைமையாய் இருத்தல் |
| அநுயாகம் | — | இறைவனுக்கு நிவேதித்த பிரசாதத்தை உண்ணுதல் |
| அப்ராக்ருதம் | — | மோக்ஷ உலகத்தொடர்பு |
| அபாந்தவம் | — | நமக்கு உண்மை உறவுமுறை ஆகாமை |
| அபிவாதநம் | — | ஆசீர்வாதத்தை வேண்டுதல் |
| அபோக்யம் | — | இன்பம் ஆகாமை |
| அமாநித்வாதிகள் | — | மேன்மக்களை அலட்சியம் செய்யாதிருத்தல் முதலியன |
| அர்ச்சாவதாரம் | — | எம்பெருமான் திருக்கோயில்கள் முதலியவற்றில் உகந்தருளியிருக்கும் இருப்பு |
| அர்த்தன் | — | இழந்த செல்வத்தை மீண்டும் பெற விரும்புபவன் |
| அர்த்தார்த்தி | — | புதிதாகச் செல்வம் பெற விரும்புபவன் |
| அரக்ஷகம் | — | நம்மைக் காப்பவர் கடமை |
| அஸ்திரத்வம் | — | நிலை இல்லாத தன்மை |
| ஆதிவாஹிகள் | — | இவ்வுடம்பை விடுத்துப் பரமபதத்திற்குச் செல்லும் ஆன்மாவை அழைத்துக்கொண்டு செல்பவர்கள் |
| ஆந்ருசமஸ்யம் | — | அடியார்களுக்குச் செய்யும் அருள் |
| ஆபத்ஸகத்வம் | — | இடையூறு வரும்போது உதவி இடையூற்றைப் போக்கும் உயர்பண்பு |
| ஆர்த்திஹரத்வம் | — | பிறவித்துன்பத்தை நீக்கும் தன்மை |
| ஆவித்யர் | — | அறிவில்லாதவரான இவ்வுலக மக்கள் |
| ஆஸ்திக்யம் | — | சாத்திரங்களில் நம்பிக்கை உடைமை |
| உபயவிபூதி | — | இவ்வுலகம் முதல் சத்திய உலகம் ஈறாக உள்ள லீலா விபூதியும் மோக்ஷ உலகமாகிய நித்ய விபூதியும் ஆகிய இருவகைச் செல்வங்கள் |
| உபாயம் | — | வழி |

| | |
|---|---|
| உபேயம் — | பேறு |
| ஐகார்த்தியம் — | ஒரே பொருளாக இருக்கும் தன்மை |
| ஐச்வர்ய காமர் — | உலக இன்பத்தை விரும்புபவர் |
| ஔதார்யம் — | வள்ளல்தன்மை ஆகிய வண்மை |
| க்ருத்யம் — | செய்யத்தக்கன |
| க்ருபை — | துன்பப்படுகின்றவர்களைக் கண்டு ஐயோ! என இரங்குதல் |
| காரணத்வம் — | உலகப்பொருள்களின் தோற்றத்துக்கு முதல், துணை, நிமித்தம் என்ற மூவகைக் காரணங்களாகவும் இருக்கும் தன்மை |
| காருணிகத்வம் — | பேரருளாளன் ஆகும் தன்மை |
| கேவலன் — | ஆன்மானுபவத்தில் மனநிறைவு கொள்பவன் |
| கைவல்யம் — | ஆன்மா தன்னைத்தானே அனுபவிக்கும் எல்லைப்பட்ட இன்பம் |
| சக்தத்வம் — | அளவிலா ஆற்றல் உடையவனாம் தன்மை |
| சகபோஜநம் — | ஓரிலையில் ஒருசேர உண்ணுதல் |
| சகுணபோஜனம் — | நல்ல பண்போடு கூடிய உணவு |
| சத்யகாமத்வம் — | என்றும் உள்ளனவாக அமைக்கப்பட்ட தேவிமார், அமரர், இடம், இனிய பொருள்கள், கருவிகள் முதலியவற்றை உடையனாந்தன்மை. |
| சம்யக் போஜநம் — | நல்ல உணவு |
| சர்வஜ்ஞர் — | முற்றும் முழுமையாக உணர்ந்தவர் ஆகிய ஞானி |
| சரண்யத்வம் — | எல்லாப் பொருள்களுக்கும் புகலிடமாதல் |
| சரமசுலோகம் — | ஸ்ரீ கீதையின் இறுதியில் உயிர்கள் உய்ய இறைவன் அருளியுள்ள ‘சர்வதர்மாந்’ என்ற சுலோகம். |
| சரீரத்வம் — | சித்து, சடம் என்ற இருவகைப் பொருள்களையும் உடலாகக்கொண்ட இறைவன் அவற்றுள் உயிராயிருக்கும் தன்மை |
| சபலன் — | மனத்தை அடக்கும் ஆற்றல் இல்லாதவன் |
| சாங்கபக்தி — | அங்கங்களுடன் கூடிய பக்தி |
| சாத்யசாதந நிஷ்டன் — | செய்யப்படுகின்ற உபாயங்களில் ஊன்றி நிற்கும் பெரியோன் |
| சாத்ய பக்தி — | பக்தியே பேறாகக் கருதும் பக்தி |
| சாத்ய பரர் — | இறைவனே பேறு என்பவர் |
| சாத்யரூப சாதனம் — | கர்மத்தாலும் ஞானத்தாலும் சாதித்துக் கொள்ளப்படுவது |
| சாதநத்ரயம் — | கர்மம், ஞானம், பக்தி என்ற மூன்று உபாயங்கள் |
| சாதநபக்தி — | பேற்றினை அடைய வழியாக இருக்கும் பக்தி |
| சாமிப்பியம் — | இறைவன் அருகிலேயே இருக்கும் தன்மை |

| | | |
|---|---|---|
| சாயுஜ்யம் | — | இறைவனுடைய அனுபவத்தை அடையும் தன்மை |
| சாரதமம் | — | இதனை விஞ்சிய சுவை பிறிது இன்று என்னும் நிலையினை உடைத்தாதல் |
| சாரதரம் | — | மேம்பட்ட சுவை உடையதாதல் |
| சாருப்யம் | — | இறைவனுடைய வடிவினையே அடையும் தன்மை |
| சாலோக்யம் | — | இறைவனோடு ஒரே உலகில் இருக்கும் தன்மை |
| சாவதிநத்வம் | — | ஓர் எல்லையுடன் கூடியது |
| சாக்ஷாத்கரித்தல் | — | ஞானக்கண்ணால் அறிதல் |
| சித்த சாதந நிஷ்டர் | — | இறைவனையே உபாயமாகக் கொள்பவர்கள் |
| சித்தசாதநபரர் | — | இறைவனே வழி என்பவர் |
| சித்தரூப சாதநம் | — | பிரபத்தி ஆகிய கருவி |
| சித்தாஞ்சநம் | — | கண்ணில் தடவிக்கொண்டால் மறைந்து கிடக்கும் பொருள்களையும் காண்பிக்கும் மை |
| சுவதந்திரர் | — | சுவர்க்க இன்பத்தை விரும்புபவர் |
| சுவாமித்வம் | — | எல்லாப்பொருள்களுக்கும் இறைவனாக இருக்கும் தன்மை |
| சேவாபரர் | — | அடிமைத் தொழில் செய்கிறவர் |
| சேஷத்வம் | — | இறைவனுக்குத் தொண்டனாம் தன்மை |
| சௌகுமார்யம் | — | மென்மைத்தன்மை |
| சேஷித்வம் | — | தலைவனாய் இருக்கும் தன்மை |
| சௌசீல்யம் | — | பெரியவன் தாழ்ந்தவருடன் வேறுபாடின்றிக் கலக்கும் தன்மை |
| சௌர்யம் | — | சூரத்தன்மை |
| சௌலப்யம் | — | எளிவந்த தன்மை |
| ஞானம் | — | எல்லாவற்றையும் ஒருகாலே எப்போதும் உள்ளபடி அறிதல் |
| தாரகம் | — | வாழ்முதல், உயிர்வாழத் தேவையான நீர் முதலியன. |
| திருத் பீடிதன் | — | நீர்வேட்கை உடையவன் |
| துவயம் | — | இரண்டு வாக்கியங்களாக அமைந்த மந்திரம் |
| நாராயண அநுவாகம் | — | திருமாலே முழுமுதற்கடவுள் என்பதனை விரித்து உரைக்கும் வேதப்பகுதி |
| நித்யசூரிகள் | — | வைகுந்தத்தில் என்றும் நிலையாக இருக்கும் அடியார்கள் |
| நித்தர் | — | வைகுந்தத்திலேயே என்றும் நிலையாக இருப்பவர் |
| நித்ய விபூதி | — | என்றும் அழியாத வைகுந்தம் |
| நியந்த்ருத்வம் | — | எல்லாப் பொருள்களையும் அடக்கி ஆளும் தன்மை |

| | | |
|---|---|---|
| நிருத்தரம் | — | விடை கூறமுடியாதது |
| நிருபாதிகம் | — | காரணம் இல்லாதது |
| நிவர்த்தநம் | — | ஒருசெயல் செய்வதைத் தவிரச் செய்தல் |
| ப்ரதிக்ருதமாநம் | — | பிரதி உபகாரமாகக் கொடுக்கப்பட்ட ஆன்மாவின் தன்மையை |
| ப்ரக்ருதி | — | உலக இயற்கை |
| ப்ரமாணம் | — | இறைவனைப் பற்றிக் கூறும் வேதம் முதலிய சாத்திரங்கள் |
| ப்ரமாதா | — | வேதம் முதலிய சாத்திரங்களை அறியுமவன் |
| ப்ரமேயம் | — | வேதம் முதலிய சாத்திரங்களால் அறியப்படும் இறைவன் |
| ப்ராக்ருதம் | — | உலகியல் தொடர்பு |
| ப்ரவர்த்தகம் | — | ஒரு செயல் செய்வதில் ஈடுபடச் செய்தல் |
| ப்ராபகத்வம் | — | உபாயமாக, வழியாக இருக்கும் தன்மை |
| பகவத் ப்ராப்திகாமன் | — | இறைவனிடத்துச் சென்று சேர்தலை விரும்புபவன் |
| பத்தர் | — | பாசப்பிணைப்பினை உடைய மக்கள் |
| பரத்வம் | — | வைகுந்தத்தில் பரவாசுதேவனாக நித்யசூரிகள் சூழ எம்பெருமான் இருக்கும் இருப்பு |
| பராங்குசநாயகி | — | பெண்நிலை அடைந்த நம்மாழ்வார் |
| பரிப்ரச்நம் | — | உபதேசம் கேட்டல் |
| பஸ்மாருதி | — | சாம்பலில் இட்ட வேள்விப்பொருள் |
| பாஞ்சராத்ரம் | — | ஐந்து இரவுகளில் திருமாலால் திருவாய் மலர்ந்தருளப் பெற்ற வைணவ ஆகமம் |
| பாரதந்தர்யம் | — | இறைவனுக்கு அடிமைப்பட்டு, அவன் தன் உகப்பிற்கும் பயன்படுத்துமாறு இருக்கும் தன்மை |
| பிரணிமாதம் | — | எட்டு உறுப்பு நிலத்துத் தோய வணங்குதல் |
| பிரதி சம்பந்தி | — | மறுதலைப் பொருள் |
| பிரபத்தி | — | இறைவனைப் புகலிடமாகப் பற்றுதல் |
| பெத்தர் | — | உலகியலில் உழல்பவர் |
| போக்த்ருத்வம் | — | சுவையைத்தான் நுகரும் நுகர்வோனாக இருக்கும் தன்மை |
| போக்யதை | — | இறைவனுக்கு நுகர்பொருளாக இருக்கும் தன்மை |
| போக்யம் | — | விருப்பத்தில் சுவைக்கும் வெற்றிலை முதலியன |
| போஷகம் | — | உயிரைப் பாதுகாக்கும் உணவு முதலியன |
| முக்தர் | — | மோக்ஷத்தை அடைந்தவர் |
| முமுக்ஷுக்கள் | — | வீடுபேற்றில் விருப்புடையவராய் அதனை அடைதற்கு ஏற்ற வகையில் இவ்வுலகில் வாழ்பவர் |
| ரக்ஷகத்வம் | — | காப்பாற்றும் தன்மை |

| | | |
|---|---|---|
| லீலாவிபூதி | — | வைகுந்தம் நீங்கலான ஏனைய எல்லா உலகங்களும் ஆகிய செல்வம் |
| வாத்சல்யம் | — | அன்று ஈன்ற கன்றின் உடலில் உள்ள வழுவை விரும்பி உண்ணும் பசுவினைப் போன்று அடியவர் தோஷங்களை இனியதாகக் கொள்ளும் தன்மை |
| விகடநாபாந்தவம் | — | பொருந்தாமையைச் செய்கின்ற உறவுமுறை |
| விபவம் | — | இராமன், கண்ணன் முதலிய அவதாரங்கள் |
| விபூதி | — | செல்வம் |
| வியாபகத்வம் | — | எல்லாப் பொருள்களுள்ளும் பரவியிருக்கும் தன்மை |
| வியூகம் | — | எம்பெருமான் பாற்கடலில் பள்ளி கொள்ளும் நிலை |
| ஸ்வபச அதமம் | — | நாய் இறைச்சி தின்றும் கீழோனிலும் தாழ்ந்தது |
| க்ஷுத்பீடிதன் | — | பசி உடையவன் |
| சௌஹார்த்தம் | — | எப்பொழுதும் உயிர்களின் நன்மையையே சிந்தித்துக் கொண்டிருக்கும் தன்மை |